# Lay Action for the Conversion of Non-Catholics

# விசுவாசிகளும் வேதத்தைப்பரப்பும் வேலையும்

Jaffna, St. Joseph's Catholic Press.

# CATHOLIC TRACTS.

1. **Two Capital Lies**—இரண்டு படுபொய்கள்.
2. **An Important Duty**—ஒரு பெருங்கடமை.
3. **The Royal Road**—இராச பாதை.
4. **The Soul**—ஆத்துமம்.
5. **The Divine Teacher** – சற்குரு.
6. **The Nature of God**—கடவுளிலட்சணம்.
7. **Idolatry and Image-worship**—விக்கிரகாராதனையும் சுரூபவணக்கமும்.
8. **Metempsychosis**—மறுபிறப்பு.
9. **Answers to Saivites**—சைவராட்சேப சமாதானம்.
10. **The Perfect Being**—பரிபூரண வஸ்து.
11. **The Orgin of Things**—உலக உற்பத்தி.

☞ மேலே காட்டிய துண்டுப்பத்திரங்களை யாழ்ப்பாணம் அர்ச். சூசைமாமுனிவர் அச்சியந்திரசாலைத் தலைவருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

CATHOLIC TRACT

New Series 1.

# LAY ACTION FOR THE CONVERSION OF NON-CATHOLICS

# விசுவாசிகளும் வேதத்தைப்பரப்பும் வேலையும் *

கடவுள் ஒருவரே உண்டு என்றதுபோல, அவர் தமது சிருட்டிகளாகிய மனுஷர் மோட்சபேரின்பத்தை அடைவதற்கு வழியாக வெளிப்படுத்தியருளிய மார்க்கமும் ஒன்றே உண்டு. அவர் வெளிப்படுத்திய இந்த மார்க்கம்மாத்திரம் மெய்யானமார்க்கமாகலாம். அதின் வழியே நடப்போர்மாத்திரமே மோட்சகரையிற்போய்ச்சேரலாம்.

இனி, உள்ளபடியே மானுடசட்டை சாத்தி உலகத்திலெழுந்தருளிவந்த தெய்வீக சற்குருவாகிய யேசுநாதரால் வெளிப்படுத்தப்பட்டதும், மெய்யானமார்க்கமென்று உலகறியப் பிரசித்தமாய் அங்கீகரிக்கப்பட்டதும், நமது சகோதரராகிய பிறசமயிகளும் "சத்தியவேதம்" என்று சொல்லிப் புகழ்ந்துகொண்டாடுவதுமாகிய கத்தோலிக்கவேதத்தை விசுவாசிகளாகிய நாம் மாத்திரம் அறிந்து அனுசரிப்பதுபோதுமா? நம்மைச் சூழ்ந்திருக்கும் ஆயிரக்கணக்கானோர் பொய்ச்சமயங்களெனும் ஆழியிலே அமிழ்ந்துவோராயிருக்க, நாம்மாத்திரம் மோட்சதுறையைநோக்கித் திருச்சபையென்னுங் கப்பலிலே சேமமாய்ப் பாய்

* இவ்வுபந்நியாசம் ஊர்காவற்றுறை திரு இருதயசபை அங்கத்தவர்களுளொருவரால் எழுதி அச்சபைக்கூட்டமொன்றில வாசிக்கப்பட்டது. இப்போது சிலதிருத்தங்களோடு பதிப்பிக்கப்படுகின்றது.

விரித்தோடிக்கொண்டிருந்தாற்போதுமா? ஒரு செங்குத்தான
மலைப்பாதையில் தட்டித்தடவி நடந்துகொண்டிருக்கும் ஒரு
குருடனைக் கண்டோமானால், நாம் எவ்வளவு கல்நெஞ்சராயினும்
அவனுக்கு இரங்கி அவன் தன் காலின்கீழே ஆவென்று திறந்தி
ருக்கும் பாதாளத்தில் விழாதபடி செய்யப் பிரயாசப்படாதிருப்
போமா? இரோம். ஆகவே, சத்தியவேதத்தை அறியாதபொய்ச்
சமயவாதிகள் ஞானக்குருடராகி நரகபாதாளத்தின் ஓரத்தி
லே நடந்துகொண்டிருப்பதை நாம் விசுவாசக்கண்ணாற்கண்
டும் கைகளைக் கட்டிக்கொண்டு பார்த்திருக்கலாமா? நாம் ஒரு
வனை மரண ஆபத்திலிருந்து தப்பவைக்கக்கூடியதாயிருந்தும்
அதிலே அலட்சியம்செய்துவிட்டால், பிராணதுரோகஞ்செய்து
விட்டதாக எண்ணியெண்ணிக் கலங்குவோமே. அப்படியிருக்க
நமது சகோதரர் எத்தனையோ பேர் பொய்த்தெய்வங்களைப்பணி
ந்து ஈடேற்றத்துக்குரியவைகளொன்றையுஞ்செய்யாமற் சீவித்
து நித்தியமரணத்துக்குள்ளாகிவருவதைக் கண்டும் அதைத்
தடுக்க முயலாதிருக்கலாமா?

ஆனால், குருமாரல்லாத நாம் அதிலே செய்யத்தக்கதென்ன
ன்று, சபையோரே, நீங்கள் ஓர்வேளை சொல்வீர்கள். போதும்.
குருமாரல்லாதாரும் பிறசமயிகளை மனந்திருப்புவதிலே எவ்வ
ளவு வேலைசெய்யக்கூடும், செய்யவேண்டுமென்பதைப் பின்னாற்
காண்பிக்க வருந்துவேன். அதற்கிடையில் நாமெல்லாரும்செய்
யக்கூடியதொன்றுண்டு. அது:

## பிறசமயிகளை மனந்திருப்ப ஆசைப்படுதல்

என்று சொல்லப்படும். மனமுண்டானால் இடமுண்டென்று
சொல்லுகிறோமல்லவா? அந்தப் பழமொழியைச் சற்றேமாற்றி
ஆசையுண்டானால் வழியுமுண்டென்று நன்றாய்ச்சொல்லலாம்.
ஒருகாரியத்தைச் செய்துமுடிக்கவேண்டுமென்று நாம் மெய்யா
கவே ஆசைப்படும்போது, அதை முடிப்பதற்குரிய சிறந்த வழி
பாடுகள் தாமாகவே நமக்கு உண்டாகும். இப்படிப்பட்ட ஆசை
க்கு முகாந்திரமென்ன என்று கேட்பீர்களா? யேசுவின் திரு
இருதயமே அதற்கு முதலாம் முகாந்திரம்.

நம்முடைய திவ்விய மீட்பரானவர், தாம் மனுஷஅவதாரம்
செய்து கடினபாடுகள் பட்டு உதிரமெல்லாஞ்சிந்தி இரட்சிக்க
வருந்தின ஆத்துமாக்கள், பொய்த்தெய்வவழிபாடு என்னும் பொ
றிக்கிடங்குவழியாய் நரகபாதாளத்தில் விழுவதைக்கண்டு அவர்
திரு இருதயம் பதைத்துத் துடிக்கின்றதே. நாம் பாடுபட்டுத்
தேடியபொருள்கள் கைபறிந்துபோய்விடில் நமக்குத் தாங்க
முடியாத விசனமெழும்புகின்றதல்லவா? தமது விலையேறப்பெற்
ற உதிரத்தைக்கொடுத்து மீட்க வருந்தின ஆத்துமாக்கள் அஞ்

ஞானத்தினால் கெட்டுப்போவதைக்குறித்து யேசுவின் திரு இருதயத்துக்கு எவ்வளவு கொடிய துயரமுண்டாகாது? நாம் நமது அரியமீட்பரைநேசித்தால் இத்துயரம் அந்தத் திரு இருதயத்தில்நின்று நீங்கும்படி ஆசைப்படாதிருப்போமா? நமது ஆத்துமங்களைமாத்திரமல்ல அஞ்ஞானிகளின் ஆத்துமங்கள் ஒவ்வொன்றையும் யேசுக்கிறீஸ்துநாதர் எவ்வளவோ மதித்து நேசிக்கிறார். ஆகலினால், தனித்தனி அவைகள் ஒவ்வொன்றிற்காகவும் தமது பிறப்புமுதல் இறப்பு ஈறாகவுள்ள சகல திருப்பாடுகளையும்பட்டனுபவிப்பது அவசியமாகிற் சந்தேகமின்றிப்பட்டனுபவிப்பாரே. இவ்வளவு அன்புநிறைந்ததாகிய தெய்வீக இருதயத்தை உவப்பிக்கவிரும்புவோமானால், பிறசமயிகளின் ஆத்தும இரட்சணியத்தின்மேல் ஆசை நம்மிடத்திற் தானாய்ப்பிறக்குமே.

உலகமீட்பரை உண்மையாக நேசித்த ஆத்துமாக்களைப் பாருங்கள். அவர்களிடம் இந்த ஆசையே சீவியத்தின் ஏக ஆசையாயிருந்ததென்று காண்பீர்கள். "என்ன! ஒரு ஆத்துமம் கெட்டுப்போகிறதாயிருக்கிறதைக் காண்கிறேன். அது நரகத்தில் விழுகிற தருணமாயிருப்பதை அறிகிறேன். சருவேசுரன் அதை இரட்சிக்கிறதற்காகத் தமது உயிரைக்கொடுத்தார் என்றும் அறிந்திருக்கிறேன். இப்படியாகையில், என்னுயிரைக் கொடுத்தாகிலும் அதை இரட்சியாமற்போகலாமா? மெய்யான பிறர்சிநேகமுள்ளமனம் இதற்கொப்புமா?" என்று அல்போன்ஸ் ரோத்திரிக்கேஸ் எனும் யேசுசபைக்குருவானவர் அங்கலாய்த்துக் கூறுகின்றார். அர்ச். பிரான்சீஸ்குசபையிலுட்பட்டவரான ஒருமகாத்துமாபேரில் சொல்லியிருக்கிற வர்த்தமானமாவது: அவர் அமெரிக்காக்கண்டத்தில் அஞ்ஞானிகளை மனந்திருப்புதற்காக அநேக வருஷம் உழைத்து வெகுபேரைத் திருப்பினார். அதின்பின் நன்மரணத்துக்கு ஆயத்தம்பண்ணவேணுமெனும் ஆசையினால் ஸ்பானியதேசத்திலுள்ள தமது சபைமடத்திலே ஒதுங்கிக் கடினதபசுபண்ணிக்கொண்டிருந்தார். அங்கே அவர் தியானம்பண்ணிக்கொண்டிருக்கும் போதெல்லாம் யேசுநாதசுவாமி சிலுவையில் அறையுண்டபிரகாரமாய் அவருக்குக்காட்சியாகி: நம்மை இந்தச் சிலுவையிலேவிட்டுவந்து உன் இளைப்பாற்றியைத் தேடுகிறாயோ என்று அவரிடத்தில் பட்சத்தோடு முறைப்படுகிறதைக்கேட்பதுபோல அவருக்குத்தோன்றும். இந்தக்காட்சியால் அவர்மனம் உற்சாகங்கொண்டு தாம்விட்டுவந்த அஞ்ஞானதேசத்துக்குத் திரும்பிப்போய் இன்னும் வெகுகாலம் சருவேசுரனுக்கு ஊழியம்பண்ணினார்.

ஓ! ஓ!! ஆண்டவருடைய அன்பை உள்ளபடியே உட்கொண்ட அப்போஸ்தலர்களும் மற்றச் சுத்தவாளர்களும் அஞ்ஞா

ளிகளுக்குள் வேதத்தைப் பரப்ப எவ்வளவு பத்திச்சுறுசுறுப்போடு பிரயாசப்பட்டார்கள்! எவ்வளவு பசிதாக உபத்திரவங்களுக்கும் சித்திரவேதனைகளுக்குமுள்ளானார்கள்! அர்ச். சவேரியாரும் யோசேவாஸ்முனீந்திரனும இலங்கைத்தீவிலே விசுவாச வெளிச்சத்தைக்கொளுத்தி வளர்க்கிறதற்குப் படாதபாடெல்லாம் பட்டு எதிரிட்ட இடையூறுகளையெல்லாம் வலியமனதோடு மேற்கொண்டு சீவமோசத்தை முதலாய் ஒருபொருட்படுத்தாது தணியாத ஆசையோடு பிரயாசப்பட்டார்களே. அக்காலங்களில் குருமார் மாத்திரமா, அவர்களோடு இடக்கை வலக்கையாய் நின்று உதவிசெய்த வேற்றுக்கிறீஸ்தவர்களுமே நமது முன்னோர் மனந்திரும்புவதற்குக் காரணமானார்கள்.

பிதிர்பத்தியுள்ளபிள்ளைகள் தங்கள் பிதாவின் மகிமைபெருக ஆசைப்படுவார்கள். நாமும் பிறசமயிகள் மனந்திரும்புவதினால் அனைவருக்கும் பொதுப்பிதாவாகிய சருவேசுரனுடைய மகிமை அதிகரிக்கவேண்டுமென்று ஆசைப்படுவோமாக. சபையாரே, பரமண்டலமந்திரத்தைப் பாருங்கள்; அதிலே நாம் பிதாவைநோக்கி: "உம்முடைய நாமம் அர்ச்சிக்கப்படுவதாக'' என்று வேண்டிக்கொள்ளும்படியாக நம்முடைய கர்த்தர் கற்பித்தருளினார். இவ்வார்த்தைகளின் கருத்தென்ன? பிதாவின் மகிமை அதிகரிக்கும்படியாக நாம் வேண்டிக்கொள்ளவேண்டுமென்பதல்லவா? இவ்வேண்டுதலைச்செய்யும்போது அது நிறைவேறவேண்டுமென்ற ஆசையில்லாதுபோமானால், நாம் மனசிலொன்றும் வாயிலொன்றும்வைத்துப் பேசுவோராவோமே. உலகிலே ஒவ்வொரு இராசாவின் மந்திராலோசனைச்சபையாரும் தத்தம் இராசாவின் இராச்சியத்தை விஸ்தரிக்க உபாயம் சூழ்ந்து முயற்சித்துக்கொண்டிருக்கிறார்கள். மந்திராலோசனைச் சபையார்மாத்திரமா? சுதேசாபிமானமுள்ள ஒவ்வொருகுடியானவனும் அதிலே கரிசனையுள்ளவனாகி வேண்டியவேண்டியபோது தன் உடல் பொருள் ஆவிகளையும் அதற்காகக் கையளிக்க ஆயத்தமாயிருப்பான். நாமும் எமது திவ்விய இராசாவாகிய யேசுஇரட்சகரின் இராச்சியம் அஞ்ஞான ஊர்களுள்ளும் விஸ்தரித்துவர ஆசைப்படுவோமாக. வேகமாய் ஆசைப்படுவோமாக. முழுஇருதயத்தோடும் ஆசைப்படுவோமாக. உறுதிநிலைமையாக ஆசைப்படுவோமாக. இந்த ஆசையே வேதத்தைப் பிறசமயிகளுட் பரப்புவதற்கு குருமாரல்லாத நாமும் கையாளத்தக்க முதலாம் வழிபாடு

## பிறசமயிகளை மனந்திருப்பச் செபம்.

ஆசையிலென்ன ? ஆசைக்கோர் அளவில்லையே! என்று சொல்லவேண்டாம். பிறசமயிகள் மனந்திரும்பவேண்டுமென்ற

மெய்யான வேகமான நிலைமையான ஆசையுண்டானால், அதற்காக இடைவிடாமற் செபஞ்செய்யத் தூண்டப்படுவோம். விசுவாசம் என்பது ஓர் தேவவரம். அந்த வரம் பிறசமயிகளுக்கு அருளப்படாதவரையில், அவர்கள் தங்கள் தவறான மார்க்கங்களின் பொய்மையையும் நாதவேதத்தின் மெய்மையையும் உச்சிப்பகல்போலத் தெளிவாக உணர்ந்துகொண்டாலும் விசுவசிக்க முடியாது. ஆகையினாலே விசுவாசத்தை நம்மூர் அஞ்ஞானிகளுக்கு அருளும்படி கிருபாசமுத்திரமான யேசுவின் திருவிருதயத்தைநோக்கி நாம் செபஞ்செய்துவரவேண்டும். இதுதான் வெற்றுக்கிறீஸ்தவர்களான நாமும் எப்போதுஞ் செய்யத்தக்க அப்போஸ்தொலிக்கவேலை. செய்யக் கடமைப்பட்டுள்ளவேலை. இது அருமையென்று யார்சொல்லுவார்? இதுவும் குருமாருக்குமாத்திர முரியதென்று யார் கூறுவார்? ஆசையால் செபமாகிய இந்த இரண்டாம் வழிபாட்டைச் சாலதாமதமில்லாமற் கையாடக்கடவோம். நம்மூர்களில் நம்மைச்சூழ்ந்திருக்கின்ற உற்றாரும் உறவினரும் பிறருமாகிய சகல பிறசமயிகளும் மனந்திரும்பும்படியாக நாள்தோறும் மன்றாடிவருவோமேயாகில், நமது மன்றாட்டு அருளப்படாமல் போகமாட்டாது. இந்த மன்றாட்டுக் கேட்கப்படுவதற்கு உண்மைப்பிரகாரம் நாம் முற்றும் அபாத்திரமான பாவிகளாயிருந்தாலும், நம்முடைய இம்மன்றாட்டு நிச்சயமாக அருளப்படும். ஏனெனில் இம்மன்றாட்டு நம்முடைய புண்ணியபேறுகளை முன்னிட்டல்ல, யேசுநாதரின் திருவாக்குத்தத்தத்தை முன்னிட்டும் அவருடைய திருவுதிரப்பேறுகளை முன்னிட்டுமே அருளப்படுகின்றது. "மெய்யாகவே மெய்யாகவே நாம் உங்களுக்குச் சொல்லுகிறோம். நமது நாமத்தினால் நீங்கள் பிதாவானவரிடம் ஏதாவது கேட்பீர்களாகில் அவர் அதை உங்களுக்குத் தந்தருளுவார்". (அர்ச். அருளப்பர் 16.23.) என்று யேசுக்கிறீஸ்துநாதர் திருவாய்மலர்ந்தருளுகிறார். இந்த வாக்கியத்தை அர்ச். கிரேகோரியார் வியாக்கியானித்து: "பாவிகளே நமது பிதா உங்களுக்குச் செவிகொடுக்க நீங்கள் சுதந்தரமுள்ளவர்களல்ல. அவருடைய வரப்பிரசாதங்களை நமது நாமத்தினாலே அதாவது, நமது பெறுபேறுகளின் மூலமாய்க் கேளுங்கள். நீங்கள் கேட்கும் எதைதையும் உங்களுக்கு அருளுவார் என்று நாம்வாக்குப்பண்ணுகிறோமென்பதாகயேசுநாதர் திருவாய்மலர்ந்ததுபோலிருக்கின்றதே"யென்று எழுதியிருக்கிறார். ஆகையினாலே, செபத்தில் நம்பிக்கைவைத்து நம்மைச் சூழ்ந்திருக்கும் பிறசமயிகளுக்காக அனுதினமும் செபஞ்செய்துவருவோமாக.

ஆசாரத்துக்குரிய செறெப்பினுதெகப்றி என்ற கன்னிகையைத் திவ்விய இரட்சகர் ஒருமுறைநோக்கி: "நமது மகளே! ஆத்துமங்களை இரட்சிக்கிறதற்கு உன் செபங்களாலே நமக்கு

உதவிசெய்" என்று திருவாய்மலர்ந்தருளினார். அர்ச். தேரேசம்மாள் அஞ்ஞான ஊர்களுக்குச்செல்லாத ஓர் கன்னிகை. அவள் குருமாரைப்போல போதிக்கத்தக்க ஓர் அந்தஸ்துள்ளவளல்ல என்பதும் வெளிப்படை. அப்படியிருந்தும், அர்ச். சவேரியார் தமது பிரசங்கங்களினால் எவ்வளவு தொகையான ஆத்துமாக்களை மனந்திருப்பினாரோ, அத்தனைபேரை இவள் தனது செபதப முயற்சிகளால் மனந்திருப்பிப்போட்டதாக ஓர்முறைவெளிப்படுத்தப்பட்டதாம். ஒருபிரசங்கியார்செய்த பிரசங்கங்களைக் கேட்டவர்களுள் அதிசயமான நன்மைகள்விளைந்துகொண்டிருந்தன. ஆயினும், அந்தநன்மைகள் அவரது பிரசங்கங்களினாலல்ல, அவர் பிரசங்கம்பண்ணும்போது கூடவிருந்த ஓர்சந்நியாசியார் செய்துகொண்டிருந்த செபத்தினாலேயே விளைந்தனவென்று தேவாதீனமாய் அறிவிக்கப்பட்டதாம். இவ்விசேஷங்களெல்லாம் குருமாரல்லாத நமக்குச் செபத்திலே நம்பிக்கையை வருவித்துத் தேவன் தமது திருமுகத்தின் ஒளியை அஞ்ஞானிகளிடத்திலே பிரகாசிக்கச் செய்தருளும்படி அவரை நாம் பிரார்த்தித்துவர நம்மைத் தூண்டிவிடுவதாக. சபையாரே! நாம் அந்திசந்தி செபக்கடன்முடிக்கும்போதும், பிரசித்த பொதுச்செபத்தின்போதும், பூசைகாணும்போதும், நற்கருணை சந்திக்கும்போதும், நற்கருணை பெற்றபின்பும் அஞ்ஞானிகளுடைய ஆத்துமங்களைநினைத்து அவைகளுக்காக வேண்டிக்கொள்ளுவோமாக. அதற்காக நாம் அன்றன்றுசெய்யுந் கிருத்தியங்களையும் படும் பாடு வருத்தங்களையும் யேசுநாதசுவாமியின் திருவுதிரப் பேறுகளுடன்சேர்த்துப் பரமபிதாவுக்கு ஒப்புக்கொடுப்போமாக.

ஒரு குருவானவர் தாமெழுதிய ஓர் சிறுபுத்தகத்தில் சொல்வதாவது: "தேவன் எமக்கருளிய விசுவாசத்துக்கு நன்றியறிதலாய் நாம் நம்மால் இயன்றமட்டும் சுவிசேஷப் பரம்புதலுக்காகப் பிரயாசப்படவேண்டாமா? அக்கியானிகளுக்காக ஸ்தாபிக்கப்பட்ட மிசியோன்களுக்கு உண்டாகும் செலவுக்காகப் பணவுதவி செய்ய நமக்கு இயல்பில்லையானால், அம்மிசியோன்களின் முயற்சியினால் வேதம்பரம்பும்படியாக மன்றாடிக்கொள்ளக்கூடுமே. இக்கருத்துக்காக அநேககுடும்பங்களில் அனுதினமும் ஒருபரமண்டலமும் ஒரு பிரியதத்தமும், அர்ச். சவேரியாரே! எங்களுக்காக வேண்டிக்கொள்ளுமென்ற சிறு மனவல்லயச்செபமும் ஓதிக்கொண்டுவருகிறார்களே" என்கிறார். இப்பரிசுத்தமான வழக்கம் எம்க்குள்ளும் எம்மூர்க் குடும்பங்களுள்ளும் நுழைந்து நிலைத்தாலோ!

யேசுக்கிறீஸ்துநாதர் இவ்வுலகத்தில் இருந்தபோது ஒரு நாள் திரளான சனங்களைக்கண்டு, அவர்கள் மேய்ப்பனில்லாத

ஆடுகள்போலக்கிடந்து வருந்தினதினால் அவர்கள்மேற் சித்த மிரங்கி, தம்முடைய சீஷர்களைநோக்கி: வேளாண்மையோ மிகு தியாகவிருக்கின்றது வேலையாட்களோ கொஞ்சம்போரம். ஆகை யால், தன் அறுப்புக்குத் தேவையான வேலையாட்களை அனுப்பும் படியாக வேளாண்மை எசமானை மன்றாடுங்கள் என்று திரு வுளம்பற்றினார். நாமும் அஞ்ஞானிகளின் மனந்திரும்புதலுக்காக மன்றாடும்போது, யேசுநாதரின் திவ்விய இருதயத்தின் கருத் துப்பிரகாரம் வாக்கிலும் கிரியையிலும் வல்லவர்களும், பரிசுத்த தனத்திலும் பத்திவைராக்கியத்திலும் சிறந்தவர்களுமான குருப் பிரசாதிகளைத் தேவன் எம்மூரிலுள்ள பிறசமயிகளின்மத்தியில் அனுப்பியருளும்படி பிரார்த்திப்பது உத்தமம். செபத்திலே கேட்பதை உள்ளபடியே விரும்பித் தேடுவோமாகில் நமக்குள் ளே பத்தியிலும் புத்தியிலும் சிறந்தவர்களாயுள்ள சிறுவர்க ளைக் குருத்தொழிலுக்கும் சந்நியாச அந்தஸ்துக்கும் நேர்ந்துவிட் டு, அவர்களைப் புண்ணியத்திலே விருத்தியாக்கிப் படிப்பித்துக் குருமடத்துக்கு அனுப்பவும் கவனிப்போம். இவ்விதமான கரு மத்துக்குரிய ஆசையோடும் தேவ இஷ்டப்பிரசாதத்துடனிருந் துகொண்டும் செபஞ்செய்துவருவோமேயாகில், நமதுசெபம் தாழ மையும் நம்பிக்கையும் நிலைமையும்பொருந்தியதாயிருக்குமேயாகில், அத்துடன் ஒறுத்தல்முயற்சியும் கூட்டிச் சேர்ப்போமேயாகில், தப்பாமல் நமதுசெபம் பலன்கொடுக்கும்; அநேக அஞ்ஞானி கள் நித்தியசீவியக்கனியை அடைந்துகொள்ள உதவிசெய்யும்; இப்போதே குருப்பிரசாதிகள ஆங்காங்கு தூவிக்கொண்டிருக் கும் சுவிசேஷவித்துப் பலிதப்படும்படி தேவவரப்பிரசாதமழை யைப் பொழிவிக்கும்; ஞானமும் பத்தியும்நிறைந்த குருப்பிரசா திகளை நமது சுவதேசத்திலேயே உண்டாக்கி விசுவாசப்பரம்பு தல்வேலையைப் பதின்மடங்காய் விருத்தியடைவிக்கும். ஆதலி னாலே செபம் என்னும் வழிபாட்டை நன்குமதித்து அதின்மூல மாகப் பிறசமயிகளுள் சுவிசேஷதீபத்தை ஏற்றிவைக்க வருந்து வோமாக.

அப்பால் நாங்கள் செய்யக்கூடியது என்ன? விசுவாசம் பரம்பவேண்டுமென்று மெய்யான ஆசைகொண்டு அதற்காக மனம்வைத்து பிரார்த்தித்துவருவதற்குமேல் நாங்கள் என்ன செய்யக்கூடும்! என்பீர்களானால், குருமாரல்லாத நாமும் செய்ய வேண்டிய ஒரு பிரசங்கமிருக்கின்றது. அந்தப் பிரசங்கம் யாது? அது:

## நன்மூன்மாதிரிகை.

1899-ம் ஆண்டு மாசிமாசம் வெளிப்பட்ட "அமலோற்பவ இராக்கினிதூத"னிலே இலங்கை எப்படி மனந்திரும்பும் என்ற

மரூட விஞேவோடு தோற்றியவிஷயத்தில் புத்தகங்களினாலுமல்ல, தர்க்கங்களினாலுமல்ல, பிரசங்கங்களினாலுமல்ல விசுவாசிகளினாலேயே இலங்கையின் அஞ்ஞானிகள் சத்தியவேதவெளிச்சத்துக்கு இட்டுக்கொண்டுவரப்படவேண்டுமென்று சுருங்கச் சொல்லி விளங்கவைத்திருக்கின்றது. அதிற் சொல்லியிருக்கிறபடி, இதற்கு, ஆண்டவர் திருவாய்மலர்ந்தருளிய உவமையொன்றே சாட்சியாகும். அந்த உவமையில் சொல்லப்பட்ட ஸ்திரீயானவள் மூன்றுகொத்துமா புளிக்கும்படியாகக் கொஞ்சம் புளித்தமாவை அதற்குள் இட்டுவைத்தாள். (மத்.13;33) அப்படியே கர்த்தரும் பொய்ச்சமயவாதிகளை மனந்திரும்பிக் கிறீஸ்தவர்களாகும்படி அவர்கள்மத்தியிலே சில கிறீஸ்தவர்களை வைத்திருக்கிறார். அர்ச். பவுல் அப்போஸ்தலர் தமது காலத்திருந்த விசுவாசிகளுக்கு எழுதி: "நீங்கள் கெட்டதும் மாறுபாடுள்ளதுமான சந்ததிநடுவில் உலகத்தைப் பிரகாசிக்கிற சுடர்கள்போல விளங்குகிறீர்கள்" (பிலிப். 2; 15.)என்றார். இம்முன்மாதிரிகையை நாமும் கைக்கொண்டு அஞ்ஞானிகள்முன் சுடர்கள்போலவிளங்கப் பிரயாசப்படவேண்டும். அதாவது, நமது வேதக்கற்பனைகளின்படி சரியாய்நடந்து சகலபுண்ணியங்களிலும் நன்மாதிரிகையாகவிளங்க வேண்டும். கிறீஸ்தவர்களின் துன்மாதிரிகையே அஞ்ஞானிகள் மெய்வேத ஒளிபெறப் பெரிய விக்கினமாகவும், நன்மாதிரிகையோ அவர்கள் மனந்திரும்பப் பலத்தவோர் தூண்டுகோலாகவும்இருக்கின்றது. ஏரோணிமுஸ் எனும் வேதசாஸ்திரியானவர்: "ஒருவனுடைய நன்முன்மாதிரிகை பிறருடைய இருதயத்தில் பத்தியையெழுப்பி மோட்சநன்மையின்மேல் ஆசையை மூட்டிவிடும்" என்றுமொழிந்தார். ஒருவனுடைய நன்மாதிரிகைக்கு அவ்வளவு பலமிருந்தால் பலருடைய நன்மாதிரிகைக்கு எவ்வளவு பலமிருக்கவேண்டும்? கொஞ்சம் புளிக்காரத்தினாலேபெருந்தொகையானமா முழுதும் புளிப்பேறுவதுபோல ஒரு ஊரிலே விசுவாசிகள் சிறுதொகையினராயிருந்தாலும் அவர்கள்மூலமாய்ப் பெருந்தொகையாயுள்ள அஞ்ஞான சகோதரர்கள் விசுவாசிகளாவார்களென்று நம்பப் போதியவிடமுண்டு.

கிறீஸ்தவர்கள் எப்போதும் அணிந்திருக்கவேண்டிய நல்லொழுக்கமாகிய ஆபரணத்தின்மத்தியிலே பிறர்சிநேகம் என்னும் இரத்தினமே கண்ணைப்பறிக்குமொளியோடு சொலித்துக் கொண்டிருக்கவேண்டும். அன்பு ஆதரவு பொருந்தியநன்னடை மனுஷரை அஞ்ஞானத்திலிருந்துமெய்ஞ்ஞானத்துக்கிழுக்கும் ஊசிக்காந்தமாகும். கண்டியில் ஸ்தாபித்திருக்கும் அர்ச்.பாப்பாண்டவருடைய குருமடத்தில், மனுஷரை மனந்திருப்புவதற்குப் பிரசங்கமோ புத்தகமோ அதி வாய்ப்பான வழியாடென்று ஓர்முறை சமாதான வாதிட்டுப் பேசிக்கொண்டார்களாம். 'பாப்பாண்டவ

ரின் ஸ்தானாபதியாக அங்கு எழுந்தருளியிருந்து அதைக்கேட்டிருந்த சலஸ்கியாண்டவரவர்கள்: பிரசங்கமுமல்ல புத்தகமுமல்லப் பிறர்சிநேகமே அதிவாய்ப்பான வழிபாடென்றுகூறி அவர்களுடைய சுகிர்த தர்க்கத்துக்கு முடிபுகட்டிவிட்டாராம். அர்ச். பக்கோமியார் மனந்திரும்பின வர்த்தமானம் இச்சத்தியத்தை உத்தமமாய்த் தெளிவித்துக்காட்ட உதவும். அவர் பெரிய கொன்ஸ்தாநதீனென்னும் இராயனின்படையில் சேவிக்கும்போது அஞ்ஞானியாயிருந்தார். மார்க்குசென்ஸ் எனபவனுக்கு விரோதமாய்ச் சண்டைசெய்யும்பொருட்டு இவரையும் மற்றவர்களோடு கப்பலிலேற்றி அனுப்பினார்கள் வழியில் ஆகாரவஸ்துக்கள் எல்லாம் முற்றும் செலவழிந்துபோய், இவர்கள ஒருபட்டணத்தில் இறங்கினார்கள். அப்பட்டணத்தார இவர்களுக்கு வேண்டிய போசனவஸ்துக்களையெல்லாம் வலியச் சந்தோஷத்தோடு கொண்டுவந்து திரளாய்க் கொடுத்ததினாலே பக்கோமியார் ஆச்சரியப்பட்டு: இசசனங்கள் இவ்வளவு சந்தோஷத்தோடு நமக்கு உதவிசெயகிறார்களே இவர்கள் யாரென்று கேட்டார். அதற்கு: இவர்கள் கிறீஸ்தவர்கள, தங்களால் கூடினமாத்திரம எல்லாருக்கும் உதவிசெய்வதே இவர்கள் சுயகுணமென்று சொன்னார்கள். உடனே அவர்கள கைக்கொண்ட வேதத்தைத் தாமும் கைக்கொள்ளவேணுமென்ற வேகமான ஆசை அவர் உள்ளத்தில் பற்றிக்கொண்டதினாலே, தமது கையை உயர்த்தி வானத்தை அண்ணாந்துபார்த்துக்கொண்டு சருவேசுரனைச் சாட்சியாக அழைத்துச் சத்தியவேதத்தில் உட்பட்டார். ஆகையால் அந்தக் கிறீஸ்தவர்களிடத்திலிருந்த பிறர்சிநேகம் ஒன்றே அவர்கள் அநுசரித்தவேதம் மெய்வேதமென்று ஒப்பித்து, அவர்மனதைத் திருப்புவதற்குப் போதியகாரணமாயிற்று என்பது பிரத்தியட்சம்.

பிரசங்கத்திலும் நன்மாதிரிகை பெலமுள்ளது என்பதைக் காட்ட வேறொரு உதாரணமாவது: அர்ச. சவேரியாருடன் கூடிவந்த குருக்களில் ஒருவர் யப்பானிய பட்டினமொன்றில் பிரசங்கித்துக்கொண்டிருக்கும்போது, ஒருவன் அவருக்கு ஏதோ சொல்லவிரும்பினாற்போலச் சமீபித்துப்போய் அவர் முகத்திற் காறித்துப்பிவிட்டான். அவர் சிறிதும் முகங்கோணாது ஒருவார்த்தையும் சொல்லிமுறையிடாது தமது பிரசங்கத்தைத் தொடர்ந்து சொல்லிக்கொண்டிருந்தார். அதைக்காணவே, சமுகமாயிருந்த யாவரும்—முதலிற் சிரித்தவர்கள்தாமும் ஆச்சரியத்தினால் கிரப்பப்பட்டார்கள். அப்பட்டணத்தவருள ஒருவன் தான் கண்டதைப்பற்றித் தன்னுள்ளேசிந்தித்து: இந்த அன்னியன் தான்சொல்லும் போதனை தெய்வீகமானதென்று ஒப்பிக்கப் போதிய நியாயமுடையவனாயிருக்கிறான். ஒருவனுடைய ஆத்துமத்துக்கு இத்தன்மையான மகத்துவத்தையும் தைரியத்தையும் கொடுத்தத்

தன்னை அவ்வளவாக வென்றடக்கச்செய்யும் ஓர் பிரமாணம் பரலோகத்திலிருந்துமாத்திரம் வந்திருக்கக்கூடுமென்று சொல்லிக் கொண்டான். பிரசங்கமுடிவில் குருவானவரின் புண்ணிய முன்மாதிரி தன்னை மனந்திருப்பியதென்று பிரசித்தமாய் அறிக்கையிட்டு ஞானஸ்நானம்பெற்றுக் கிறீஸ்தவனானான். அவனுக்குப் பின் வேறுபலரும் மனந்திரும்பித் திருச்சபையின்மடியிற் சேர்ந்துகொண்டார்கள். இதனால் நாம் கற்றுக்கொள்ளக்கூடிய ஒரு பாடமுண்டு. நமது குருப்பிரசாதிகள் எவ்வளவு பிரயாசப்பட்டு உழைத்தாலும், கிறீஸ்தவர்களாகிய நாம் அவர்களிடத்தில் அடைந்துகொண்ட போதகத்தின்படி நடவாவிட்டால அவர்கள பிரயாசம் வீணாய்ப்போய்விடும். கனியைக்கொண்டே மனுஷர் மரத்தை அறிவார்கள். பிறசமயிகளும் தங்களோடு நாடோறும் ஊடாடுகிறவர்களாகிய நம்மைக்கொண்டே நமது குருப்பிரசாதிகள் போதிக்கின்ற வேதத்தின் உண்மையைப் பரிசோதித்தறியத் தேடுவார்கள். ஆகவே, நமது நன்முன்மாதிரிகை பிறசமயிகளை மனந்திருப்புவதற்கு ஓர் உசிதமான வழியாமென்று நிச்சயித்துக்கொண்டு, நாமும் நமது சொற்கடங்கிநடக்கத்தக்கவர்களுமாவது, கூடியளவில் நல்ல உத்தம கிறீஸ்தவர்களாகச் சீவித்துப் பிறசமயிகள் மனந்திரும்புதற்குத் தூண்டுதலாகவிளங்கக்கடவோமாக.

## சமயோசித முயற்சி

மேலும் நமது திருவேதபோதகர்களுக்கு நம்மாற் செய்யக்கூடிய வேறு உதவிகளும் அனந்தம் உண்டு. நாம் தங்களுக்கு உதவிசெய்யவேண்டுமென்று நம்முடைய ஞானமேய்ப்பர்கள் நியாயத்துடனேயே காத்திருக்கிறார்கள். ஆனால், தற்சமயம் சபையாருள் சிலர் ஆம்! ஆம்!! அஞ்ஞானிகளை மனந்திருப்ப ஆசைப்படவேண்டுந்தான். அதற்காகச் செபஞ்செய்யவேணடுந்தான். நன்மாதிரிகைகாட்டவும் வேண்டுந்தான். ஆனால் அதற்காக நேரிலே பிரயாசையெடுத்துக்கொள்வது குருமாருடைய கருமமேயன்றி நமது கருமமல்லவே என்று எண்ணமிடுவார்கள்போலும். குருமார்மாத்திரமல்ல, அவர்கள் விசாரணையின் கீழுள்ள சகலகிறீஸ்தவர்களும் முதன்முதல் தங்கள் இரட்சணியவேலையை அச்சத்தோடும் நடுநடுக்கத்தோடும் பார்த்துக்கொண்டு, பின் பிறருடைய ஆத்தும இரட்சணியத்துக்காகவும் இயன்றளவில் பிரயாசப்படவேண்டும் என்கிறேன். இது என்னுடைய ஒரு கூற்றல்ல; உன்னைப்போல் உன் புறத்தியானையும் நேசிப்பாயாகவென்ற தேவகற்பனையிலே அடங்கிய ஒருகூற்று. அத்திருக்கற்பனையை உற்றாராய்ந்துபார்க்கும் எவனும், தன் சரீரநன்மைக்குப் போலவே பிறருடைய சரீர நன்மைக்காகவும், தன் ஆத்துமநன்

மைக்குப்போலவே பிறருடைய ஆத்தும நன்மைக்காகவும் தன்னால் இயன்றளவு பிரயாசப்படுவது பிறர்சிநேகக்கட்டளை என்று தெளிந்துகொள்ளாமலிரான். அஞ்ஞானிகளும் சகல பாவிகளும் மனந்திரும்பி நல்வழிப்பட மெய்யான விசுவாசிகள் சகலரும் பிரயாசப்படவேண்டுமென்று நமது பரிசுத்த மாதாவாகிய திருச்சபையும் பூரணமாய் ஆசிக்கின்றது. திருச்சபைத் தலைவராய் வீற்றிருக்கும் பரிசுத்த பாப்பாண்டவர் செப அப்போஸ்தல சபையாருக்குச் சிலமாசங்களின்முன் ஆசீர்வதித்துக் குறித்துவிட்ட பொதுக்கருத்து: விசுவாசிகள் அப்போஸ்தலதொழிலை நடத்தமுயலவேண்டும் என்பதாம். திருச்சபையின் அங்கீகாரம்பெற்றுள்ள பாலர்கூட்டம் விசுவாசப்பரப்புதற்சபையாதிய இவைகளிற் சேர்ந்திருக்கும் ஆயிரக்கணக்கான சிறியோரும் பெரியோரும் அஞ்ஞானிகள் மனந்திரும்புதற்காகவே செப உதவியோடு வேறெத்தனையோ விதமான உதவியுஞ்செய்துவருகிறார்கள். அப்போஸ்தலர்காலத்தில் ஆடவர்மாத்திரமல்ல எத்தனையோ ஸ்திரிகளுந்தாமும் விசுவாசத்தைப் பரப்புவதில் அப்போஸ்தலருக்குப் பேருதவியாக இருந்துவந்தார்களென்பதற்கு, அர்ச். சின்னப்பர் முதலியோர் எழுதிய நிருபங்களே சாட்சியிடுகின்றன. ஆகையினாலே வேதப்பரம்புதலுக்காகப் பிரயாசப்படுவது திருச்சபையிலே போதிக்கும் உத்தியோகமுடையோரான குருமாருக்கன்றி நமக்கும் ஒவ்வோர்விதத்திலே தகுதியும் பிறர்சிநேகத்தின்பேராற் கடமையுமான வேலையென்று நிச்சயித்துக்கொள்வோமாக.

பிறசமயிகளை மனந்திருப்புவதற்கு ஏற்ற காரியங்கள் பலவற்றைச்செய்வதற்கு குருமாரிலும்பார்க்க விசுவாசிகளாகிய எமக்கே அதிகமான வசதிகளுமுண்டாயிருக்கின்றன. எப்படியெனில், அஞ்ஞானிகளுடன் நாம் ஊடாடுவதுபோலக் குருமார் ஊடாடுவதில்லை. ஊடாடவும் முடியாது. நாம் அவர்களோடுகூட இருந்து உண்கிறோம், வாழுகிறோம். ஆதலால் நாம் அவர்கள் குணப்போக்கு மனச்சார்புகளை அறிந்திருப்பதுபோலக் குருமார் அறிந்திருப்பதில்லை. அவர்களுக்குப் புத்திமதிசொல்லவும் மெய்வேதத்தை விளக்கும் புத்தகங்களை வாசிக்கக்கொடுக்கவும் அவர்கள் மனந்திரும்புவதற்குத் தடையாயுள்ள சிற்சில சிக்குகளை அறுத்துவிடவும் நமக்குச்சமயம்வாய்ப்பதுபோலக் குருமாருக்கு எப்போதும் வாய்க்கமாட்டாது. பிறசமயிகளும் நம்முடன் அளவளாவிப்பேசுவதுபோல குருமாருடன் வெளியாய்ப்பேசமாட்டார்கள். “இராக்கினிதூதன்” சொல்லியபடியே சூரியவெளிச்சத்தில் வரக் கூசும் ஆந்தையையொப்பப் பிறசமயிகள் சத்தியவேதவெளிச்சத்தையேந்திவரும் வேதபோதகர்களைக்கிட்டியணுகவும் கூசுகிறார்கள். அப்போது, அவர்களைக் குருமார் காண்பதெப்படி? ஆகவே, பிறசமயிகளுள் சிலுவைக்கொடியை

விரிப்பதற்கு ஒருவகையில் குருமாரிலும் அதிகமான ஈறாவசதி யுடையவர்கள், அவர்களுடன் புழக்கமாயிருக்கும் விசுவாசிகளே என்பது தெளிவாகின்றது.

ஆனல், அஞ்ஞானிகளுள் விசுவாசத்தைப பரப்புவதற்கு வெற்றுக் கிறீஸ்தவர்களாகிய நாம் செய்யத்தக்கமுயற்சிகளெவை? அஞ்ஞான ஊர்களுக்குச்சென்று சந்திக்குசசந்தி நின்று பிரசங்கிக்கவேண்டுமா? அல்லது வீடுவீடாய்ப்புகுந்து புத்திமதி சொல்லித் திரியவேண்டுமா? இது நமக்குரிய தொழிலுமல்ல, நமக்கு அபூருமல்ல, அவசியமுமல்ல. நாம் யேசுநாதரை மெய யாகவே நேசிப்போமாகில், அவருடைய இராச்சியம அஞ்ஞானி களுள பரம்பி விஸ்தரிக்கவேண்டுமென்று மெய்யான ஆசைகொள் வோம். மெய்யான ஆசைகொள்வோமேயாகில், அதற்காக ஓயா மற் சருவேசுரனைப் பிரார்த்தித்துவருவதோடு விசுவாசத்தைப் பரபபுவதற்கு நமது அநதஸதுக்கு ஏற்றவைகளாயுள்ள உபாயங் களையும், அவைகளை உபயோகிக்கத் தகுதியான சமயஙகளையும் எபபோதும் கணடுகொள்வோம். உதாரணமாக: பிறசமயிகளை யும் ஈடேற்றவேண்டுமென்ற மெயயான ஆசைநமமிடமிருந்தால், ஒரு அஞ்ஞானக்குழநதை மரணத்தருவாயிலிருப்பதாக நிசசய மாய அறியவரும்போது, அதற்கு ஞானஸ்நானம் கொடுக்கத் தெணடிக்கமாட்டோமா? ஒரு பிறசமயி சத்தியவேதத்தில் சார் மானமுளளவனாக இருபபதை அறியவந்தால், அவனதுகருத்து மேலும மேலும உறுதிபபடும்படி பிரயாசபபடமாட்டோமா? ஒரு பிறசமயி நமது வீட்டுவேலையிலமர்நதிருநதால அவனை எது விதத்திலும மனநதிருமபி யேசுவின் திரு இருதயத்துக்கு ஓர் காணிக்கையாக ஒபபுக்கொடுக்க வருநதமாட்டோமா? நமது வேத உணமையை விளக்கும் புத்தகஙகளையும துணடுப்புசுத கஙகளையும பத்திரிகைகளையும் நமது பிறசமய சிநேகிதர்களுக் குக் கொடுத்து அவர்கள அவைகளை வாசிக்கும்படி தூண்டமாட் டமாட்டோமா? அப்பால, நமது வேதாபிமானம் ஊக்கமும உதார முமுடையதாகவிருநதால், பிறசமயிகள் மனநதிரும்புவதற்குச சகாயமாயுள்ள புததகங்களைத் துணடுப்பத்திரங்களைத் தனிச் செபங்களை அச்சிடுவித்துப்பரப்ப முயற்சிசெயயமாட்டோமா? நம்மைச் சருவேசுரன் உலகபொருட்களால் ஆசீர்வதித்திருந் தால், அப்பொருட்களிற் கொஞ்சம இநதசிரையிலே எடுத்து விடக்கூடாதா? ஒரு குருவானவர் அஞ்ஞானபகுதிகளில ஒரு பாடசாலையை ஸ்தாபிக்க, அலலது ஒரு தேவாலயத்தைக்கட்ட முயற்சிசெய்தால் அவருக்கு வலக்கை இடக்கையாக நின்று உதவிசெய்யமாட்டோமா? பொருளுதவிசெய்ய இயலாதவர்கள் சரீர உதவி பாவது செயயக்கூடாதா? புதுக்கிறீஸ்தவர்கள் ஓரி டததிற் துன்பப்படுகிறார்களென்று கேள்விப்பட்டால், அவர்களி

டம்போய்த் தெண்டுசொல்லி நம்மாலியன்ற உதவிசெய்யக்கூடா தா? நம்மிடத்தில் கெட்டியான தேவஜநேகமிருந்தால்—உண்மை யான தேசாபிமானமிருந்தால், இவ்வேறான்ன முயற்சிகளைச் செய்வதற்கு எப்போதும் மனச்சந்தோஷத்தோடு துரிதப்படு வோம். துரிதபபடுவோம்.

ஆகையால், யேசுநாதசுவாமியை மெய்யாகவே நேசித்து, அவருடைய மகிமைக்காகப்பிறசமயிகளை மனந்திருப்பவும்மெய்ஞ் ஞான வெளிச்சத்துக்கு அழைத்துவரவும் ஆசைப்படுவோமாக. தொடக்கத்திற் தொகுத்துக்காட்டிய முகாந்திரங்களை ஊன்றிச் சிந்தித்து அந்தப் பரிசுத்த ஆசையை நமது இருதயத்தில்மூட்டி வளர்த்து வருவோமாக. எம் ஆசை சோம்பேறிகளின் ஆசைபோல முயற்சியற்றதாய் இராமல், தளராமுயற்சியுள்ளதாயிருப்பதாக. அதற்காகச் செபம், நன்மாதிரிகை தருணத்துக்கேற்ற புத்திமதி, பொருளுதவி, சரீரஉதவி ஆகிய உபாயங்களைக் கவனபிரமாணிக்கமாய்க் கையாடிவருவோமாக. நாமனைவரும் இந்தப்பரிசுத்த அப்போஸ்தலவேலையிலே முயன்றுவரக் கிருபாசமுத்திரமான யேசுவின் திரு இருதயம் அருள்செய்வதாக.



## அஞ்ஞானிகள் மனந்திரும்பும்படி

# அர்ச். சவேரியார்செய்த செபம்.

சகல பொருட்களையும் ஆக்கினவரான நித்திய சருவேசுரா, தேவரீரே அஞ்ஞானிகளுடைய ஆத்துமங்களை உண்டாக்கினவரு ளென்பதையும், அவைகள் உமது சாயலாகவே ஏற்படுத்தப்பட்டிருக்கிறதையும் நினைந்தருளும் சுவாமீ! இதோ தேவரீருடைய தோத்திர நிந்தைக்காக, இந்த ஆத்துமாக்களாலேதானே நரகம் நாளுக்குநாள் நிறைந்துகொண்டுவருகிறது. ஆ! சுவாமீ! இவர்களின் இரட்சணியத்துக்காக உம்முடைய திருக்குமாரனாகிய யேசுநாதர் மகா கொடூரமான மரணத்துக்குக் கீழ்ப்படிந்ததை நினைத்தருளும், இனிமேலாவது இவ்வஞ்ஞானிகளால் உமது திருச்சுதன் அவசங்கைப்பட விட்டுவிடாதேயும். ஆனால், சுத்தவாளரின் செபங்களினாலும் உம்முடைய திருச்சுதனின் பத்தினியாகிய திருச்சபையின் செபங்களினாலும் தேவரீர் சாந்தியாகி, இவர்களுடைய விக்கிரகாராதனையையும் அவபத்தியையும் மறந்து, உமது இரக்கப்பெருக்கத்தை மாத்திரம் நினைந்துகொண்டு, தேவரீர் அனுப்பியவரும் எங்கள் இரட்சணியமும் எங்கள் சீவியமும் எங்கள் உத்தானமுமாகிய யேசுகிறீஸ்துநாதசுவாமியை இவர்களும் ஓர்காலம் அறிந்து ஆராதிக்கப்பண்ணியருளும். எங்களை மீட்டிரட்சித்தவராகிய யேசுநாதசுவாமிக்கு முடிவில்லாத அனவரதகாலமும் தோத்திரம் உண்டாகக்கடவது. ஆமென் யேசு.

*Imprimatur,*

CH. BOURY, O. M. I.
VIC. GEN.

**Jaffna, 1—1—09.**

PRINTED BY C. ANDREW

**CATHOLIC TRACT.**
**No. 1.**

# TWO CAPITAL LIES.

# இரண்டு படுபொய்கள்

---

உலக சிந்தனையில் மூழ்கிய மனிதர் இரண்டு படுபொய்களைச் சொல்லிக்கொண்டுவருகிறார்கள். அவற்றுள் ஒன்று, சமயம் எல்லாம் சரிதானே என்பது. மற்றது, எவனும் தனது பரவணிச் சமயத்தை விடப்படாது என்பது. இந்த இரண்டு பொய்களும் விசேஷமாய் நம்முடைய இத் தேசத்திலே அதிகமாய்ப் பரம்பி ஆத்துமாக்களுக்கு வெகு மோசங்களைச் செய்துகொண்டுவருகின்றன.

I. சமயம் எல்லாம் சரிதானா? எந்தெந்த மார்க்கத்தில் இருந்தாலும் விசுவாசத்தோடுமாத்திரம் நடந்துகொண்டால் போதுமா? கடவுளால் ஏற்படுத்தப்பட்ட மெய்யான சமயம் எது என்று தேடி அறியவேண்டியதில்லையா? கடவுளால் ஏற்படுத்தப்பட்ட சமயத்தைத் தேடி அறியவேண்டியதில்லை என்றால், கடவுள் தாம் ஒரு சமயத்தை எதுக்காக ஏற்படுத்துவாரோ? மகமதியரும் தங்கள் கடவுள் ஒரு வேதத்தை வெளிப்படுத்தினார் என்கிறார்கள்; சைவரும் தங்கள் கடவுள் ஒருவேதத்தை வெளிப்படுத்தினார் என்கிறார்கள்; கிறீஸ்துவர்களும் தங்கள் கடவுள் ஒருவேதத்தை வெளிப்படுத்தினார் என்கிறார்கள்; இன்னும் வேறு சமயத்தவர்களும் இப்படியே சொல்லுவார்கள். இந்தப் பலசமயத்தவர்கள் எல்லாம் சொல்லுகிறபடி வெவ்வேறு வேதம் இருந்தால், அப்போது, வெவ்வேறு கடவுளும் உண்டு என்ற அபத்தத்தை அங்கீகரிக்கவேண்டிவரும். ஆனால், வெவ்வேறு கடவுள் இல்லை. கடவுள் ஒருவரே உண்டு என்றபடியால், அந்த ஒரே கடவுள் கொடுத்தருளிய மெய்யான வேதமும் ஒன்றே என்று சொல்லுவது அவசியமாகின்றது. இனி, மானிடர் ஈடேறும்படி மெய்யான ஒரே கடவுளால் வெளிப்படுத்தப்பட்ட மெய்யானவேதம் ஒன்றே இருக்க, அதை நாம் தேடி அறியவேண்டியதில்லையென்றும், எந்தவேதத்தை விசுவசித்தாலும் எந்தச்சமயத்தை அநுசரித்தாலும் சரியே என்றும் சொல்லுவது மெய்யான வேதத்தை அருளியவரான கடவுளை அவமானப்படுத்துகிறதாய் அல்லவோ முடியும்?

ஒரு இராச்சியத்தில் அரசாட்சியாரால் இராசநாணயம் அடித்துப் பரப்பியிராவிட்டால், இந்தக்காசு செல்லும் அந்தக்காசு செல்லாது என்றபேதம் இராது; எல்லாக்காசும் அதனதன் மானத்துக்குத் தக்கபடி செல்லும். ஆனால், அரசாட்சியார் இராச முத்திரையோடு ஒரு நாணயத்தை அடித்து ஒரு இராச்சியத்திலே எந்நாளிற் பரப்புவார்களோ, அந்த நாட்தொட்டு இனி இராச முத்திரை இல்லாத நாணயம் எல்லாம் செல்லாக்காசாய்ப் போய்விடும். இப்படியே, கடவுள், உலகத்தார் ஈடேறும்பொருட்டு ஒரு வேதத்தை வெளிப்படுத்தாமல் அவரவர் தாம் தாம் விரும்பிய படியெல்லாம் நடந்துகொள்ளலாம் என்று விட்டிருந்தால், அப்போது சமயமெல்லாம் சரிதானே, எப்படி நடந்தாலும் குற்றமில்லை என்று சொல்லக்கூடியதாயிருக்கும். ஆனால், கடவுள் மனிதரைத் தாம் தாம் விரும்பியபடி நடக்கவிடவில்லை என்றதையும், ஒரு வேதத்தை அருளியே இருக்கிறார் என்றதையும் யாராவது மறுக்கக்கூடாமலிருக்கிறபடியால், கடவுளால் அருளப்பட்ட அந்த வேதமும், அந்தவேதத்தை அநுசரிக்கிற சமயமும் மாத்திரம் அவர்சமுகத்திற் செல்லும்; மனிதனால் உண்டாக்கப்பட்ட மற்றச் சமயங்கள் அவர்சமுகத்திற்செல்லாது. இனி, மனசார அறியாமையினால் யாரேனும் கடவுளால் ஏற்படுத்தப்பட்ட ஒரே மெய்யான சமயத்தை அநுசரியாமலிருந்துவிட்டால் மன்னிப்புக் கிடைக்கக்கூடும் என்றாலும், அறிந்துகொண்டு மெய்யானசமயத்தை அநுசரியாமல் விடுவோருக்கு மன்னிப்புக்கிடைக்குமா? கிடையாது. கள்ள நாணயத்தை ஒருவன் அறியாமையினால் வைத்துப் புழங்கினதைக் கண்டால் அரசாட்சியார் ஒருவேளை அவன்குற்றத்தை மன்னிப்பார்கள். அறிந்துகொண்டு அதைப் புழங்குகிறவனுக்கும் மன்னிப்பார்களா? ஒருபோதும் மன்னியார்கள். அப்படியே கடவுளால் ஏற்படுத்தப்பட்ட மெய்யான சமயம் ஒன்று இருக்கையில் சமயம் எல்லாம் சரிதானே என்று சொல்லிக்கொண்டிருப்போரையும் கடவுள் ஒருபோதும் மன்னியார்.

"எந்தெந்தச்சமயத்திலும் வழிபடுகிறது ஒருகடவுளைத்தானே" என்ற போலிநியாயமும் பொருந்தாது. ஏனெனில், ஒவ்வொரு சமயமும் தன்னாற் கூறப்படும் கடவுளை வெவ்வேறு லட்சணங்களும் கிரியைகளும் உள்ளவராகக்காட்டுகின்றது. ஒரு உதாரணஞ் சொல்லுவோம்:—கடவுள்தாமே உலகத்தையும் ஆத்துமாக்களையும் ஒன்றுமில்லாதிருக்கையிலே படைத்தார் என்று கிறீஸ்துவர்கள் சொல்லுகிறார்கள். சைவரோ கடவுள் ஓர் குயவனைப்போல வேறொருபொருளைக்கொண்டுதான் உலகத்தைப் படைத்தாரென்றும், ஆத்துமாக்களை அவர் படைக்கவில்லையென்றும் சொல்லுகிறார்கள். கடவுள் ஒருவரே என்றும், அவர் தமது கிரியைகளிலெல்லாம் மட்டில்லாப் பரிசுத்தரென்றும் கிறீஸ்துசமயம் படிப்பிக்கின்றது. சைவசமயமோ, கடவுள் ஒருவரேயென்றாலும் அவர் சிவன் என்றும்,

சத்தி என்றும், பிரமா விஷ்ணு முதலியவர்களென்றும் பல வேறு வஸ்துக்களாய் இருப்பாரென்றும், விஷ்ணுமுதலியவர்களையும் கடவுளாக வணங்கலாமென்றும் போதிப்பதோடு, சிவன் முதலியவர்கள் வெவ்வேறு அவதாரங்களை எடுத்து, எந்தத் துட்டனும் நடக்கத்துணியாத துன்மார்க்க நடையுள்ளோராய்த் திரிந்தார்களென்றும் காட்டுகின்றது. இப்படிப்பட்ட துராகிருதமான பெயர்வழிகளும் கிறீஸ்துசமயத்திற் கூறப்படும் கடவுளும் ஒன்றேயென்று யார் சொல்லுவார்?

அப்படியானுல் கிறீஸ்துவர்களுடைய கடவுளும் வேறு சைவர் முதலியோருடைய கடவுளும் வேறு என்போமா? அதெப்படி? இரண்டு மூன்று கடவுள் இருக்கக்கூடுமா? கூடாது. உள்ளபடி கடவுள் ஒருவரே உண்டு. என்றாலும், வெவ்வேறு சமயம் அவரை வெவ்வேறுவிதமாய்க் காட்டுகிறபடியால் மெய்யான சமயத்தினுற் காட்டப்படும் கடவுள் ஒருவரே உள்ள கடவுளாம். மற்றச் சமயங்களாற் கடவுளென்று காட்டப்படுகிறவர்கள் இல்லாத பொருட்களாம்; பொய்த்தெய்வங்களாம்; மனிதனுடைய கற்பனையில்மாத்திரம் உள்ள தெய்வங்களாம். ஆகையால், உதாரணமாக: கிறீஸ்து வேதம்ஒன்றே சத்தியவேதம் என்றுவைத்துக்கொண்டால், சைவம் முதலிய பிறசமயத்தவர்கள் கிறீஸ்துவர்களைநோக்கி: "நீங்கள் வழிபடுகிறதும் நாங்கள் வழிபடுகிறதும் பார்க்கப்போனுல் ஒருகடவுளைத்தானே" என்று சொல்லுவது முழுத்தவறு. ஏனெனில், பார்க்கப்போனுல் சத்தியவேதம் சொல்லுகிற லட்சணங்கள், கிரியைகள் உள்ள கடவுள்மாத்திரம் உண்டு. மற்றச்சமயங்கள் சொல்லுகிற லட்சணங்கள் நடக்கைகள் உள்ள கடவுள் ஒரு இடத்திலும் இல்லை. கிறீஸ்துவர்கள் பிறசமயத்தவர்களைப்பார்த்துப் பின்வருமாறு சொல்லுவதே நீதி:— "கடவுள் ஒன்றில் உங்கள் சமயத்திற் சொல்லப்படுகிற இயல்பு உள்ளவராயிருக்கவேண்டும். அல்லது எங்கள் சமயத்திற் சொல்லப்படுகிற இயல்பு உள்ளவராயிருக்க வேண்டும். சீர்தூக்கிப்பார்த்தால் இது பேர் வித்தியாசம் மாத்திரமல்ல காரியவித்தியாசம், கடவுள் வித்தியாசம். எங்கள் சமயம் மெய்யானுல் நாங்கள் சொல்லும்விதமான கடவுள்தான் இருக்கிறார். நீங்கள்சொல்லும் குணங்குறியுள்ளவர் இல்லை. இல்லாத ஒருவருக்கு வழிபாடுகளைச்செய்து ஏன் அலைகிறீர்கள்? உள்ளவராகிய ஒரே கடவுளை நீங்கள் கைக்கொள்ளும்வரையும் உங்கள் வழிபாடுகள் வியர்த்தமே" என்று சொல்லலாம்.

II. பரவணிச்சமயத்தை விடப்படாது என்பது மற்றப்பொய். பரவணிபரவணியாய் ஒரு ஊரில் வழங்கிவந்த சமயம் எப்படிப்பட்ட பொய்ச்சமயமாயிருந்தாலும் அதை விடவேபடாது என்று எங்காவது ஒரு பிரமாணமுண்டா? இல்லை. புத்தியுள்ள மனிதன் அங்கீகரிக்கவேண்டிய பிரமாணம் என்னவென்றுல், யாதொன்

றைப் பொய்யென்று கண்டவுடனே அதை வெறுத்துவிடவேண்டும்; யாதொன்றை மோசம் என்று அறிந்தவுடனே அதைவிட்டு விலகவேண்டும் என்பதுதான். மெய்யான கடவுளால் ஏற்படுத்தப்பட்ட சமயத்தை இதுவரையும் நம்முடைய தேசத்தார் அறியாமல் மயங்கிப்போயிருந்து இப்போது அறியவந்தால் அவர்கள் இன்னும் தங்கள் கண்களை மூடிக்கொள்ளவேண்டுமா ?

கிறீஸ்துவேதம் ஐரோப்பியவேதம், அது எங்கள் தேச ஆசாரத்தோடு பொருந்தாது என்று சொல்லுவதும் தகாது. கிறீஸ்துவேதம் ஐரோப்பியவேதமல்ல, அதுவே ஆதிவேதம். அதையே இயல்வேதம் என்றபடியில் நமது முன்னோர் அநுசரித்துவந்தார்கள். அதையே வரிவேதம் என்றபடியில் ஆசியாதேசத்தாரான யூதர் அநுசரித்துவந்தார்கள். அது கிறீஸ்துவேதம் என்ற பூரண பருவத்தில் வெளிப்படுத்தப்பட்டதும் ஐரோப்பாக்கண்டத்தில் அல்ல நமது ஆசியாக்கண்டத்திலேதான் ஆகும். கிறீஸ்துவேதம் ஒருசாதியாருக்குமாத்திரம் பொருந்தத்தக்க வேதமல்ல. அது சகல சாதியாருக்கும் ஏற்றது. ஏனெனில், அதுவே கடவுளால் ஏற்படுத்தப்பட்ட ஏக மெய்யான வேதமாம்.

சைவசமயம் முதலிய பிறசமயங்கள் ஒவ்வொருதேசத்தில் மாத்திரம் பரம்பியிருக்கின்றன. இப்படியே தென் இந்தியாவுக்கும் வட இலங்கைக்கும் அப்பால் சைவசமயம் இல்லை. கிறீஸ்துசமயமோ ஐரோப்பா, அமரிக்கா, ஆபிரிக்கா, ஆசியா என்னும் சகல கண்டங்களிலும் சகல தேசங்களிலும் சகல சாதிகளுள்ளும் பரம்பியிருக்கின்றது. இன்னும் பரம்பிக்கொண்டுவருகின்றது. சைவசமயம் கதித்த இடங்களிற்தானும் அது வரவரப் பரம்பிச் சிறந்து விளங்கிக்கொண்டுவருகின்றது. பரவணிபரவணியாய்ச் சைவராயிருந்துவந்த பெரிய பெரிய கனதனவான்களும் கிறீஸ்துவேதத்திற்சேர்ந்துகொண்டுவருகிறார்கள். பரவணிச்சமயத்தை விடப்படாது என்றுசொல்லுவோரின் அறியாமையை ஓட்டுவதற்கு இவர்கள் காட்டும் முன்மாதிரிகை போதுமே.

SECOND EDITION

*Permissu Superiorum.*

PRINTED BY C. ANDREW AT ST. JOSEPH'S CATHOLIC PRESS, JAFFNA.

**CATHOLIC TRACT No. 2.** SECOND EDITION, *Permissu Superiorum.*

# AN IMPORTANT DUTY.

# ஒரு பெருங் கடமை.

---

"தன் நெஞ்சறிவது பொய்யற்க; பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச்சுடும்"— திருவள்ளுவர்.

"ஓய் அது ஒருபோதும் முடியாத அலுவல்காணும். மார்க்க விஷயத்தை விட்டுவிட்டு வேறுகாரியங்களைச் சந்தோஷமாய்ப் பேசிக்கொள்ளுவோம். வழியும் தொலையவேணுமே"

என்று வேலாயுதர் சொல்ல, மாணிக்கர் தமது சிநேகிதனுடைய முகத்தை முறியாதபடி ஊர்க்கதை இரண்டொன்று பேசிக்கொண்டு சற்றுத்தூரம் நடந்தபின், அவரைநோக்கி மீண்டுஞ் சொல்லுவார்:—

"ஏன்? இப்போ நாங்கள் இருவரும் ஆனையிறவுக்கல்லவா போகிறோம்? அதோ பாரும், கொடிகாம நாற்சந்திப்பு வருகுது. நான் இதற்குமுன் ஆனையிறவுக்குப் போயறியேன். ஆனபடியால் ஆனையிறவுத்தெரு எது என்று அந்தச் சந்திப்பிலே நிற்கிறவர்களைக் கேட்க, ஒருவன் வடக்கே போகிற தெருவைக் காட்டுகிறான்; மற்றவன் தெற்கேபோகிற தெருவைக் காட்டுகிறான்; இன்னுமொருவன் கிழக்கேபோகிற தெருவைக் காட்டுகிறான். எவன் காட்டுகிறவழி சரியென்று நம்புவேன்! இதற்குப் போம்புத்தி என்ன?"

வேலாயுதர்.—ஏன்காணும்! கடவுள் தந்த புத்தியும் உமக்கு இல்லையா? வடக்கே திரும்பினால் பரித்தித்துறைக் கரையென்றும், தெற்கே திரும்பினால் கச்சாய்க் கரையென்றும் சிறுபிள்ளைக்கும் தெரியுமே. கிழக்கே கிடக்கிற ஆனையிறவுக்கு வடக்கேயேன் தெற்கேயேன் போவான்? புத்திதான் இல்லாவிட்டாலும் "வாயுண்டானால் வங்காளம் போகலாமே."

மாணிக்கர்.—வேலாயுதரே, கோபித்துக்கொள்ளாமல் எனக்கு ஒரு மறுமொழி சொல்லும்; மார்க்கவிஷயத்திலேயும், புத்தியுண்டானால் சரியானவழியைப் பிடித்துக்கொள்ளக்கூடாதா?

வே.—என்னென்று சொல்லுகிறீர்?...நீர் சத்தியவேதக்காரன். நான் சைவன். கடவுள் உம்மை அதிலே நிருபித்துவிட்டார். என்னை இதிலே நிருபித்துவிட்டார். அவனவனுக்குக் கடவுள் நிருபித்த சமயத்திலே இருந்துவிடாமல், எது சரி எது பிழை என்று ஆராயப்போனால் எங்கள்தரவழியாலே முடிவுகண்டுகொள்ளக் கூடாதுகாணும்.

மா.—கடவுள் பொய்யானமார்க்கத்திலே ஒருவரையும் நிருபிக்க மாட்டார். பொய் மெய்யைக் கண்டுபிடிக்கத்தானே எங்களுக்குப் புத்தியைத் தந்தவர்: அப்போ கடவுள் தந்தபுத்தியைக் கறட்கட்ட விட்டுவிடுகிறதா? உலகத்திலே மெய்யான சமயம்மாத்திரம் எங்கும் இருந்தாற் தேவையில்லை. எத்தனையோ பொய்யான சமயங்கள் இருக்கிறபோது, புத்தியுள்ளவன் எது சரி எது பிழை என்று ஆராயாமல்விட்டால் அவன் கடவுளுக்குத் துரோகியாயல்லவோ போய்விடுவான்? ஒரு தெருமாத்திரம்இருந்தமட்டும் முன்பின்பாராமல் நடந்துவந்தோம். நாற்சந்தி வந்தவுடனே எது ஆனையிறவுக்குப் போகிறதெரு என்று விசாரிக்கிறோமே.

வே.—என்னகாணும்! எங்கள் தாய், தகப்பன், பேரன், பிட்டன் எல்லாம் கைக்கொண்ட சமயம் எனக்கு ஆகாதா?

மா.— எப்படிப்பட்ட பொய்யான மார்க்கத்திலுள்ளவனும் நீர் சொல்லுகிறதுபோலச் சொல்லலாம். சோனகனும் சொல்லுவான், என் பிதா மாதாவுடைய சமயமானபடியால் என்சமயம் சரியான சமயமென்று. புத்தனும் சொல்லுவான், என் பிதா மாதா அநுசரித்த சமயமானபடியால் என்சமயம் சரியென்று. அப்போ எல்லாச்சமயமும் நல்லசமயமாய்ப்போய்விடுமே.

வே.—அப்போ என்னகாணும், எங்கள் பிதா மாதாக்கள் பொய்ச் சமயத்திலே இருந்தார்கள் என்கிறீரா?

மா.—நான் உங்கள் பிதா மாதாக்களைக் குறைசொல்லவில்லை. அவர்களுக்குக் கடவுள் நல்ல இடத்தைக் கொடுக்க! உம்முடைய பிதா மாதாக்கள் நல்லமனுஷரென்றாலும் சத்தியவேதத்தைப்பற்றியும் மற்றும் பலபல விஷயங்களைப்பற்றியும் உம்மைப்போல அவ்வளவு அறிந்தவர்களாயிருக்கவில்லை. அவரவர் அறிந்த அறிவுக்குத்தக்கபடியல்லவோ கடவுளும் அவரவரிடத்திற் கணக்குக் கேட்பார்! உமக்கு, சத்தியவேதந்தான் கடவுளுக்கு ஏற்ற...

வே.—பொறும்; அவ்வளவு சுறுக்காய்ப் போகவேண்டாம். சத்தியவேதத்திலே உள்ள நன்மையென்ன என்கிறீர்?

மா.—இதைத்தானே கொஞ்சம் நீர் ஆராய்ந்துபார்க்கவேணும் என்றேன். சத்தியவேதம் உலகமெல்லாம் பரம்பி இவ்வளவு நன்மையெல்லாம் செய்துகொண்டுவரும்போது—எத்தனையோபெரிய பெரிய பரவணி பரவணியான சைவப்பழங்கள் அதிலே வருஷந்தோறும் சேர்ந்துகொண்டுவருகிறபோது—அந்தவேதம் எப்படிப்பட்டது, அது கடவுளால் வந்த வேதமா, அதிலே நாங்களும் சேரவேண்டுமென்று கடவுள் சித்தமாயிருக்கிறாரா என்று சற்றாகிலும் விசாரிக்கவேண்டாமா? புத்தியைத் தந்தவர் அந்தப் புத்தியைக்கொண்டு தம்மைத் தேடாமல் விடுகிறவர்களைத் தண்டியாரா! முதல்கொடுத்தவன் வட்டிகேளானு!

வே.—கேட்பான்தான். கண்ணில்லாதவர்கள் கிடங்குக்குள்ளேபோய் விழுந்தார்களென்று, கண்ணுள்ள நானும் போய் விழ

வேணுமா? நான் கண்ணைத் திறந்து, போகிற வழி எது என்று பார்க்கத்தான்வேணும். அது மனிதனுடைய கடமை.

மா. மனிதனுக்கு அதுதான் பெருங்கடமை.

வே. அப்போ, மாணிக்கரே கடவுளால்வந்த சமயத்தையும் மனிதன் கட்டிவைத்த சமயங்களையும் எப்படி அறியலாமென்று சொல்லுகிறீர்கள்?

மா. எல்லாரும் கண்டுகொள்ளக்கூடிய மெத்தவெளிப்படையான சிற்சில அடையாளங்களினாலே கடவுளுடைய மெய்யான வேதத்தைக் கண்டுபிடிக்கலாம். இப்போதைக்கு ஒரு அடையாளத்தைமாத்திரம் சொல்லுகிறேன்......கடவுள் சுத்தமானவரல்லவா?

வே. அவர் அளவில்லாப் பரிசுத்தமான வஸ்து அல்லோ! நெருப்பிலே குளிர்பிடித்தாலும் அவரிலே அசுத்தம் பிடியாது.

மா. சரியாய்ச்சொன்னீர். சூரியனிலும் புள்ளியுண்டு, சந்திரனிலும் மறுவுண்டு. கடவுளிலோ களங்கமிருக்கமுடியாது. நெருப்பினுடைய சுபாவம் சூடு என்றீரே—கடவுளுடைய சுபாவம் பரிசுத்தம். நெருப்புக்குக் குளிர் சன்மத்துப் பகை; கடவுளுக்கு, பொய், கபடு, விபசாரம், அநியாயம் இவைகளெல்லாம் சன்மத்துப்பகை. என்னநினைக்கிறீர்?—கடவுள் தாமாய்த்தந்த மார்க்கம் சிற்றின்பம் பொய் கபடு இவைகளைப் போற்றுமா? அந்த மார்க்கத்தின்படி கோவில்குளங்களில் சிற்றின்பத்திற்குச் சார்மானமான காரியங்களுக்கு இடங்கிடைக்குமா? இவைகளுக்குக் கொஞ்சமாவது இடங்கொடுக்கிறவழியுங் கடவுளுடைய வழியாயிருக்குமென்று நினைக்கிறீரா?

வே. இராதுதான்.

மா. இன்னும் பாரும்: கடவுள் மனுஷனுக்கு ஒரு வேதத்தை வெளிப்படுத்துகிறதானால் அந்தவேதம் மனுஷனைக் கடவுளிடத்திலே கொண்டுபோகிறதற்கு வழியாகவேணும். அவர் சுத்தமானவரானபடியால், அவருடைய வேதமும் மனுஷனைச் சுத்தமாக்குகிறதாயிருக்கவேணும். மனுஷனே சுபாவத்தில் கீழ்நோக்கிக் கீழ்நோக்கிப்போகிறவன். அவனிடத்திலே எல்லாவிதமான ஆசாபாசங்களும் நிறைய உண்டு. வேதந்தான் மனுஷனைத் தூக்கி எழுப்பவேணும். அவன் சத்தியந் தவறாமலும் அநியாயம்பண்ணாமலும் தன்னைப்போற் பிறனை நேசித்துக் 'கடவுளை எல்லாத்துக்கும் மேலாக நேசித்துச் சேவித்துக்கொண்டுவர அது வழிகாட்டவேணும். அதிலே உள்ள தேவபத்தர்கள் மற்றெல்லாருக்கும் தீபம்போல நல்லமாதிரிகையாய்த் துலங்கவேணும்' அல்லாமலும் அதிலே பாவத்தைப் போக்கவழி இருக்கவேணும்; பாவத்தைச்செய்யாமல் விலக்க வழி இருக்கவேணும். புண்ணியத்துக்குத் தூண்டுதல் இருக்கவேணும்.

வே உங்களுடைய சத்தியவேதம் இதுகாரியத்திலே விசேஷந்தான்காணும். அதைத்தான் நானும் சொல்லுகிறேனே. உங்

கள் குருமார் எவ்வளவோ புத்திபோதரவுகளைச் சொல்லுகிறார்கள். எத்தனையோபேர் தங்கள் சொந்தத் தேசத்தை, உறவோரைவிட்டு இத்தேசங்காணவந்து மெத்தப் பாடுபட்டுத்தான் வேதம்போதிக்கிறார்கள்.

மா. நீர் நல்லாய்ச் சோதித்துப்பாரும். இப்படிப்பட்ட சுத்த போதனையும் சுத்தமான நடையும் வேறெந்தமார்க்கத்திலேயாவது காணமாட்டீர். ஏன்? ஏனென்றால் இதொரு முத்திரை. கள்ளக் காசடிக்கிறவன் ஈயத்தைக் கலப்பான் இரதத்தைக் கலப்பான். ராசநாணயத்திலே அதொன்றுமிராது. கள்ளக்காசை உரைத்தாற் குறையும்; நிறுத்தாற் குறையும். கள்ளனுக்கு நல்ல காசடிக்கக் கட்டாது—தெரியாது. கவண்மேந்துக்காசையுரைத்தால் உள்ளதுள்ளபடிதான். பார்த்தீரா? மனுஷன் தானாய் வைத்துக்கொள்ளுகிற கட்டுப்பாடுகளிலே எப்போதும் குறையுண்டு. அவன் தன்னுடைய சுகத்துக்கு எப்போதும் பார்த்துக்கொள்ளுவான். கடவுள் ஏற்படுத்தின கட்டுப்பாடுமாத்திரம் அவருக்கு யோக்கியமானதாயிருக்கும், பரிசுத்தமாயிருக்கும்.

வே. அப்போ மறுமறு சமயங்களிலே நன்மை கொஞ்சமுமில்லை என்கிறீரேகாணும்?

மா. ஏன், கொஞ்சங் கொஞ்சமுண்டுதான். எவனென்றாலும் மனச்சாட்சியை முற்றாய் மாற்றிப்போடுவானா? முழுதும் பொய்யென்றால், ஒருவரும் மறுமறு வேதங்களிலே இரார்களே. கள்ளக்காசைப்பற்றிச் சொன்னேன். வெள்ளிநிறமென்றாலும் இல்லாவிட்டால் கள்ளக்காசை யாராவது வாங்குவார்களா! அப்படித்தானே சத்தியவேதமல்லாத மறுமறுசமயங்களிலேயும் கொஞ்சங்கொஞ்சம் மெய்யுண்டு. ஆனால் பலபொய்களோடு கலந்திருக்கும். பொய்கலந்த எந்தவேதமும் கடவுளுடைய வேதமல்ல. கடவுளுடையவேதம் முழுதும் மெய், மெய்மாத்திரம் அதிலுண்டு

வே. அது நீர் சொல்லுகிறது, பார்க்கப்போனால் சரிதான்.

மா.—வேலாயுதரே, இப்போதைக்கு இதொன்றைமாத்திரம் நன்றாய் யோசித்துப்பாரும். பொய்யாவது, நெறிகேடாவது, கொஞ்சமும் கலந்திராத வேதந்தான் கடவுள் தந்த வேதமாயிருக்கவேணும். அந்த வேதத்தைக் கண்டுபிடிப்பது எல்லா மனுஷருக்கும் மகா மகாப்பட்ட கடமை. கடவுள் ஒருநாட் கட்டாயம் இதைப்பற்றிக் கணக்குக்கேட்பார். புத்தியைத் தந்தவர் அந்தப் புத்தியால் நாங்கள் யோசனைபண்ணிப்பார்த்து; அவருடைய சுத்தமான சுபாவத்துக்கும் சத்தியமான தன்மைக்கும் பொருந்தியதல்லாத மார்க்கங்களைப் பின்பற்றாமல், அவருடைய வழி எது என்று கண்டுபிடித்து அதைத்தான் பின்பற்றவேணும்.

வே.—நல்லதுகாணும்; அதை இன்னும் யோசனைபண்ணிப் பார்க்கிறேன்.

PRINTED BY C. ANDREW AT ST. JOSEPH'S CATHOLIC PRESS, JAFFNA.

**CATHOLIC TRACT**
**No. 3.**

SECOND EDITION

# THE ROYAL ROAD.

# இராச பாதை.

---

"பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்"—திருவள்ளுவர்
"கடவுளொருவன் உண்டே வேதம் ஒன்றே"—ஓர் சைவஞானி.

"வாரும் வாரும்! மாணிக்கரே. கண்டு கனநாளாயிற்றே. இப்படி இரும் இரும்" என்று சொல்லிக்கொண்டு வேலாயுதர் தமது வீட்டுத் திண்ணையொட்டில் ஓர் புற்பாயையிழுத்துவிட, மாணிக்கர் உட்கார்ந்து தாம்பூலந்தரித்துக்கொண்டு தமது சிநேகிதனுடைய சுகசேடங்களைப்பற்றி விசாரித்துப் பலவற்றையும் பேசிக்கொண்டிருக்கையில், வேலாயுதர், தாமும் மாணிக்கரும் ஆனையிறவுக்குப் போனபோது வழியிற்செய்துகொண்ட சம்பாஷணையை நினைப்பூட்டி:

"ஓய் அன்றைக்கு நாங்களிருவரும் பேசிக்கொண்டுபோனவிஷயத்திலே நெடுநாளாய் என் மனஞ் சென்றுகொண்டிருக்குதுகாணும். சத்தியவேதம் சுத்தமானதென்றதை ஒருவராலும் மறுக்கமுடியாது. ஆனால், அந்தந்தத்தேசத்தில் உள்ள சமயத்தை அந்தந்தத் தேசத்திலுள்ளவர்கள் கைக்கொண்டு நடக்கிறதிலே பழுதென்ன என்கிறீர்?" என்று சொண்டுக்குட் சிரித்துக்கொண்டே வினவ:

**மாணிக்கர்:**—அந்தந்தத்தேசத்தில் உள்ள சமயம் என்றால், ஒவ்வொரு தேசத்தாரும் தங்களுக்கு ஒவ்வொரு மார்க்கத்தை உண்டாக்கிவைத்துக்கொள்ளலாமா! வைத்துக்கொள்ளலாமென்றால், கடவுள் தாமாக ஏன் ஒரு வேதத்தைத்தருவார்?

**வேலாயுதர்:**—உலகத்தில் அவனவன் தன்தன் சமயத்தைத்தானே கைக்கொண்டுவருகிறான். எங்கள் தமிழ்வழங்குகிற சீமைகளிலே சைவசமயந் தொன்றுதொட்டுவழங்கிவருகுது. வெவ்வேறு சீமைகளிலே வெவ்வேறு சமயம் வழங்கிவருகுது.

**மா.**—ஆனால் கடவுள் எத்தனை?

**வே.**—என்னகாணும் பகிடிபண்ணுகிறீரா? கடவுள் ஒருவர்தானே.

**மா.**—மனுக்குலம் எத்தனை?

**வே.**—மனுக்குலமும், பார்க்கப்போனால் ஒன்றுதான். மனுமக்கள் என்றால் எல்லாரும் ஒரு மனுவுடைய மக்கள்தான். உலகத்திலே பற்பல சாதிபேதங்களை மனுஷன் பிரித்துவைத்துக்கொ

ண்டாலும், கடவுள் உண்டாக்கிய மனுப்பிறவிசளெல்லாம் சரா சரிதான்.

மா.—மனுஷர் எல்லாரும் பிறப்பினால் ஒரு தன்மையானவர்களும், எங்கேபோய்ப்பார்த்தாலும் எல்லாரும் ஒரேசுபாவமுள்ளவர்களும் ஆனபடியால், கடவுள் கொடுத்த வேதம் எல்லாருக்கும் ஏற்றதாயிருக்குமே. எல்லாருக்கும் ஏற்ற ஒரு வேதத்தைக் கடவுள் கொடுத்திருக்க, ஒவ்வொரு தேசத்தாரும் தங்கள் தங்கள் பிரியப்படி வெவ்வேறு மார்க்கங்களை ஏற்படுத்திவைத்து அநுசரிக்கிறதானால் அது பாரப்பழியல்லோ! இலங்கை முழுதுக்குமாகப் பிறப்பிக்கப்பட்ட ஒரு இராச சட்டத்தை நாங்கள் யாழ்ப்பாணத்தார் தள்ளிவைத்துவிட்டு எங்கள் பிரியப்படி வேறொரு சட்டத்தை ஏற்படுத்திக்கொள்ளத் துணிவோமா? துணியோம். சகல மனுஷரையும் ஆண்டுநடத்திக்கொண்டுவருகிற கடவுள் ஒருவர்தானல்லவா?

வே.—ஓம் ஒருவர்தான்.

மா.—ஒருவரான கடவுள் தம்மை மனுஷருக்கு வெளிப்படுத்துகிறபோது ஒரு தேசத்திலே தம்மைச் சிவனென்றும், ஒருதேசத்திலே தம்மை விஷ்ணுவென்றும், ஒருதேசத்திலே தம்மை அல்லாவென்றும், ஒருதேசத்திலே தம்மை அக்கினி என்றும், ஒருதேசத்திலே தம்மைக் காடன் மாடன் என்றும், ஒருதேசத்திலே தம்மைக் கிறீஸ்துவென்றும் ஒன்றுக்கொன்றெதிராய் வெளிப்படுத்துவாரா?

வே.—அது பின்னை எப்படி? உண்மையேயல்லாமல் பொய்யின் நிழலும் அறியாத கடவுள் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சொல்லுவார் என்று நினைத்தாலும் தோஷமே.

மா.—நித்திய மோட்சமும் ஒன்றுதானல்லவா? மோட்சத்தை அடைகிற புண்ணியவழி மனுஷரெல்லாருக்கும் ஒன்றேயல்லாமல் வேறாகமாட்டாது. இந்த விஷயத்திலும் கடவுள் இங்கே ஒன்றும் அங்கே ஒன்றும் சொல்லியிருக்கமாட்டார். ஆனபடியால், வேதம் ஒன்றுதான். சகல மனுஷருக்கும் பொதுவாய் ஒரு மெய்யான வேதந்தான் உண்டு.

வே.—நீர்சொலலுகிறதுமெய். வேதமொன்றுதான் என்று எங்களுடைய ஞானிகளும்சொல்லியிருக்கிறார்கள். "கடவுளொருவனுண்டே வேதமொன்றே காரண சற்குருதீட்சைதானுமொன்றே" என்று சிறுவயதிலே படித்தது எனக்கு இன்றைக்கும் நல்ல ஞாபகமாயிருக்குது.

மா.—ஆனபடியால், இது மெய்யானமார்க்கத்துக்கு வேறொரு அடையாளம்—மெய்யானமார்க்கம், கடவுளாலே உண்டான மார்க்கம், சகலமனுஷருக்கும் பொதுவாயிருக்கும். ஒரு மெய்யானகடவுளை மாத்திரம் எல்லாருக்கும் போதிக்கும். ஒரு புண்ணியவழியைமாத்திரம் எல்லாருக்கும் காட்டும். அது எந்தச்சாதிக்கும், எந்

தச்சனத்துக்கும், எந்தத்தேசத்துக்கும், எந்தச்சீமைக்கும் ஏற்றதாயிருக்கும். எல்லாமனுஷருடைய மனங்களையும் அது திருப்தியாக்கும். எல்லாமனுஷருக்கும் அதின் நன்மைகளிலே பங்குண்டு. சூரியனுடைய அனலும் ஒளியும் பேதமில்லாமல் பெரியோருக்கும் சிறியோருக்கும், படித்தோருக்கும் படியாதோருக்கும், பூர்ப்பாருக்கும் பறையருக்கும்கிடைக்கிறதுபோல, கடவுளாலவந்த மெய்யான வேதத்தின் சகாயமும் போதனையும் எந்தெந்த நிலைபாரத்தில் உள்ள மனுஷருக்கும் கிடைக்கும்.

வே.—பின்னையென்ன? ஒருத்தனுடைய வளவுக்குள்ளாலே போகிற அடிப்பாதையென்றால் தனக்குச் சேர்ந்தவர்களைத்தான் வளவுக்காரன் போகவிடுவான். இராசபாதையாய்ப் போகிறதற்கும் நான் நீர் அவரிவர் என்ற வித்தியாசமிருக்குமா? இராசபாதையாலே எளியவனும் போகிறான், பெரியவனும் போகிறான். கடவுள் மனுஷனுக்குத்தந்த சமயமென்றால், அது பரகதிக்குப்போகத் திறந்துவிட்ட இராசபாதைதானல்லோ! எவருக்கும் அதுபோதுமாயிருக்கவேண்டுமென்று நீர்சொன்னது மெத்தச்சரி.

மா.—நல்ல உவமை எடுத்துச் சொன்னீர். சத்தியவேதத்தைப் பாரும்;—அதுதான் நீர்சொல்லுகிற இராசபாதையல்லவோ என்றுபாரும். சத்தியவேதம் உலகமெங்கும் ஒரேகடவுளைத்தான் போதிக்குது. ஒரே புண்ணியவழியைத்தான் எல்லாச்சாதியாருக்கும் எல்லாத்தேசத்தாருக்கும் காட்டுகுது. அதிலே சாதிக்கொருதெய்வமில்லை. நாட்டுத்தெய்வம், வீட்டுத்தெய்வம், குலதெய்வம் இல்லை. பெரியோருக்கொருவழி, எளியோருக்கொருவழியில்லை. சகலருக்கும் ஒரேபுண்ணியவழிதான். எங்கள் கோவில்களைப்பாரும். எவருக்கும் அதுபோது. அரைவாசிப்பேரை உள்ளேவிட்டு அரைவாசிப்பேரைத் தூரத்தில் நிறுத்தப்பண்ணுகிற வித்தியாசம் சத்தியவேதத்திலேயில்லை. அல்லாமலும் சத்தியவேதத்தைச் சில சில சாதியார் ஓதப்படாதென்றும்; சிலசில சாதியாருக்கு மோட்சமில்லையென்றும்; உலகத்திலே ஒருதேசந்தான் புண்ணியபூமி, அங்கேயுள்ளோருக்குமாத்திரம் மெய்யானவேதத்தைப்போதிக்கலாம், பிறதேசத்தார் எல்லாரும் மிலேச்சர். பிறதேசங்களுக்குக் குருமார் கடலேறிப்போனாற் குற்றம், பிறதேசங்களிலே வேதத்தைப் போதிக்கக்கூடாது என்றும் சத்தியவேதம் சொல்லாமல், எல்லாத்தேசங்களுக்கும் எல்லாச்சாதியாருக்கும், கற்றோருக்கும் கல்லாதோருக்கும் வேதம் போதிக்கப்படவேண்டுமென்று சொல்லியிருக்கிறது.

வே.—அப்படிக்கு உங்கள் குருமார் உலகமெங்கும் போதகம் பண்ணித்தான் வந்திருக்கிறார்கள்.

மா.—சத்தியவேதம் உலகமெங்கும் உள்ளது நூற்றுக்கணக்கான சாதிக்காரர்பேச்சுக்காரர் அதினால்நன்மையடைந்துகொண்டுவருகிறார்கள். உங்களுடைய சமயகொள்கைப்படி மச்சமாமிசம்

தின்றுதிருத்தல், ஆசௌசம்பார்த்தல், கடல்தாண்டாதிருத்தல் முதலிய எத்தனையோ ஆசாரங்கள் இந்தச்சீமைக்குமாத்திரம் ஏற்றகாரியங்கள். சத்தியவேதத்தின் சுத்தமான புண்ணியவழி எல்லாத்தேசத்துக்கும் எல்லாக்காலத்துக்கும் ஏற்றது.

வே.—எங்கள் சைவசமயத்திலும் எல்லாருக்கும் வழியுண்டு என்று சொல்லப்பட்டிருக்குதேகாணும். அறிவிற் குறைந்தவர்களுக்கும் வழியுண்டு. அறிவாளிகளுக்கும் வழியுண்டு.

மா.—நல்லாய்ச்சொன்னீர் வேலாயுதரே. எல்லாருக்கும்வழியுண்டுதான். ஆனால் வெவ்வேறு வழி. ஒன்றுக்கொன்று நேர்விரோதமான வழி.

வே.—அதெப்படி?

மா.—குலத்திலுள்ளவர்களுக்குத் தெய்வம் வேறு, கோவில் வேறு. எளியவர்களுக்குத் தெய்வம்வேறு, கோவில்வேறு. குலத்திலுள்ளவர்கள் சிவனை விஷ்ணுவைக் கடவுளாக வணங்குகிறார்கள். எளியசாதிகள் காடன் மாடன் காளி அம்மை முதலிய ஊர்த்தெய்வங் குலதெய்வங்களை வணங்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறது. கீழ்சாதிகளுக்கு வேதமில்லை. உபதேசமில்லை. குருவும் வேறு. வழிபாடுகளும் வேறு. ஆனபடியால், அவர்களுடைய மார்க்கமும் வேறல்லாமல் ஒன்றல்ல. இனி, அறிவாளிகளுக்குள்ளே பற்பல, வித்தியாசமான, ஒன்றுக்கொன்று எதிரான சமயகோட்பாடுகளுண்டு. இப்படிப் பலவிதமாய் மாறுபாடாயிருக்கிறதை ஒரு மார்க்கம் என்று சொல்லக்கூடாமலேயிருக்கிறது.

வே.—இதைத்தானே "அந்தரில் மறையெல்லாம் அடிதலைதடுமாறிச்" சிந்தியதென்று யாரோ எங்களுக்குள் ஒருவர் பாடியிருக்கிறார்.

மா.—ஆம். இந்தத் தடுமாற்றம் மெய்யானவேதத்திலே இருக்கமாட்டாது. அது தலைதடுமாறிப்போன மனிதருக்கு மோட்சவழியைக் காட்டுமொழிய, தானே அடிதலைதடுமாறி நில்லாது. சத்தியவேதத்தைப்பாரும். அது உலகமெங்கும் எவ்விடத்திலும் மாற்றமில்லாமல் ஒன்றாய் நிற்குது. எல்லாச்சனங்களுக்கும் ஒரு வழியைத்தான் அது எப்போதும் காட்டிக்கொண்டுவருகுது. எந்த எந்தத் தேசத்தாரென்றாலும், சாதியாரென்றாலும் எல்லாருக்கும் ஒரு உபதேசந்தான். எல்லாருக்கும் குரு ஒன்றுதான். எல்லாருக்கும் ஒருவகையான ஞானஸ்நானந்தான். அதிலே மாறுபாடான போதனைகளில்லை. சூரியன் ஒன்றேயாயிருந்துகொண்டு எங்கும் ஒளிவீசுமாப்போல, சத்தியவேதமும் ஒரேபோதகத்தை எங்கும் பரப்பிக்கொண்டுவருகுது.

REIMPRIMATUR. F. G., VIC. GEN.

PRINTED BY C. ANDREW AT ST. JOSEPH'S CATHOLIC PRESS, JAFFNA.

CATHOLIC TRACT
No. 4.

SECOND EDITION.

# THE SOUL.

# ஆத்துமம்.

மனிதனுக்குச் சரீரம் மாத்திரமல்ல ஆத்துமமும் ஒன்று உண்டு என்பதைச் சகலரும் அறிவார்கள். சரீரம் ஆத்துமத்துக்கு ஒரு கருவிபோல இருக்கின்றது. ஆத்துமமே சரீரத்துக்கு உயிர் கொடுத்து அதை இயங்கப்பண்ணுகின்றது. ஆத்துமமானது சரீரத்தைவிட்டுப் பிரிந்துபோனாலோ, சரீரம் இயங்காமல் நின்றுவிடும் சீக்கிரத்திலே சரீரம் அழியவும் தொடங்கிவிடும். ஆத்துமமில்லாத, அதாவது செத்த, சவம் பொருமி வெடித்து நாறி அழுகிப்போகாமல் ஒருநாள் இருநாளுக்குமேற் கிடவாது.

ஆத்துமமானது தன்னுடைய பஞ்சேந்திரியங்களோடடுத்த முயற்சிகளுக்குமாத்திரந்தான் சரீரத்தை ஒரு கருவியாக வேலை கொள்ளுகின்றது. நினைத்தல், யோசித்தல், விரும்புதல், வெறுத்தல் முதலிய தன்னுடைய சொந்த முயற்சிகளை நடத்தவோ சரீரமாகிய கருவி அதற்கு அவசியமில்லை. அதெப்படியென்றால், காண்கிறதற்குக் கண் வேண்டுந்தான். கேட்கிறதற்குக் காதுவேண்டுந்தான். மற்றப் புலன்களுமிப்படியே. ஆனால், நினைக்கிறதற்குக் கண்ணாவது காதாவது மூக்காவது வாயாவது கை காலாவது வேண்டியதில்லை. நினைத்தல் முதலிய முயற்சிகள் ஆத்துமத்தினுடைய சொந்தத் தத்துவங்களால் நடைபெறுகிறவைகளானபடியால் இவைகளுக்குச் சரீரத்தினுதவி அவசியமில்லை. இந்த முயற்சிகளை ஆத்துமமானது சரீரத்தைவிட்டுப் பிரிந்தபின்னும் செய்துகொண்டிருக்கும். ஏனெனில், கருவியாகிய சரீரம் அழிந்துபோகிறதேயல்லாமல் கருவியைவைத்து ஆண்டுகொண்டுவந்த ஆத்துமம் அழிகிறதில்லை. கம்மாலையில் பலகருவிகளைக்கொண்டு பல வேலைகளைச் செய்துகொண்டிருந்த கம்மாளனானவன், வேலைமுடித்துக் கருவிகளையும் கம்மாலையையும்விட்டுப் புறப்பட்டு வீட்டுக்குவந்தபின் கம்மாலைக்குரிய வேலைகளைச்செய்யான். ஆனாலும் தன் குடும்பத்துக்குரிய காரியங்களைப் பார்த்துக்கொண்டிருப்பான். அப்படியே மரணவேளையில் பஞ்சேந்திரியங்களாகிய கருவிகளையும் சரீரமாகிய கம்மாலையையும் துறந்துபோகிற ஆத்துமமும், இனிச் சரீரத்தோடடுத்த முயற்சிகளைச் செய்யாதானாலும், தன்னுடைய நினைவு, யோசனை, விருப்பு, வெறுப்பு முதலிய உட்கருமங்களைச் செய்து

கொண்டேயிருக்கும். ஆத்துமம் அழியாத அரூபமான ஒருவஸ்து. சரீரத்தைவிட்டுப் பிரிந்தபிறகும் அது ஜீவிக்கும். சரீரம் அழிந்து மண்ணாய்ப்போம். ஆத்துமம் ஒருபோதும் அழியாது.

மனிதனுடைய ஆத்துமம் சரீரத்தைவிட்டுப் பிரிகிறதைப் பல முறை கண்டிருக்கிறோம். செத்தவனுடைய சரீரத்தைச் சிலரோ டிருக்கிறவர்கள் கொண்டுபோய் மண்ணுக்கு அல்லது நெருப்புக் கு இரையாகப் போட்டுவிடுகிறார்கள். ஆனால், செத்தவனுடைய ஆத்துமம் எங்கே போகும்? எங்கேபோகும் என்றதைப்பற்றி யோசித்துப்பார்க்க அநேகருக்கு விருப்பமில்லை. நாம் ஒவ்வொரு வரும் சாகும்போது, நம் ஒவ்வொருவருடையவும் ஆத்துமம் ஏதோ ஒரு இடத்துக்குப் போகத்தான் வேண்டும் என்பதோ நிச் சயம். தன்னுடைய எசமானின் அலுவலைப்பார்க்க அனுப்பப்பட் ட ஒரு வேலைகாரன், அந்த வேலையைப் பார்த்துவரும்படியாக எசமான் குறித்த கெடு முடிந்தவுடன் எங்கே போகவேண்டும்? தன்னை அனுப்பின எசமானிடத்திலேதான் போகவேண்டும். வேலைகாரன் தன்னிடம் வந்தவுடன் எசமான் அவனை நோக்கி என் ன கேட்பான்? என் அலுவலைப்பார்த்தாயா? முடித்தாயா? அந்த அலுவலின் சங்கதி என்ன என்றே கேட்பான். இப்படித்தான், செத்தவனும் அதாவது, சரீரத்தைவிட்ட ஆத்துமமும் தனை உலகத்தில் விட்ட எசமானாகிய கடவுள் சமுகத்திலேபோய்த்தோற் றவேண்டும். சாவோடு அந்தந்த ஆத்துமத்துக்கு எசமான்கொடுத் த கெடு முடிந்ததேபோம். கெடு முடிவில் ஒவ்வொரு ஆத்துமமும் எசமானுடைய பரிசுத்தமுள்ள சமுகத்திற் காணப்படவே வேண் டும். ஏன்? அவருக்குத் தனது ஜீவியத்தைப்பற்றிக் கணக்குக் கொடுப்பதற்காகவேயாம்.

கடவுளாகிய மகா எசமான் தமது அற்ப ஊழியனாகிய மனித னிடத்தில் என்னத்தைப்பற்றிக் கணக்குகேட்பார்? எந்த அலு வலுக்காக மனிதன் இவ்வுலகத்தில் உண்டாக்கிவிடப்பட்டானோ, அந்த அலுவலைப்பற்றியே கேட்பார். சரீரத்தைப்பற்றியல்ல ஆத் துமத்தைப்பற்றியே கணக்குக் கேட்பார். மண்ணோடு மண்ணாய்ப் போகிற உன் சரீரத்தை எப்படிப் பேணிக் காத்துக்கொண்டுவந் தாய் என்றல்ல, உன் அழியாத ஆத்துமத்தை என்ன வழியில் நடத்தினாய் என்றே கேட்பார். ராசக்கோல் கோணினாலும் தாம் சற்றேனும் கோணாதவரான அந்த மகா எசமான், நீ எவ்வளவு ருசி யான பதார்த்தங்களைத் தின்றாய் என்றுங் கேளார். எவ்வளவு அலங்காரமான உடைகளை உடுத்தாய், நகைகளை அணிந்தாய் என்றுங்கேளார். எவ்வளவு மேலான உத்தியோகத்திலிருந்தாய் எத்தனை காணிகளைவைத்து ஆண்டாய் என்றுங்கேளார் ஆனால் நீ மெய்யான தேவனை அறிந்து சிநேகித்து வணங்கிவந்தாயோ, அவரால வெளிப்படுத்தப்பட்ட சத்தியவேதத்தின் கற்பனைக ளைக் கைக்கொண்டு நடந்தாயோ என்றுதான் கேட்பார்.

கடவுளுடைய சமுகத்திற் கணக்குக்கொடுக்கப்போன ஆத்துமம் கடைசியாகப்போகவேண்டிய இடங்கள் இரண்டே உண்டு. ஒன்று மோட்சம் மற்றது நரகம். மோட்சத்தில் அல்லது நரகத்தில் ஆத்துமாக்களை விடுவதிலே கடவுள் பரிபூரண நீதியைத்தான் விளங்கச்செய்வார். அவர் பாரபட்சமுள்ளவரல்ல; அவரவர் நடக்கைக்குத்தக்கபடி அவரவருக்குப் பலனை அளிக்கிறவர். ஆகையால், இவ்வுலகத்திலே தம்மையறிந்து சிநேகித்துத் தமக்குப் பணிசெய்யாமலிருந்த ஆத்துமாக்களை அவர் ஒழியாத நரக அக்கினியிலேயே தள்ளிவிடுவார்; தம்மையறிந்து சிநேகித்துச் சேவித்துக்கொண்டுவந்த புண்ணியவாளரை அவர் நித்திய பேரின்ப மோட்சத்திற் சேர்ப்பார். இந்த உண்மைகளை எவரும் மறுக்கமுடியாத உண்மைகள். உலகத்திலுள்ள எல்லாச்சனங்களும் எல்லாக் காலத்திலும் இந்த உண்மைகளை உண்மைகளே என்று நம்பிக்கொண்டுவந்திருக்கிறார்கள். புண்ணியமும் பாவமுந்தான் மனிதனோடு மறு உலகத்துக்குக் கூடவே போகிறதென்பதும், புண்ணிய பாவங்களுக்கு ஏற்றபடியே ஆத்துமாக்களுக்கு மோட்ச நரக பலன் கிடைக்குமென்பதும் பட்டப்பகல் போல வெட்டவெளிச்சமான உண்மைகளேயாம்.

ஆகையால், சிநேகிதனே! ஒருநாள் விம்மிவெடித்து நாறி அழிந்துபோகவிருக்கிற உன்னுடைய சரீரத்தைமாத்திரம் கவனித்துக்கொண்டு போகாமல், உன் ஆத்துமத்தைப்பற்றியும் சற்றே சிந்தித்துக்கொள். சீவியகாலமானது வானத்திற்றோன்றித் திடீரென மறையும் மின்னலைப்போலவும், நீரில் உண்டாகி உடனே பரிந்து அழிந்துபோகும் குமிழியைப்போலவும் நிலையில்லாததாய் இருக்கின்றது. "இன்றைக்கோ நாளைக்கோ இப்போதோ எப்போதோ என்றைக்கோ சாவென்று" அறியோம். ஆதலால், உன்னுடைய மறுமைச் சீவியத்தைப்பற்றிச் சற்றாகிலும் நினைவாயிரு. அதுதான் சீவியம், இது மரணம். உலகத்திற் பிறந்தவர்களெல்லாரும் இறந்தே தீரவேண்டும். இறந்தவர்களெல்லாரும் கடவுள் திருச்சமுகத்திற் போயே சேரவேண்டும். நீ அவருடைய சத்தியவேதத்தை அறிந்திருந்தும் உலகத்தாருக்குப்பயந்து அதைக் கைக்கொள்ளாமலிருந்தால், கைக்கொண்டும் அதின்படி நடவாமலிருந்தால் என்ன முகத்தோடு உன்னைப் படைத்தவராகிய அவருடைய சமுகத்திற் போய் விழிப்பாய்? இந்த உலக சீவியமாகிய நாலுநாளைய இன்பத்துக்காகவும், உற்றார் உறவோருடைய நட்புக்காகவும், உலக மதிப்புக்காகவும் நீ உன் ஆத்துமத்தை நல்வழியில் விடாமல் வைத்துக்கொண்டிருந்தால் அதை நித்தியகேட்டுக்கல்லவோ ஆளாக்கிக் கொள்ளுவாய். எவனாவது வீடுவிழுகிறதென்று தன் தலையைக் கொடுத்து அதைக் காக்குவானோ? காக்கமாட்டான். ஏனெனில், வீடுபோனாலும் தலைபோகாமலிருப்பதே அவசியமென்று அவனறிவான். இப்படியிருக்கையில், சரீரங்கெட்டாலும் ஆத்

ஷமம் கெடாமலிருப்பதே அவசியமென்று நடப்பதைவிட்டு, தலை போனாலும் வீடுபோகாமலிருப்பதே வாசி என்றாற்போலச் சரீரத்தின் ஆசாபாசங்களின் நிமித்தமும், உலக உத்தியோகம், இனசனங்களின் நிமித்தமும் ஆத்துமத்தை நித்திய கேட்டுக்குள்ளாக்கிக்கொண்டிருப்பது புத்தியா? புத்திமானானவன் முத்தை எடுத்துப் பவித்திரமாய் முடிந்துவைத்துக்கொண்டு சிப்பியைத் தூரத்தில் எறிந்துவிடுவான். பைத்தியகாரன்மாத்திரம் முத்தைத் தூர எறிந்துவிட்டு, நாறி ஊத்தைப் பிடிக்கும் அழுகற்சிப்பியை முடிந்துவைப்பான். இப்படியே தன் மெய்யான நன்மையை விரும்புகிறவனும், சரீரந்தான் பசிபட்டினியால் இனசனத்தின் பகையால் வருந்தவேண்டிவந்தாலும், ஆத்துமத்தையே நல்வழியில் நடத்திக்கொள்ளவேண்டுமென்று துணிந்து சத்தியவேதத்தைக் கைக்கொண்டு ஒழுகுவான். இதற்கு மாறாக, தன் ஆத்துமத்தைத் தேடாமல்விட்டிட்டு, ஒருநாள், உள்ளபடியே நாறித் தூரக்கொண்டுபோய்ப் போடப்படவேண்டிய சரீரத்தையே பூசித்துப்பேணிக் கொண்டுவருகிறவனோ தன் சொந்த நன்மை தின்மை தனக்கே தெரியாத புத்தியீனனேயாம்.

மனிதனானவன் உலகமுழுதையும் தனக்காக்கிக்கொண்டபோதிலும், தன ஆத்துமத்தையோ கேட்டுக்குள்ளாக்கிக்கொள்ளுவானாகில் அவனுக்கு அதனாற் பிரயோசனமென்ன?

அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே; விழி அம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட்டே; விம்மிவிம்மி இரு
கைத்தலைமேல் வைத்தழு மைந்தரும் சுடுகாடுமட்டே;
பற்றித்தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே.

ஆம்; சிநேகிதனே, நீ இப்போதுவிட்டுப் பிரியப் பயப்படுகிற இனஞ்சனமும் உன்னோடுவராது. உன் பெண்சாதி பிள்ளைகள் தாமும் வரார்கள். "பெண்டீர் படலைமட்டும், பிள்ளை சுடலைமட்டும்" என்ற பழமொழிப்படியே நடக்கும். நீ தட்டத்தனியே தான் உன்னைப் படைத்தவர் சமுகத்திற்போய் நிற்கவேண்டும். ஆதலால், உன் நெஞ்சின்மேற் கையைவைத்துக்கொண்டு: நான் என்னுடைய மனச்சாட்சியின்படி என்னைப்படைத்த மெய்யான கடவுளுடைய ஏக மெய்யான வேதத்தைக் கைக்கொண்டு நடக்கிறேனே? அல்லது மனுஷருக்கு அஞ்சி பொய்யான சமயத்திலே நிலை கொள்ளுகிறேனே? என்று யோசித்துப் பார்க்கக்கடவாய்.

REIMPRIMATUR. F. G., VIC. GEN.

PRINTED BY C. ANDREW AT ST. JOSEPH'S CATHOLIC PRESS, JAFFNA.

CATHOLIC TRACT No. 5. IMPRIMATUR. 5. 2. 08. J. C., VIC. GEN.

# THE DIVINE TEACHER.

# சற்குரு.

---

பந்தமெல்லாந்தீரப் பரஞ்சோதி நீ குருவாய்
வந்தவடிவை மறவேன் பராபரமே— தாயுமான சுவாமிகள்.

சைவசமய ஞானிகளுளொருவர் "அகஸ்தியர் ஞானம்" என்னும் பாடலிலே பற்பல சமயங்கள்வந்த வரலாறும், அந்தந்தச் சமயங்களிற் றொழுதுகொள்ளப்படும் தெய்வங்களின் தன்மையும் இன்னதென்று அகஸ்தியர் என்னும் முனிவர் புலத்தியனுக்கு உரைத்ததாக எடுத்துச் சொல்லியிருக்கிறார். அந்தப் பாடலிலே இருபத்துமூன்றாவதாக:

வணங்குவாய் செகசோதி ஒருவனாகி
மாநிலத்தை ஒருநொடியில் வகுத்தே மண்ணில்
குணமான மனிதரையும் படைத்தபின்பு
குவலயத்திற் றானுதித்துக் குருவாய்வந்து
சனமான சமுசாரம் ஒன்றில்லாமற்
சந்நாசிபோலிருந்து தவத்தைக்காட்டி
அன்பான சித்தர்களை இருத்திப்போட்டு
அகன்றதலஞ் சென்றவரை அண்டுவாயே.

என்று சொல்லியிருக்கிறது. இதிலே சொல்லப்பட்டபடியே, செகசோதியான கடவுள் மானிடச சட்டைசாத்தி நம்மைப்போல் ஒரு மனுவாய் இவ்வுலகத்தில் எழுந்தருளிவந்து தவத்தைக்காட்டி மோட்சவழியை மனுக்குலத்துக்குப் போதிக்குமுன், உலகத்திலே அறியாமையும் பொய்ததெய்வ வழிபாடும் மிகவும் பரம்பியிருந்தது. யோசனையுள்ள மனிதரெல்லாம் பரகதியைப்பற்றிய உண்மையான விசேஷத்தையும், அதை அடைவதற்குச் செய்யவேண்டிய வழிபாடுகளின் தன்மையையும் அறியப் பெரிதும் ஆவலாயிருநதார்கள். ஆனால், உலகத்திலே அறியாதயர்களும் மோசக்காரருமான மனிதர் கட்டிவைத்த மார்க்கங்களிலே சிக்குண்டு உண்மையானவழியை ஒருவரும் அறியமாட்டாமலிருந்தார்கள். உலகத்தைவெறுத்த ஞானிகளெல்லாம்

சாத்திரத்தைச்சுட்டுச் சதுர்மறையைப் பொய்யாக்கி
சூத்திரத்தைக்கண்டு சுகம்பெறுவதெக்காலம்?

என்றவிதமாகச் சற்குருவந்து சூத்திரமான உண்மைவழியைக காட்டும் காலம் எக்காலமோ எக்காலமோ என்று ஆசைகொண்டிருந்தார்கள். மனித போதகர்கள் சொல்லிய வழியெல்லாம் பொல்லாவழியாய்ப்போனதை அவர்கள் கண்டும், சற்குருவானவர் சொல்லும்வழியே நல்லவழியாகும் என்று உணர்ந்தும், தாயுமான சுவாமி சொல்லியதுபோல,

சிந்தை குழைந்து சுகஞ்சேரக் குருவருளால்
வந்த வழி நல்லவழி

என்று சொல்லிக்கொண்டுவந்தார்கள். இப்படிப்பட்ட நாட்களிலேதான் பரஞ்சோதியான கடவுளும் அவதார புருஷராய் எழுந்தருளச் சித்தமாகி, யூதேயா என்னும் நாட்டிலே ஒரு நிர்மல கன்னிகையின் வயிற்றிலே அற்புதமாக உற்பவித்து இவ்வுலகிற் பிறந்தார். உலகத்தை நாம் முற்றாக வெறுத்துப்பரகதிவழியைத்தேட வேண்டுமென்று படிப்பிக்கும்படியாக, அவர் இராசமாளிகையிலே அல்ல ஒரு மாட்டுத்தொட்டிலிலே வறுமையாய்ச் சிறுமையாய்ப் பிறந்தார். பொறை சாந்தம் முதலிய புண்ணியங்களை உலகத்துக்குப் படிப்பிக்கும்படியாக, அவர் பாலவயதிலே யூதேயாநாட்டரசனுக்குப்பயந்து பரதேசங்கொண்டோடப்படவும், வாலவயதிலே மனிதர் தமக்குப் பண்ணிய அவமரியாதைகளைச் சகிக்கவுஞ் சித்தமானார். அடக்கம், கீழ்ப்படிதல் முதலிய அறங்களைப் படிப்பிக்கும்படியாக, அவர் தம்மைப்பெற்ற மாதாவுக்கும் வளர்த்த பிதாவுக்கும் முப்பதுவருடகாலமாய் அமைந்து நடந்தார். பின்பு சந்நியாசிவேடமாய்ப் புறப்பட்டுப் பன்னிரண்டு சீடர்களைக் கூட்டிக்கொண்டு, கிராமங்கள் பட்டினங்களிலேசென்று அனைத்தையும் படைத்துக் காத்தளித்துக்கொண்டுவருகிற ஏககடவுளைப்போற்றி மோட்சமடையும்வழியைப் போதித்துக்கொண்டும், தாம்வெறும் மனுஷனல்ல, பரஞ்சோதியான கடவுளுடைய வாக்கும் அவரோடு ஏகமான சுயம்பிரகாச சுதனுமாயிருக்கிறவர் என்று காட்டும்படியாக எண்ணிக்கையில்லாத அற்புதங்களைச் செய்துகொண்டும் வருவார். கண்ணறையர்களுக்குக் கண்வெளிச்சங்கொடுப்பார்; செவிடர் கேட்கவும் ஊமையர் பேசவும்பண்ணுவார். செத்து நாறிய பிணங்களையும் செத்தவர் பெயர்சொல்லிக் கூப்பிட்டு எழுப்பிவிடுவார். காற்றைப் புசலை அமர்த்துவார். அற்புதமாய் அன்னம் பெருகப்பண்ணி ஆயிரவருக்குக் கொடுப்பார்.

இப்படியே சற்குருவாய் வந்த கடவுளானவர் மானிடதேகத்தோடிருந்து மனுக்களுக்கு நல்வழியைக்காட்டி நன்மைபுரிந்து வரும்நாளில், "யதார்த்தவாதி வெகுசனவிரோதி" என்றவாக்கியம் அத்திருக் குருவானவர்மட்டிலேயும் மெய்யாய்ப் போவதாயிற்று. அதெப்படியெனில், ஆயிரக்கணக்கான சனங்கள் அவரை நம்பி வழிபட்டபோதிலும், அவ்வூர்களிலுள்ள பூசாரிமாரும் குருக்களும் அவர்பேரில் வெகு காய்மகாரம் உள்ளோராகிஅவரைப் பிடித்து வதைத்துத் தொலைத்துப்போடவேண்டுமென்று நெடுநாட்களாக ஆலோசித்துச் சனஞ்சேர்த்துக்கொண்டிருந்தார்கள். மானிடகோலராய்வந்த கடவுளும் மனிதருடைய பாவ ஆக்கிரமங்களுக்கு ஓர்பிராயச்சித்தம்செய்து அவர்கள்குற்றத்துக்காகத் தாம் பலியாகவேண்டுமென்று சித்தமாயிருந்தபடியால், தம்முடைய

சீடர்களுக்குமுன்னறிவித்த ஒருநாளிலே, தம்மை மேற்சொல்லிய சத்துருக்கள்கையிலே ஒப்புக்கொடுத்தார். அவர்கள் இவரைப் பிடித்துக் கள்ளனைப்போற்கட்டிப் படுத்தாதபங்கமெல்லாம் படுத்தியபின் சிலுவை என்று சொல்லப்படுகிற ஒரு கழுமரத்திலே அவரை ஏற்றிவிட்டார்கள். மனிதருக்காகத் தம்மைப் பலிகொடுக்கத் திருவுளமான கடவுளானவர் இச்சிலுவைக் கழுமரத்திலே அறையுண்டு மரித்தார். ஆனால் மரித்தபின் மூன்றாம்நாள் உயிர்த்தெழுந்து தம்முடைய சீடர்களுக்கும் இன்னும் அநேகருக்கும் தரிசனையாகி, அச்சீடர்களை உலகமெங்கும்போய்த் தம்முடைய பலியின் விசேஷத்தையும் தாம்காட்டிய உண்மையான மோட்சவழியையும் போதிக்கும்படியாக அனுப்பிவிட்டு மோட்சத்துக்கு அந்தரமார்க்கமாய் ஏறிச்சென்றார்.

அவருடைய சீடர் ஒவ்வொருவரும் உலகத்தின் ஒவ்வொரு திசைக்குப் புறப்பட்டுப்போய் மேற்குறித்த விஷயங்களைப் பிரசங்கமாய்ச் சொல்லிக்கொண்டுவந்தார்கள். அந்தந்தத்தேசத்திலே சனங்கள் அநேகமாய் இந்தவிசேஷத்தை அங்கீகரித்து, தங்கள் முன்னோருடைய பொய்யான மார்க்கங்களை விட்டிட்டு இந்த உண்மையான மோட்சவழியிலே பிரவேசித்தார்கள். அந்தச் சீடருடைய பரம்பரையிலுள்ள சீடர்கள் உலகத்திலே இப்போதும் இருக்கிறார்கள். இதுவரையிலே உலகத்தில் பிரதானமான, சீர்திருத்தமுள்ள சனங்களெல்லாம் மேலேசொன்னவிசேஷங்களை ஏற்றுக்கொண்டு தேவ சற்குருவானவர்காட்டிய உண்மையான வழியை அநுசரித்துவந்திருக்கிறார்கள். இந்த உண்மையான வழிக்குத்தான் சத்தியவேதம் என்றுபெயர். இதை உலகத்துக்கு அறிவிக்க எழுந்தருளிவந்த சாக்ஷாத் கடவுளைத்தான் யேசுக்கிறீஸ்து என்கிறோம். யேசுக்கிறீஸ்து என்ற இந்தப்பெயர் பிறபாஷைச்சொல்லு. யேசு என்றதற்கு மீட்பர் என்றும், கிறீஸ்து என்றதற்கு அபிஷேகம் பெற்றவர் என்றும் கருத்து. யேசுக்கிறீஸ்து என்னும்போது நம்மை அஞ்ஞானத்திலேநின்றும் பாவத்திலேநின்றும் மீட்ட திருவுருவாகிய கடவுளையே குறிக்கிறோம். அவருடைய திருச்சீடராயுள்ள பன்னிருவருடைய பரம்பரையானவர்களுக்குக் காரணக்குருக்கள் என்றும், சத்தியவேத குருப்பிரசாதிகள் என்றும் குருமார் என்றும் பெயருண்டு. இவர்களே அகஸ்தியர் பாடலிலே

> அறியாத மரிச்சைசெய்யுஞ் சித்தரெல்லாம்
> ஆசைமுறை தானடக்கி அன்பதாகும்
> பொறியகந்தை தானடக்கிப் பொசிப்பொடுக்கிப்
> பூரணத்து ஞானமதைப் பிரசங்கித்து
> சரியாக வாத்துமத்தின் கசட்டைத்தீர்க்கும்
> சற்குருவைத் தேடிப்போய்ச் சடங்குசெய்து
> அரியாதங் காண்பிப்பார் சித்தருண்டு
> அம்புவியில் அவர்களைநீ தேடுவாயே

என்று சொல்லப்பட்டவர்களாம். இவர்களுக்குக் கருணையே விழி. உண்மையே ஆபரணம். தயையே சுரூபம். இவர்கள் உலகத்துக்கு நன்மைசெய்யும் பரோபகார நோக்கமாக உற்றாரை உறவினரை, ஊரை தேசத்தை, ஆஸ்தியை ஐசுவரியத்தைத்துறந்து வாலசந்நியாசம்பூண்டு, தேவ சற்குருவாகிய யேசுநாயகமூர்த்தியைப் பிரசங்கித்துக்கொண்டு வருகிறவர்களாம். சைவ நண்பர்களே, நீங்களும் பரப்பிரமமான சகதீஸ்பரன் சற்குருவாய் எழுந்தருளிவந்து பிரசங்கித்த மோட்சநெறியாகிய சத்தியவேதத்தை இந்தக் காரணக்குருக்கள் முன்னிலையிற் கேட்டு அறிந்து கொள்ளத் தேடுங்கள்.

சத்தியவேதம் என்றபெயரைக் கேட்கும்போது சில சைவர் அது ஏதோ விபரீதமான மார்க்கம் என்றெண்ணி மயங்குகிறார்கள். சத்தியவேதத்தின் தன்மையை விளங்கிக்கொள்ளாமையாலும், அதைப்பற்றிச் சரியாய் விசாரித்துப் பாராமையாலுமே இந்தமயக்கம் உண்டாகின்றது. நண்பர்களே, சத்தியவேதமென்பது உங்களையும் அனைவரையும் படைத்த ஏக பரமேஸ்பரன்தாமே உலகத்தில் எழுந்தருளிவந்து போதித்த உண்மைவழியேயன்றி வேறல்ல. அது சகலத்தையும்படைத்துக் காத்துக்கொண்டுவருகிற ஒருவரைமாத்திரம் நாம் வணங்கவேண்டுமென்றும், அவர் அளவில்லாப் பரிபூரண பரிசுத்தமுள்ளவராயிருக்கின்றமையால், நாமும் சுத்தமானவர்களாய்ச் சீவிக்கவேண்டுமென்றும், மனிதராற் கட்டிவைக்கப்பட்ட தெய்வங்களைத் தொழுவதினால் பயனில்லாமற்போவதன்றி, அது ஏக மெய்யான தெய்வமாகிய கடவுளுக்குப் பொருந்தாத துரோகமாகும் என்றுமே போதிக்கின்றது. சத்தியவேதம் கூறும் கடவுள் பூர்வத்தில் உங்கள் முன்னோராகிய பிதாக்கள் தொழுதுகொண்டுவந்த சச்சிதானந்த பரப்பிரமம் என்னும் சிருட்டிகர்த்தாவேயன்றி வேறல்லர். அவரே, உலகமானது தம்மையறியாமல் ஞான அந்தகாரத்துள் அமிழ்ந்திக்கிடந்ததைக் கண்டிரங்கித் தமது நித்திய வாக்காகிய திருச்சுதனை உலகிலனுப்பி இந்தச் சத்தியவழியை மானிடருக்கு அறிவித்திருக்கிறார். உங்களுள்ளும் அறிஞராயும் தெய்வபத்தி முதிர்ந்தோராயும் உள்ளோர் அநேகர் இத்திருவேதத்திற் சேர்ந்திருக்கிறார்கள். இன்றும் சேர்ந்துகொண்டுவருகிறார்கள். ஆதலால் நீங்களும் இவ்வழியிற் பிரவேசித்து இதில் என்றும் ஒழுகி நித்திய ஆனந்த பெருவாழ்வை அடையத்திருவருளைச் சிந்திக்கிறோம்.

PRINTED BY C. ANDREW AT ST. JOSEPH'S PRESS JAFFNA.

CATHOLIC TRACT
**No. 6.**

SECOND EDITION.

# THE NATURE OF GOD.

# கடவுளிலட்சணம்.

மனிதன் அற்ப புத்தி உள்ளவன். அவன் தன்னையும் தன்னைச்சூழ இருக்கிற பொருட்களையும்பற்றிய அறிவிலேயும் மிகக் குறைந்தவன். தன் ஆன்மா இப்படிப்பட்டது என்றும் சரியாக அறியான். இங்ஙனம், சிற்றறிவுபடைத்தவனாயிருக்கிற மனிதனானவன், கண்ணாற் காணக்கிட்டாதவரும், மனோ வாக்குகளுக்கு எட்டாதவரும், அளவில்லாதவருமான கடவுளை, தன் புத்தியால் அளவிட்டு அறிந்துகொள்ளக்கூடியவனா? அல்லன்.

உலகத்திலே முற்காலம் கல்வி நாகரீகங்களிற் சிறந்து விளங்கிய தேசங்களுளெல்லாம் நம்முடைய பரதகண்டமும் ஒன்று என்பதற்குச் சந்தேகம் இல்லை. நம் முன்னோர் எத்தனையோ வித்தைகளைத் தங்கள் மதிநுட்பத்தினாலே கண்டுபிடித்தும், எத்தனையோ அரிய சாஸ்திரங்களைச் சொல் அலங்காரம்பெற எழுதிவைத்தும் போயினார்கள். அவர்கள் கடவுளைப் பற்றி எழுதிய நூல்களும் அநேகம் உண்டு. ஆனால், கடவுள் தாமே தமது சுபாவத்தை மனிதனுக்குக் கருணையாய் வெளிப்படுத்தினால் அன்றி, மனிதன் அவர்விஷயமாய் மிகவும் தவறிப்போவான் என்றதற்கு நம்முடைய முன்னோரே தக்க சான்றானார்கள். அவர்களுடைய புத்திவலிமை பெரிதாய் இருந்தபோதிலும், கடவுளிலட்சணத்தை அவர்கள் கண்டுபிடிக்க மாட்டாமலே போனார்கள். ஓர் சைவ ஞானவான் கூறியிருக்கிறபடி:

"முதலொன்றானை முதுகுடன்வாலுந்
திதமுறுகொம்பு செவிதுதிக்கைகால்
மதியுடனந்தகர் வகைவகைபார்த்தே
அதுகூறலொக்கும் ஆறுசமயமே"

அதாவது, பிறவிக்குருடர் சிலர் யானைபார்க்கப்போய், ஒவ்வொருவன் அதன் முதுகு வால் தந்தம் செவி துதிக்கை கால் முதலிய ஒவ்வொன்றைத் தடவிப் பார்த்துக்கொண்டு, யானையானது உரல் உலக்கை முறம் முதலியவைகளைப் போன்றது எனச் சொல்லியதுபோல, இந்தியாவிலே நம்முன்னோரால் ஏற்படுத்தப்பட்ட பிரதானசமயங்களுள் ஒவ்வொன்றும் கடவுளுடைய இலட்சணத்தைத் தனக்குத் தனக்குத் தோற்றியபடி நிச்சயித்தது. ஒன்றேனும் அவருடைய சுவரூபத்தைச் சொல்லவில்லை.

இந்தியாவிலேயுள்ள சமயங்களின் சரித்திரத்தை ஆராய்ந்து உணர்ந்த பெரியோருடைய துணிபின்படி, ஆதியிலே நம்முடைய தாய்த்தேசத்தில் வசித்திருந்த சுதேசிகள், கண்ணுக்கு அதிசயமாய்த் தோன்றும் மரம் கல் முதலிய பொருட்களையும், பாம்பு குரங்கு பசு முதலிய உத்தம அதம மிரு

கங்களையும், வீரவான்கள் சேனாபதிகள் அரசர்கள் முதலிய கீர்த்திமான்களையும் பிசாசுகளையுமே கடவுளாகப் பாவித்துக் கைதொழுது வந்தார்கள். இப்படிப்பட்ட வழிபாடு அக்காலத்தில் ஆபிரிக்காமுதலிய பரதேசங்களிலும் நடந்தது. ஆபிரிக்காவில் அதை இந்நாட்களிலும் காணலாம்.

ஆயின், இற்றைக்கு ஏறத்தாள மூவாயிரத்தைஞ்ஞூறுவருடங்களின்முன் ஆரியர் என்னப்படுகிற ஒரு வெள்ளைச்சாதியார் மத்திய ஆசியாவினின்றும் இந்தியாவினுள் இறங்கி வந்தார்கள். இவர்கள் வட இந்தியாவின் சுதேசிகளைத் தென்திசைகளிற் துரத்திவிட்டு, முதல் சப்தசிந்து என்னும் இடத்திலும், அப்பால், சரஸ்வதி, யமுனை, கங்காநதி தீரங்களிலும் குடியேறினார்கள். இவ் ஆரியர், சுதேசிகளைப்போல மரம் கல் முதலிய தாவரங்களையும், விலங்கு மனிதர் முதலிய சங்கமங்களையும் தொழுவோராகாமல், பஞ்சபூதியங்களையும் இயற்கையின் தோற்றங்களையுமே கடவுளாகப் பாவிப்போராயிருந்தமையால், இவைகளுக்கே "மந்திரங்கள்" என்னப்படும் கீர்த்தனங்களைப்பாடி, வேள்வி பலி முதலியவைகளைச் செய்துகொண்டு வருவார்கள். இவர்களால் அக்கினி, வாயு, சூரியன், இந்திரன் (அதாவது, மழை), உருத்திரன் (அதாவது, இடிமுழக்கம்) முதலிய இயற்கைப்பொருட்களையும் தோற்றங்களையும் புகழ்ந்து போற்றிப் பாடப்பட்ட "மந்திரங்க"ளின் தொகுதியே இருக்கு சங்கிதை (அதாவது கீர்த்தனத்தொகுதி) என்றும் இருக்குவேதம் என்றும் சொல்லப்படும். பிற்காலத்தில், இருக்கு சங்கிதையின் மந்திரங்களை வெவ்வேறு கிரமமாய் வகுத்தும், வேறுபல அம்சங்களை அவற்றோடு சேர்த்தும் யசுர், சாமம் என்னும் இரண்டு புதிய சங்கிதைகளும், அப்பால் சிலகாலத்தின்பின் அதர்வணம் என்னும் ஒரு தொகுதியும் செய்யப்பட்டன இந்நான்குமே ஆரியருடைய நால்வேதம் என்றும் சதுர்மறை என்றும் சொல்லப்படும். இவைகளை வெவ்வேறுகாலத்திலிருந்த இருபத்தெட்டு வியாசர்கள் படிப்படியாகச்சேர்த்துக் கோவைபண்ணிவைத்தார்கள் என விஷ்ணுபுராணத்தினால் அறிகிறோம்.

வட இந்தியாவிற் குடியேறிய ஆரியர் சற்றுச் சற்றாகத் தென் இந்தியாவிலிறங்கி காலகதியிலே பூர்வீக சுதேசிகளோடு கலந்துகொண்டார்கள். கொண்டபோது, இருபகுதியாருடைய சமயக்கொள்கைகளும் ஒன்றினால் ஒன்று தாக்கப்பட்டு மாற்றமடைந்தன ஆரியர் சுதேசிகளுடைய தாவர சங்கம தெய்வங்களையும் தங்கள் தெய்வங்களாகக்கொள்ளத்தொடங்கி, அத்தெய்வங்களைப்பற்றிச் சுதேசிகள் பழங்கதையாகச் சொல்லிக்கொண்டு வந்த மெய்யும் பொய்யும் கலப்புமான சரித்திரங்களைச் சமஸ்கிருதத்திலே புராணமாக எழுதி, கல்லை மலையாகவும், துரும்பைத் தூணாகவும், அணுவை அண்டகோளமாகவும், மனிதனைத் தேவனாகவும் பாராட்டி வருணித்துப் பாடிவிட்டார்கள். இவ்வாறே, நம்முன்னோருடைய தெய்வங்களின் தொகை மிகுத்ததேயன்றி, மெய்யான கடவுளின் இலட்சணத்தைச்சுட்டிய அறிவு தலைப்பட்டதேயில்லை. உள்ளபடி, சுதேசிகளும் அவர்களோடு கலந்த ஆரியரும் ஆகிய இருபாலாரும் நித்தியரான கடவுளையல்ல, அநித்தியமான பொருட்களையே கடவுளுக்குப்பதிலாய்த் தொழுவோரானார்கள். நிலம், தீ, காற்று, ஆகாயம், மழை, முழக்கம், சூரியன், சந்திரன் ஆகிய இவையெல்லாம் வரம்பில்லாப் பூரணராகிய கடவுளாற் சிருட்டிக்கப்பட்ட பொருட்களும் அவற்றின் தோற்றங்களுமேயன்றிக் கடவுளாமோ? மரம், கல், விலங்கு, மானிடர் முதலியவைகளும் சிருட்டிகளேயல்லாமல் சிருட்டிகராமோ? கடவுள் ஒருவருக்கேயுரிய மேலான வந்தனை வழிபாடுகளை இச்

சிருட்டிகளுக்குச் செய்தலும், கடவுள் வழிபாடாமோ? ஆதலால், பஞ்ச பூதியங்களையும் சுபாவதோற்றங்களையும் தாவரசங்கமங்களையுமே கடவுளெனமயங்கிய நம்முன்னோர், யானையை உரலென்றும் உலக்கையென்றும் முறமென்றும் சொல்லிய குருடரேபோலானார்கள்.

ஆயின், சிருட்டிவழிபாட்டை அங்கீகரியாமல் நிராகரித்துக்கொண்டுவந்த அறிவாளிகளும் பலர் இந்தியாவில் விளங்காமற்போகவில்லை. இவர்கள் கடவுளுடைய சுவரூபத்தை நிச்சயிக்கும்படியாக எடுத்துக்கொண்ட அரும் பிரயாசங்களை, உபநிஷத்துக்கள் சூத்திரங்கள் என்னும் சமஸ்கிருத நூல்களிலே காண்கிறோம். இந்நூல்களே "தரிசனங்கள்" என்று சொல்லப்படும் ஆறு சமயங்களைப் பிறப்பித்தன. ஆறு சமயங்களையும் அறிஞர்கள் மூன்றுசோடாக வகுப்பார்கள். இவற்றுள் அதி முக்கியமானது மீமாஞ்சை என்னுஞ் சமயத்தோடு சேர்ந்ததாகிய வேதாந்த சமயமாம். வேதாந்தமானது கடவுள் எப்படிப்பட்டவர் என்று விசாரித்து, அவர் வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத பரப்பொருளேயானாலும், உலகமும் அதிற் காணப்படும் தாவர சங்கமங்கள் சகலமும் அவரேயாம் [சர்வம் கல்விதம் ப்ரஹ்ம] என்றும்; ஜீவிக்கிறவையெல்லாம் கடவுளே [ஜீவோ பிரஹ்மைவ நாபர:] என்றும்; கடவுளைத்தவிர எங்கேனும் எப்போதேனும் வேறொருபொருளில்லை [ஏகமேவாத்துவித்தீயம்] என்றும் போதிக்கின்றது. அப்படியானால் மனிதராகிய நாமும் கடவுளா என்று கேட்டால், ஆம் நீயே கடவுள் [தத்த்வம் அஸி] என்று வேதாந்த சமயமானது கூறுகின்றது. பாபிஷ்டனை மனிதனையும், மரம் கல் ஈ எறும்பு கரடி புலி நிலம் சலம் முதலிய சகலத்தையும் கடவுள் என்று சொல்லல்வேண்டுமானால், அவர் பங்கு பங்காய்ப் பிரிக்கத்தக்க ஓர் வஸ்துவாக இருக்கிறார் என்றும் அவரே உலகத்தில்நடைபெறுகிற கோபம் கொலை களவு முதலிய பாபங்களையும், பொறை அன்பு கொடை முதலிய புண்ணியங்களையும் ஒரேதடவையிற் செய்கிறாரென்றும் சொல்லுவதாகி, மட்டில்லாத மகத்துவம்பொருந்திய பரப்பொருளாகிய அவரை மகா நிசிதமான ஓர் சடப்பொருளாக்குவதாய்முடியும். இது நமது தெளிந்தபுத்திக்கு எட்டுணையும் சரிப்படாத ஓர்விரோதமாகின்றது. யோக சமயத்தோடு கூடியதாகிய சாங்கியசமயமும் வேறொருவிதமாய்த் தவறிப்போயிற்று. சாங்கிய தரிசனத்தின்படி கடவுள் இருக்கக்கூடாதவர் ஆகிறார். (சூத்திரம் II 1; 34 காண்க.) ஏனெனில், தொகைப்படாத ஆன்மாக்களும் பிரகிருதி என்னப்படுகிற ஓர் சக்திரூபமான சடப்பொருளும் நித்தியமாகவே உண்டு என்றும், இவைகளுடைய சுபாவமான சேர்க்கையாலேயே பிரபஞ்சமாகிய உலகம் உண்டாகி அழிந்துகொண்டுவரும் என்றும் இச்சமயமானது போதிக்கின்றது. வைசேஷிகசமயத்தோடு சேர்ந்ததாகிய நியாய தரிசனமும் இதை ஒத்ததே. இதின் உபதேசப்படி அநந்தமான ஆன்மாக்களும் அநந்தமான அணுக்களும் நித்தியமாக உண்டு. ஆன்மாக்கள் அணுக்களோடு யதேஷ்டமாய்க் கூடியதே உலகம். கடவுள் காரியத்தளவிலே இல்லை. இருப்பினும், அவர் அநேகமான ஆன்மாக்களுக்குள்ளே ஒரு பெரிய ஆன்மாவும், குடியானவர்களுக்குள் ஓர் தலைவன்போலவுமே இருப்பார் என்று சொல்லப்படுகிறது. அந்தந்தோ, இவ்விதமாய் ஆறு சமயங்கள்தாமும் யானைபார்த்த அந்தகரைப்போலத் தவறியே போயின.

கடவுள்விஷயமாய் உண்டான இத்தன்மையான பலவேறுவகைப்பட்ட தவறான கொள்கைகளெல்லாம் ஒன்றுடனொன்று கலந்தும் மருவியும் போயினமையால், கல்லோ புல்லோ, மாடோ மனுஷனோ, பேயோ பிசா

சோ, சந்திரனோ சூரியனோ எதை வழிபட்டாலும் அது கடவுள் வழிபாடே என்ற அக்கிரமமான, இழிவான கோட்பாடு நம்முடைய செல்வநாட்டிலே ஐயகோ! வேரூன்றுவதாயிற்று. "சிவஞானசித்தியா"ரைப்போலும் சிறந்த தமிழ்நூல்களும் இப்பெருந் தப்பிதத்தை உட்கொண்டு, சிருட்டிவழிபாட்டை ஏவிவிட்டிருத்தலைக்காண்பது பரிதாபம் பரிதாபமே. சிவஞான சித்தி, இந்தியாவிலே நடைபெறும் பௌதிக தாவர சங்கம வழிபாட்டை விளக்கி :

"மொய்தரு பூதமாதி மோகினியந்தமாகப்
பொய்தருஞ் சமயமெல்லாம் புக்குநின்றிடும்..."

எனக்கூறியபின்னும், எதை வழிபட்டாலும் இழிவில்லை, அது புண்ணியமே எனமுடித்து :

"மனமது நினைய வாக்கு வழுத்த மந்திரங்கள் சொல்ல
இனமலர் கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம் போற்றி"

.. ... ... ... ...

"யாதொருதெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர்..."

என்று உறுதிமொழி சொல்லுகின்றது. சத்தியமே சுவரூபமான கடவுளுக்கு இப்போதனை பொருந்துமா!

இதுதானும் ஆச்சரியமன்று. நாம் முன்னர் சொல்லியவாறு மனிதபுத்தி அற்பபுத்தியேயாதலால், நரிவால்கொண்டு கிணறுழம்பார்த்தசீலமாய் இவ் அற்பபுத்தியாற் கடவுளையறியப்போய் அவரை அறியாமலே மயங்கினார்கள் நம்முன்னோர்கள். ஆயின், கடவுள் தமது சுவரூபத்தை மனிதருக்குப் பிழையற வெளிப்படுத்தத்திருவுளமாகவில்லையோவெனில், திருவுளமானார். மானிடர் தம்மை அறியாமல் மயங்கித் தப்பான போதகங்களைச் சத்தியமெனநம்பிக் கெடுவதைக் கண்டிரங்கி, அநந்த தயைச் சுரூபியாகிய தாமே இற்றைக்கு ஆயிரத்துத்தொள்ளாயிர வருடங்களின்முன் மானிட வடிவந்தாங்கி, உலகமீட்பராகவும் தேவசற்குருவாகவும் எழுந்தருளிவந்து, கடவுளுடைய மெய்யான இலட்சணத்தையும் அவரை வழிபடவேண்டிய உத்தம முறையையும் விளக்குவதாகிய சத்தியவேதத்தை ஏற்படுத்தி, அதனைப் பிரசங்கிக்கும் காரணக்குருக்களை உலகெண்டிசையிலும் அனுப்பியருளினார்.

கடவுட்சிந்தனையுள்ள நண்பர்களே, கடவுளின் மெய்யான சுவரூபத்தையும் அவருடைய திருவடியைச்சேரும் வழிபாட்டையும் நீவிர் அறிய ஆசைகொண்டால், சத்தியவேதக்குருக்களிடஞ்சென்று கடவுளாலே அருளப்பட்ட அத்திருவேதத்தின் போதனையைப்பெற்று உய்யுங்கள்! சுபம்! சுபம்!!

REIMPRIMATUR. F. G., VIC. GEN.

PRINTED BY C. ANDREW AT ST. JOSEPH'S CATHOLIC PRESS, JAFFNA.

# Idolatry & Image-worship

# விக்கிரகாராதனையும் சுரூப வணக்கமும்.

BY

Revd. S. Gnana Prakasar, O. M. I.

Jaffna, St. Joseph's Catholic Press.

# Prefatory.

The following paper on Idolatry as compared with Image worship originally appeared by instalments in the Tamil Edition of "the Jaffna Catholic Guardian." It is now reprinted in the present form to enable those of our Saivite friends also who are not readers of "the Guardian", to profit by the friendly discussion of a question concerning which it is of vital importance to have clear ideas.

In preparing this paper we have freely used the masterly "Studies in Idolatry" recently published by Revd E. Hull, S. J., Editor of "the Examiner" (Bombay) to whom we are indebted for some very clear, we might say, original thoughts, bearing on the true definition of Idolatry.

We hope our Saivite readers will peruse these pages with the same spirit of friendliness and love of truth, which, the writer believes, he himself has endeavoured to maintain throughout the paper.

# CATHOLIC TRACTS.

1. **Two Capital Lies**—இரண்டு படு பொய்கள்
2. **An Important Duty**—ஒரு பெருங் கடமை.
3. **The Royal Road**—இராச பாதை.
4. **The Soul**—ஆத்துமம்.
5. **The Divine Teacher**—சற்குரு.
6. **The Nature of God**—கடவுளிலட்சணம்.
7. **Idolatry and Image-worship**—விக்கிரகாராதனையும் சுரூப வணக்கமும்.

☞ மேலே காட்டிய துண்டுப்பத்திரங்களை யாழ்ப்பாணம் அர்ச். சூசைமாமுனிவர் அச்சியந்திரசாலைத் தலைவருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

**CATHOLIC TRACT**
**No. 7.**

# IDOLATRY & IMAGE-WORSHIP.

## விக்கிரகாராதனையும் சுரூபவணக்கமும்.

"இந்துசாதனம்" 25-ம் இலக்க பத்திரிகையிலே விக்கிரகவணக்கம் என்னும் முகவுரையின் கீழே பின்வருமாறு வாசித்தோம்:

"சைவசமயிகள் கல்லையும் செம்பையும் வணங்கும் விக்கிரக வணக்கக்காரரெனக் கிறீஸ்தவர்களிகழ்ந்து பேசுவது வழக்கம். ஆனால், தாம் கடவுளை வணங்கும்போது ஏதோ ஒருவித ரூபத்தை மனதிலமைத்தே வணங்குகிறார்களென்பதை இவர்களறிந்திருந்தால் இங்ஙனம் இகழமாட்டார்கள். கிறீஸ்துவைக் கிறீஸ்தவர்கள் தியானிக்கும்போது அவர் சிலுவையிற் பாடுபட்டதை மனதில் ரூபித்தே வணங்குகிறார்கள். கல் செம்பு முதலிய லோகங்களால் விக்கிரகங்களை உண்டாக்கி அவைகள் மூலமாகக் கடவுளைத் தியானிப்பதற்கும் மனதில் ரூபித்து வணங்குவதற்குமுள்ள வித்தியாசமென்ன? இரண்டும் விக்கிரக வணக்கமேயாகும்."

நம்முடைய சைவநண்பர்கள் "கிறீஸ்தவர்கள்" "கிறீஸ்துசமயம்" என்னும்போது, ஐரோப்பாவிலே புறொட்டெஸ்தாந்தர் என்று அறியப்படும் பிரிவினைமதத்தவர்களையும், அவர்கள் இற்றைக்கு முந்நூறுவருடங்களின் முன் உண்டுபண்ணிய போலிக் கிறீஸ்துசமயத்தையுமே பெரும்பான்மை கருதுவார்கள். ஆயின் மெய்யான கிறீஸ்துசமயத்தின், (அதாவது உலகத்தின் திவ்விய மீட்பராய் எழுந்தருளிவந்த யேசுநாதசுவாமிதாமே போதித்தருளிய அந்தச்சற்சமயத்தின்) உண்மையை அளந்தறிவதற்கு, அதினின்றும் வழுவிப்போன ஓர் கிளைமதத்தின் கொள்கைகளை உதாரணமாக்குவது நீதியாகுமா? ஆகாது. நம்முடைய நண்பர்கள் தங்கள் பரம்பரைச் சமயத்தோடு கிறீஸ்துசமயத்தை ஒத்துப்பார்க்கவிரும்பின், மெய்யான கிறீஸ்துசமயமாகிய சத்தியவேதத்தின் போதனைகளையே எடுத்து ஆளுதல் நீதியாகும். ஆதலால்,

### விக்கிரகவணக்கத்தைச் சுட்டிய கத்தோலிக்கவேத போதனை யாது?

விக்கிரகம் என்பது, உருவம், சரீரம் முதலிய பொருட்களையுடைய ஒரு வடமொழி. இப்பொருட்களுக்கு இணங்க, ஒரு விக்கிரகமானது ஒன்றில் ஒரு ஆளை அல்லது பொருளைக் குறிப்பதாகலாம்; அல்லது, ஒரு ஆளுக்கு

ஆசிரயமாய் அல்லது சரீரமாய் (மூர்த்தமாய்) இருப்பதாக எண்ணப்படலாம். வசதிக்காக, நாம் இங்கே ஒரு ஆளை அல்லது பொருளைக்குறிக்க வழங்கப்படும் விக்கிரகத்தை "உருவ விக்கிரகம்" என்றும், ஒரு ஆளுக்கு ஆசிரயமாய் அல்லது சரீரமாய்க்கொள்ளப்படும் விக்கிரகத்தை "ஆசிரய விக்கிரகம்" என்றும் பெயரிட்டழைத்துக்கொள்ளுவோம்.

இனி, சத்தியவேத போதனையின்படி உருவவிக்கிரகங்கள் ஸ்தாபிக்கவும் வணங்கவும்படலாம். கத்தோலிக்கராகிய நாங்கள் உருவவிக்கிரகங்களை ஸ்தாபித்துவைத்து அவைகளின்முன்னே அவைகளாற் குறிக்கப்படும் ஆட்களுக்குச் சேரவேண்டிய வணக்கத்தைச் செலுத்துகிறோம். "சுரூபங்கள்" என்று எங்களால் அழைக்கப்படும் உருவவிக்கிரகங்கள் மண், கல், மரம், உலோகம், இரத்தினம் முதலிய எப்பொருளாலும் செய்யப்படலாம். சுரூபங்களின் உபாதானமாகிய பொருள் யாதாயினும் காரியமில்லை. அதை ஒரு சிறிதும் நாங்கள் மனத்திற்கொள்ளுவதுமில்லை உயர்ந்த ஒரு பொருளாற்செய்யப்பட்ட சுரூபமும் சரி, இழிந்த ஒரு பொருளாற் செய்யப்பட்ட சுரூபமும்சரி, அது ஓர் ஆளைக்குறிக்கும்படி ஸ்தாபிக்கப்படுமாகுல் அதன் முன்னே அந்த ஆளுக்குரிய வணக்கத்தைச் செலுத்துவோம். வணக்கமும் சுரூபத்தின் உபாதானப்பொருளுக்கும் அதனவிலைக்குந்தக்கபடியல்ல அவ்வச் சுரூபத்தினுற் குறிக்கப்படும் ஆளுக்கு ஏற்றதேயாகவிருக்கும். உதாரணம்:—யேசுநாதசுவாமியைக்குறிக்கும் எச்சுரூபத்தின் முன்னும் யேசுநாதசுவாமிக்குரிய மேலான தேவவணக்கம் அல்லது ஆராதனை முயற்சிகளைச் செய்வோம். கன்னிமரியம்மாளுடைய சுரூபத்தின்முன்னே, அந்த அம்மாள் சிருட்டிகளுளெல்லாம் அடைந்துகொண்ட உன்னதபதவிக்கேற்ற கீழான வணக்கம் செலுத்தப்படும். மற்ற அர்ச்சியசிஷ்டரின் சுரூபங்களின் முன் அவரவருக்குரிய கீழான வணக்கமே செலுத்தப்படும். அப்பால் இராசா முதலிய உலோகவாசிகளின் உருவங்கள் ஆலயங்களுக்கு வெளியே ஸ்தாபிக்கப்பட்டிருக்குமாயின் அவைகளின்முன்னேயும் அவ்வவ் ஆளுக்குரிய ஆசாரவணக்கம் செய்யப்படும்.

இதுகாறும் சொல்லப்பட்ட சுரூபவணக்கமே சத்தியவேதத்திலுள்ள உருவவிக்கிரக வணக்கமாம். ஆயின் இக்கருத்தின்படியேதான் நாங்களும் விக்கிரகங்களை வணங்குகிறோம் என நம்முடைய சைவநண்பர் கூறினும் அவர்களை நாம் "விக்கிரக ஆராதனைக்காரர்" என்று சொல்லுதல் நியாயமாயிருக்கின்றது. ஏனெனில், "விக்கிரகாராதனை" என்னும் சொற்றொடரினுல் நாங்கள் கருதுவது கடவுளல்லாத ஓர் வஸ்துவுக்குத் தேவாராதனை செலுத்துதலாகிய பாபத்தையே ஆதலால், சைவர் எங்களைப்போல உருவவிக்கிரகங்களை ஸ்தாபித்து வணங்கும் காலத்தும், அவ்வுருவ விக்கிரகங்களாற் குறிக்கப்படும் வஸ்துக்களின் நிமித்தம் அவர்கள் விக்கிரகாராதனைக்காரர் ஆகிறுர்கள். அது எங்ஙனமெனில், சத்திய சமயமென்று நாங்கள் தளம்பாதுவிசுவசிக்கும் எங்கள் சமயக்கொள்கைப்படி, சைவர்தொழும் சிவனும் அவருடைய சிவ சத்திபேதங்களும் ஒன்றில் இல்பொருட்கள், அல்லது தேவத்தன்மையற்ற பொருட்களாம். இது எங்கள் சமயக்கொள்கையென்றோம். அதனை நன்றாய்க் கவனித்துக்கொள்ளுக. சிவன் ஆதியமூர்த்திபேதங்களைச் சைவரோ உள்பொருட்களாகவும் தேவத்தன்மையுள்ளவைகளாகவுமே விசுவசிக்கிறுர்கள். ஆயினும், முதலாவது அவைகள் எங்களுக்கு இல்பொருளாகையால், சைவருடைய விக்கிரகங்களுக்கு அப்பால் அவை

கள் குறிப்பதாய்க் கூறப்படும் ஆட்கள் இல்லையென நாங்கள் கொள்ளல் வேண்டும். அப்படிக்கொள்ளுமிடத்து சைவர் அவ் விக்கிரகங்களுக்குச் செய்யும் வணக்கம் அவைகளோடேயே நின்றுவிடுகின்றது. நின்றுவிடவே, அவ்வணக்கம் கடவுளல்லாதவைகளான வெறும் விக்கிரகங்களுக்கே செய்யப்படுவதென்றாகி விக்கிரக ஆராதனையாய் முடிகின்றது. அன்றியும், இரண்டாவது, சைவருடைய சிவசத்திபேதங்களும் மூர்த்திபேதங்களும் எங்கள் கொள்கைப்படி தேவத்தன்மையற்றவைகளே ஆகையால், அப்பேதங்கள் உண்டெனவைத்து அவைகளைக்குறிக்கும் விக்கிரகங்களின் முன் தேவாராதனை செலுத்துமிடத்தும், அத்தேவாராதனை, விக்கிரகங்களுக்குப் பின்புறத்தேயுள்ளவர்களென வைத்துக்கொண்ட தேவத்தன்மையற்றோரைச் சாருவதாகி விக்கிரகாராதனையாகவே முடியும். ஆயின் கத்தோலிக்கராகிய நாங்கள் ஸ்தாபிக்கும் சுரூபங்களோ, உள்பொருட்களாகிய யேசுநாதசுவாமியையும் அர்ச்சியசிஷ்டர்களையும் குறிக்கின்றன என்பதும், யேசுநாதசுவாமிக்குமாத்திரம் தேவாராதனையும் அர்ச்சியசிஷ்டருக்குக் கீழான வணக்கமுமே செலுத்தப்படலாம் என்பதும் எங்கள் சித்தாந்தமாகையால், அவைகளின்முன் நாங்கள்செய்யும் ஆராதனைமுயற்சிகளும் வணக்கங்களும் முறைமையாகிய சுரூபவணக்கம் ஆகின்றது.

## சைவவிக்கிரகங்கள் ஆசிரய விக்கிரகங்களே.

அப்பால் நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டிய ஓர் முக்கிய விஷயமாவது: உள்ளபடி சைவர் தங்கள் விக்கிரகங்களை மேற்காட்டிய கருத்தின்படி உருவவிக்கிரகங்களாகத்தான் கொள்ளுகின்றார்களா? நாம் அறிந்தளவில் சைவருடைய விக்கிரகங்கள் உருவவிக்கிரகங்களாயல்ல ஆசிரயவிக்கிரகங்களாகவே ஸ்தாபிக்கப்படுகின்றன. சைவர் கத்தோலிக்கரோடு சம்பந்தப்படுமுன், நாம் மேலே விபரித்த உருவவிக்கிரகக்கொள்கை சைவர் மனதில் எப்போதாவது இடம்பெற்றதோ என்பதும் நமக்குச் சந்தேகம். சமயம் வாய்க்கும்போது அதனை ஆராய்ந்து பின்னோர்முறை எழுதலாமென்றிருக்கிறோம். அது நிற்க, சைவருடைய ஆதிநூல்களும் சாமானிய சனங்களுடைய பரம்பரையான கொள்கையும் நமக்கறிவிக்கிறபடி, சைவவிக்கிரகங்கள் எல்லாம் ஆசிரய விக்கிரகங்கள் என்றே சொல்லவேண்டியிருக்கிறது. (யாரேனும் நம் சைவநண்பர் இதனை மறுத்துரைக்க நியாயங்காட்டுவாராயின் அவ்வாறுசெய்ய ஆயத்தமாயிருக்கிறோம்.) இங்ஙனமே சிவலிங்கங்களுட் சில சுயம்புலிங்கங்களென்றும், அவைகள் இயல்பாகவே சிவனது ஆசிரயத்தானமாம் என்றும், அவைகளைப் பிரதிஷ்டைபண்ணவேண்டியதில்லையென்றும் சைவநூல்கள் கூறும். மற்றைய லிங்கங்களையோ பிரதிஷ்டைபண்ணுதற்கு ஆவாகனம் அல்லது கலைகொடுத்தல் (உயிர்கொடுத்தல்) என்னும் சடங்கு நடத்தப்படுகின்றது. இனி, சிவலிங்கங்கள் சிவனுடைய வடிவத்தைக் குறிக்கின்றன என்றதல்ல, அவைகள் சிவசத்தி ஆவாகிக்கப்பட்ட மூர்த்தங்கள் என்றதே அவற்றைப் பூசிக்கும் சைவருடைய சாதாரணகொள்கை என்பதனையும் குறித்துக்கொள்க. உள்ளபடி ஆகமங்களிலே சொல்லப்படும் சிவனுடைய வடிவத்தை, சிவலிங்கமாகப் பூசிக்கப்படும் கல் முதலியவைகள் எப்படி மனதிற் கொண்டுவருமென்று நமக்கு விளங்கவில்லை. அவைகள் பொதுவாக ரூபமற்ற பிண்டங்களாகக் காணப்படுகின்

றனவே. ஆதலால் அச் சிவலிங்கங்கள் உருவ விக்கிரகங்களல்ல ஆசிரய விக்கிரகங்களே என்று கொள்ள நியாயமுண்டல்லவா? ஏனைவிக்கிரகங்களுக்கும் கலைகொடுக்கப்படுகின்றது. அவைகளைப் பூசித்தல் ஒழிந்து அழிக்க நேரிடும் வேளைகளில் கலைகொடுத்தலுக்கு எதிரான ஒருசடங்கும் நடப்பதாகத் தோற்றுகின்றது. அன்றியும், சைவ ஆலயங்களிற் பொதுவாகக் காணப்படும் விக்கிரகங்களைப் பார்க்கும்போது, அவைகள் அவ்வாலயங்களைத் தரிசிப்போர் கண்களின்முன் ஸ்தாபிக்கப்பட்டு அவர்களுக்கு அவைகளாற் குறிக்கப்படுவோரின் நினைவை ஊட்டும்நோக்கமாய்ச் செய்யப்படுகிறவைகளாய்த் தோற்றவில்லை. ஆயின் அவைகள் சோடசோபசாரங்களையும்பெறத்தக்க ஆட்களுக்குரிய மூர்த்திகளாகவே கொள்ளப்படுகின்றமையால், அவைகளுக்குப் பற்றீட்டுதல், வாயலம்ப நீர்கொடுத்தல், ஸ்நானஞ்செய்வித்தல், உடுப்பாட்டுதல், போசனம்படைத்தல், தாம்பூலம் தரிப்பித்தல், கண்வளரவைத்தல் முதலிய ஆசாரங்களெல்லாம் சட்டவட்டமாய் நடத்தப்படுகின்றன. கிராமங்களில் மரங்களின் கீழும் சிறுகொட்டில்களுள்ளும் வைக்கப்படும் விக்கிரகங்கள் பெரும்பான்மை சிவப்புமை பூசப்பட்ட வெறும் முரட்டுக் கற்களேயாம். சிவப்புமை பூசுதலே அக்கற்களில் தெய்வத்தை ஆவாகிக்கும் சடங்குபோலும். சிவப்புமையானது ஆதியிலே வழங்கிய மானிட இரத்த அபிஷேகத்துக்குப் பதிலாய் பிறகிட்டகாலங்களிலே வழங்குவதாயிற்று என்பர் ஆன்றோர். இனி, பிரதிஷ்டைபண்ணிய கற்கள் மாத்திரமல்ல, சிற்சில மரங்கள், மிருகங்கள், மகாநதிகளும் தெய்வங்களுக்கு விசேஷ ஆசிரயம் என்னும்கொள்கையும் சைவருள் சாமானியமாயுண்டு. ஆகவே உள்ளபடி சிவலிங்கங்களைப்போலவே ஏனையவிக்கிரகங்களும் ஆசிரய விக்கிரகங்களாம் என நாம் கொள்ளவேண்டியிருக்கிறது.

இப்படிப்பட்ட ஆசிரய விக்கிரகங்களும் இருத்தல் கூடுமா? பேச்சளவிற்கூடும். கடவுள் எங்கும் பரிபூரணராய் இருக்கின்றவரே. ஆயினும், தமது சன்னிதானத்தை ஓர் இடத்திலே, அல்லது ஓர் சிலையிலே விசேஷவிதமாய் சாக்ஷாத்கரித்து விளங்குதல் கூடும். கடவுள் ஓர் விக்கிரகத்தில் விசேஷ சாந்நித்தியராகி அதைத் தமக்கு ஆசிரயமாக்கிக்கொண்டால், அவ்விக்கிரகம் இயங்கவேண்டுமே, பேசவேண்டுமே எனப் புறோட்டெஸ்தாந்தர் சொல்லுகிற நியாயம் ஒவ்வாது. பிரத்தியட்சமான யாதோர் அடையாளமில்லாமலும் கடவுள் ஓர் மூர்த்தத்திலே சாக்ஷாத்காரமாகலாம் என்பதற்கு எட்டுணையுந் தடையில்லை. இந்தமட்டும் சைவரோடு நமக்குச் சண்டையில்லை. ஆயின், காரியத்தளவில் கடவுள் எந்த விக்கிரகத்திலாயினும் சாக்ஷாத்காரமாய் விளங்குகின்றாரோ, அவருடைய விசேஷ சந்நிதானத்தை யாராவது ஓர் சிலையில், ஓர் உருவில் ஆவாகிக்க வல்லமையுள்ளவர்களோ என்று கேட்கும்போது, விஷயம் முழுதும் வேறொன்றாய்ப்போகின்றது. சைவருடைய விக்கிரகங்களில் ஆவாகிக்கப்படுகிறவைகளாய்க் கூறப்படும் மூர்த்திபேதங்களைக் கத்தோலிக்கராகிய நாங்கள் ஒன்றில் இல்பொருட்களாய் அல்லது தேவத்தன்மையற்ற ஆட்களாய்க் கொள்ளுகின்றமையால், அவ்விக்கிரகங்களில் கடவுள் சாக்ஷாத்காரமாய் விளங்குவதில்லை என்பது எங்கள் துணிபு. மேலும், சைவ குருக்களின் மந்திரவல்லமை எங்களுக்கு உடன்பாடல்ல. ஆகையால், அவர்கள் சைவ விக்கிரகங்களில் கடவுளையேனும் யாதோர் மூர்த்திபேதத்தையேனும் ஆவாகிக்கும் வல்லமையற்றவர்களே என்பது எங்களுடைய கொள்கைக்கொத்ததுணிபு. இதினாலேயும் சைவருடைய விக்கிரகங்களுக்குச் செலுத்தப்படும் வணக்கம் நாம் நோக்குமளவில் முறைகெட்ட விக்கிராகாராதனையாய்ப்போகின்றது.

## சைவருடைய ஆட்சேபனை.

சைவருடைய விக்கிரகங்களை உருவ விக்கிரகங்களாகவும் ஆசிரய விக்கிரகங்களாகவும் நோக்கலாம் என்றோம். அவ்விக்கிரகங்களை உருவ விக்கிரகங்களாய் நோக்குமிடத்து அவைகளுக்கு அப்பால் உள்ளவை, இல்பொருட்களும் தேவத்தன்மை அற்றவைகளுமான மூர்த்திபேதங்களேயாகையால், ஒன்றில் அவ்விக்கிரகங்களுக்குச் செலுத்தும் வணக்கம் அவைகளோடேயே நின்றுவிடுவதாகி அவ்வணக்கத்தைச் செலுத்துவோர் விக்கிரகாராதனைக்காரர் ஆவார்கள்; அல்லது கடவுளல்லாத பொருட்களுக்கே கடவுளுக்குரிய வணக்கம் செலுத்தப்படுவதாகி அவ்வணக்கத்தைச் செலுத்துவோர் விக்கிரகாராதனைக்காரர் ஆவார்கள் என்று முன் காட்டப்பட்டது. அப்பால் சைவருடைய விக்கிரகங்களை ஆசிரய விக்கிரகங்களாய் நோக்குமிடத்து (உள்ளபடியே) அவைகளில் கடவுளாவது எந்த மூர்த்திபேதமாவது சாந்நித்தியமாயிராதபடியால் இதிலேயும் அவர்கள் விக்கிரகாராதனைக்காரர் என்னும் அபிதானத்துக்கு உரியவர்களேயாம் என நியாயம் முடித்தோம்.

இதன்மேல் சைவர் நம்மை ஓர் கேள்வி கேட்கக்கூடும்: "கத்தோலிக்கராகிய உங்கள் கொள்கைப்படி அன்றோ எங்கள் விக்கிரகங்களாற் குறிக்கப்படும் மூர்த்திகள் தேவத்தன்மையற்றவர்கள். உங்கள் கொள்கைப்படியன்றோ எங்கள் விக்கிரகங்களில் மூர்த்திபேதங்கள் சந்நிதானமாவதில்லை. ஆயின் சைவராகிய நாங்கள் எங்கள் விக்கிரகங்கள் குறிக்கும் ஆட்களின் தேவத்தன்மையை விசுவசிக்கிறோம். எங்கள் விக்கிரகங்களிலே கடவுளின் மூர்த்திபேதங்கள் ஆவாகிக்கப்படுகின்றன என்பதும் சைவசமயக் கொள்கை. இப்படியிருக்கும்போது, எங்களை நீவிர் விக்கிரக ஆராதனைக்காரர் என்பது பொருந்துமா?" எனச் சைவர் நம்மை இவ்வாறுகேட்க நியாயமுண்டு. நாம் அவர்களுக்குச் சொல்லும் மறுமொழியும் நியாயமானது என்பதை அவர்கள்தாமும் ஒத்துக்கொள்ளுவார்கள்.

சில தடவைகளில், தன்னியல்பின்படியே பாபமான ஒரு செய்கை, அதனைச்செய்வோர் அறியாமையினாற்கொண்ட நல் நோக்கத்தின்நிமித்தம் பாபமாகாமற் புண்ணியமாக மதிக்கப்படவுங்கூடும். இப்படியே பெற்றோரைக் கொலைசெய்தல் தன்னியல்பின்படி இருமடங்கு துரோகமான ஓர் பெரும் பாபம். ஆயினும், சில காப்பிரிச்சனங்கள் வயதுசென்று போன தங்கள் பெற்றோர் நோய்வாய்ப்பட்டு இறந்துவிடுவதைக் காணச்சகியாமல் அவர்களைத் தக்க மரியாதையோடு கொன்று தின்றுவந்த வழக்கமானது, அறியாமையால் இவ்வாறுசெய்த அவர்களுக்கு ஒருபோதும் பாபமாய் மதிக்கப்படாது. அதுமட்டோ, அம்முரட்டுச்சனங்களுடைய நன்னோக்கத்தைக் கவனிக்குமிடத்து, தன்னியல்பின்படியே அக்கிரமமாயுள்ள அத்தீச்செயல், அவர்கள்மட்டில் பெற்றோரைப் பேணிக் கனம்பண்ணுதலாகிய புண்ணியமாகவே கொள்ளப்படல்வேண்டும். ஆதலால், காரியத்தளவில் (Objectively) பாபமேயான ஓர் கிரியை, கருத்தளவில் (Subjectively) பாபமாகாமலிருக்கவுங்கூடும் என்பது தேற்றம்.

இனி, நாம் பின்வருமாறு நம் சைவ நண்பருக்கு விடைகூறுவோம். உங்களுட் பலர் சைவ விக்கிரகங்கள் மெய்யான கடவுளைக்குறிக்கின்றன என்றும், அவைகளில் கடவுள் சாந்நித்தியமாய் இருக்கிறாரென்றும் நம்பிக்கொண்டு அவ்விக்கிரகங்களை வணங்குகிறார்களென்பது மெய்தான். அப்

படி வணங்குவோருடைய கருத்தளவிலே முறைகேடு இல்லையாதலால், அது அவர்களுக்குப் பாபமாகாது. ஆயினும், மெய்யான கடவுளால் வெளிப்படுத்தப்பட்ட சமயமாகிய சத்தியவேதத்தினால் அறியப்பட்ட தேவ லட்சணங்கள் இல்லாதோருக்கு, அதாவது, உள்ளபடி கடவுளல்லாத வஸ்துக்களுக்கே கடவுளுக்குரிய ஆராதனை அவர்களாற் செலுத்தப்படுகின்றமையால், காரியத்தளவில் அது விக்கிரகாராதனையாம். அப்பால், உங்களுட் சிலர் சைவ விக்கிரகங்களிலே கடவுள் சாக்ஷாத்கரிக்கப்பட்டிலர் என்றாவது. அவைகள் மெய்யான கடவுளைக் குறிப்பதில்லையென்றாவது அறிந்துகொண்டும். அவ்விக்கிரகங்களைத் தேசாசாரம் குலாசாரங்களின் பொருட்டு வணங்கக்கூடும். இப்படிப்பட்ட வணக்கமோ, கருத்தளவிலேயும் காரியத்தளவிலேயும் விக்கிரகாராதனையாகும்.

## கத்தோலிக்கருடைய ஆட்சேபனை.

நாம் மேலே குறித்த விடையானது சைவர் தங்களுக்கும் மிகவும் நியாயமானதொன்றாகத் தோற்றும் என்றெண்ணுகிறோம். ஆயின், நம்முடைய கிறீஸ்த சகோதரருட் சிலர் ஒருவேளை நாம் இவ்வாறு சைவருக்கு இடங் கொடுத்துப் பேசியதைச் சுட்டிக் குறைகூறுவார்கள்போலும். இவர்கள் நம்மைநோக்கி: "நன்றாய் நியாயம் முடித்தீர்! கருத்தளவிலே சரி, காரியத்தளவிலே பிழை என்று நீர் ஒருபிரிவை உண்டாக்கிவிட்டால், இனி. சைவர் எல்லாரும் கத்தோலிக்கராகிய எங்களைப்போல மெய்யான சுரூப வணக்கக்காரராகவே போய்விடுவார்கள். எங்களுக்கும் சைவருக்கும் இனி வித்தியாசமென்ன!" என்று கேட்கக்கூடும். ஆனால், உருவங்களை (அல்லது விக்கிரகங்களை) வைக்கிறதிலே எங்களுக்கும் சைவருக்கும் வெகு பேதமுண்டென்று சொல்லலாமா? சொல்லக்கூடாது. எங்கள் சுரூபங்கள் ஆட்களைக் குறிக்கின்றன. அவர்களுடைய உருவங்களுள் பெரும்பாலானவைகள் எனினும் மூர்த்திகளுக்கு ஆசிரயமாய் அதாவது உறைவிடமாய் எண்ணப்படுகின்றன. இது ஒன்றுமே உருவங்களை வைக்கிறதிலே கத்தோலிக்கருக்கும் சைவருக்குமிடையிலுள்ள வித்தியாசம். ஆதலால், உருவங்களை வைக்கிறார்கள் என்றதினால் நாம் ஒருபோதும் சைவரை விக்கிரக ஆராதனைக்காரர் என்று சொல்லுவதில்லை. உள்ளபடி, நாம் சைவர் ஆதியோரை விக்கிரகாராதனைக்காரர் என்னும்போது அக்குற்றச்சாட்டுக்கும் அவர்களுடைய உருவங்களுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. உருவங்கள் விக்கிரகாராதனையிலேயும்வழங்கப்படலாம் கடவுளாராதனையிலேயும்வழங்கப்படலாம். அவைகள் தங்களுக்கு அப்பாலிருக்கின்ற, அல்லது இருக்கிறவைகளாய் எண்ணப்படுகின்ற வஸ்துக்களினிடமாய் நிற்கும் துணைக்கருவிகளேயன்றி, தாங்களே ஆராதனையைப்பெறத் தக்கவைகளல்ல. ஊன்றியோசிக்கும்போது சைவருள்ளேயாவது வேறெந்தச்சமயத்தவருள்ளேயாவது, உருவங்களையேகடவுளாக வணங்கும் மதிகேடு இல்லை. இருக்கக்கூடாது. எவ்வளவு அறிவிலியும் கல்லை, செம்பை கடவுளென்று எண்ணான். பைத்தியகாரனிலேயன்றிப் பிறரில் மதிகேடு அவ்வளவுதூரம் போகாது. பின்னை, சைவர் கல்லைச் செம்பைக் கடவுளாக வணங்காவிட்டால் அவர்களை விக்கிரக ஆராதனைக்காரர் என்பதெப்படி? விக்கிரகாராதனையென்பது கல்லை, செம்பை கடவுளாக வணங்குவதன்றோ என்றுகேட்டால், மீண்டும் அன்று அன்று என்கிறோம். விக்கிரகாராதனையென்னும்போது, விக்கிரகங்கள் செய்யப்படும் உபாதானப்பொருட்களாகிய கல் செம்பு முதலியவைகளை

வணங்குதல் என்னும் பொருள் ஒருபோதும் பெறப்படாது. உள்ளபடியே அவ்வளவு மதியீனம் இருக்கக்கூடாது என்று முன்னும் குறித்தோம். சைவரும் விக்கிரகங்களின் உபாதானப் பொருளையல்ல, அவ்விக்கிரகங்களாற் குறிக்கப்படுகிற அல்லது அவைகளை ஆசிரயித்து எழுந்தருளியிருப்பதாக எண்ணப்படுகிற மூர்த்திகளையே கடவுளாக வணங்குகிறார்கள். ஆயின், விக்கிரகாராதனை என்பது, கடவுளுக்குரிய மேலான ஆராதனையைக் கடவுளல்லாத பிறிதொரு வஸ்துவுக்குச் செலுத்துதலாம். இதுவே விக்கிரகாராதனையின் மெய்யான வரைவிலக்கணம். உண்மையான இவ் வரைவிலக்கணத்தின்படி விக்கிரகங்கள் இன்றியும் விக்கிரகாராதனை இருக்கலாம். அங்ஙனமே, யாதொரு விக்கிரகத்தையும் உபகரணமாய்க்கொள்ளாமல் சூரிய உபாசனைசெய்கிறவர்களாகிய சொரோவாஸ்தர் மதத்தவர்கள் மெய்யான கடவுளுக்குரிய மேலான ஆராதனையைச் சூரியனுக்குச் செலுத்துகின்றமையால் அவர்களும் விக்கிரகாராதனைக்காரரேயாம். ஆதலால், சைவர், தங்கள் லிங்கங்கள் விக்கிரகங்கள் யாவற்றையும் அகற்றிவிட்டு சிவனையும் அவரது மூர்த்திபேதங்களையும் மனோபாவனையினால்மாத்திரம் எப்போதாவது வழிபடுவார்களானால், அப்போதும் அவர்கள் விக்கிரகாராதனைக்காரர் என்னும் குற்றச்சாட்டைத் தவிர்த்துக்கொள்ளமாட்டாதவர்களாகவே இருப்பார்கள்.

## "விக்கிரகம்" என்னும் மொழி வழக்கு.

"விக்கிரகாராதனையிலே விக்கிரகச் சம்பந்தமில்லை என்பது நன்றாயிருக்கிறது! கடவுளுக்குரிய மேலான ஆராதனையைச் சிருட்டிகளுக்குச் செலுத்துந் துரோகத்தைக் குறிக்கவேண்டுமானால் விக்கிரகாராதனை என்னும் பெயரை அதற்கிட அவசியமில்லையே. விக்கிரக ஆராதனை என்னும்போது விக்கிரகங்களை ஆராதித்தல் என்னும் பொருள் அன்றோ பெறப்படும்" என இன்னும் ஓர் ஆசங்கை எழக்கூடும். இவ் ஆசங்கையின் பெலத்தை நாம் முழுதும் ஏற்றுக்கொள்ளுகிறோம். காரியத்தைத் தேறவிசாரிக்குமளவில், ஐரோப்பிய பாஷைகளிலே Idolatry என்று சொல்லப்படுவதைத் தமிழிலே "விக்கிரகாராதனை" என்னும் தொடர்மொழியாற் சொல்லுவதினாலேயே இவ் ஆசங்கைக்கு இடமுண்டாகின்றது. வேதபுத்தகத்திலோ Idolatry என்னும் பாபம் "அந்நிய ஆராதனை" அல்லது "அந்நிய தேவர்களின் சேவை" என்னும் பொருளுள்ள மொழிகளாற் சொல்லப்பட்டிருக்கின்றது. Idol என்னும் மொழிக்குச் சரியான மூலசப்தமும், "மனோகற்பிதம்" "இல்பொருள்" "சாயல்" "வீண் எண்ணம்" என்னும்பொருள்களிலே வழங்கப்பட்டிருக்கின்றது. ஆதலால், விக்கிரக ஆராதனை என நம்முன்னோர் தமிழிற்சொல்லிய அக்கிரமம் மனோகற்பிதமான, இல்லாத, வெறுஞ் சாயலான, வீணாய் எண்ணப்பட்ட வஸ்துக்களைக் கடவுளாக ஆராதிக்கும் பாபமேயாம். அப்படியானால் Idolatry என்னும் மொழியை "விக்கிரகாராதனை" என மொழிபெயர்க்கவேண்டிவந்த நியாயமென்னவெனில், அக்கியானச்சனங்களெல்லாம் விக்கிரகங்களிலேயே தங்கள் தெய்வங்கள் உறைவதாக எண்ணி அவைகளைப் பூசித்துக்கொண்டுவந்தமையால், அவர்கள்செய்யும் பொய்த்தேவ ஆராதனையும் விக்கிரக ஆராதனை என்று வழங்கப்பட்டது. இப்படியே விக்கிரகம் என்றமொழி பொய்த்தெய்வங்களின் உருவத்தைக்குறிப்பதாயிற்று. சத்தியவேதத்திலே மெய்யான தேவனாகிய யேசுநாதசுவாமிக்கும் அவருடைய பத்தர்களான அர்ச்சியசிஷ்டர்களுக்கும்

குறிப்பாகச் செய்யப்படும் உருவங்களோ சுரூபங்கள் என்றழைக்கப்படுவனவாயின. ஆதலாலேயே பொய்த்தேவவழிபாட்டைக் குறிப்பதற்கு நாம் இந்நாட்களிலும் "விக்கிரகாராதனை" என்னும் தொடர்மொழியை வழங்குகின்றமையும் என்க.

## முடிவுரை

இதுவரையில் சொல்லப்பட்டவைகள் யாவையும் திரட்டிச்சொல்லிச் சில முடிவுரைகளைக் கூறுவோம்:—

1. சுரூபவணக்கத்தையும் விக்கிரகாராதனையையும் நுட்பமாய்ப் பிரித்து அறிந்துகொள்ளுதல் வேண்டும். மெய்யான கடவுளைச் சார்ந்ததும் கிரமமுள்ளதுமான வழிபாட்டிற்குத் துணைக்கருவியாக உருவங்களை அமைத்துக்கொள்ளுதலே சுரூபவணக்கமாம். கத்தோலிக்கர் அவதரித்த மெய்யான கடவுளேயாகிய யேசுநாதசுவாமிக்கும் அவருடைய திருத்தொண்டர்களுக்கும் குறிப்பாக உருவங்களை அமைத்துவைக்கின்றனர். அவ்வுருவங்களின்முன் கிரமமான வணக்கத்தைச் செலுத்துகின்றனர். எங்ஙனமெனில், யேசுநாதசுவாமியுடைய சுரூபங்களின்முன் அவருக்குரிய தேவ ஆராதனை செய்யப்படும். தொண்டர்களுடைய சுரூபங்களின்முன்னோ அவர்களுக்குரிய கீழான வணக்கமே செய்யப்படும். இங்ஙனம், மெய்த்தேவ வழிபாட்டோடு சேர்ந்ததாய்க் கிரமமுள்ளதாய்க் கத்தோலிக்கர் பயிலுகின்ற இம்முறைமையே சுரூபவணக்கம் என்னப்படும்.

2. விக்கிரகாராதனையோ கடவுளுக்குரிய மேலான ஆராதனையைக் கடவுளல்லாத வஸ்துக்களுக்குச் செலுத்தும் பாபமாம். விக்கிரகாராதனையென்னும் பாபத்துக்கும் உருவங்களைவைத்துவணங்கும் முறைமைக்கும் அகத்தியமான சம்பந்தம் இல்லை. பொய்த்தெய்வ வழிபாடே விக்கிரகாராதனையாதலால், அவ்வழிபாட்டைப்பயிலுவோர் உருவங்களைத் துணைக்கொள்ளினுமென், கொள்ளாதிருப்பினுமென் விக்கிரகாராதனைக்காரரேயாம். இனி, சைவர் தொழும் சிவ சத்திபேதங்களோ மெய்யான கடவுளுக்குரிய லட்சணமுள்ளவைகளல்லவென்பது கத்தோலிக்கர் துணிபு. இத்துணிபுக்கு ஆதாரமாயுள்ள நியாயங்களை நாம் இவ்விடத்து எடுத்தோத வேண்டியதில்லை. சைவர் தொழும் மூர்த்திபேதங்கள் மெய்க்கடவுளல்ல என்பது பிரபல நியாயங்களினால் நிலைபெற்றவோர் உண்மையாய்க் கிடத்தலினாலேதான் அவர்கள் செய்யும் தெய்வவழிபாடு விக்கிரகாராதனை என்னப்படும்.

3. ஆயினும், விக்கிரகாராதனையென்னும் பெயரிலும் பொய்த்தெய்வ ஆராதனை என்னும் பெயரே சுட்டிய பாபத்தைக் குறிப்பதற்கு அதிக தகுதியுள்ளது. ஆயினும், "விக்கிரகம்" என்பது பொய்த்தெய்வங்களின் உருவத்தைக் குறிக்கும் ஓர் மொழியாகக் கத்தோலிக்கருட் பண்டுதொண்டு வழங்கப்பட்டுவருகின்றமையால், அவர்களுடைய கருத்தின்படி "விக்கிரகாராதனை" என்பதும் பொய்த்தெய்வ ஆராதனையென்பதும் ஒன்றேயாகின்றது.

4. விக்கிரகாராதனையானது கடவுளுக்குப் பொருந்தாத மகா பாபமாம். ஆயினும், சைவருள் அதிகப்பற்றுள்ளோர் அதாவது சாமானியசனங்கள் அறியாமையினாலே பொய்த்தெய்வங்களை வழிபடுகின்றமையால், அவர்

கள் கருத்தளவிலே (Subjectively) பாபமற்றவர்களாய்ப்போகிறார்கள். சாமானிய சனங்களை முழுதும் நிரபராதிகள் என்றும் சொல்லக்கூடாது. ஏனெனில், இவர்களுக்குள்ளேயே காடன் மாடன் முதலிய ஊர்த்தெய்வங் குலதெய்வங்களைக் கடவுளுக்குரிய ஆராதனைகளோடு வழிபடும் அக்கிரமமும் காணப்படுகின்றது. இத்தெய்வங்களை இவர்கள் பேய்களே என்று சொல்லிக்கொண்டும் இவைகளால் தங்களுக்கு மோசம்வராதபடி கைக்கூலிகட்டுவோர்போல இவைகளுக்கு ஆராதனை செலுத்துகிறார்கள். இது காரியத்தளவிலேயும் கருத்தளவிலேயும் விக்கிரகாராதனையேயாம். பின்னும் கற்றறிந்தோருட் சிலர், ஆலயங்களிலேயுள்ள விக்கிரகங்களிற் கடவுள் ஆவாகிக்கப்பட்டிருப்பதில்லையென்றும், அவ்விக்கிரகங்களாற் குறிக்கப்படும் மூர்த்திபேதங்கள் கடவுள்வழிபாட்டுக்கு உரியவைகளல்லவென்றும் அறிந்துகொண்டும் முகத்தாட்சிணியம், தேசாசாரம், குலாசாரங்களின் பொருட்டுமாத்திரம் அவைகள்பேரால் நடக்கும் திருவிழாக்களிற் பங்குபற்றுகிறார்கள் என்று எண்ண இடமிருக்கிறது. இவர்களும் உள்ளபடியே காரியத்தளவிலேயும் கருத்தளவிலேயும் விக்கிரகாராதனைக்காரரென்பதற்குச் சந்தேகமில்லை. தாங்கள் மனதினால் அத்தெய்வங்களை வழிபட்டதேயில்லையென்று சொல்லுவதிற் பயனில்லை. ஆயின், அறிந்தும் அறிந்ததற்கு விரோதமாய் நடந்தமையால் அதிக பாபமே உண்டாகும். அப்பால் பரப்பிரமத்தின் சொரூபத்தைப் போதியவரையில் அறிந்துகொண்டும், தாவரசங்கமங்களையே பரப்பிரமமாகக் கைதொழுது கெடுகின்ற தங்கள் சனங்களை நல்வழியிற்புகுத்தாதபடி உதரபோஷணத்தினிமித்தம் அல்லது சாதிக்கட்டுப்பாடுகளினிமித்தம் பின்னிட்டுக்கொண்டிருக்கிறவர்களோ இன்னும் அதிக குற்றவாளிகளாம். பின்னும் ஓர்சாரார் தங்கள் பரம்பரைச் சமயத்தின் தவறுகளை ஒருவாறு கண்டுகொண்டவிடத்தும், அப்பால் ஆராய்ந்துபார்த்தால் சமயத்தை மாற்றவேண்டுமென்றஞ்சி மனோற்சாயமான அறியாமையைத் தழுவிக்கொண்டு கடவுள்சமுகத்திற குற்றவாளிகளாகிறார்கள். இந்துசமயங்களைக் கிறீஸ்துசமய உண்மைகளுக்கொப்பச் சோடித்துக் காட்டிப்போடப் பிரயாசப்பட்டு வருவோருட் சிலர் இவ்வகுப்பையே சேர்ந்தவர்கள்போலும்.

5. அறியாமையினால் விக்கிரகாராதனையைப் பயின்றுவருவோர் கருத்தளவிலே (Subjectively) பாவமற்றவர்களாய்ப்போனாலும் காரியத்தளவிலே (Objectively) அவர்கள் கட்டிக்கொள்ளும் பாதகம் பெரும்பாதகமேயாதலால் அவர்கள்நிலை பரிதாபத்துக்குரியது. அவர்கள் நற்கருத்து அவர்களைப் பாபத்துக்குத் தப்பிக்கொள்ளப்பண்ணுகின்றதேயாயினும், அதினால், உள்ளபடி பெரும்பாதகமேயாகிய விக்கிரகாராதனையின் சீர்கேடு மாறிப்போகாது. விக்கிரகாராதனையைத் தன்னியல்பின்படி நோக்கும்போது அது கடவுளுக்கு மகா துரோகமாம் என்பது வெளிப்படை. ஏனெனில், அதினால் கடவுளாகிய பரமவஸ்துவுக்கு உரிய மேலான ஆராதனையும் நமஸ்காரமும் வழிபாடுகளும் அவருக்குச் செலுத்தப்படாமல், மனோகற்பிதமான வஸ்துக்களுக்கும் வெறுஞ் சிருட்டிகளுக்கும் செய்யப்படுவதாகிய அநியாயம் உண்டாகின்றது. விக்கிரகாராதனையை அதனைப் பயிலுவோரளவில் நோக்கும்போதும் பரிதாபத்துக்கிலக்காகின்றது. சனங்கள் பொய்த்தெய்வங்களையே கடவுளாகக்கொள்ளுகின்றமையால் அவர்களுட் கடவுளைப்பற்றிய மேலான எண்ணங்கள் தாழ்ந்து, அவர்கள் பவித்திரமான சீவியத்தினின்றும் வழுவிப்போவார்கள். இவ்வாறாய் அன்

றே நம் செல்வநாட்டிலே பூர்வம் நரபலிசெலுத்துதலும், உடன்கட்டை ஏறுதலும், தற்கொலையும், சத்திபூசை முதலிய அவச்சடங்குகளும், ஆவிடையாரிலிங்க உபாசனை முதலியனவும், சதிர்விளையாட்டு ஆதியவைகளும் பில்லிசூனியம் முதலியவைகளும் அந்தந்தோ! தலைப்பட்டன. அன்றியும் விக்கிரகாராதனையினாலன்றே, சச்சிதானந்தராகிய பரப்பிரமத்தைச் சனங்கள் எட்டுணையும் நினையாமல், "கண்ணிலேகண்டதெல்லாம் கதிதரு தெய்வமென்று" உட்கொண்டு தாவரமிருக மனுஷராதிய சகலவஸ்துக்களுக்கும் தேவவழிபாடு செய்யவன்றி, துஷ்ட பிசாசுகளையுமே ஆராதித்துச் சாந்திபண்ணத் தலைப்பட்டார்கள். ஆதலால், நம் அரியநாட்டினின்றும் விக்கிரகாராதனை ஒருவி, மெய்த்தேவ அறிவும் வழிபாடும் பெருகுவது எந்நாளோ எந்நாளோ என்று சுதேசாபிமானமுள்ள சகலரும் காதலிக்க வேண்டுமன்றே.

IMPRIMATUR. 18. 7. 06. J. B. P., VIC. GEN.

Printed by C. Andrew at St. Joseph's Catholic Press, Jaffna.

CATHOLIC TRACT
No. 8.

# METEMPSYCHOSIS.

# மறுபிறப்பு

## I. ஆட்சேபம்.

ஞானசேட்டை உள்ளதாய், அழியுந்தன்மையற்ற சித்துப்பொருளாய் விளங்குகிற நமது ஆத்துமமானது சன்மாந்தரங்களில் தேவராய், மனிதராய், நாற்கால்விலங்குகளாய், பறவைகளாய், ஊர்வனவாய், நீர்வாழ்வனவாய், தாவரமாயப் பிறந்தும் இறந்தும் உழன்றுகொண்டுவரும் என்றதே மறுபிறப்புக்கொள்கை. இக்கொள்கை சைவர்முதலிய இந்துசமயிகளுள் பலநூறாண்டுகளாய் வேரூன்றியிருக்கிறது. இதனை அவர்கள் தாயின் பாலோடே பருகிவருகிறார்களென்னலாம். ஆதலால், மறுபிறப்பு உண்டென்பது அவர்களுக்கு இரண்டுமிரண்டும் நான்கு என்பது போலத் தோற்றுகின்றது. சத்தியவேதமோ மானிடஆத்துமமானது ஒரு பிறவியைமாத்திரமுடையது; அது இப்பிறவிக்குப்பின் மோட்ச நரகமென்னும் நித்தியகதிகளுள் ஒன்றுக்குச் செல்லுகின்றது எனக்கூறும். இக்கூற்று சைவருக்கு யுக்திவிரோதம்போலத் தோற்றுகின்றது. இவ்விஷயமோ முக்கியமானது. நம் நித்தியகதிக்குரிய புண்ணியங்களை ஈட்டிக்கொள்ளுதற்குள்ள சீவியகாலம் இது ஒன்றுமாத்திரமே என்பது மெய்யானால், மறுசீவியங்களிற் பார்த்துக்கொள்ளலாமென்று நம்பியிருப்போர் அடையக்கூடிய நஷ்டமோ பெரிது. இப்பிறப்பு கண்கூடாய்க்கண்ட சத்தியமாகக் கிடக்கின்றது. மறுபிறப்பு உண்டு இல்லை என்பதையோ அனுமானத்தினால் மாத்திரம் அறியக்கூடும். ஆதலால் மறுபிறப்பு உண்டென அனுமானித்தற்கு யாதும் நியாயம் உண்டா என்பதனைச் சித்தசமாதானத்துடன் பரிசோதித்துப் பார்க்கக்கடவோம்.

### மறுபிறப்புக்கொள்கை தொடங்கிய காலம்.

முன், இந்தியாவில் மறுபிறப்புக்கொள்கை எக்காலத்துத் தொடங்கியுள்ளதென விசாரிப்பாம். அது இங்கு ஆதிதொட்டு இருந்ததா? இல்லை. இந்தியாவிலுள்ள சமயங்களுள் விசேஷித்ததாகிய வைதிக சமயத்துக்கு ஆஸ்பதமாயிருந்தவர்கள், இமயமலைக்கு அப்பால்நின்றும் பஞ்சாப்பின் மைதானங்களில் வந்திறங்கியோராகிய பூர்வஆரியராம். இவர்கள் காலத்தே நால்வேதங்களுள்ளும் அதிபூர்வமானதாகிய "இருக்கு" என்னும் சங்

கிதை இயற்றப்பட்டதென்பார் ஆன்றோர். இருக்கு சங்கிதை இவ் ஆரியரின் சமய உணர்ச்சிகளுக்கு இனிய சான்றாக விளங்குகின்றது. ஆயினும், இவ் இருக்கு வேதத்தின் ஆயிரத்துக்கு மேற்பட்ட சூக்தங்களுள் ஒன்றிலாதல் மறுபிறப்புக்கொள்கை காணப்பட்டிலது. அக்காலத்து ஆரியர் தங்கள் மாடு கன்றுகளை காத்தும், பலுகபண்ணியும், அவைகளுக்கு நல்லமேய்ச்சல் தந்தும், காலமழைகளை வருஷித்தும், தங்கள் சத்துருக்களை ஓட்டியும் உதவிபுரியும்பொருட்டு ஆக்கினி, இந்திரன், வருணன் சவித்திரு முதலிய பௌதிகதேவர்களைப் பிரார்த்தித்தமையையே இருக்குவேதத்திற் காண்கிறோம். அதன் பாடல்களில் பெரும்பாலானவை அக்கினி முதலிய பூதங்களுக்கு ஆரியர் செய்த பிரார்த்தனைகளே என்பது தானாய் விளங்கும். அவைகளிலே பிற்காலத்துத் தத்துவஞானிகளின் அதி சூக்குமமான தர்க்கவாதங்கள் கோட்பாடுகள் கிடையா. பூர்வ ஆரியர் தம்முள் இறந்தோரானோர் பிதிர்களுடைய பாக்கியமான கூட்டத்திற் சேர்ந்துகொள்ளும்பொருட்டுப் பிதிர்கருமங்களைச் செய்தனர். அக் கருமங்களின் புண்ணியபலத்தால் இறந்தோர் பிதிர்களின் தலைத்திற்சேர்ந்து கொள்ளுவார்களென்றது அவர்கள் நம்பிக்கையாயிருந்தது. இறந்தோர் பினனும் பலகால் உலகில்வந்து கூடுவிட்டுக்கூடாய அலைந்துதிரிவாரென்ற எண்ணமோ இருக்குவேதத்திலே ஒரு சிறிதும் காணப்படுகின்றிலது.

அப்படியாயின், மறுபிறப்புக்கொள்கை இந்தியாவில் எப்போது தொடங்கிற்று? ஆரியாவர்த்தம் என்னும் வட இந்தியாவின்கண்ணே வேத தியானஞ் செய்துகொண்டிருந்தவர்களாகிய அறிவாளிகள் ஆரண்யகங்கள், உபநிஷத்துக்கள் என்னும் தத்துவசாஸ்திரபாகங்களை எழுதிய காலத்தே அக்கொள்கை தொடங்கிற்று என்னல்வேண்டும். ஏனெனில், மறுபிறப்புக்கொள்கை அக்காலத்துக்குரியதாகிய பிருஹத் ஆரண்யகத்திலே முதன்முதற் காணப்படுகின்றது. அக்காலமே அத்துவைதவாதம் மேலீட்டமாய நின்ற காலமுமாகையால், இக்கொள்கை உண்டானவிதத்தை நாம் ஊகித்துக்கொள்ளுதல் எளிதாகின்றது. பரமாத்துமாதான் சீவாத்துமாவாய்ப் பலபல பேதங்களாய நிற்கும் என்றதே அத்துவைதவாதம். இக்கொள்கையினினறும், சீவாத்துமா பலபல பிறவிகளிலுழலும் என்ற மறுபிறப்புக்கொள்கை சுலபமாய் வருதலைக்காண்க.

இங்ஙனமே வெவ்வேறு தத்துவசாஸ்திர மதம்பற்றி பிறதேசங்களிலும் மறுபிறப்புக்கொள்கை எழுந்ததுண்டு. எகிப்தியர் ஆதியில் மனுஷர் இறக்கும்போது ஆத்துமா சடத்தை விட்டு நீங்குவதில்லை என்ற கொள்கைஉடையோராய தம்முள் இறந்தோர் சடங்களுக்குப் பரிமளதைலங்களூட்டிச் சேமித்துவந்தாரெனினும், பிற்காலம் மறுபிறப்புக் கொள்கையை ஏற்றுக்கொண்டனர். கிரேக்கர் இதனை எகிப்தியரிடமிருந்தும் கற்றுத் தாமும் கைக்கொண்டனர். பிளேற்றோ என்னும் தத்துவஞானி "பிரமைகள் தாமாயிருக்கும் இயல்புடையன" எனும் தனது மதம்பற்றி அப்பிரமைகளுக்கு ஆதேயமான ஆத்துமாக்களும் நித்தியமாய்ப் பிறந்துவருகின்றனவென்று கற்பித்தார். இப்படியே பிதகோறூஸ் முதலிய சிலருமாம்.

ஆயின், இந்தியாவிலேயே மறுபிறப்புக்கொள்கை மிகவும் தழைத்து வளர்ந்துவந்திருக்கின்றது. மனுஸ்மிருதி எழுதப்பட்ட காலத்தில் [அதனை ஆன்றோர் கி. மு. 600 க்கும் 500 க்கும் இடையில் என்பர்] இக்கொள்

கை இந்தியாவின் சமயசாஸ்திரங்களெல்லாவற்றிலும் ஏறிவிட்டதாகத் தோற்றும். அப்பால் புத்தசமய எழுச்சியினால் இது இலங்கை, சீனம், யப்பான், திபேத்து தேசங்களிலும் அதி விஸ்தாரமாய்ப் பரம்புவதாயிற்று.

## மறுபிறப்புக்கோள்கைக்கு ஆதாரம்.

இக்கொள்கை எழுந்ததற்குக் காரணம்யாது? முன்சொல்லியவாறு வெவ்வேறு தத்துவஞானிகள் அவ்வவர் மதம்பற்றி மறுபிறப்பைக் கற்பித்தார்கள். இந்திய தத்துவஞானிகள் இதனைக் கற்பிக்கக் காரணமான ஏதுக்களில் விசேஷித்ததைச் சைவநூல்களிற் கண்டபடி இங்கெடுத்துச் சொல்லுவோம். நம் தத்துவஞானிகள் உத்தேசம் பின்வருமாறு நியாயம் முடித்தார்கள்:— "இப்பிரபஞ்சம் கடவுளாற் சிருட்டிக்கப்பட்டதா? தானாய் வந்ததா? கடவுளாலேதான் சிருட்டிக்கப்பட்டது. ஆயின் இதில் பலபல பேதமான பொருட்கள் காணப்படுகின்றன. பலவேறுவகைப்பட்ட லோகங்களும், தாவரங்களும், மிருகபட்சிசாலங்களும் மனிதரும் பிரபஞ்சத்திற் காணப்படுகின்றார்கள். மனிதருள்ளும் சிலர் அறிஞராயும் சிலர் மூடராயும், சிலர் செல்வராயும், சிலர் வறிஞராயும், சிலர் இரதம் ஊருவோராயும், சிலர் காவுவோராயும், சிலர் பூரணதேகிகளாயும், சிலர் குருடு செவிடு ஊமை முடமுள்ளோராயும் பிறத்தலைக் காண்கின்றோம்; மனிதருட் பலர் பாலவயதில் இறக்க, பலர் கருப்பத்திலுந் துஞ்சிவிடுகின்றனர்; ஆதலால் இவ்வாறு சீவர்களை மேலோராயும் கீழோராயும் சுகிகளாயும் துக்கிகளாயும் கடவுள் சிருட்டித்தற்குக் காரணம்வேண்டுமே; காரணமின்றி எழுந்த எழுந்தபடி செயதனரென்னில் பரிபூரண நீதி என்னும் இலட்சணம் பங்கப்பட்டுப் பக்ஷபாதியாய விடுவாரே. ஆகலால் கடவுள் எழுந்தபடியும் காரணமின்றியும் இப்பேதங்களை அமைக்கவில்லை; இப்பேதங்களுக்குக் காரணம் ஆன்மாக்களிடத்தே இருந்தது; அவ்வான்மாக்கள் முன்னும்பிறந்து புண்ணியபாவங்களை ஈட்டியிருந்தன. அப்புண்ணிய பாவங்களின் தாரதம்மியமாகிய கன்மசேடத்திற்கொப்பவே பிரபஞ்சத்திலுள்ள பேதங்கள் விதிக்கப்பட்டன; ஆதலால் இப்பிறப்பில் இன்பதுன்பம் புசிக்கிறவர்கள் தத்தம் முற்பிறப்பில் செய்த பாவபுண்ணியபலன்களையே அனுபவிக்கின்றார்கள். கடவுள் பேதங்களுக்குக் காரணரல்லர். கன்மமே காரணம். கன்மசேடத்தின் உண்மையோ மறுபிறப்பினுண்மையை வேண்டிநிற்கின்றது. ஆதலால் மறுபிறப்பு உண்டு" என இவ்வாறு நியாயம்முடித்தார்கள்.

சிருட்டியிற் காணப்படும்பேதங்கள் அகத்தியம்முற்பிறப்பை வேண்டிநிற்கின்றனவென்பதே மறுபிறப்புக்கொள்கைக்கு ஆதாரமாகச் சொல்லப்படுகின்ற முக்கியநியாயம். இதையொழிந்த முக்கியநியாயம் யாதும் சைவரால் எடுத்துக்காட்டப்பட்டதையும் அறியோம். இதனிலும் வேறாய்ச் சொல்லப்படும் உபநியாயங்களும் சில உண்டாயினும் அவையெல்லாம் இஃதொன்றனுளடங்கும். இந்த நியாயம் மறுபிறப்பு உண்டென்பதற்குப் போதியதன்றோ? மறுபிறப்பில்லாவிடின் பிரபஞ்சத்திலுள்ள பேதங்களுக்கு நியாயம்உத்தரிப்பதுஎங்ஙனம்? மேலெழுந்தவாரியாக நோக்குங்கால் மறுபிறப்புக்கொள்கையானது பிரபஞ்சத்தின் பேதங்களென்னும் முடிச்சை இலகுவாய அவிழ்த்துவிடுவதுபோலிருக்கின்றதென்

பதுமெய். ஆயின் சரியாய் உற்றுநோக்கும்போது ஒருமுடிச்சை அவிழ்க்கவந்த இந்தக்கொள்கையே வேறு ஒன்பதுபடிமுடிச்சுக்களைப் போடுகின்றதெனக் காண்கிறோம்.

இவ்விஷயத்தில் கிரமமாய்ச் செல்லும்பொருட்டு, பிரதமத்தில் மறுபிறப்புக்கொள்கையாலெழும் யுக்திவிரோதம் அனுபவவிரோதங்களைக் காட்டி, பின் பிரபஞ்ச பேதங்களுக்கு மறுபிறப்புக்கொள்கையாலன்றி மற்றுயுத்தி அனுபவங்களுக்கு அதிக இசைவாய் நியாயம் உத்தரிக்கமுடியாதாவென ஆராய்வோம். மறுபிறப்புக்கொள்கையுடைய நம் நண்பர் இனிப்பேசப்படப்போகிறவைகளைக் கவனமாயும் ஆராய்வாயும் வாசித்துப் பட்சபாதமின்றி யோசிக்கவேண்டுமென்று வேண்டுகிறோம்.

## ஆட்சேபம் 1.

தற்போது பிரபஞ்சத்திற் காணப்படும் பேதங்களுக்கும் சுகதுக்கங்களுக்கும் காரணம் இதிலுள்ள ஜீவர்கள் முற்பிறப்பிற்செய்த பாவபுண்ணியங்களின் சேடமே என்று சொல்லப்படுவது சரி; ஆனால் இதற்கு முந்தியதாகிய கற்பத்தின் சிருட்டியிலேயும் பேதங்கள் இருந்தனவா அன்றா? முற்சிருட்டியிலே பேதங்கள் இருக்கவில்லை என்றால் அதிலே சகல ஆன்மாக்களும் ஒரேவித சரீரங்களோடு இருந்தன என்னப்பட்டு நகைப்புக்கிடமாகும். அதெப்படியெனில், காட்டுவோம்: ஆன்மாக்கள் எல்லாம் முற்சிருட்டியிலே மரங்களாயிருந்தன என்றால், அவைகள் நிற்க உலகங்கள் இன்றிப்போய்விடும். மரங்களெல்லாம் ஒரேசாதியானவைகளாய் அந்தரத்திலேயே உலாவித்திரிந்திருத்தல்வேண்டும். இனி, அந்தரத்தில் உலாவித் திரிந்த அம்மரங்கள் பின்பு மிருகங்களாய் மனிதராய்ப் பேதப்பட்டுவர நியாயமுமில்லை. இனி, மரங்களாயல்ல ஆன்மாக்களெல்லாம் முற்சிருட்டியில் மிருகங்களாகவே இருந்தன என்றால், மிருகங்கள் நின்று உலாவ இடமில்லாததோடு, அவைகள் உண்ணப் புல் பூண்டும் பருகப் பானமும் இல்லாது போய்விடும். அன்றியும், ஒருவயதும், பலமும், உயரபருமனும் உள்ள இலட்சக்கணக்கான புலிகளை, அல்லது யானைகளை, அல்லது பசுக்களை, அல்லது கன்றுகளை வேறொன்றும் இல்லாத அந்தரவெளியில் ஓடித் திரியக் காண்பதைப்போலும் விநோதம் வேறு உண்டா? அப்பால், ஆன்மாக்களெல்லாம் முற்சிருட்டியில் மனிதராயிருந்தன எனலுஞ் சரிப்படாது. மனிதர் இருக்க, நிற்க, உண்ண, உடுக்க ஒன்றுமில்லாமற்போய்விடுவதோடு அவர்களுக்குள் ஆண், பெண், மூப்பு, இளமை, அரசர், ஏவலர் என்றபேதம் ஒன்றும் இருக்கத் தகாததலால், அப்படிப்பட்டோர் மனுக்கூட்டத்தை நினைக்கவும்முடியாது. தேவர், நரகர்களைக்குறித்தும் இப்படியே சொல்லிக்கொள்ளுக. ஆதலால், இதற்கு முந்திய சிருட்டியிலே பேதங்கள் இருக்கவில்லை என்றல் பொருந்தாது.

பேதங்கள் இருக்கவில்லை என்றல் பொருந்தாதபோது, முற்சிருட்டியிலும் பேதங்கள இருந்தன என்றே சொல்லவேண்டியிருக்கிறது. இருந்தன என்றால் அப்பேதங்களுக்குக் காரணம் யாது? அதற்கு முந்திய சிருட்டி, அதற்கு முந்திய சிருட்டி என்று சொல்லிக்கொண்டுபோனால் எப்படியும் ஆதிச்சிருட்டி ஒன்றுவேண்டுமே. ஆன்மாக்கள் அநா

தியாய்ப் பிறந்துழலும்; ஆதலால் ஆதிச்சிருட்டியென ஒன்றில்லை என்றலும் பொருந்தாது. ஏனெனில் ஆன்மாக்கள் இத்தனை பிறவிகளில் உழலும் என்ற வரையறை இருக்கின்றமையாலும் பிறவிகளின் கணக்கு ஒருநாள் முடியும் என்று சொல்லப்படுகின்றமையாலும் ஆதிப்பிறவி, ஆதிச்சிருட்டி ஒன்று இருக்கவேண்டியது. "எது முடிவுள்ளது அது தொடக்கமுள்ளது" என்பது எவருக்குஞ் சம்மதம். ஆகையால் ஒருநாள் பிறவிக்கடலைத்தாண்டி முத்தியடையும என்னப்படுகிற ஆன்மாக்களின் பிறவிகளும் தொடங்கியே இருக்கவேண்டியது. ஆதிச்சிருட்டி உள்ளதேயாகவேண்டியது. இனி, ஆதிச்சிருட்டியில் இல்லாப்பேதங்களோ பிற்சிருட்டிகளில் ஓர்போதும் வரா. ஆகையால், அச்சிருட்டியிலும் பேதமிருத்தலவசியம். அப்பேதத்துக்குக் காரணம்யாது? ஆதிச்சிருட்டியின் பேதத்துக்குக் காரணம்சொல்லமுடியாதென்பீரேல், இச்சிருட்டிக்கு நீர் காரணஞ்சொல்லுதல்தான் எங்ஙனமோ?

"எச்சிருட்டியிலே சீவர்களுட்பேதம் உண்டாயிற்றென அறியோம்; ஆனால், எப்படியும்பேதங்களுக்குக் காரணம்கன்மத்தினின்றே வரவேண்டும்" என்பீராயின், இச்சிருட்டியோடு நின்றுகொண்டு, இச்சிருட்டியிலுள்ள பேதங்களுக்குக் காரணம் கன்மமே என்றுசொல்லி முடித்துவிடாமல் முற்சிருட்டிகளை ஏன் கற்பித்து முட்டுப்படுகிறீர்? இனி, இச்சிருட்டியின் பேதங்களுக்காதல், எச்சிருட்டியின் பேதங்களுக்காதல் கன்மசேடம் காரணமென்றால், அக்கன்மசேடம் (புண்ணியபாவக்கிரியை) சீவியமின்றி வருமா? சீவிக்குமுன் புண்ணியபாவக்கிரியை செய்வதெப்படி? சரீரமின்றிக் கன்மம் உண்டாகாதென்பதுமமது கொள்கையன்றோ? சரீரமின்றிக் கன்மம் உண்டாகாதிருக்க, ஆதியில் இல்லாததாகிய கன்மம் ஆதிச்சரீரத்துக்குக் காரணமாயிற்றென்பதும் பனம்வித்தின் இன்மை பனையை முளைப்பித்தது என்பதுமொக்குமே.

"அப்படியுமல்ல; சரீரமுங் கன்மமும் ஒன்றற்கொன்று இடைக்காரணங்களாயிருந்தாலும் ஆதியில் இவ்விரண்டற்கும் ஒருங்கே மூலகாரணமாய்நின்றது ஆணவமலம்; அவ் ஆணவமலத்தோடு கூடியிருந்த ஆன்மாக்கள் சரீரத்தையும் கன்மத்தையும் விரும்பின; அவ்விருப்பத்தையறிந்த கடவுள் ஆன்மாக்கள் விரும்பிய சரீரத்தையும் கன்மத்தையுங் கொடுத்தார்" எனச்சொல்லுவீராயின் இதில் முன்னைய விடைகளிலுண்டானவைகளைக் காட்டிலும் அதிகதடைகள் உண்டாகின்றன. அதெப்படியெனில், ஆன்மாக்களிடம் ஆணவமலசேட்டை உண்டானதற்குக் காரணமென்ன? அதற்கு ஓர் காரணந்தான் நீர் சொல்லிவிடினும் அவ்ஆணவமலசேட்டை ஆன்மாக்களில் ஒரே விதமாயிருந்ததா? பலவாறாயிருந்ததா? ஒருவிதமாயெனின் கடவுள் ஆன்மாக்களுக்குப் பலவிதமான சரீரங்களைக் கொடுத்ததெங்ஙனம்? அப்படியன்று, ஆணவமலசேட்டை ஆன்மாக்களிற் பலவிதமாயிருந்ததெனில் அதற்குக் காரணம்யாது? காரணம், ஒன்றில் மலந்தானேயாகவேண்டும், அல்லது ஆன்மா ஆகவேண்டும், அல்லது ஈற்றில் கடவுளேயாகவேண்டும். ஆணவமலமோ நுங்கொள்கைப்படி சடமாதலால் அசேதனமாகிய அச்சடம் பலவாறாய் ஆன்மாக்களில் விருப்பங்களை ஏவிற்றென்னல் சரிப்படாது. ஆன்மாக்களே வெவ்வேறு சரீரங்களை விரும்புவதாயின் முந்த அவை அச்சரீரங்களை அறியவேண்டும், ஆயின் ஆன்மாக்கள் சரீரங்களைப் பொருந்துமுன் சரீரங்கள் இல்பொருளாகையால் அதுவுஞ் சரிப்படாது. ஈற்றில் கடவுளே ஆன்மாக்களுக்கு ஆணவமல

சேட்டையைப் பேதமாக்கிவிடுவரெனின் அதற்கு நிமித்தம்யாது? நிமித்தம்யாதுமின்றி ஒவ்வோரான்மாவுக்கு ஒவ்வோர் சரீரத்தில் விருப்பத்தை எவிவிட்டனரென்றல் பொருந்துமா?

இவ்வாறே சிருட்டியிற் காணப்படும்பேதங்களுக்குக் காரணஞ்சொல்ல எழுந்தவர்கள் ஒரு காரணமுஞ்சொல்லாமல் புதுச்சங்கட்டங்களுள் தம்மைமாட்டிக்கொள்ளுதலைக் காண்க.

## தாலபீசநியாயம்.

இந்துதத்துவசாஸ்திரத்தில் பெயர்பெற்றவர்களாகிய வியாசர், சங்கராசாரியர் முதலியோருக்கு இந்த அபத்தம்விளங்காமற் போய்விட்டதா? போகவில்லை. ஆனால் அவர்கள் இதற்கு ஒரு சமாதானஞ்சொல்லப்போய் தம்மை மேலும் அதிகமாகவே அபத்தங்களில் மாட்டிக்கொண்டார்கள்.

எந்தச் சிருட்டியிலாவது உலகம் பேதமுள்ளதாயன்றி இருத்தல்கூடாதென்பதை வேதாந்ததரிசன ஆசிரியரான வியாசரும், பாஷியக்காரராகிய சங்கராசாரியரும் ஒத்துக்கொள்ளுகிறார்கள். சங்கராசாரியர் தமது பாஷியம் 2-1-34 இல் சம்சாரம் (=உலகம்) சம்பந்தமின்றியும், சம்பந்தம் பேதமின்றியும் இருத்தல்கூடாது என்று கூறுகிறார். ஆனால் எப்போதும் சம்சாரத்திலே காணப்பட்டுக்கொண்டுவருவதாகிய இபபேதத்துக்குக் காரணமென்ன? சங்கராசாரியர் வியாசரோடு பேதத்துக்குக் காரணம் கன்மமே என்கிறார். அப்படியாயின் ஆதிச்சிருட்டிக்கு அது காரணமாவதெப்படி? என்று வினவுவோருக்கு விடையாக நம் ஆசாரியர் ஒரு பெரும் அபத்தத்தை விழுங்கிக்கக்கிவிட்டிருக்கிறார். அவர் சொல்லியிருக்கிற விடையின் பொருளாவது: ஆதிச்சிருட்டியென்றொன்றில்லை; ஆதிப்பிறப்பென்றொன்றில்லை. சிருட்டியும் பிறவிகளும் நித்தியமாகவே நடைபெறுகின்றன. ஆன்மாக்கள் தொடக்கமில்லாமலே பிறந்தும் இறந்தும்வரும், ஒவ்வொரு கற்பமுடிவிலும் பிரமா சகல சராசரங்களையும் தமக்குள் ஒடுக்கிக்கொள்ளுகிறார். அப்போது அவரையும் சராசரங்களுடைய கன்மபலன்களின் சஞ்சிதத்தையும் தவிர வேறொன்றுமிராது. பின்பு சிருட்டிகாலத்தில் பிரமா சராசரங்களைத் தோற்றுவிக்கும்போது அவைகள் அவ்வவற்றின் கன்மத்துக்கீடான சரீரங்களோடே தோன்றுவதாகும். இப்படியே ஆதியில்லாமல் நித்தியமாய் நடக்கும். ஆதலால் கன்மமும் பிறவிப்பேதமும், வித்தும்மரமும்போலாம். வித்துமரத்தினின்று தோன்றுவதும், மரம் வித்தினின்று தோன்றுவதும்போல கன்மம் பேதத்தினின்றும், பேதம் கன்மத்தினின்றும் அநாதியாயத் தோன்றிவரும் (2-1-35) என்கிறார்.

இதுதான் சைவராதியோருடைய பேர்போன தாலபீசநியாயம், அல்லது பீசாங்குரநியாயமாம். தாலம் அதாவது பனையும், பீசம், அதாவது பனங்கொட்டையும் (மூலையும் வித்தும்) நித்தியமாய் மாறிமாறி ஒன்றற்கொன்று காரணமாகி வருகின்றன என்று சைவராதியோர் சொல்லுவார்கள். பனை முந்தினதா பனங்கொட்டை முந்தினதா? என்று கேட்டால் பனைக்குக் கொட்டை முந்தினது, கொட்டைக்குப் பனை முந்தினது என்று சொல்லுவார்கள். ஆனால், ஆதிப்பனையொன்றில்லையா, ஆதிப்பனங்கொட்டையொன்றில்லையா? என்றால், இல்லையில்லை, பனைகளும் அ

நாதி பனங்கொட்டைகளும் அநாதி என்று மறுமொழிகொடுப்பார்கள்.

எண்கணிதம் அறிந்த சிறுவரும் உட்கொள்ளக்கூடாத இக்[illegible]ப்தத்தை வியாசர் சங்கரர் முதலிய ஆசாரியசிரேஷ்டர்கள் உட்கொண்டமை அதிசயம் அதிசயமே! இதன் முழுமதிகேடு விளங்க, தாலபீசநியாயம் பேசும் ஓர் தத்துவசாஸ்திரியையும் கணிதமறிந்த ஒரு சிறுவனையும் சம்பாஷிக்கவிட்டுக் காட்டக்கடவோம்:—

**சிறுவன்.** ஐயா தத்துவசாஸ்திரியாரே! இந்தப்பனங்கூடலில் நிற்கிற ஒருபனையைப்பற்றிமாத்திரம பேசிக்கொள்ளுவோம். இந்தப்பனைக்குக் காரணம்யாது?

**தத்துவசாஸ்திரி.** பிள்ளாய், பனைக்குக்காரணம் பனங்கொட்டையென்று இன்னுமறியாயோ?

**சி.** எல்லாதும், அறிந்த நீங்கள்தான் அறியாத சிறியேனுக்கு அறிவித்தல்வேண்டும். அப்பாற் பனங்கொட்டைக்குக் காரணம்யாது?

**த.** பனங்கொட்டைக்குக்காரணம் அதைக்காய்த்த பனைதான்பிள்ளாய். தாலபீசநியாயமென்னவென்று நீ அறியாய்போலும். பனை கொட்டைக்கும், கொட்டை பனைக்கும் காரணமாய அநாதியாய் இருக்குமப்பா.

**சி.** இருக்கட்டும், எம்முன்நிற்கிற இந்தப்பனைக்குமுன்னே எத்தனை பனைகள் காரண காரியசம்பந்தமுள்ளவைகளாய் இதுவரைக்கும் நின்றிருக்கின்றன?

**த.** ஏனப்பா எண்ணிறந்த பனைகள்தானே. நித்தியமாய் ஆதியின்றி வருகிற பனைகளையும்கொட்டைகளையும் எப்படிக் கணக்கிடலாம்? அவைகளுக்குக் கணக்கில்லை. அப்பாலென்ன!

**சி.** கொஞ்சம் பொறுங்கள்; அவசரப்படவேண்டாம். எத்தனை பனங்கொட்டைகள் இப்பனைக்குமுன் காரணகாரியசம்பந்தமாய் இருந்திருக்கின்றன?

**த.** அதைத்தான் சொன்னேனே. எண்ணிறந்த கொட்டைகள்....

**சி.** ஐயா! சற்றே ஒரு மனக்கணக்குச் செய்துபார்ப்போம். இந்த எண்ணிறந்த பனைகளை ஒருபுறமாயும், எண்ணிறந்த கொட்டைகளை ஒருபுறமாயும் வையுங்கள். இரண்டும் எண்ணிறந்தவைகளல்லவா?

**த.** ஆம்.

**சி.** இனி, இப்போது எம்முன் நிற்கும் இந்தப் பனையின் கொட்டைகளுள் ஒன்றையெடுத்து, இந்தப்பனைக்குமுன் காரணகாரியமாய்இருந்திருக்கிற கொட்டைகளோடு கூட்டுங்கள். முந்தின பனங்கொட்டைகளின் குவியல் மகாமேருமலையளவாய் இருப்பினுமிருக்கட்டும். இந்தக் கடைசிக் கொட்டையை அதிற்போட்டவுடன் குவியலில் ஒரு கொட்டை கூடிவிட்டதல்லவா?

**த.** ஆம், அதற்கென்ன?

**சி.** அதற்கென்னவா? பனைகளின் எண்ணிறந்த தொகையினும் கொட்டைகளின் எண்ணிறந்த தொகைகூடிவிட்டது!! எண்ணிறந்த தொ

கை எண்ணிறந்த தொகையைக்காட்டிலும் கூடுமா? குறையுமா? கூடி விட்டதென்றபோது எண்ணற்கணக்கு உண்டென்றதாகிவிட்டதே. ஏன்? தொகையென்றபோதே தனித்தனிப்பொருட்கள் கூடியதென்றதாயிற்று எண்ணின்றி கூட்டலுண்டாகுமா? ஒன்றென்ற எண்ணின்றி இரண்டென்ற எண்வருமா? தொகை இலட்சாதிலட்சமேயெனினும் ஒன்றென்று தொடங்கித்தான் வரவேண்டுமென்றதை அறியீர்களா? என்னோடொத்த பள்ளிப்பிள்ளைகளும் நன்குயறிந்த இக்கூட்டல் கழித்தல்விஷயம் தத்துவசாஸ்திரிப்பட்டம்பெற்ற உங்களுக்குத் தெரியாமற்போனதல்லவோ அதிசயம்!!

இந்நியாயத்தின் பெலத்தை மறுக்கஎவராலும் கூடாது. எண்ணிறந்த தொகையென்பதுமலடிமகன் என்பதைப்போன்ற சுத்தஅபத்தம். ஆதலால், பனைகளும் பனங்கொட்டைகளும் அநாதியாய், அதாவது ஒன்று என்றஆதிப்பனை அல்லது ஆதிக்கொட்டை இல்லாமல்நிற்கும் என்பதைப்போலும் ஓர்விபக்ஷத்தை மனதினால் நினைக்கலுமரிது. ஆதலால் உலகத்திற்காணப்படும் பேதத்துக்குக கன்மமும் கன்மத்துக்குப் பேதமும் காரணமாய், தொடக்கமின்றி அநாதியாய் நிற்குமென்றதும் சுத்த அபத்தமெனவும் கருதற்கரிய விபக்ஷமெனவும் கண்டுபிடித்தல் எளிதே.

உலகத்திலுள்ள பேதங்களுக்குக் காரணம் கன்மம், அக்கன்மத்துக்குக் காரணம் முற்பிறப்பின் பேதம், அதற்குக் காரணம் அதற்கு முந்தின கன்மம் என்றிப்படி வரம்பின்றி ஓடச் சொல்லிக்கொண்டிருக்கிறவர்கள் சிருட்டியிலுள்ள பேதங்களுக்கு ஒரு காரணமுஞ் சொல்லாமலே இருக்கிறார்கள். கன்மசேடக்கொள்கை சிருட்டிபேத முடிச்சை அவிழ்க்கமாட்டாது. ஆதலால் சிருட்டிபேதத்துக்கு நியாயஞ்சொல்லும் பாணிப்பாக கன்மசேடத்தைத் தேடுதல் ஒவ்வாதுபோகின்றது. போகவே கன்மசேடத்தின் பற்றுக்கோடாகிய மறுபிறப்பைக் கற்பித்தலும் ஒவ்வாததாகின்றது.

## ஆட்சேபம் 2.

பிரபஞ்சத்திலே காணப்படும் பேதமான சீவர்களெல்லாம் மானுட ஆன்மாக்களேயெனில், இவ்வான்மாக்கள் சிருட்டிகள்தோறும் பலவேறுவகைப்பட்ட சீரங்களிலே பிறந்துழல்கின்றமை யாதுகாரணம்பற்றியோ? அநாதியே அவைகளைப்பற்றிய மலபந்தம் நீங்கும்பொருட்டு என்கிறீர். இனி அவ்வான்மாக்களைச் சரீரங்களிற் புகுத்தி மலபந்தம் போக்குகினறவர் யாவர்? கடவுளே என்கிறீர். (சிவஞானசித்தியார் 2-ம். சூத். 51) நன்றுசொன்னீர். ஆன்மாக்களுடைய மலபந்தம் போக்கும் வழியாக கடவுள் அவைகளுக்குத் தனுகரணாதிகளைக் கூட்டிப் போக்கியப் பொருளில் அமிழ்த்துகின்றார்; இவ்வழியாய் மலபந்தம் அறுபடுதல் கூடுமெனல் யுத்திக்கு இசைந்திருக்குமாயின், இது கடவுளுடைய முற்றறிவுக்கு யோக்கியமானதே என முடிந்து மறுபிறப்பு இருத்தலும் கூடுமென நாம் ஏற்றுக்கொள்ளலாம். அன்றி, எத்தனை பிறவிகளில் உழலினும் அவற்றால் ஆன்மாக்களின் மலபந்தம் அறுபடஏதுவில்லையென்றும், புதுப் புதுப் பிறவிகள்தோறும் அப்பந்தம் முறுகிக்கொண்டுவருவதே அவசி

யும் என்றும் யுத்தி போதிக்குமேயாயின், கடவுள், பிறவிகளைக் கொடுத்தல் என்னும் வழியாலே ஆன்மாக்களின் மலபந்தம் நீக்கக்கருதினாரென்பது அவருடைய முற்றறிவுக்கு யோக்கியமாகாது என முடியும். முடியவே மறுபிறப்பு எவ்வாறாயினும் இருத்தல்கூடாதென ஆங்கீகரிக்கவேண்டியவர்களாவோம். இனி,

## பிறவிகள் ஆணவமலத்தை நீக்குமா?

என ஆராயவோம். ஆன்மாக்களை அநாதியே ஆணவமலம் பற்றிநிற்குமென்றும், இவ் ஆணவமலபந்தத்தாலேயே ஆன்மாக்கள் சுத்தஞானங்கெட்டுக் கன்மமலத்திலும் அநாதியே சிக்குண்டுகிடக்குமெனறும், இதற்குவமை தன்சுத்தநிலையிற் பொன்னே பாகிய செம்பு களிம்பின் சேர்க்கையாற் சுத்த லக்ஷணங்கெட்டு நிற்பதுபோலுமென்றும் சைவர் கூறுவர். இவர்கள் கொள்கைப்படி, இருமலங்களோடு சேர்ந்துநிற்கும் ஆன்மாக்களுக்குப் பின்னுமோர் மலச்சேர்க்கையை உண்டுபண்ணுதலே பிறவியெனஆகின்றது. அதாவது: மாயை மலத்தினின்றும தனுகரணபுவனபோகங்களை உண்டாக்கி அத்தனுகரணாதிகளால் ஆன்மாக்களைப் பந்திப்பது பிறவி. இனி, பின்னுமொரு மலத்தைச் சேர்ப்பதே முன்னைய இருமலங்களையும் (கன்மத்தோடுங் கூடிய ஆணவத்தை) போக்கவழியென்பது யுத்திக்கு இசையுமா? இருகட்டுக்களாற் கட்டுண்டானொருவனை விடுதலையாக்குதற்கு அவனைப் பின்னுமோர் பந்தனத்தால் இறுக்குவதே வழியென்பது பொருந்துமா?

இவ்வாட்சேபத்துக்கு சைவருடைய சமயநூல்களுளொன்றாகிய "சிவஞானசித்தி" ஓர் சமாதானங்கூறியிருக்கின்றது. அதாவது: ஆடையிலுள்ள அழுக்கைநீக்க, வண்ணான், சாணி உவர்மண்களில்அதனைத் தோய்க்குமாறுபோல, கடவுளும் மாயாமலகாரியங்களால் ஆணவ கன்மமலங்களைக் கழுவுவர் என்கின்றது. (2-ம் சூத்.52) இவ்வுவமையும் நியாயமுடிபும் ஆன்மாவின் சுரூபத்தையும் அதனைப் பற்றக்கூடியவற்றின் சுரூபத்தையும் நன்கு அறியாமையால் எழுந்தனவாம். அவற்றை ஒரு சிறிது இங்கு விளக்குவோம்.

## ஆன்மா சித்தா சடமா?

ஆன்மா சடமல்ல, சித்தேயென்பது சைவசித்தாந்திகளுக்கும் சம்மதம். மலமோ சடரூபமென்பது சித்தாந்தம். இனி, சித்ரூபமாகிய ஆன்மாவைச் சடரூபமாகிய மலம்பற்றுதல் கூடுமா? ஆகந்துகமாய்ப் பற்றுதல் கூடும், சகசமாய்ப்பற்றுதலோ ஒருபோதுங் கூடாதென்கிறோம். ஆயின் ஆணவமலம் சடரூபமே எனக்கொள்ளும் சித்தாந்திகள், அது ஆன்மாவைச் சகசமாய்ப்பற்றியிருக்கின்றது எனக்கூறுகின்றனரே. ஆம், ஆணவமலம், (நாம் அதற்குச் செய்யும் அர்த்தப்படி) ஆன்மாவைச் சகசமாகவே பற்றியுள்ளது என்பது நமக்குஞ் சம்மதம். ஆயின், ஆன்மாவோடு சகசமாயுள்ளதாகையால், அம்மலம் சடரூபமானதல்ல, சித்தின்குறைபாடு ரூபமானது எனல் எம்சித்தாந்தமாம். இனி, எமது இச்சித்தாந்தத்தை முறையே ஸ்தாபிப்போம். வாசிப்போர் கருத்தோடும பக்ஷபாதமின்றியும் வாசித்துச் சிந்தித்துங்கொள்வார்களாக.

"சகசம்" என்பது யாதேனும் ஓர்பொருளோடு கூட உதிப்பது; அதாவது அப்பொருளின் சுபாவத்துள் அடங்கியது. உதாரணம்: சூடு அக்கினிக்குச் சகசம்; ஏனெனில், அது அக்கினியோடு கூட உதிக்குமியல்பையுடையது; சூடு அக்கினியின் சுபாவத்துள் அடங்கியது. "ஆகந்துகம்" என்பது யாதேனும் ஒருபொருளுக்கு புறத்தினின்றும் வந்தடைவது; அதாவது அப்பொருளின் சுபாவத்தினுள் அடங்காதது. உதாரணம்: சூடு வெந்நீருக்கு ஆகந்துகம். ஏனெனில், சூடு நீரின் சுபாவத்துள் அடங்கியதன்று; புறத்தினின்றும் வந்தடைவதேயாம். ஆகலால் பின்வரும் பிரமாணத்தை எவரும் ஆசங்கித்தல் கூடாது.—

யாது ஓர் பொருளின் சுபாவத்துள் அடங்கியுள்ளதோ, அது அப்பொருளுக்குச் சகசமானது; அக்கினியிற் சூடுபோல.

யாது ஓர் பொருளின் சுபாவத்துள் அடங்காமலுள்ளதோ, அது அப்பொருளுக்கு ஆகந்துகமானது. வெந்நீரிற் சூடுபோல.

ஆயின், அநாதியே சூடாயுள்ள நீர்நிலையம் ஒன்றைக் கிரகிக்கக்கூடாதா? சூடு அந்நீருக்குச் சகசமாகக்கூடாதா? கூடாது. அநாதியே சூடுள்ளதாயிருப்பினும் சூடு நீருக்குச் சகசமல்ல. ஆகந்துகம் ஆகுமேயாம். சூடு நீரின் சுபாவத்துள் அடங்கியதன்று. அன்றியும் அநாதியாய சூடுள்ள நீர் உண்டு என்னும் அற்புதத்தை நாம் ஒப்புக்கொள்ளமாட்டோம். நீர் அநாதியாயிருப்பதில்லை. இருப்பினும் அந்நீர் உண்டானபின்னே அதற்குச் சூடு உண்டாயிருக்கவேண்டியது. பிறிதொரு சூடுள்ள பொருளாலன்றி அந்நீர் சூடடைந்திருத்தல் ஒருபோதுங் கூடாதெனக் கொள்ளேம்.

ஆகவே, சடமும் சித்தின் சுபாவத்துள் அடங்கியுள்ளதெனும் விபக்ஷத்தைச் சாதிக்கத்துணிகிறவர்களே, ஆன்மாவோடு சடம் சகசமானது எனச் சாதிக்கவும் துணிகிறவர்களாவார்கள். ஆன்மாவோடு சடஞ் சகசமாதல் கூடாதபோதே, அதனோடு சகசமாயுள்ளதென நாம் மேலே ஒத்துக்கொண்ட ஆணவமலம் சடரூபமன்று சித்தின்குறைபாடுருபமே என முடிக்கத்தகும். இம்முடிவுக்கு யுத்தியுமா சான்றாகும். அதெங்ஙனமெனில், ஆணவமாவதியாது? சைவாகமநூல்களின்படி, யான் எனது எனும் செருக்குக்கேதுவாய சகசமாய ஆனமஞானத்தை மறைத்துநிற்பதே அது. (சிவஞானசித்தி. 2-ம். சூத். 80—சிவப்பிரகாசம் 2-ம். சூ. 2) ஆன்மாவோடு சகசமாய் உண்டாயிருக்குஞ் செருக்கையும் அஞ்ஞான காரணத்தையும் (தத்துவபோதக சுவாமிகள் இனிது கூறியவாறு) "மண்ணுங்கட்டிபோன்ற ஒரு சடப்பொருளென்று" சொல்லுதல் எவரது தெளித்த யுத்திக்காயினும் இசையுமா? இசையாது. செம்பாகிய சடப்பொருளின் சுயப்பிரகாசத்தைக் களிம்பாகிய சடப்பொருள் மறைக்கக் கண்டோமே என்றதனால், சித்தாகிய ஆன்மாவின் ஞானத்தை மறைக்கும் ஆணவமும் களிம்பைப்போலும் சடமேயாகவேண்டுமென நியாயம் முடித்தல்செல்லுமா? செல்லாது. சித்தை சகசமாய் மறைக்கும் காரணம் சித்திலுள்ளதோர்குறைவேயாதல்வேண்டும். பின்னை, சைவாகமங்கள் கூறும் ஆணவமலம் உள்ளபடி யாதாகவேண்டுமோஎனில். சொல்லுவோம்:—

## ஆணவமலத்தின் உண்மைச் சுபாவம்.

ஆணவமலமாவது, ஆன்மாக்களிலே ஆதிமனிதனின் ஆணவமாகிய (அகங்கரித்தல்) பாவத்தினிமித்தம் உள்ள ஞானக்குறைவேயாக வேண

டும். ஆகாயின் பாவத்தினால் மனுமக்கள் அனைவருக்கும் சரீர ஆசாபா
சங்கள் கிரமந்தப்பியெழுந்து ஆன்மஞானத்தையும் வலியையும் குறைப்ப
தாகிய கேடு உண்டாயிற்றென்பது சத்திய சமயப் போதனை. ஆன்ம
ஞானக்குறைதான் ஆணவமலமென்பதே ஒக்கும். ஆயின் ஞானக்கு
றைவு ஆன்மாவை மறைக்குமா? ஞானக்குறைவு, படல்போல ஆன்மாவுக்
கும் அறிவுப்பொருட்களுக்கும் இடைநின்று மறைக்குமெனல் பொருந்
தாதாயினும், இருள் பொருளை மறைக்கின்றதென ஒருவாறு சொல்லுதல்
போல, ஞானக்குறைவே சில அறிவுப்பொருட்களை ஆன்மா சரியாயறி
யாது மறைக்கின்றது எனவுஞ் சொல்லலாம். இருளாவதியாது? ஒளி
யின் இன்மையே இருள். அது ஓர் பொருளன்று, பொருளின் இன்மை.
இன்மை காட்சிப்பொருட்களை மறைக்குமா? மறையாது. ஆயினும் ஒளி
யினின்மையின் நிமித்தமே காட்சிப்பொருட்கள் கண்ணுக்குத் தோன்றா
திருக்கும். அவ்வாறுபோல ஆன்மஞானத்தின் குறைவு அறிவுப்பொரு
ளை மறையாதாயினும், அக்குறைவின்பொருட்டே சில அறிவு விடயங்கள்
ஆன்மாவுக்குத் தோன்றாதிருக்கின்றன. ஆகவே மெய்யான தத்துவசாஸ்
திரப்படி, ஆணவமலமாவது ஆன்மஞானக்குறைவும் அதனோடுகூடிய கே
டுகளுமே எனவும், அது பரிச்சேதம் சடரூபமல்ல, சித்தாகிய ஆன்மா
வின் ஞானக்குறைபாடுரூபமே எனவுங்கொள்க.

ஆணவமலம் சித்தின் குறைபாடுரூபமே என ஸ்தாபித்தபின் இனி,
பின்வருமாறு நியாயம் முடிப்போம். ஆன்மாக்களின் ஞானக்குறை
வைப் பரிகரிக்கும்பொருட்டு அவ்வான்மாக்களைச் சடரூபமாகிய மாயா
மலத்தில் அமிழ்த்துதல பயனுடைத்தாகுமா? ஒருவனை எத்தனைதரந்
தான் சாணி உவர்மண்களிற் தோயத்தெடுப்பினும் அவன் ஆன்மாவிற் சக
சமாயுள்ள அறியாமையாதல், அதன் காரியமாகிய செருக்காதல் கழியு
மா? "ஊத்தைபோனாலும் — அசப்பேய — உள்வினைபோகாதே" எனச்
சித்தர் பாடியவாறு, எத்தனை பிறவிகளிற்றான் தனுகரணபுவனபோக அ
ழுக்கிற் தவழ்ந்து புரண்டு எழுந்தாலும், ஆன்மாவின் குறைபாடுரூபமான
அஞ்ஞானமும் அதன் காரியமாகிய அகந்தையும் நீங்கா நீங்காவே. நீங்
குதற்குமாறாய் பிறவிகள்தோறும் ஆன்மவிருப்பு மேலிட்டு அஞ்ஞானமே
முறுகித்தடிக்க ஏதுவாகுமெனப் பின்னுறைகாட்டுவோம். அன்றியும் வண்
ணான் ஆடையின் அழுக்கைநீக்கும் உவமையின்படி பார்த்தால், முன் தூய்
மையாயிருந்து பின் அழுக்குப் படிந்ததனை உவர்மண் முதலியவற்றிற்
தோயத்து நீரிற்கழுவப் பூர்வசுத்தஸ்திதி உண்டாகும். இயல்பிலே கரு
மையான ஆடையும் வெண்மையாமா? ஆகுமேல் ஆடைதன் சுபாவமுங்
கெட்டுப்போம். அவ்வாறே ஆன்மா முன்னொருதரம் தூயதாயிருந்து பின்
ஆகந்துகமாய்ச் சடமாகிய அழுக்கு அதன்றபடிந்திருந்ததேல் மாயையா
கிய உவர்மண் சேர்த்துக்கழுவினும் ஒருவாறு அவ்வளவு விநோதமாயிரா
து. அன்றி, சகசமாய ஆன்மாவுக்குக் குறைபாடுரூபமாயுள்ள ஞானக்
குறைவும் உவர்மண்ணாதிகளால் நீங்குமா? சகசமாயுள்ள அழுக்கு என
னப்படுதலால், அவ்வழுக்கு நீங்க ஆன்மாவின் சுபாவமும் மாறிப்போகும்
அன்றோ,

ஆதலால், ஆணவமலம் நீங்கும்பொருட்டு மாயாமலத்திற் தோயக்
கெடுத்தலாகிய வழியை வகுத்தல் கடவுளுடைய முற்றறிவுக்கு யோக்
கியமல்ல என ஒழிக்குக. ஆன்மாவிலுண்டாகிய அஞ்ஞானத்தை நீக்குந்
தற்கு அருளை உதவி, அருள்கூடுகும் வழிகளையுதவி ஆன்மாக்களைக் கைதூக்

குதலே யுத்திக்கு எவ்வாற்றானும் பொருத்தமானது. பிறவிகளில் உழல் வித்தலாகிய வழியோ யுத்தியின் போதனைகளுக்கு எதிரார்த்தமாய் முரணி நிற்கின்றது. சித்தாந்திகள் கடவுள் செய்வதாகச் சொல்வன நமது செவிகளுக்கு ஞானம் நீதிமுதலிய தேவலட்சணங்களுக்கு விருத்தமாய்த் தொனிக்கின்றன. அவர்கள் கூற்றுப்படி, ஆன்மாக்கள் ஆணவகன்மமலங்களால் ஆநாதியேபற்றப்பட்டு, அஞ்ஞானத்திலும் விருப்பத்திலும் அமிழ்ந்திக்கிடத்தல் போதாதென்றதுபோல, கடவுள் தனுகரணாதிகளாக மாயை மலமும் அவைகளைப் பற்றச்செய்து, தாமும் திரோதாயிமலமாய் நின்று சொல்லிய மும்மலங்களையுந் தொழிற்படுத்தி, திரோபவனுஞ்நின்று அவைகளைப் போகங்கியப்பொருட்களில் அமிழ்த்தி, அதனால் அவ்வான்மாக்கள் சுவேச்சையின்றி மலவசத்தராகிப் பருக்க அறியாமலும் விலக்க இயலாமலும் பாவஞ்செய்ய, இனி அவ் ஆன்மாக்கள் அறியாமலும் மலத்தினால் நடத்தப்பட்டும் செய்த அப்பாவங்களுக்காகவே அவைகளை நிரயங்களில்விட்டு வாதித்தும் புல்லாய்க் கல்லாய், சிங்கமாய்க்கரடியாய்ப், புலியாய்ப் புழுவாய்ப் பிறக்கப்பண்ணியும் வருத்துகிறார் என்பதாக முடிகின்றது.

## சைவர் கூறும் சில சமாதானங்கள்.

ஆணவத்தைப் போக்குதற்கு மாயையிலே அமிழ்த்துதல் வழியாகாதென நாம் குறித்த ஆட்சேபத்தை அழிக்குமாறு பரபட்சத்தார் சொல்லக்கூடிய சில சமாதானங்களைப் பரிசோதித்து அப்பாற்செல்லுவோம்.

(1) "ஆன்மாக்களைச் சகசமாய்ப் பற்றியுள்ள ஆணவமலம் பிறவியால் அழியாதென்றீர்; உமது கூற்றுப்படி, ஆணவமலம் அஞ்ஞானமே, அஞ்ஞானமோ சடமன்று, ஓர் குறைபாடு என்றீர், அதற்குச் சம்மதம். ஆன்ம ஞானக்குறைபாட்டை நீக்குதற்கு அருளை உதவுதல் வேண்டும், அருள்சுரக்கும் வழிகளை உதவுதல்வேண்டும் என்றீர்; அதற்கும் சம்மதம். ஆயின் அருளை உதவ, அருள்சுரக்கும் வழிகளை உதவ நிலைக்களனாய்ப் பிறவிகள் வேண்டுமே. ஆதலால் உமது ஆட்சேபனையாற் பயன்தான்யாதோ?" எனச் சிலர் கடாவுவர்போலும். அஃதொவ்வாது. ஆன்மஞானத்துக்கு நிலைக்களன் ஆன்மாவேயன்றி உடம்பன்று. உடம்பும் பாசமேயாதலால் அது மறைக்கும் இயல்பை அன்றி விளக்கும்இயல்பை உடையதன்றெனவும் உணர்க. உடம்பெடுத்தலினால் அல்ல, "ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண நல்லவாகமஞ் சொல்லும்" என்பதும் சிவஞானசித்தி. (8;27) இனி ஆன்மாவுக்கு ஞானந் தலைப்படச்செய்யக் கடவுள் திருச்சித்தங் கொள்ளுவாராயின, அதனைப் பாசமாகிய உடம்பிலும் "ஐம்புலவேடர் சுழலினும்" பட்டுத்துயருறவிடுதலல்ல, ஞானசூரியனாகிய அவர் அவ்வான்மாவுக்கு அருள்நோக்கஞ்செய்வதேவழி. "மருளினையருளால் வாட்டி மன்னுயிர்க்களிப்பன் கண்கட்கிருளினையொளியாலோட்டும் இரவியைப் போலவீசன்" என்பதும் சித்தாந்த நூற்றுணிபு அன்றோ. (சி. சி. 5;9)

(2) "அற்றன்று; உடம்புகொடுத்துப் பிறவியில்விட்டுக் கடவுட்புண்ணியங்களை ஈட்டுவித்து அப்புண்ணியபலனைக ஆன்மாக்களுக்கு அருளைக் கொடுத்து அஞ்ஞானத்தைப் போக்குதல் திருவுளமாகக்கூடாதோ"வெனில், கூடும். ஆயின், அதற்குப் பலபிறவிகள் வேண்டுமெனல் சாத்தியமா

காதி. ஒரு பிறவியே, அதுவும் ஞானம் விளங்குதற்கு வகைவாயில் எனச் சித்தாந்தநூல் கூறும் மானுடப்பிறவியே (சி. சி. 2; 89) வேண்டப்படும். ஒரே மானுடப்பிறவியில் ஞானம் விளங்கச்செய்தல்கூடுமோவெனிற் கூடும். "சித்தாந்தத்தே சிவன் தன் திருக்கடைக்கண் சேர்த்திச் செனன மொன்றிலே சீவன்முத்தராக வைத்தாண்டு மலங்கழுவி ஞானவாரிமடுத் தானந்தம் பொழிய'' வல்லவரென்பது சிவஞானசித்தி. (8; 16) ஆதலால் ஆணவமலசகிதரான ஆன்மாக்கள் தத்தம் புண்ணியப்பேற்றினாலே அருளைத் தலைப்படவேண்டுமென்பது கடவுளது திருவுளமெனில், அவ்வான்மாக்களை மானுடப்பிறவி ஒன்றிலேயே விட்டுக் கடவுட்பணிசெய்வித்து ஈடேற்றிக்கொள்ளுதல்தான் ஏற்புடைத்தாகும். முத்தியடையத் தக்க அழியா ஆன்மாக்கள் மானுடதேகத்தில் மாத்திரமுண்டென நீர் ஒப்புகொண்டால், மிருகாதிகளின் தேகங்களிலுள்ளன அழியா ஆன்மாக்கள் அல்ல எனமுடியும். முடியவே எழுவகைப் பிறவிபேதம் இல்லையென்பதும் பெறப்படும். இப்பக்ஷமும் உமக்கு மறுதலையாதல் காண்க.

(3) ''ஆன்மாக்களைப் பற்றிய ஆணவமருளை நீக்க அருளொன்றேபோதும் என்பதும், அருள் தலைப்படப் பிறவியொன்றேபோதுமென்பதும், பிறவிபேதங்களுளெல்லாம் மானுடப்பிறவியே அருள் தலைப்பட யோக்கியமான வாயிலாதலால் மானுடப்பிறவியே வேண்டப்படுமென்பதும் ஒக்கும். ஆயின், கன்மவிருப்பிற் சிக்குண்ட ஆன்மாக்களுக்குக் கன்மத்தை ஊட்டி அநுபவித்தொழிப்பித்தபின் ஆணவமலத்தை நீக்குவதன்றோ அருட்சிறப்பு!'' என வேறுசிலர் கூறுவர்போலும். அது பொருந்தாது. கன்மவிருப்பு ஆணவத்தின் காரியமேயென்பது சித்தாந்த நூற்றுணிபு. ஆதலாலன்றோ ஆணவம் "மூலமலம்'' என்னும் பரியாயத்தைப் பெறுகின்றது. இனி, காரணமாகிய ஆணவம் நீங்கக் காரியமாகிய கன்மவிருப்பும் உடனீங்கும். ஆணவத்தை நீக்கும் வழியோ அருளேயாமென முன்னரேசொன்னோம். அருளைப்பிரகாசிப்பிக்க ஆணவ இருளும் அதன்காரியமாகிய கன்மவிருப்பும் பரிதிமுன் பனிபோலாகும். அருளைத் தலைப்பட்டோர் கடவுள் "ஒருவரையே உணர்ந்துகொண்டு நிற்பாரன்றி பிராரத்தவாதனை தாககுதற்குரிய வனைப்பதார்த்தங்களைச் சிறிதுங் காண்பாரல்லர்'' என்பதும் சித்தியார், (11; 2—சிவஞானசுவாமிகளுரை.) அன்றி, ஆணவமல சேட்டையாகிய கன்மவிருப்பு என்னும் பாபத்தைக் கண்டித்தற்குமாறு கடவுள்தாமே அப்பாபத்தை ஆன்மா நிறைவேற்றுதற்குத் துணைக்காரணத்தைக் கொடுத்துத் தாமும் அதன் அறிவைமயக்கி நிற்கின்றாரென்பது யுத்திக்கு எவ்வாற்றானும் பொருந்தாதென விடுக்க.

## பிறவிகளாற் கன்மமலம் இறுகிமுறுகுதலே சகசம்.

அப்பால், ஆன்மாக்கள் எத்தனை பிறவிகளையெடுப்பினும் கன்மசேடம் தொலையாது எனக்காட்டுவாம். சிவஞானசித்தியின்படி முயற்சியே இதமகிதம் (இருவினை) ஆம். முற்பிறவியில் நிகழ்ந்த முயற்சியாகிய வினையை அநுபவித்து ஒழிக்கும்பொருட்டுத்தான் இப்பிறவி வருவது. ஆயின் அவ்வினைப்பயனை இப்பிறவியில் அநுபவித்தலாகிய முயற்சியும் வினையேயாகையால் இது மேலைப்பிறவிக்கு வித்தாகின்றது. முயற்சியோடு கூடாத தேகிகள் உலகிலில்லை. "மரங்கண் முதலியவற்றிற்குத் தண்ணீர் முதலியவற்றைஏற்றுக்கோடற்குரிய சூக்குமமுயற்சியுண்டு'' (சி. சி.2; 11

உரை) எனவே தேகிகளெல்லாம் முயற்சியுடையன; முயற்சியெல்லாம் மேலைக்கு வித்து. ஆதலால் தேகிகளெல்லாம் மறுகாற் பிறக்கவேண்டியன. ஆதலால் மறுகாற் பிறத்தலை ஒருபோதும் ஒழிதல்கூடாது. கன்மமும் ஒருபோதும் சேடமின்றி அநுபவித்துமுடியாது. மீட்டுவரும் தசம எண்ணுக்கு (Recurring Decimal) எப்படி முடிவுகாணக்கூடாதோ அப்படியே கன்மத்தொடர்புக்கும் பிறவிக்கும் முடிவுகாணல் கூடாததாகின்றது.

கன்மத்தொடர்புக்கும் அதனகாரியமாகிய பிறவிக்கும்முடிவுகாணக் கூடாது என்பது சித்தாந்திகளின் மதம்பற்றியும் வேண்டப்படுகின்றது. எங்ஙனம்? எது தொடக்கமில்லது அது முடிவில்லது, நித்தியம்போல என்பது சாதனம். இனி, கன்மமும் பிறவியும் தொடக்கமில்லன என்பது சித்தாந்தமதம். ஆதலால் கன்மமும் பிறவியும் முடிவில்லன என்பது சாத்தியமாகின்றது பின்னும் சித்தாந்தமதத்தில் சகல ஆன்மாக்களும் பிறவித்துன்பம் நீங்க வழிசொல்லப்பட்டிலது. சில ஆன்மாக்களுக்கு கடவுள் இடைநின்று கன்மசேடத்தை இனிப்பெருகவிடாது யறித்தடக்கி அருள்புரிந்து முத்திகொடுப்பாரென்றிருப்பினும், அவ்வான்மாக்களை விட்ட பாசமானது வேறு பெத்தான்மாக்களை நணுகிநிற்கும் என்பதனாலும் (சி. சி. 11; 6) அனைத்தான்மாக்களும் பிறவிநீங்கி முத்தியடைந்துவிட்டால் கடவுளின் பஞ்சகிருத்தியத்துக்கிடமின்றி அவர் "வாளா" இருக்கவேண்டிவருமாதலானும், பெரும்பாகமான ஆன்மாக்கள் முத்தியடைந்துகொண்டபின் எஞ்சிநின்ற சில ஆன்மாக்களும் முத்தியடையவேண்டியகாலம் வரும்போது (இவர்களெல்லாம் மனிதராயப் பிறந்து ஞானநெறியில் நிற்றல் அவசியமாதலால்) உலகில் உணவுக்குரிய பொருள்களில்லாதுபோகவே இவர்கள் சீவிக்க வழியிராதாதலானும் எல்லா ஆன்மாக்களும் பிறவி நீங்கவழியில்லை. ஆகவே பிறவியால் யாதுபயனுமில்லை. பிறவி கன்மத்தையும் கன்மம் பிறவியையும் பெருக்கிக்கொண்டுவரும். கடவுளிடைநின்று நேரே கன்மசேடத்தைச்சிதைத்தாலன்றி பிறவியற கன்மந்தீராது. "தனுகரணங்களை யானெனறும புவனபோகங்களை எனதென்றும அபிமானிக்கின்ற அகங்காரமமகாரங்களை ஒழித்து தம்மையுணர்ந்து தமது திருவடிநிற்கும் மெய்ஞ்ஞானிகளுக்குப் பிராரத்தம் மாத்திரம் புசிப்பித்து அவர்கள் அது புசிக்கும்போது மனம் வாக்குக் காயம் என்னுந் திரிகரணங்களாற் செயயுஞ்செயல்கள் அவர்களுக்கு ஆகாமியமாய் ஏறாது சிவபெருமானே அவைகளைத் தஞ்செயலாகக் கொண்டருளுவர்" என ஆறுமுகநாவலர் பெரியபுராணவசனத்தில் (35-ம். பக்.) கூறியிருக்கின்றமையையும் காண்க. இனி, கடவுள் சகல ஆன்மாக்களின கன்மத்தையும் ஒருங்கே சிதைப்பினும் முன்னர்க்கூறியபடி சித்தாந்தமதக்கொள்கைகளுக்குச் சேதமுண்டாகும். ஆதலால், சகல ஆன்மாக்களையும் முடிவில்லாத பிறவியில்விட்டு வருத்தித் தமது பஞ்சகிருத்தியத்திற்கு வழிபண்ணிக்கொண்டு சில ஆன்மாக்களையே இரட்டிப்பான வேலைசெய்து வீணாய அலைத்தலைத்தபின் கைதூக்குகிறவராகிறார். இது யுத்தியோடிசையுமா? பிறவி கன்மத்தைத்தொலைத்து முத்தியைத்தானடைவிக்குமெனில், சகல ஆன்மாக்களும் முத்தியடையவேண்டுமே. அன்றி, பிறவி கன்மத்தைத் தொலைத்து முத்தியடைவிக்கவல்லதல்லவெனில், ஆன்மாக்களுளொன்றையேனும் பிறவியில்விடுவதுதான் யாதுக்கோ?

இங்ஙனமே, கன்மத்துக்குக் காரணஞ் சொல்லுமிடத்து சித்தாந்

திகள் எவ்வாறு அநவஸ்தா தோஷத்தினபாற்படுகிறார்களோ, அவ்வாறே கன்மநீக்கத்துக்கு வழிசொல்லுமிடத்தும் அத்தோஷத்தின்பாற்படுகின்றனர். இப்பிறவி முற்பிறவியின் வினையால் வந்தது, முற்பிறவி அதற்கு முன்னைய பிறவியின் வினையால் வந்தது என வரம்பின்றிச் சொல்லிக்கொண்டிருக்கிற சீலமாகவே, இப்பிறவியின் கன்மம் மேலைப் பிறவியிற்றீரும், மேலைப்பிறவியின் கன்மம் பின்னும் மேலைப்பிறவியிற் றீரும் என வரம்பின்றிச்சொல்லி அநவஸ்தையில் மாட்டிக்கொள்ளுகிறார்கள். அநாதியே ஆன்மாக்கள் பிறவிகளில் உழலும் என வைத்துக்கொண்டு வர்த்தமானகாலத்திலுள்ள இப்பிறவியினின்றும் பூர்வகாலத்தை நோக்குங்கால், நாம் இதுவரையுங் கடந்துவந்த பிறவிகளுக்குத் தொடக்கமில்லை எனபார்கள் சித்தாந்திகள். தொகையோ இருத்தல் அவசியம். ஆதலால் எண்ணிலலாத்தொகை என்னப்பட்டுத் தோஷமாய் முடிகின்றது. இதனை முன்னர்த் தாலபீச நியாயத்தில்வைத்து விளக்கினோம். இனிப் பவுஷிய காலத்தை நோக்கின், கனமசேடம் என்றும் எஞ்சிநிற்கும் இயல்பினையுடையதாகின்றமையால் பிறவிகள் ஒருபோதும் ஒழியாது பினனுந் தோஷத்தினபாற்படுவதை, மீட்டுவருந தசம எண்ணில் வைத்துக் கண்டுகொள்க.

அதுமட்டா! பிறவிகள்தோறும் கன்மசேடம் குறைதற்குமாறாக அதிகரித்துக்கொண்டேவரும் என்றோம். கன்ம விருப்பை நோககின், அநுபவிக்க அநுபவிக்க ஆசை அதிகரித்தல் எவர்க்கும் அநுபவசித்தி. பிறவிப்படியில் உயர உயர ஆசை மிகுந்துகொண்டேவரும். சிற்றினபங்களை அநுபவித்து அறிந்தவன் அவற்றை வெறுத்துப் பேரின்பத்தில் நாட்டமுறுவான் அன்றோ எனில், அவனும், தான் அநுபவித்தறிந்த சிற்றின்பத்தை வெறுத்தலாகிய முயற்சியும், பேரினபத்தை விரும்புதலாகிய முயற்சியுஞ் செயவான. அவன் சிற்றின்பத்தைவெறுக்கின்ற அளவே பேரின்பத்தை விரும்புகின்ற அளவுமாம். ஆதலால் அவனிடத்தும் கன்மவிருப்பு அதிகரித்தலைக்காண்க.

இனி, நல்வினை தீவினையை நோக்கின், பிறவிகள்தோறும் தீவினையே அதிகரிக்கும் என்பதனைக் கொலைப்பாதகத்தின்கண் வைத்துணர்ந்துகொள்க. "இதம் உயிர்க்குறுதிசெயதல். அகிதம் மற்று அதுசெய்யாமை" என்பது சுருதி. (சி. சி. 2; 13)ஆயின் உணவுவகையால் சகல சரவஸ்துக்களும் அகிதமே செய்கின்றன. எங்ஙனம்? சகல சராசரங்களும் ஆன்மதேகிகள் எனபது சித்தாந்தமாதலால், உண்ணும்போதும், குடிக்கும்போதும், சுவாசிக்கும்போதும், நடத்தல் முதலியதொழில்களைச்செய்யும்போதும் எண்ணில்லாவுயிர்க்கொலைகள் நாள்தோறும், கணந்தோறும் நடக்கின்றன. அசரவஸ்துக்களைக் கொல்லுதல் குறைந்தபாவமெனில் அது பொருந்தாது. மானுடர் மிருகங்களைப்போலவே, அசரமாகிய நெல் புல்முதலியவைகளும் ஆன்மதேகிகளென்னப்படுகின்றமையால், மானிடரை உயிர்போக்குதலும் கருவைச்சிதைத்தலும் நெல்வெட்டுதல் நெற்குத்துதல் முதலியவைகளும் ஒரேவகைக்கொலையே. மானுடருட்பிராமணர் புண்ணியவிசேடம்பெற்றோரென்றும், அதனால் பிராமணக்கொலை பெருங்கொலையென்றும் சொல்லுவர்; இந்நியாயம்பற்றி அசரக்கொலையே மானுடக்கொலையிலும் பெரும்பாதகம்போலும். எங்ஙனமெனில், "அஹிம்சா பரமோ தர்ம" (கொல்லாமையே மேலான அறம்) என்றசுலோகத்துக்கேற்ப அசரவஸ்துக்களே பெரும்பான்மை கொல்லாமை

என்னும் அறத்திலமட்டுமா, கள்ளாமை குருநிந்தைசெய்யாமை முதலிய பிற அறங்களிலும் மேம்பட்டு விளங்குகின்றன. ஆதலால் அசரக்கொலையே பெருங்கொலையென்போம். ஒவ்வொரு சரவஸ்துவும் தன் சீவிய காலத்துள் செய்துமுடிக்கும் இத்தகைய கொலைகளை அலகிடவோ கூடாது. அப்பால் இவ்வெண்ணிறந்த கொலைகளுக்குப் பிராயச்சித்தம் யாது? தேடிக்கொண்ட கன்மத்தைப் பிறந்தனுபவித்தே தீரவேண்டும். "கொன்றனையனைத்தும் அனைத்து நினைக்கொன்றன; தின்றனையனைத்தும் அனைத்துநினைத்தின்றன; பெற்றனையனைத்தும் அனைத்துநினைப்பெற்றன; ஓம்பினையனைத்தும் அனைத்துநினையோம்பின" என்ற பட்டணத்துப்பிள்ளையார் பாடலுக்கிசைய மனுஸ்மிருதிமுதலிய நூல்களும் கூறுகின்றன. கொன்றதற்குப் பதில் தான் கொலையுண்ணவும், தின்றதற்குப்பதில் தான் உணவாகவும், மிதித்ததற்குப்பதில் தான் மிதியுண்ணவும் எத்தனை கோடாகோடி சென்மங்கள் எடுக்கவேண்டுமோ! பின்னும், மனுஸ்மிருதிமுதலிய நூல்களிலே, கொடுமைசெய்யும் மானுடர் இரத்த அவாக்கொண்ட மாமிசபட்சண மிருகங்களாய்ப் பிறப்பார்; பொன் வெள்ளி ரத்தினங்களைத் திருடினோர் தட்டாரராகவும், தானியந்திருடினோர் எலிகளாகவும், இறைச்சிதிருடினோர் கழுகுகளாகவும், பசுத்திருடினோர் முதலைகளாகவும் பிறப்பாரென விதித்திருக்கின்றது. அன்றியும் ஒருபிறவியில் ஒருமுறை அவஞ்செய்தவன் அதனையே மேல்வரும் எல்லாப்பிறவிகளிலும் செய்வானெனவும், ஒருபிறவியிற் றவஞ்செய்தவனே மறுபிறவிகளிலும் அதனைச் செய்வானெனவும் சைவருடைய உத்தரவேதமும் கூறுகின்றது: "தவமும் தவமுடையார்க்காகும் அவமதனை அஃதிலார் மேற்கொள்வது" ஆதலால், அசரக்கொலை செய்கின்றனவாகிய சரங்களெல்லாம் ஒரு பிறப்பிற் செய்த பாவங்களிலும் அதிக கொடிய பாவங்களையே மறுபிறப்பிற்செய்தலும், பாபங்கள் அதிகரிக்க அதிகரிக்க அவ்வான்மாக்கள் பிறவிப்படியிற் றாழ்ந்து தாழ்ந்துபிறத்தலும், அதினாற் பிறவிகள் அதிகரித்தலும் அவசியமாதல் காண்க.

இங்ஙனமே, ஆன்மாக்களைப்பிறவிகளிற்புகுத்துவதினால் ஆணவமலம் அழியாமற்போவதோடு கன்மவிருப்பும் அழியாமற்போகின்றது. அது மட்டோ! கன்மவிருப்பு பிறவிகள்தோறும் அதிகரித்து அதிகரித்துப் பிறவிகள் முடிவின்றியே பெருகிவரும். ஆதலால், மலபந்தத்தை நீக்கும்பொருட்டு முற்றறிவரான கடவுள் ஆன்மாக்களைப் பிறவிகளில் விடுவாரென்றல் பொருந்தாதென முடிகின்றது. முடியவே மறுபிறப்பு இல்லையென்பதும் பெறப்படுகின்றது.

## ஆட்சேபம் 3.

ஆணவமலத்தைப் போக்குவதற்கேனும், கன்மவிருப்பை அறத்தொழிப்பதற்கேனும் மறுபிறப்பானது ஏற்றவழியல்ல எனக்காட்டினோம். வழியல்ல ஆகவே, முற்றறிவரான கடவுள் மலபந்தத்தை நீக்கும்பொருட்டு ஆன்மாக்களைப் பிறவிகளிலுழலுவித்தல்கூடாதென்று துணியப்பட்டு, மறுபிறப்பு உண்மைக்கு சைவராதியோர் சொல்லும் முக்கிய ஏது ஆபாசமாய் முடிந்தது.

இனி மூன்றும் ஆட்சேபமாவது:—சைவசித்தாந்தக்கொள்கைப்படி ஆதியில் கன்மவிருப்பை அநுபவித்தொழிக்கும் நிமித்தம்பற்றியே ஆன்மாக்களுக்குச் சரீரங் கொடுக்கப்படும். ஆயினும், அவைகள் ஒருதரம் சரீரத்தைப் பெறுதலும், பிறவிச்சுழிக்குள் அகப்பட்டு மேலும் மேலும் பாவபுண்ணியங்களை இயற்றிப் பதைபதைப்பன ஆகின்றன. "நான் சார்கன்மமாயையை விரும்ப நீ தந்திடச் சகலனாய்ச் சுழல்கறங்கு பம்பரமதென்ன நீள் பிறவிச்சுழிக்குளேபட்டுழல் பெரும்பாவியேன்" எனச் சிவஞானமுனிவர் சொல்லிப்புலம்பியபான்மையாய் ஆன்மாக்களெல்லாம் சொல்லிப்புலம்பவேண்டியன ஆயின. இங்ஙனம், கன்மத்தையும் சரீரத்தையும் விரும்பிய ஆன்மாக்கள் ஒரு பிறவியோடுநின்றுவிடாது "பிறவிப்பெருங்கடற்" சுழியில் அகப்பட்டு வருந்துதற்குக் காரணம்யாது? இதமகிதங்களே காரணமாகும். இதமகிதங்கள் தாமாகத் தம்பயனைத்தோற்றுவிப்பனவா? அல்ல. "இறைவனே.., இதமகிதத்தால் இன்பதுன்பங்கள் ஈவனன்றே" (சி. சி. 2; 13) கடவுள்தாம் இதஞ்செய்தோருக்கு இன்பமூட்டும்பொருட்டும், அகிதஞ்செய்தோர் "குற்றம் அடித்துத் தீர்த்தசம்பண்ணி இகலிராமத்தினாலே ஈண்டறமியற்றிடு" என அறிவுறுத்தும்பொருட்டும் பிறவிமேற் பிறவியைக் கொடுப்பர் என்பது சித்தாந்தநூற்றுணிபு. (சி. சி. 2; 14, 15) எனவே பிறவிக்கு அந்திமகாரணம் (Ultimate Cause) மலபந்தம்நீக்குதலே ஆயினும், அவாந்தரகாரணமோ (Intermediate Cause) புண்ணியத்துக்குச் சம்பாவனையும் பாபத்துக்குத் தண்டனையும் அளித்தலாம் என ஆகின்றது. இதை வேறுவகையாயும் சொல்லுவாம்:— ஆணவ கன்மமலங் கழுவுவதற்காக ஆன்மாக்களுக்குப் பூர்வ (ஆதித்) தனு கரணாதிகள் கொடுக்கப்பட்டன. அபர (பின்னைய) தனுகரணாதிகளோ பூர்வபிறவியிற்செய்த புண்ணியபாவங்களின்நிமித்தம் வருகின்றன. கடவுள் பிறவியொன்றிலேயே ஆன்மாக்களைச் "சீவன்முத்தராகவைத்தாண்டு மலங்கழுவ" வல்லவரென்பதனை முன்னும உணர்த்தினோம். (2-ம். ஆட்சேபம்) ஆகலால் மறுபிறவிகள் மலங்கழுவும் அந்திமகாரணம்நோக்கி வேண்டப்படா. ஆன்மாக்கள் ஒருபிறவியிற்செய்த பாவ புண்ணியங்களுக்கு மறுபிறவிகளில் நிக்கிரக அநுக்கிரகங்கள் செய்தலோ நீதியால் வேண்டப்படும் ஆதலால் மறுபிறவிகள் அந்திமகாரணம் நோக்கியல்ல, அவாந்தரகாரணம்நோக்கியே உண்டாகின்றன என்பது வெளிப்படை.

## மறுபிறப்பும் நிக்கிரகஅநுக்கிரகமும்.

மறுபிறவிகள் நிக்கிரக அநுக்கிரகங்களின்பொருட்டு நிகழ்கின்றன. இனி, கடவுள் அளவற்ற பரிபூரணநீதியுள்ளவராகையால், நடுவுநிலைமை எள்ளளவும் கோணமலே நிக்கிரக அநுக்கிரகங்களைச்செய்வர். நீதிநூலின் விதிகளைநோக்குங்கால், வினையைச்செய்தவன் எவனோ அவனே அவ்வினைப்பயனை அறுக்கவேண்டுமென்பது மூலாதாரமானவோர் துணிபு. அன்றியும், செய்தவனும் அநுபவிப்பவனும் பொருண்மையால் அபேதமாயிருத்தல்போதாது. ஆட்தன்மையாலும் அபேதமாயிருத்தல் வேண்டும். தோஷந்தலைக்கேறியவனொருவன் அன்ன ஸ்திதி நிகழுமுன்னும் நிகழ்கையிலும் நிகழ்ந்தபின்னும் பொருண்மையால் ஒருவனே. ஆயினும், நீதிநூலோ ஆட்தன்மையால் அவனை வேறொருவனாகப் பாவிக்கும். ஆதலாலன்றோ, தோஷந்தலைக்கேறிய ஸ்திதியில் அவன்செய்த

குற்றங்களுக்கு அந்த ஸ்திஸ்தலமாதல் தண்டனை விதியாது. அந்த ஸ்தி தியில் அவனுக்குத் தொடர்ச்சியறிவாதல் உத்தரவாதமாதல் இராது. தோ ஷஸ்திதிக்கும் தோஷம் நீங்கியஸ்திதிக்கும் தொடர்ச்சியில்லையாதலால் ஒற்றுமையுமில்லை. ஒற்றுமை இல்லாதபோதே பொருண்மையால் ஒ ருவனே செய்த குற்றங்கள் உத்தரவாதத்தளவில் (ஆட்தன்மை வே றுபதின் நிமித்தம்) வேறொருவன் செய்தவை போலாகின்றன. தோ ஷஸ்திதியில் யான் செய்த குற்றங்களுக்கு என்னைத் தண்டிப்பதும், முழு தும் வேறொரு ஆள் செய்த குற்றங்களுக்காக என்னைத் தண்டிப்பதும் ஒன்றேயாம். அங்ஙனமாயின் ஆளாவதியாது? நீதிநூலில் ஆளாவ து (Person considered Psychologically) ஒற்றுமையான தொடர்ச் சியறிவும் உத்தரவாதமும் உள்ளதாய் "அகம்" (யான்) என்னத்தக்க தாய் நிற்பதேயாம். ஆகலாற்றான் தோஷந் தலைக்கேறியிருந்து பின் அறிவுதெளிந்தவன் பொருண்மையால் அபேதமானவனாயினும் ஆட்தன் மையாற் பேதமானவனாய் எண்ணப்படுவன். ஒற்றுமையான தொ டர்ச்சியறிவில்லாதபோதே உத்தரவாதமுமில்லை. தொடர்ச்சியறிவில் லாதவிடத்து முன்னையஸ்திதின குற்றங்களுக்காகப் பிதண்டனை விதித் தல் நீதியாகாது. ஏனெனில் இச்சங்கேதத்திலே வினையும் தண்டனையும் "அகம்" என்னும் அபேதமான ஒரே ஆளுக்குச் சேராமற்போகின்றன. யான் யானாயிராதபோது செய்தவைகள் என்னுடைய வினைகளல்ல. அ வைகளுக்காக என்னைத்தண்டிப்பது அநியாயம் அநியாயமென்றே தண் டிக்கப்படுமவன் முறையிடுவான். விதித்தநெறியை மனப்பூருவமாய்க் கடந்து அகிதஞ்செய்ததுஎந்த"அக"மோ அந்த"அகம்" அன்றோ அப்பாப த்திற்குத் தண்டனைப்படவேண்டிய "அகம்?" ஆன்மா பொருண்மையால் ஒன்றாயிருக்கின்றதேயென்று சொல்லுதலிற்பயன்யாதுமில்லை. இப்போ து தன்னறிவோடு சீவிக்கின்ற "யான்" என்னும் அகமே என்னுடையது என்று சொல்லக்கூடிய "அகம்." சைவராகிய நீவிர் யான் முற்பிறவிகளில் செய்தேனெனக்கூறும் வினைகள் ஒருபோதும் என்னுடையவைகளல்ல, நீவிர்கூறும் முன்னைய சீவியங்கள் யாருடைய சீவியங்களோ அறியேன். எவ்வாற்றானும் அவைகள் என்னுடைய சீவியங்களோ அல்ல. என்னுடை யவைகளென்று யான் காணாத முன்னைய வினைகளுக்காக என்னை நொண் டியாய் முடமாய்க் கூனாய்க் குருடாய்ப் பிறக்கவைத்தது மகா அநீதி! அ நீதி!! ஏன்? வேறொருவருடைய வினைக்காக என்னைத் தண்டிப்பதற்கும் இதற்கும் பேதந்தான் யாது? யான் முற்பிறவியில் அகஸ்தியராய் இருந் தேனென்றும், பின்பு மாமிசபட்சணஞ் செய்தகுற்றத்துக்காக பாண்டி யராசனுடைய நாயாய்ப் பிறந்தேனென்றும், பின்பு புண்ணிய விசேடத் தால் சாரீரகபாஷிகம் எழுதிய சங்கராசாரியர் ஆனேனென்றும், அப்பால் பலபல யோனிகளில் உழன்று இப்போது விதியின் துர்ப்பலத்தால் கூ னிப்பிடித்துக்கொண்டு கைவிரல் விறைக்கக சண்பஞ்சாடப் பகல் முழு தும் ஓர் எழுத்து மேசையிலிருந்தெழுதவேண்டிய கதிக்குவந்தேனென் றும் சொல்லுகின்றீர். ஆயினும் அகஸ்தியருடைய சரித்திரத்தை யான் வாசிக்கும்போது அவர் யாரோ நான் யாரோ என்ற உணர்ச்சியையே யன்றி ஒற்றுமையுணர்ச்சி ஒன்றையுங் காண்கிலேன். பாண்டியராசனு டைய அரண்மனைவாயிலில் நாயாய்நின்று குரைத்ததும் யானேயென்று ஒருசற்றும் உணர்கிலேன். சங்கராசாரியருடைய திக்குவிஜயங்களைச் சொல்லக்கேட்பதும் அட்மிறல் தோகோவுடைய வெற்றிவிஜயங்களைக் கேட்பதும் எனக்கொருவிதமாகவே அன்னியமாயிருக்கின்றன. அகஸ்

டிடர் மாமிசம் தின்றதற்காக என்னைத் தண்டிப்பதும் அட்மிறல் தோகோ ருசியர்மேற்பெற்ற வெற்றிகளுக்காக எனக்குப் பரிசிலளிப்பதுமாகிய இரண்டும் அநீதியே. "அகம்" வேறாயிருக்கையில் தண்டனைகள் சம்பாவனைகளை மாற்றிக்கொடுப்பது ஒருபோதும் நீதியாகாது. முன்னைய பிறவிகளின் கன்மங்கள் மாயையிலோ பிறிதோரிடத்திலோ பதுங்கிமறைந்திருந்து பின்சூத்திரக்கருவிபோலத் தாமே தமது பயனைத் தந்துசெலுத்துகின்றன என்பீராயின், அது நுமது சித்தாந்தமதத்துக்கு மாறுபாடேயாயினும் வேண்டுமாயின் அதற்குச் சம்மதிக்கிறேன். ஆனால், நீதிபரரான கடவுள், யான் என்னுடையவையென்றுசொல்லக்கூடாத பூர்வவினைகளை வைத்து என்னைத் தண்டிக்கிறாரென்பீராயின் அது சரியென ஒருபோதும் ஒத்துக் கொள்ளேன். குருட்டுவிதி என்னை உலைக்கின்றதென்னிற் சம்மதம்; கடவுளின் நீதி என்னைத்தொடர்ந்து வருகின்றதென்னில் இது ஒருபோதும் நீதியல்ல நீதியல்ல என்று தண்டனைப்படுவோன் சொல்லுதல் தகுதியே

## "அக"மும் ஆன்மசாஸ்திரமும்.

பிறவிகளினூடே தொடர்ச்சியறிவில்லையென்பது அநுபவசித்தமாகவே, வினைகளுக்கு உத்தரவாதியாகிய "அக"மும் பிறவிகள்தோறும் வேறுபடுகின்றதென்பது பிரத்தியட்சம். ஒரு "அகம்" செய்த இதமகிதங்களுக்காக வேறொரு "அகம்" நிக்கிரக அநுக்கிரகங்களை அடையச்செய்வது தேவநீதிக்கு எவ்வாற்றானும் பொருத்தமுள்ளதொன்றல்ல. தொடர்ச்சியறிவுள்ள உத்தரவாதியாகிய "அகம்" ஒன்றாயிராதபோது நிக்கிரக அநுக்கிரகங்களின் நோக்கமும் பயனும், நிக்கிரக அநுக்கிரக கர்த்தாவின் நடுவுநிலைமையும் முதலியவைகளெல்லாம் தலைதடுமாறிவருதலைச் சித்தாந்திகள் சிறிதுமுணராமற்போயினமை வியப்பே. அவ்வச் சரீரத்தோடு அததற்குரிய ஞாபகங்கள் கழிந்துபோகின்றன என்கின்றார்கள். ஆயின், காலம் இடம் கருமம் சம்பவம் முதலிய சகல ஞாபகங்களுந்தான் கழிந்துபோய் விடினும் "யானே யான்" என்னுந் தாதான்மிய உணர்வும் போய்விடுமா? அஃதும் போய்விடும் என்னும் அபத்தத்தை ஆன்மசாஸ்திரமும் அநுபவமும் கண்டிக்கின்றன. "யானே யான்" என்னும் உணர்வு தேகத்தில்ஒரு சற்றும் தங்கியிருப்பதன்று. ஒருவனுடைய சீவியத்துள்ளும் பலகால் தேகத்தின் கூறுகளாகிய அணுக்களெல்லாம் பூரணமாற்றமடைகின்றன என்பது சரீரசாஸ்திர சித்தம். சிறுவனுடைய தேகம் வாலனுடைய தேகமல்ல; வாலனுடைய தேகம் விருத்தனுடைய தேகமல்ல. ஆயினும் இளமையும் வாலிபமுங் கடந்து விருத்தாப்பியனானவன் "யானே யான்" என்னுமுணர்ச்சி பேதியாதிருக்கின்றான். ஆன்மாவும் சடப்பொருள் என்றாலன்றோ சரீரத்தின் மாற்றங்கள் ஆன்மாவைத் தாக்கும் என்று துணியப்படும்? ஆன்மா சித்தாகையால் தன் சுபாவங்கெடாமல் சரீரத்தின் மாற்றங்கள் நடுவே சரீரத்துக்கு மேற்பட்டதோர் மாறாப்பொருளாய் நிற்கின்றதெனல் ஆன்மசாஸ்திர சித்தம். அதுவே அநுபவசித்தமுமாம். துயின்று எழுந்தவனும் தோஷம் மேலிட்டிருந்து சுகமடைந்தவனும் அவ்வந்நிலையில் நடந்த காரியங்களெல்லாவற்றையும் சாங்கோபாங்கமாய் மறந்துபோங்காலத்தும் "யானே யான்" என்றஉணர்வையோவிடாதவனாயிருப்பன். இளமை, வாலிபம் முதலிய தசைகளைக் கடந்தவனும் யா

னே வாலிபனுனேன், யானே விருத்தனுனேன் என்னுமுணர்வை இழந்துவிடாதிருக்கிருன்.

இவ்வுண்மையைச் சைவநூல்களும் மறுக்கமாட்டாதிருக்கின்றன. சரீரம் மாறியும் ஆன்மாவின் தாதான்மியம் மாருதிருத்தல் அவசியமென அவைகளுஞ்சாதிக்கின்றன. "தேஹிநோஸ்மின் யதாதேஹே கௌமாரம் யௌவநம் ஜரா; ததா தேஹாந்தர ப்ராப்தி" (இளமை வாலிபமும் வாலிபம் வயோதிகமுமாய்மாறுவதுபோலவே ஆன்மா பிறவிகளிற்செல்லுதலுமாம்) "வாஸாம்ஸி ஜீர்ணாநியதாவிஹாய நவாநி க்ருஹ்ணாதி நரோபராணி ததாசரீராணி விஹாய ஜீர்ணாந்யந்யாநி ஸம்யாதி நவாநி தேஹீ" (பழைய உடைகளைக் கழித்துப் புதியவைகளைத் தரித்தல்போல ஆன்மாவும் பழைய உடலைக் கழித்துப் புதிய உடலைத் தரிக்கும்) என்பது பகவற்கீதை. (II 13, 22) "உறங்குவதுபோலுஞ் சாக்காடுறங்கி விழிப்பதுபோலும் பிறப்பு" என்பது உத்தரவேதம். (34; 9) "அரவுதன் றேலுரிவு மக்கனவும் வேறு பரகாயம்போய்வருமப்பண்பும்......" என்பது சிவஞானபோதம். (II, 3) இன்னன பிறவுங் காண்க. ஆயின் மறுபிறப்பின்கண் இவை அநுபவத்திற்கு மறுதலையாய்க் கிடக்கின்றன. பாலனும் வாலனும் வயோதிகனும் "யானே யான்" எனனுமுணர்வோடிருக்கையில், மறுபிறப்பின்கண் அவ்வுணர்வு சுத்த சூனியமாகின்றது. உடைகளைந்தவனும், கனவுகண்டவனும் யானே உடைகளைந்தேன் தரித்தேன், யானே கனவு கண்டேன் விழித்தேன் என்னுமுணர்வோடிருக்கின்றமைபோல் ஆன்மாக்களும் நாமே இன்னின்ன முற்பிறவிகளை எடுத்தோம் எனஉணராததென்னோ?

பிறவிகளூடே, தொடர்ச்சியறிவுண்டெனில் அது அநுபவத்திற்கு மாருகக்கிடக்கின்றது. இல்லையென்றே ஒத்துக்கொள்ளின், மேலே பாக்கக் காட்டியபடி தேவநீதி முழுதும் பங்கமடைகின்றது. ஆதலால் மறுபிறப்புவாதிகள் இருதலைக்கொள்ளியெறும்பேபோலாதல் காண்க.

## சைவருடைய ஆட்சேபனை.

தொடர்ச்சியறிவில்லாதவிடத்து "அகம்" வேறுபடும்; "அகம்" வேறுபட்டவிடத்து, ஒரு "அகம்" செய்த நன்மைதீமைக்காக வேறொரு "அகம்" தண்டனைப்படவும் சம்பாவனையடையவும் செய்தல் நீதியாகாது. ஆகவே மறுபிறவிகள் நிக்கிரக அநுக்கிரகங்களின்நிமித்தம் உண்டாதல் யுத்தியல்லவென முடித்தோம். இம்முடிபுக்கு எதிர்பேச விரும்புவோர் இரண்டுநியாயங்களை எடுத்துச்சொல்லக்கூடும். அவை இரண்டையும் பரிசோதிப்போம்:—

(1) "எவ்வாற்றானும் முன்னைய பிறவிகளுக்கும் இப்பிறவிக்குமிடையில் ஒற்றுமைகாணக்கூடாதிருப்பின் நீவிர்சொல்லிய ஆட்சேபமொக்கும். சாமானியசனங்களுக்கு முன்னைப்பிறவிகளின் "அகமும்" இப்பிறவியின் "அக"மும் வேருகத்தோற்றுமென்பது மெய்யே. ஆயினும், யோகசாதனை கைகூடிபவனுக்கு அவை வேறல்ல. அவன்முன்னையபிறவிக்கும் இப்பிறவிக்கும் இடையில் ஒரே "அகம்" தானே பேதியாதிருக்கக்காணுந்திறனுடையவன். யோகியானவன் சித்தநிரோதனத்தால் தன்னையடக்கி மனத்தைப் புலன்களின்வழிச் செல்லவிடாது ஒடுக்கிக்கொண்டிருக்கையில், தன்நிருபாயத்தில் நடந்தவைகளைமட்டுமா, தான் மாதாகருப்பை

யிற் கிடந்த காலத்தில் நிகழ்ந்தவைகளையுங் கண்டு, அப்பால் பற்பல யோனிபேதங்களில் உழன்றதன்மையையும் அவ்வப்பிறப்பின வினைகளையுங்கூட ஒருங்கே தரிசிப்பான். ஆதலால் நுமது ஆட்சேபம் யாண்டையது?" எனச் சிலர் சொல்லுவர்போலும். சொல்லினும் நாம் முன்னர்க்காட்டிய நியாயத்தின் பெலன் இதனாற் குன்றாது. எங்ஙனமெனில், யோகசாதனையில் நெடுநாட்பயின்று நிட்டைகூடினோம் எனச்சொல்லியவர்கள் தாமும், தமக்கு முன்னைய பிறவியின் ஞாபகம் ஒருசிறிது வந்ததென்பதற்குமேல் யாதையும் உரித்தாடமாட்டாமற்போயினர். சிலகாலமாய் சைவரால் மிகவும் பாராட்டப்பட்டுவந்த அன்னிபெசன்ற் அம்மாள், தான் முற்பிறவியில், காசிப்பட்டணத்திலே பிராமண குலத்திற் பிறந்திருந்த தாய்க் கண்டுபிடித்துவிட்டதாகச் சொல்லித்திரிந்தனள். இக்கூற்றுக்கு யாதேனுந் திருட்டாந்தங் காட்டினளா? இல்லை. அன்றியும், காசியிற் பிராமணகுலத்திற் பிறக்குமுன் தான் நித்தியமாய்ப் பிறந்துழன்ற பற்பல யோனிபேதங்களைச்சுட்டி யாதேதுங் கண்டுபிடித்தனளா? இல்லை. அன்றேல், முன் பிராமணகுலத்திற் பிறந்திருந்த அம்மாள், இப்பிறவியில் சைவராதியோரால் மிலேச்ச ஸதிரீஎன்றுமட்டுமோ, புலைச்சியென்றுதானும் இகழப்படுவதற்கிலக்கான ஓர் ஐரோப்பியஸ்திரீயாய்த் தாழ்ந்துபிறந்தது யாதுபற்றி என்றுதான் அறிந்துகொண்டனளா? அதுதானுமில்லை.

அன்னிபெசன்ற் அம்மாளும் அவளோடு ஐந்தாறு யோகிகளும் கடினமான யோக அப்பியாசஞ்செய்து தங்கள் முற்பிறப்புக்கும் இப்பிறப்புக்கும் ஒற்றுமையைக் கண்டுகொண்டார்களென்றுதான் வைத்துக்கொள்ளுவோம். ஆனால், இப்போது பூகோளத்தின்மேல் உள்ள கோடிக்கணக்கான மானுடசீவர்களுள் ஐந்தாறுபேரைத் தவிரப் பிறர் யோகசாதனை செய்து நிட்டைகூடியறியார்களே. நம்முடைய யாழ்ப்பாணச் சைவருள் யோகநிட்டைகூடியவர் யார்? ஆதலால் யாது கூறினுமென்? நீவிர் காலைதொடங்கி மாலைபரியந்தம் தெருச்சந்திகளில் நின்று, யோகசாதனை செய்யுங்கள், செய்யுங்களென்று அறிவுகெட்டு விழும்வரையும் சனங்களுக்குப்பிரசங்கம்பண்ணியுமென்? மனுஷருள் மகாபெரும்பாங்கானோர் ஓர்போதும் யோகசாதனையைச் சோதித்தும்பாரார். அவர்கள் யோகசாதனையால் முற்பிறவிகளைக் கண்டுபிடித்துவிட்டோம்என்போரைப் பார்த்து எப்போதும்போலவே குலுங்க நகைப்பார்கள்.

ஆதலால், காரியத்தளவில் சாமானியரான நாமெல்லாரும் நமது முற்பிறவிகளைப்பற்றி யாதொன்றும் அறியாதவர்களே, அறியமாட்டாதவர்களே. எங்கள் முற்பிறவிகளைக் கண்டுவிட்டோம் என்று யோகநிஷ்டைகூடியோர் சொல்லிக்கொள்ளினும், உலகத்தில் கோடாகோடிக்கணக்கினர்க்கு முற்பிறவியுண்மை ஒருபோதும் அநுபவத்தாற் புலப்படாது. ஆதலால் யோகநிஷ்டைசெய்து முற்பிறவியைக் கண்டுகொண்டோரை, அவர்கள் அம்முற்பிறவியிற் செய்த கன்மங்களுக்காகக் கடவுள் இப்பிறவியில் வாதிக்கின்றார் என்னில் அதற்குச் சம்மதம். முற்பிறவியைப்பற்றி ஒன்றுமுணராத நம்மை நாம் ஒருபோதுஞ் செய்யாத கன்மங்களுக்காக வாதிப்பதோ பரிச்சேதம் நீதியாகாது, ஆகாது. இதற்கு நாமொருபோதும் உடன்படோம், உடன்படோம்.

(2) "மகாபெரும்பங்கான மனுஷர் முற்பிறவிக்கும் இப்பிறவிக்குமிடையிற் தொடர்ச்சியறிவில்லாதவர்களே என்பது ஒக்கும். ஆயின் வேதமும் ஆகமங்களும் சாஸ்திரங்களும் மறுபிறப்பு உண்டு என முழங்கும்

போதனையை ஆன்மாக்கள் கேட்டு, தமக்கு முற்பிறவி உண்டு என்றும் அப்பிறவியின் இதமகிதங்களுக்கு ஏற்பவே இப்பிறவியில் இன்பதுன்பங்கள் அளந்துவிடப்படுகின்றன என்றும் ஊகித்து அறிந்துகொள்ளத்தான் தடையாது? இங்ஙனம் ஊகித்தறிந்துகொள்ளுங்கால் இன்பம் புசிப்போர் எவர்களோ அவர்கள் தாங்களே முற்பிறவியிற் செய்த நல்வினைகளுக்காக இப்பிறவியில் இன்பம் புசிக்கிறதாகவும், துன்பம்புசிப்போர் எவர்களோ, அவர்கள் தாங்களே முற்பிறவியிற் செய்த தீவினைகளுக்காக துன்பம் புசிக்கிறதாகவும் உணர்ந்துகொள்ளுவதில் இழுக்கென்ன?'' எனச் சைவர் கூறுவரேல், அதுபொருந்தாது, ஏனெனில், முன்பு வேதங்களுட் பழமையுள்ளதாகிய இருககுசங்கிதை மறுபிறப்பு உண்டென்று எவ்விடத்திலாதல் சொல்லியிருக்கின்றிலது. சொல்லியிருப்பினும் அவ்வேதம் ஒருசிறுதொகையான மானிடர்க்கு மாத்திரம் பிரமாணமாதலாற் பயனில்லை. உபநிஷத்துக்களும் ஆகமங்களும் சாஸ்திரங்களும் மறுபிறப்புண்மையைச் சாதிக்கின்றனவே எனில், அவைகள அங்ஙனம் சாதித்துச்சொல்லுதல் மாத்திரம் போதாது. முன்பு இந்நூல்களின் பிரமாணத்தன்மை தாபிக்கப்படல் வேண்டும். சைவருக்கு அவைகள் பிரமாணமன்றோ எனில், பூகோளத்தில் இந்தியா ஒருகோணம்; அதிலும் தென் இந்தியாவும் வட இலங்கையும் ஒரு புள்ளி. தென்இந்தியாவிலும் வடஇலங்கையிலும் வசிப்போருள்ளும் ஆகமசாஸ்திரங்களை வாசிக்கமட்டுமா, கேட்கவுமதிகாரிகளல்லாத சூத்திரர் முதலியோரே பெரும்பங்கு. ஆதலால் சைவர் போற்றும் ஆகமசாஸ்திரங்களின் முழக்கம் மனுஷருள் வெகுசொற்பதொகையானோருக்குமாத்திரமே கேட்கப்படும். அப்படியாயின், சைவாகமசாஸ்திரங்களைக் கேட்க அதிகாரிகளல்லாத லட்சக்கணக்கான தென்இந்திய வடஇலங்காவாசிகளும், அவ்வாகம சாஸ்திரங்களைப் பிரமாணமாகக் கொள்ளாத கோடிக்கணக்கான பிறமதஸ்தர்களும், ஆகமசாஸ்திரங்கள் எவ்வளவாய் முழங்கினும் உணராத வெள்ளக்கணக்கான தாவர, மிருக, மச்ச, பட்சிசாலங்களும், எண்ணித்தொலையாத எறும்பு முதலிய ஊர்வனவும், கிருமிமுதலிய அணுவாகாரமான சீவவஸ்துக்களும் மறுபிறப்பு என ஒன்று உண்டென்றும், முற்பிறவியிற் செய்த வினைகளுக்காகவே இப்பிறவியிற் தமக்குள்ள வாழ்வுதாழ்வுகளெல்லாம் வந்தனவென்றும் அறிவதுதான் எவ்வாறோ? மறுபிறப்பு உண்மையைக் கனவிலுங் கேட்டறியாத இச்சீவவஸ்துக்களெல்லாம் தாம்தாமே முன்செய்த கன்மங்களின் நிமித்தம் இப்போது "தீராத சுழற்காற்றுற்றசெத்தைப்போற்சுற்றிச் சுற்றிப் பேராத காலநேமிப் பிரமையிற் திரிந்து'' உழலுவதாக உணர்வது எவ்வாறோ? சைவாகமசாஸ்திரங்களைக் காதுசலிக்கக் கேட்ட சைவப்பழங்கள்தாமும்: யான் முன் இன்னின்ன பிறவிகளில் உழன்றேன், இன்னின்னவினையின்பொருட்டு இப்போது பாடுபடுகிறேன், யானே முன்பிறந்தேன், முன்பிறந்தயானே இப்போதும் பிறந்து இங்குவருந்துகிறேன் என்று உணராதிருக்க, புல் பூண்டு ஈ எறும்பு முதலியவை எவ்வாறு தங்கள் தாதான்மியத்தை உணரும்?

ஆதலால், யோகசாதனையாதல், ஆகமசாஸ்திரங்களின் கூற்றுதல் சாதாரணமாகச்சீவர்களுக்குப் பயன்படாமல், எழுவகைப் பிறவியுள்ளும் ஒருபிறவியாகிய மனுஷருள் ஒரு மகாசிறுதொகையினர்க்குமாத்திரம் பயன்படக்கூடியனவாகின்றமையாலும்; யோகசாதனையில் நிட்டைகூடினோர்தாமும் தமக்கு, நித்தியமான சகலபிறவிகளினூடாகவும் தொடர்ச்

சியறிவுண்டென்று எப்போதாவது உரித்தாடியிராமையாலும்; ஸைவரா திய ஒரு வெகுசொற்பதொகைமனுஷர் ஆகமசாஸ்திரங்கள்வழியாய்மறு பிறப்பு உண்டென்று பொதுவகையாய் அறியுமிடத்தும், இன்னுருகிய யான் இன்னின்ன காரணத்தால் இத்தனை பிறவிகளையெடுத்தேன், இன் னின்ன தீவினையினிமித்தம் இப்போது வருந்துகிறேன் என்று சிறப்புவ கையால் அறியக்கூடாமையாலும் பிறவிகளுக்கூடே தொடர்ச்சியறிவே யில்லையென நாம் முன்னர்க்கூறியது அசையாத கூற்றாகவே நிற்கின்றது. ஆகவே, தொடர்ச்சியறிவில்லாதவிடத்து "அகம்" பேதிக்கின்றது. மறு பிறப்புக்கொள்கைப்படி கடவுள் பேதமான ஒரு "அகம்" செய்த வினைப் பயன்களை வேறொரு "அகம்" அநுபவிக்கச்செய்கின்றாரெனவாகின்றது. இது நீதியல்ல, அத்தியந்த அநீதியேயாம். கடவுளோ பரிபூரணநீதியுள் ளவர். ஆதலால் ஒரு "அகம்" செய்த வினைப்பயனை வேறோர் "அகம்" அ நுபவிக்கும் இன்றியமையா ஆவசியகத்தை ஏற்படுத்துவதாகிய மறுபிற வியை அவர் ஆன்மாக்களுக்குக் கொடார். ஆகவே, எவ்வாற்றானும் மறு பிறப்பு இல்லையென்றே துணியப்படும்.

## ஆட்சேபம் 4.

முன்னைய பிறவிகளினூடாகத் தொடர்ச்சியறிவு செல்லாமையினால் முற்பிறவியிற் செய்த வினைக்கு இப்பிறவியிற் தண்டனைவிதித்தல் தேவநீ திக்குப் பங்கமாகுமென விளக்குமுகத்தால் மறுபிறப்பு இல்லையென நி யாயம் முடித்தோம். இனி, பின்னைய பிறவிகளினூடாகத் தொடர்ச்சிய றிவுசெல்லாதுபோவதினால் சன்மார்க்கத்துக்குத் தூண்டுகோல் அற்றுத் துன்மார்க்கம பெருகவழியாகுமென விளக்குமுகத்தாலும் மறுபிறப்பின் இன்மையைச் சாதிப்போம்.

மறுபிறப்புக்கொள்கைப்படி, யான் இப்பிறவியிற் செய்யும் ஒவ்வொ ரு தீவினைக்கும் நல்வினைக்கும் மேலைப்பிறவியிற் தண்டனையும் சம்பாவ னையும் சட்டதிட்டமாய் வழங்கப்படும். ஆனால் இபபிறப்பிலுள்ள யா னென்னும் "அக"மோ இப்பிறப்போடு அற்றுப்போகின்றது. என் சிறு வயதிற்றொடங்கியதன்னறிவுமரணத்தோடு முற்றாயழிந்துபோகின்றமை யால், வரும்பிறவியின் தன்னறிவு இப்பிறவியின் தன்னறிவோடு சற்றே னும் தொடர்பில்லாததாய, வேறாய நிற்கும். முன்னைய பிறவியின் "அ கம்"எப்படி இப்பிறவியில்வேறாயிற்றோ, அப்படியே இப்பிறவியின்"அக" மும் வரும்பிறவியில் வேறாய்ப்போய்விடும். முற்பிறவியில் யானல்லாத வேறோர் "அகம்" செயதவினைகளுக்காக யானிப்போது பாடுபடுகிறேன். ஆனால்,—நல்லகாரியம்! இப்பிறவியில் யான்செயயும்வினைகளுக்காக யான் பாடுபடமாட்டேன் என்பது எனக்கோர் ஆறுதல். அதெப்படியெனில், மரணத்தோடு என்னுடைய "அக"மும் மாறிப்போய்விடும். எனக்குப் ப திலாய் வேறொருவன் என் வினைகளைச் சுமந்தநுபவிப்பான். ஆதலால் சபாஸ்! சபாஸ்!! சீவனுள்ளபோதே நன்றாய்ச் சிற்றின்பசுகபோகங்களை அநுபவித்துக்கொள்ளுவேனாக. காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளல் வேண்டும். ஏன்? யானல்லாதவொருவன் முற்பிறவியிற் செய்த தீவினை களுக்காக இப்போது யான் பாடுபடுகையில், இனி வரும்பிறவியில் யான் அல்லாதவொருவன் என் தீவினைகளுக்காகப் பாடுபட்டாலாகாதா? ஆன்

மா என்னுஞ் சிறிய சைதன்னிய அணுவானது எனக்கும் அவனுக்கும் பொது என்றதுமெய்தான்; ஆனால் ஆட்தன்மை வேறுபடுகிறபடியால் சித்துப்பொருண்மையின் பொதுமையைப்பற்றி எனக்கென்ன? என்று ஒவ்வொருவனுஞ் சொல்லிக்கொள்ள இடமுண்டாகையால், மறுபிறப்புக்கொள்கையானது புண்ணியத்திற்குத் தூண்டுகோலாதற்குமாறாய்த் துன்மார்க்கத்துக்கே விசாலமாய் வழிதிறந்துவிடுகின்றது.

## மறுபிறப்புஞ் சன்மார்க்கமும்.

ஓர் பள்ளிக்கூடத்தில் முதல் மாணாக்கனுடைய குழப்படிக்காக இரண்டாம் மாணாக்கன் அடிபடுவதும், இரண்டாம் மாணாக்கனுடைய ஒழுக்கத்துக்காக மூன்றாம் மாணாக்கன் வெகுமதிபெறுவதுமே கட்டளைக்சட்டமாயிருக்குமாயின், பள்ளிக்கூடத்தில் நல்லொழுக்கம் நிலைபெறுமா? கோபாலின் குற்றங்களுக்காகச் சுந்தரமே எப்போதும் அடிபடுவதானாற் கோபால் குற்றஞ்செய்யப்பயப்படுவானா? சுந்தரத்தின் நல்லொழுக்கத்தினிமித்தம் சிவக்கொழுந்துக்கே பரிசில் கிடைக்கிறதானாற் சுந்தரம் அடியும்பட்டு நல்லொழுக்கத்திற்காகத் தன்னையொறுத்து நடக்கவும்வேண்டுமா? அவனும் பையன்களுக்குரிய குழப்படிகளில் இடையிடையேனும் மகிழத்தலைப்படானா? அவன் குழப்படிகளுக்காகச் சிவக்கொழுந்தல்லவோ அடிவாங்கவேண்டியவன்?

மறுபிறப்புக்கொள்கையில் முழுதும் இப்படிப்பட்ட முறையே நடக்கின்றது. என்னில் வேறான ஒரு "அகம்" செய்தபாவங்களுக்காக யான் இப்பிறவியிற் பாடுபடுகிறேன். இனி, யான்செய்யும் புண்ணியங்களின் பலனையநுபவிகக எனக்குக்கிடையாது. மறுபிறவியில் எனக்குப்பதிலாய் வேறோர் "அகம்" வேறு தன்னறிவோடும், வேறு உத்தரவாதத்தோடும் வரும். எனக்கு முந்திய "அகம்" செய்தபாவத்தை யான் உணராமலே அதன் தண்டனையை எப்படி அநுபவிக்கிறேனோ, அப்படியே எனக்குப் பின்வரும் "அகம்" யான் பாடுபட்டுச் செய்தபுண்ணியத்தை உணராமல் அதன் சம்பாவனையைச் சுகிக்கும். ஆதலால் யாரோ பிறர் சுகிக்கும்பொருட்டுப் புண்ணியங்களைத் தேடுவதிற் பயனென்ன? முற்பிறவியில் ஒருவன் பாபத்தைத்தேடிவைத்துவிட்டுப்போக யான் அதின் தண்டனையை இப்போது படவில்லையா? அப்படியே எனக்குப்பின்வருகிறவனும பட்டாலென்ன? ஆகையால் பாதகங்களுக்கு யான் அஞ்சவேண்டியதில்லை. என் ஆசாபாசங்களை அடக்கிப் புண்ணியஞ்செய்யப் படும்பாடெல்லாம் வீண்பாடு. உலகவியற்கை தானென்ன? ஒருவன் காடேறி மலையேறி வருத்தப்பட்டு உழைத்துக்கொண்டுவருகையில், ஆதாயமெல்லாம் ஓர் இரண்டாம் பெயர்வழிக்குப் போய்ச்சேர்ந்துகொண்டிருக்குமானால் அவன் பிரயாசப்பட ஊக்கம்யாது? தூண்டுகோல்யாது? இங்ஙனமே யான் கஷ்டப்பட்டுச் செய்யும் புண்ணியங்களின் பலனை அநுபவிக்க எனக்குக்கிடையாதிருக்கையில் என்னினின்றும் காரியத்தளவில் வேறான ஓராளுக்காக யான் பிரயாசப்படவேண்டிய அவசியந்தான்யாதோ?

மறுபிறப்புக்கொள்கையானது காமாதுரனுக்கு எப்படிப்பட்ட நடக்கையை ஏவிக்கொடுக்கும்? தன் கசுமால் ஆசாபாசங்களை அடக்கி நடக்கும்படி அது அவனைத் தூண்டுமா? தூண்டாது. ஏனெனில், தன் துராகிருதங்களின் தண்டனையை மறுபிறப்பிலே தானுணர்வதுமில்லை அநுபவிப்

பதுமில்லை என்னும் நம்பிக்கையால் அவன் மேலும்மேலும் சிற்றின்பச் சேற்றிற் புரளவே தூண்டப்படுவான். இத் தீச்செய்கைநிமித்தம் மறுபிறப்பிற் தாழ்ந்து பிறக்கவேண்டுமென்றறிவதும் அவனுக்குப் பரமானந்தமே. உதாரணமாய்: காமாதுரனானவன் மறுபிறவியில் ஓர் பன்றியாய் நாயாய் வரக்கூடுமானால் அஃதே அவனுக்குக் கைலசாமன்றோ?

இவ்வுலகிற் தீச்செயல் செய்வோரனைவருக்கும் வாய்ப்பான கொள்கை மறுபிறப்புக்கொள்கையே. பிறவிப்பெருங்கடல் பெருங்கடலென்று பயந்து, தீயோர் பாவத்தை விலக்கவும் புண்ணியத்தையநுசரிக்கவும் அது வழியாகுமென்று எண்ணுதல் தவறு. இப்பிறப்பில் எதையுஞ் செய்வோம் இனி எப்பிறப்பு வந்தாலும்வரட்டும்; நாம் நம்முணர்ச்சியோடிரோம்; நம்மோடு சற்றுந்தொந்தமில்லாத வேறொருபிறப்பு இதற்குப்பதிலாய் வரும்; நாமோ எப்படியும் சுற்றிச்சுழன்று மோட்சமடைவோமேயன்றோ? அது நித்தியகாலத்தின்பின்னாயினும் ஆகட்டும்; நமக்குத் தொடர்ச்சியறிவு இராதாகையால் நித்தியந்தானும் நமக்கு ஒரு கணப்பொழுதுக்கே சரி என்று எவரும் நம்பிக்காத்திருக்கலாம். கள்வர், பரஸ்திரீகமனஞ்செய்வோர், கொலைபாதகர் இவர்களுக்கெல்லாம் மறுபிறப்பிலே ஒரு குயிலாய், ஒரு மயிலாய், புலியாய், எலியாய்ப் பிறந்து வருவதே தண்டனையென்றால் இவர்களுக்கு எத்துணைப்பாக்கியம்! நாள்முழுதும்பாடிச் சோலைகளிற் பறந்துதிரியும் குயிலுக்கென்ன குறைவுண்டு? முன் கள்வனாயிருந்தேன் காமாதுரனாயிருந்தேன் என்ற உணர்வு ஒரு சிறிதுமில்லாத அக்குயிலுடைய மகிழ்ச்சிக்குக் குறைவுதான்யாது? அதற்குத் தண்டனைதான்யாது? இஷ்டம்போல் மிருகங்களைப் பிடித்துப் பட்சித்துவிட்டுச்சுகமாய்ப்படுத்து உறங்கும் புலிக்குக்குறைவுதான் என்ன? தண்டனையுணர்வு அதற்குஒருசிறிதாதல்உண்டா? அல்லதுபுலிதான் இப்பிறப்பிலே ஓர் கொலைபாதகனுக்காகத்தண்டனைப்பட்டாலும் அதனால், முற்பிறப்பிலே கொலையைச் செய்துவிட்டுப் போனவனுக்கு வருங்குறைவுதானென்ன?

இவ்வாறு, மறுபிறப்புக்கொள்கையானது சன்மார்க்கத்தை அழித்துத் துன்மார்க்கத்துக்கே வழி திறந்துவிடுகின்றமையால், அது யுத்தி அளவையாற் தோஷமெனக் காணப்படுகின்றது.

## முடிவுரை.

இனி, இதுகாறும் கூறியவற்றைத் திரட்டிசொல்லி முடிப்போம்.

1. மனுஷனுடைய சைதன்னிய முயற்சிகளுக்கு வினைமுதலாக விளங்குகின்றதும், அழியாமையுடையதுமான ஆன்மாவைப்போன்ற ஆன்மாக்களே ஏனைச்சகல சர அசரவஸ்துககளையும் உயிர்ப்பிக்கின்றன என்றும், சுபாவத்தில் ஒன்றேயான இவ்ஆன்மாக்கள் பிரபஞ்சத்திலே காணப்படுகின்ற ஏழுவகையும் எண்பத்துநான்குநூறாயிரம்யோனிபேதமுமான உடலங்களிலே அடைபட்டிருக்கின்றமை, இவ்வான்மாக்கள் முற்பிறவிகளிலே செய்த கன்மங்கள்தீரும்பொருட்டேயாம் என்றுங் கூறும் கொள்கையானது மறுபிறப்புக்கொள்கையென்று சொல்லப்படும்.

2. இக்கொள்கை, மனுக்குலத்தின் ஆதிபாரம்பரியங்களுள் ஒன்றல்ல. இது தத்துவசாஸ்திரிகளாற் பிற்காலம் பாணிப்புமாத்திரமாக வைத்து ஓதப்பட்டது. நம்முடைய பாரதகண்டத்திலே ஆதிபாரம்பரியங்

களுக்குச் சாட்சியாயுள்ள அதிகபழமையான நூலாகும் இருக்குசங்கிதையிலே மறுபிறப்புக்கொள்கை காணப்பட்டிலது. பிற்காலத்துக்குரியவைகளாகிய ஆரண்யக உபநிடதநூல்களே இக்கொள்கையை முதன் முதல் எடுத்துச் சொல்லியிருக்கின்றன.

3. இக்கொள்கையானது சிருட்டியிலேயுள்ள பேதங்களுக்குக் காரணஞ் சொல்லும்பொருட்டு வைத்தோதப்பட்டது. மேனோக்காய்ப் பார்க்கும்போது, இக்கொள்கையானது பிரபஞ்சத்தைச்சுட்டியசகல ஆசங்கைகளுக்கும் விடைசொல்லும் பெற்றியுள்ளதாகத் தோன்றும். ஆயின், நுண்ணறிவாற்பரிசோதிக்கும்போது, இது ஒரு விடையுஞ் சொல்லமாட்டாமல் முன்னிருந்தவைகளிலும் அதிக தடைகளையே உண்டாக்குகின்றதெனக் காணலாம்.

4. சிருட்டியிலேயுள்ள சரீரபேதங்கள், கன்மத்தின் பேதத்தினால் உண்டானதென்பது மறுபிறப்புக் கொள்கையின் விடை. ஆயின் கன்மம் சரீரமின்றிவராது என்பதே சித்தாந்தமாகையால் ("உடற்செயல் கன்மம்" என்பது போதனை) முதற்சரீரத்துக்கு முன்னும் ஒரு சரீரம் வேண்டியிருக்கின்றது. ஆதிக்குமுன்னும் ஓர் ஆதி வேண்டுமென்பது அனவஸ்தை என்னும் தோஷமாகையால், சரீர பேதங்கள் கன்மத்தினால் உண்டாயின என்பது பொருந்தாது. ஆகவே அக்கன்மத்தைப் பற்றுக்கோடாகக் கொள்ளுகின்ற மறுபிறப்புக்கொள்கை பொருந்தாது.

5. கன்மந்தான் சிருட்டிக்கு முன்னே யாதோ ஓர் வகையாக ஆன்மாக்களுக்கு உண்டெனவைத்துக்கொள்ளுமிடத்தும், மறுபிறவிகளாற் கன்மம் பெருகுவதே இயல்பாகையால், கன்மந் தொலையப் பிறவிகளை எடுத்தல் பொருந்தாது. அப்பால், கன்மத்துக்குக காரணம் ஆணவமலம், ஆணவம் நீங்குதற்குப் பிறவிகள் வேண்டப்படுமென்பதும் பொருந்தாது. ஏனெனில் ஆணவமலம் ஆன்மாக்களை இடையிலே பற்றக் காரணமின்மையாலும், அது அவைகளை அநாதியேபற்றி அவைகளோடு குணகுணித்தன்மையாய்ச் சகசமாய் இருக்கும் என்பது சித்தாந்தமாதலாலும், அநாதியேயுள்ள அது இடையிற்போகாது. அநாதியேயில்லாததாகிய சுத்ததன்மையும் இடையில் வராது. "உள்ளதுபோகாது இல்லது வராது" என்பதும் சைவ சித்தாந்திகள் மதமேயன்றோ? ஆதலால் மறுபிறப்புக் கொள்கை பொருந்தாது.

6. ஏலவே ஆன்மாக்களுக்கு மலபந்தம் உண்டெனவைத்துக்கொள்ளுமிடத்தும், மறுபிறப்பாகியசாதனமோ பிறவிகள்தோறும் பெருகிக் கொண்டுவருங்கன்மத்தையேனும், சகசமானதாகையால் நீங்காவியல்பையுடையதாகிய ஆணவத்தையேனும் போக்கும்பெற்றியுள்ளதல்ல. ஆகையால், கடவுள் எவ்வாற்றானும் சாதனமாகக்கூடாத ஒன்றைக்கையாடி ஆன்மாக்களுக்கு மறுபிறப்பைக் கொடுக்கின்றார் என்றுசொல்லுதல்பொருந்தாது. ஆதலால் மறுபிறப்புக்கொள்கைபொருந்தாது.

7. நீதிநூலின்படி பாபத்தைச்செய்தவன் எவனோ அவனே தண்டனையையும், புண்ணியத்தைச்செய்தவன்எவனோ அவனே சம்பாவனையையும் அடைதலே முறைமை. அப்பால், கடவுளோ பரிபூரணநீதியுள்ளவராகையால் அவர் செய்தருளும் நிக்கிரக அநுக்கிரகங்களில் இம்முறைமை அதிசதுலாம்பரமாய் விளங்கவேண்டுமேயன்றிப் பங்கப்படத்தகா

து. ஆயின், மறுபிறப்புக்கொள்கையின்படி, ஆன்மாவானது பிறவிகளினூடு செல்லும்போது அதன் ஆட்தன்மை மாறிப்போகின்றது. முந்திய பிறவியின் "அகம்" வேறு, பிந்திய பிறவியின் "அகம்" வேறாகின்றது. நமக்கு (முன்னையபிறவிகளே தும் உண்டேல்) அப்பிறவியோடு தொடர்ச்சியில்லாதிருக்கின்றமை அநுபவசித்தம். ஆதலால், மறுபிறப்புக்கொள்கையின்படி, ஒரு "அகம்" செய்த குற்றத்துக்காக வேறொரு "அகம்" தண்டனையையும், ஒரு "அகம்" செய்த நன்மைக்காக வேறொரு "அகம்" சம்பாவனையையும் அடைகின்றதாகின்றது. இது ஒருசிறிதும் நீதியல்ல. ஆகவே இப்படிப்பட்ட அநீதியைக் கடவுள்பேரில் ஆரோபிக்கிறதாகிய மறுபிறப்புக் கொள்கை பொருந்தாது.

8. மறுபிறப்பு உண்டெனில், மனுஷர் பாவ புண்ணியங்களைப்பற்றிக் கவலையுறத் தேவையில்லை என ஆகின்றது. எங்ஙனமெனில், நமக்கு இனிவரும் பிறவிகளில் நாம் நம்மறிவோடிரோமாகையால் நமது ஆட்தன்மை வேறுபட்டுவிடும். நாம் வேறு ஒரு "அகம்" ஆகிவிடுவோம். வேறொரு ஆள் பலனைப் புசிக்கும்பொருட்டு, நாம் இப்போது புண்ணியந் தேடிவைக்கவேண்டுமா? நாம் எல்லாவகையான சிற்றின்பசுகங்களையும் மனம் போனபடி அநுபவியாமல் இருப்பதேதுக்கு? பாபம் பாபம் என்று பயப்படவேண்டியது ஏதுக்கு? வேறொருவனன்றோ அப்பாபத்தையெல்லாம் சுமந்து கடன் தீர்ப்பான்!—அப்பால் பாபத்தினால் பிறவிகளின் தொகை அதிகரிக்கும் என்றாலும் நமக்கென்ன? அநாதிநித்தியமாய்ப் பிறந்து பிறந்து வந்தோமென்று நமக்கேதும் அலுப்புத்தோன்றுகிறதா? பின்னும் ஓர் நித்தியமல்ல, பலநித்தியகாலம் பிறந்தும் நமக்கென்ன? நம்முடைய அறிவு முற்றாக அழிந்துபோகையில் நாமேன் யோசிப்பான்?—இங்ஙனந் துன்மார்க்கத்துக்கே வழிதிறந்துவிடுகின்றதாகிய ஏற்பாடு கடவுளால் உண்டாகியிராது. ஆதலால், மறுபிறப்புக்கொள்கை பொருந்தாது.

9. இன்னன பல ஆட்சேபங்களைப் பிறப்பிப்பதாகிய மறுபிறப்புக்கொள்கையானது யுத்திக்கு மிகவும் விருத்தமாகத் தொனிக்கின்றமையால் அது உண்மையாயிருத்தல் கூடாது. உள்ளபடியே மறுபிறப்புக்கொள்கையைப்போலும் யுத்திக்கு மாறான அத்தனை தோஷங்கள் அமைந்த தப்பறை வேறில்லை என்னலாம். மனுஷன் தன் அற்ப புத்தியால் உண்டாக்கிய தத்துவசாஸ்திரக்கொள்கைகளுள் அதனைப்போலும் மயக்கம் வருவிப்பதும், நல்லொழுக்கத்தைக் குலைப்பதும், தேவபத்தியை அழிப்பதுமான கொள்கையும் வேறில்லை என்பது நமது பாரபட்சமற்ற அபிப்பிராயம்.

இனி, சத்தியவேதமானது உலகத்திலுள்ள பேதங்களுக்குச் சொல்லும் காரணத்தையும், அதனோடியைந்த சில பிறவிஷயங்களையுஞ் சுட்டிச்சிலகாலம் பொறுத்துப் பேசுவோம். அதற்கிடையில் நம் சைவநண்பர் இவ்வாட்சேபங்களைச் சித்தசமாதானத்தோடு சீர்தூக்கிக்கொள்ளுமாறுவேண்டுகின்றோம். நாம் தர்க்கமாடவரவில்லை. பாரபட்சமற்ற மனதோடு மறுபிறப்புக்கொள்கையை யுத்தியளவையால் அளந்து, நமக்குத் தோன்றிய ஆட்சேபங்களை நட்பிலட்சணம் தவறாமலே எடுத்துச்சொன்னோம். நம் சைவநண்பரும் இவ்விதமனதோடேயே அவற்றைச் சீர்தூக்கித் தேர்ந்துகொள்ளவேண்டுமென்று கோருகிறோம்.

# அநுபந்தம்.

## "இந்துசாதன"மும் மறுபிறப்பும்.

மறுபிறப்பு உண்டெனக்காட்டுதற்கு ஓர் புதுநியாயம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றதென "இந்துசாதனம்" 17-ம். புத். 6-ம். இலக்கப்பத்திரிகை கூறிற்று. அப்பத்திரிகை சொல்லியதாவது:—"நமது சைவமதத்தின் விசேஷித்த கொள்கை"யாகிய மறுபிறப்புக்கொள்கை "இதுகாறும் அநுமானப்பிரமாணங்கள் கொண்டே ஸ்தாபிக்கப்பட்டுவந்தது. ஆனால் இப்போது தற்கால ஐரோப்பியசாஸ்திரத்தாலும் இது நேரே உருசுப்படுத்தப்படத்தக்கதாயிருக்கின்றது."

மறுபிறப்புக் கொள்கையானது தற்கால ஐரோப்பிய சாஸ்திரத்தினால் நேரே ருசுப்படுத்தப்படுவது எவ்வாறு என்பதைப் பரிசோதிப்போமாக. "இந்துசாதனம்" சொல்லியதாவது:

"கேணல் டீ. ரோஜஸ் என்னும் ஓர் ஐரோப்பிய சாஸ்திரி மறுபிறப்புண்டென்பதை துரிய தரிசன சாஸ்திரம் (Mesmerism) மூலமாக உருசுப்படுத்தியிருக்கிறார். இவர் மேரிமேயோ என்னும் ஓர் பிரெஞ்சுப்பெண்ணைத் துரியதரிசனத்துக்குள்ளாக்கியபோது அம்மாது தனது தற்காலசீவியத்தின் சிறுபராயத்தில் நடந்தவைகளை மாத்திரமன்று தனது முன்னிருபிறவிகளில் நடந்தனவற்றையுஞ் சொல்லினள். மேரிமேயோ என்பவள் கீழைத்தேசத்தில் ஓர் றெயில்வே இஞ்சினீராகவிருந்து இறந்துபோன ஓர் பிரெஞ்சுக்காரனின் மகள். ஒன்பது வயதுப்பிராயம்வரையும் இவள் சீரியாதேசத்திலிருந்து அரபிப்பாஷையை வாசிக்கவும் எழுதவும் கற்றாள். பின் அவள் பிரெஞ்சுக்குச் சென்று புரோவென்ஸ் என்னுமிடத்தில் இருந்த தன்மாமியாரோடு வசித்தாள். அவள் துரியதரிசனநிலையை அடைந்தபோது கேணல் டீ. ரோஜஸ் அவளை உனக்கு வயதெத்தனை எனக் கேட்டனர். அப்பொழுதவள் பதினெட்டெண விடைபகர்ந்தனள். பின் அவர் அவளைப் பதினாறு பதினாலு பன்னிரண்டு பத்து முதலிய சிறுவயதுப்பராயங்களையடையும்படிசொல்ல அவளங்ஙனமே தன்மனதிலடைந்தனள். பத்துவயதுப்பராயத்தை அவளடைந்தபோது கேணல் டீ. ரோஜஸ் அவளை நீ எங்கேயிருக்கிறாயெனக் கேட்டனர். அதற்கவள் சீரியாவென விடைபகர்ந்தனள். இவ்வயதில் நிகழ்ந்த சம்பவங்களெல்லாம் இவளுக்கு நினைப்பில் வந்தன. இவள் அரபிப்பாஷையில்முன் கற்றுப் பின் மறந்துபோன ஓர்சொல் இப்பொழுது இவள் ஞாபகத்திற்குவந்தது. இவள் நாலு வயதுப்பராயத்தையடைந்தபோது நீ எங்கேயிருக்கிறாயெனக் கேட்க மார்சேல்ஸ் எனச்சொன்னாள். இரண்டுவயதில் எங்கேயிருக்கிறாயென புரோவென்ஸ் என்றனள். ஒரு வயதுப்பராயத்தை இவள் தன் மனதிலடைந்தபோது இவளுக்கு ஆம் அல்ல என்றுசொல்லவொழிய வேறொன்றுந்தெரியவில்லை. இதற்குமுந்திய நிலையையடையும்படி செய்தபோது அவளுக்குத் தானிருக்கிறதாகமாத்திரம் தோற்றியதன்றி வேறொன்றுந் தோற்றவில்லை, தாயின் கர்ப்பத்திலிருந்த நிலையையடையும்படி செய்தபோது ஏதோ தன்னைப் பிறவியெடுக்கும்படி ஏவிவிட்டதென்றும், தான் பிறக்கச் சிறிதுநேரத்துக்குமுன்னமே தனது சூக்குமசரீரம் அந்தச் சிறு சரீரத்தில் புகுந்ததென்றும் அதற்குமுன் தான் தாயின் சரீ

ரத்தைச் சுற்றிநின்றதாகவுஞ் சொன்னாள். தனது சூக்குமசரீரம் பொக்குள் தொடர் விடுபட்டவுடனேயே ஸ்தூலசரீரத்துட் புகுந்ததெனச் சொன்னாள். தாயின் கர்ப்பத்துட் புகுமுன் இவளிருந்த நிலையையடையும்படி செய்தபோது இவள் தான் முன் லினுவென அழைக்கப்பட்ட ஓர் பெண்ணாயிருந்ததாகவும், பிறிற்றனி என்னுமிடத்திலிருந்த ஓர் வலைஞனுக்குத் தான மகளாய்ப் பிறந்து, உ௦-ம் வயதில் தான் விவாகஞ்செய்தாளென்றும். தனது புருஷனும் ஓர் வலைஞசாதியானென்றும், தனக்கு ஒரு பிள்ளையிருந்ததென்றும், அப்பிள்ளை இரண்டு வயதிலிறந்துபோனதென்றும், தனது புருஷன் கடலில் மாண்டுபோக அத்துக்கத்தைச் சகிக்க ஏலாது தானோர் செங்குத்தான மலையிலேறிக் கடலுட் குதித்து இறந்துபோனதாகவும், தனது சரீரத்தை மச்சங்கள் தின்றதாகவும், அப்படிக் கடலில் வீழ்ந்திறந்தபோது தனக்கு ஒன்றுந்தெரியவில்லையென்றும், ஆனால் மரணத்தின்பின் தான் மேலேயெழுந்தபொழுது ஆகாயத்தில் சில பிரகாசமுள்ள சிருஷ்டிகளைக் கண்டதாகவும், அச்சிருஷ்டிகளுடன் பேசிக்கொள்ளத் தான் விடப்படவில்லையென்றும், அப்படியிருந்த நிலையில் தான் துக்கத்தையாவது சந்தோஷத்தையாவது அடையவில்லையென்றும், தனது பிள்ளையையும் புருஷனையுங் கண்டுகொள்ளத் தான் பலமுறை தெண்டித்தும் வாய்க்கவில்லையென்றுஞ்சொன்னாள்." "கேணல் டீ ரேஜஸ் இவளை இவள் லினுவாயிருந்த பிறவிக்குமுன்னிருந்த நிலையை அடையும்படி செய்தார். அப்பொழுதவள் அந்த நிலையையடைந்து பதினேழாம் (sic) லூயிஸ் சக்கரவர்த்தியின் காலத்தில் தானோர் ஆடவனாக இருந்ததாகவும், தான் பரிசில் மந்திரியார் ஆபீசில் ஓர் கிளார்க்காகவிருந்ததாகவும், அக்காலத்தில் தெருக்களில் சனங்கள் சண்டைசெய்து ஒருவரையொருவர் கொன்றார்களென்றும், தானுஞ் சிலரைக் கொன்றானென்றும், தானொரு துர்ச்சனனாயிருந்தானென்றும், தனக்கு ஐம்பதுவயதானவுடன் சுகவீனத்தின்பொருட்டு வேலையை விட்டுச் சிறிதுநாட்களுள் இறந்துபோனானென்றுஞ் சொன்னாள்."

"கேணல் டீ. ரேஜஸ் என்பவரால் பரீட்சிக்கப்பட்ட மேரிமேயோ என்பவள் மேற்கூறிய பிறப்புக்குமுன் ஓர் சிறுபிள்ளையாயிருந்து மிகச் சிறுவயதிலே இறந்துபோனதாகவுஞ் சொன்னாள்."

"இப்பெண் துரியதரிசனநிலை (Mesmeric State) யிலிருந்து சொல்லியதெல்லாம் உண்மையென்றேகொள்ளத்தக்கது. இது மறுபிறப்புண்டென்பதற்கு ஓர் பிரத்தியட்ச சாட்சியாகின்றதல்லவா?"

## சத்தியவேத பாதுகாவலனிற் தோன்றிய விடை.

இப்பெண் "துரியநிலையில்" அதாவது சொப்பனநிலைக்கும் மேற்பட்டதாகிய மிகவும் அயர்ந்த நித்திரைநிலையில் "சொல்லியதெல்லாம் உண்மையென்றே கொள்ளத்தக்கது" என்கிறது இந்துசாதனப் பத்திரிகை. ஆனால் ரேஜஸ் என்பவர்தாமும் இந்துசாதனபத்திரிகையின் நம்பிக்கையோடு பேசியிருக்கவில்லையே. மேலே இந்துசாதனத்தினாலே குறிக்கப்பட்டவைகளை ரேஜஸ் என்பவர் எழுதியபின் அதற்கு முடிபுரையாகச் சொல்லியதாவது: "துரியநித்திரைக்குள்ளானவர்கள் தாங்கள் முன்னே போட்டதாகச் சொல்லும் ஆள்வேஷங்கள் மெய்யாகவே உலகத்திற் சீவித்த பெயர்வழிகள்தாமென்று காணப்பட்டால், அப்போது ஆன்மாவானது மரணத்துக்குப்பின் சீவிக்கின்றதென்பதற்கும் மறுபிறப்புக்

கள் அதற்குண்டென்பதற்கும் ஓர் பெலக்க அத்தாட்சி கிடைத்திருக்கும். ஆனால், துர்அதிஷ்டம. இதற்கு அத்தாட்சியோ காணப்படவில்லை" என்கிறார். (Quoted in the Examiner, Bombay Oct. 21. 05) இது மாத்திரமல்ல, கேணல் ரோஜஸ் மேற்கண்டவைகளை எழுதியதற்குப் பலமாசங்களின்பின் எழுதியவொரு கடிதம் புரட்டாசிமீ 20-ம். உ வெளிப்பட்ட Catholic Herald of India என்னும் பத்திரிகையிலே வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றது. அதின் மொழிபெயர்ப்பாவது:—"இப்பிறப்புக்கு முந்தியகாலங்களுக்குள்ளே ஞாபகமானது பின்வாங்கிப்போகக் காணப்படுதல் துரியநித்திரையடையும் அந்தந்த ஆளுடைய மனோபாவனையின் விளையாட்டல்லவென்றும் அது வெவ்வேறு ஆட்களிலும் வெவ்வேறு சாஸ்திரிகளாலும் ஒரேவித விபரங்களோடு காணப்பட்ட இயற்கைச்சம்பவமேயென்றும் நான் போதிய பரீட்சைகளாலறிந்தவுடனே, துரியநிலைக்குட்படும் ஆட்கள் தங்களுடைய முந்திய பிறப்புக்களென்று சொலலும் பெயர்வழிகள் உள்ளபடியே சீவித்திருந்த ஆட்கள்தாமோவென்றறியத் தீர்மானித்துக்கொண்டேன். இந்தத் தீர்மானத்தோடு நான் அந்தந்த இடங்களின் தலைமைக்காரர்களுக்கும் (Mayors) விசாரணைக் குருமாருக்கும் எனக்கு அறிமுகமுள்ளோருக்குமெழுதி அவ்வவ்விடங்களிலுள்ள வயதுபோன மனுஷரிடத்தில் விசாரித்தும், பதிவுஇடாப்புக்களை ஆராய்ந்துபார்த்தும் துரியநிலைக்குள்ளான ஆட்கள்சொல்லிய பெயர்வழிகளுள் மிகப் பிந்தினவைகளைத் தேடச்செய்தேன். முடிவு எப்போதும் ஒன்றேயாயிருந்தது. அதாவது: சொல்லப்பட்ட பெயர்வழிகள் சொல்லப்பட்டபடி சீவித்தார்களென்றதற்கு ஒரு அத்தாட்சியும் காணக்கூடாமற்போயிற்று" என்கிறார்.

ஆகையால் "மறுபிறப்புண்டென்பதற்கு ஓர் பிரத்தியட்ச சாட்சி" கிடைத்துவிட்டதென்று "இந்துசாதன" பத்திரிகை சொல்லியது உண்மையன்று. மேரி மேயோ வென்பவள் அயர்ந்த நித்திரையிலிருந்து "சொல்லியதெல்லாம் உண்மையென்றே கொள்ளத்தக்கது" என்பதற்கு ஒருதினையளவு அத்தாட்சியுமில்லை.

இப்படியானால் அப்பெண் சொலலியவைகளைக் குறித்து நாம் நினைக்கத்தக்கது யாதெனில், துரியநிலையென்னப்படுகிற நித்திரைநிலையிலும் சாக்கிரம் என்னப்படுகிற விழித்திருக்குநிலையிலும் "அகம்" அல்லது, ஆட்தன்மையொன்றேயாதலால், ஒரு ஆள் சாக்கிரநிலையில் அறிந்தவைகளைத் துரியநிலையிலும் சொல்லக்கூடும். சாக்கிரநிலையில் மறந்திருக்கிறவைகளையும் சிலவேளை துரியநிலையில் நினைவுகூரக்கூடும். நமது இளம்பராயத்தில் நடந்த சிலகாரியங்களை நாம அநேகவருஷங்களாய் மறந்திருந்தபின் கனவிலே காண்பது அநுபவசித்தமே. அன்றியும் கனவில் பலமுறையும் காலத்திட்டம் மாறுண்டு, இப்போது நடந்தவைகள் முற்காலம் நடந்தவைகள்போலவும், முற்காலம் நடந்தவைகள் இன்னும் நடந்துகொண்டிருப்பவைகள்போலவுங் காணப்படுகின்றன. ஆகையால், சில இயற்கை உபாயங்களால் துரியநிலையெனும் மிகவும் அயர்ந்த சொப்பனநிலைக்குக் கொண்டுவரப்பட்டவர்கள் தாங்கள் பிறந்தபின்னேயே கண்டுங் கேட்டும் வாசித்தும் அறிந்திருக்குங் காரியங்களைப் பிறக்குமுன் வேறேதோ நிலையிற் தங்களுக்கே சம்பவித்ததாக உணரவுங்கூடும். நடபடியான கனக்களிலேயே எத்தனையோ தலைகீழான காரியங்களை நாம் காணும்போது அபூர்வமான கனவாகிய துரியக்கனவிலே எவ்வளவுதா

றுமாறுசஞுண்டாகுமெனக் காத்திருக்கலாம். எத்தனையோமுறை நாம் இதிகாசங்களில் வாசித்தறிந்த இன்ன ஆட்களே நாமென்று கனவில் எண்ணிக்கொள்ளுகிறோம். அப்படியே துரிய நிலையையடைந்தவனும், தானே, முற்காலம் உள்ளபடியே சீவித்த சரித்திரசம்பந்தமான ஓர் ஆளென்று எண்ணிக்கொள்ளுதல் அதிசயமல்ல. நான் கம்பருடைய சரித்திரத்தை வாசித்தபின் படுத்துறங்குகையில், நான்தான் கம்பர், இன்ன விடத்திலேயிருந்து இராமாயணத்தைப் பாடினேன், இன்னசபையிலே அதனை அரங்கேற்றினேன் என்று கனக்காண்பேனுனல் அதினுலேயெனக்கு ஒரு முற்பிறவியிருந்ததென்ருவது அதிலே கம்பராய்ப் பிறந்திருந்தேனென்ருவது ருசுவாகுமா? பலமுறையும் பைத்தியக்காரர் தங்களைக கடவுளென்று எண்ணிக்கொள்ளுகிருர்களே. அதினுல் ருசுவாகிறதென்ன? கச்சேரி விசரனுடைய கதையையுமறிவோமே.

ஆயின், துரியநிலையிலே ஒரு ஆள் தன்னை வேருேராளாக எண்ணிக்கொள்ளக் கூடுமானுலும், பெண்பிள்ளை தன்னை ஆண்பிள்ளையாகவும் எண்ணிக்கொள்ளக்கூடுமோவெனில், அதுவுங் கூடியதுதான். நாம் மேலே எடுத்து அநுவதித்த எக்சாமினர்ப் பத்திராதிடர் இவ்விஷயமாய்ச் சற்றே விநோதமானவோர் கதையைச் சொல்லுகின்ருர். அதாவது, தமக்கு அறிமுகமானவொரு வாலிபன் சாரீரகசாஸ்திரம் படித்துவரும்போது, ஒரு நாள் நித்திரையிலே, தான் பிரசவவேதனைப்படுவதாய்க் கண்டு பெரும் மனேவேதனைப் பட்டுக்கொண்டிருந்து திடீரென விழித்தபோது காரியம் மெய்யல்லவென்றுகண்டு வெகு ஆறுதலடைந்தானென்றும், கதையினுண்மைக்குத் தாமே சாட்சியென்றும் சொல்லுகிருர். கருத நினைக்ககூடாத மாறுபாடெல்லாம் கனவிலே உண்டாவதைச் சகலருமறிவார்கள். ஆகையால் துரியநிலையிலே காண்கிறவைகளால் யாதொன்றும் ருசுவாகமாட்டாது.

ஆனுல், துரியநிலக்குள்ளான ஒரு ஆள், தான் முற்காலம் போட்டிருந்ததாகச் சொல்லும் ஆள்வேஷங்கள் உள்ளபடியே உலகத்திலிருந்த பெயர்வழிகள்தாமென்று கண்டுகொண்டகாலத்திலாவது மறுபிறப்புண்டென்பதற்கு அது "ஓர் பிரத்தியட்ச சாட்சி"யாகுமா? ஆகாது. ஏனெனில் துரியநிலைகருள்ளான ஆள், அப்படிப்பட்ட பெயர்வழிகள் முன் இருந்ததைச் சுட்டி, கேள்வியினுல், அல்லது வாசிப்பினுல் அல்லது தன்னை அந்தநிலைக்குள்ளாக்கிய ஆசானின் குறிப்பினுல், அல்லது பிசாசுமுதலிய அரூபிகளின் உதவியினுல் அறியக்கூடும். இந்தவழிகளுள் ஒன்றினுலும் அப்பெயர்வழிகள் துரியநிலைக்குள்ளான ஆளுக்கு அறியவந்ததில்லையென்றுதான் நிச்சயம்பண்ணிக்கொண்டபோதிலும், அப்பால், அப்பெயர்வழிகள் இந்த ஆட்தானென்றதற்கும் அத்தாட்சிவேண்டும் நான் இன்னின்னுராயிருந்தேன் என்றுசொல்லுதல் மாத்திரம் போதாது. எக்சாமினர் பத்திரிகை இதனை ஓர் உதாரணத்தால் விளக்குகின்றது. மேரி மேயோஎன்பவள் ஓர் வேளை துரியதரிசனத்திலே இன்னும் விருத்தியடைந்து, தான் முற்காலம் கிளேயோப்பாத்திரு என்னும் இராணியாகவிருந்ததாகக் கண்டுபிடித்தாளென வைத்துக்கொள்வோம். வைத்துக்கொண்டாலும், கிளேயோப்பாத்திரு இராணி உள்ளபடியே இரண்டாயிரம் வருஷங்களின்முன் உலகத்திலே சீவித்திருந்தாளெறதினுல் அவளே இவளென ருசுவாகமாட்டாது. ஆனுல் உதாரணமாய், மேரிமேயோ தான் கிளேயோப்பாத்திருவாய் இருந்தகாலத்தில் அலச்சாந்திரியாவிலே சுவர்

ணைவீதியிலே வசித்தபேர்சேயுஸ் என்னும் வர்த்தகனிடத்திலே ஐந்துமயில்களும் ஒரு குடுமிக்குச்சும் இத்தனை காசுகொடுத்து வாங்கிக்கொண்டதாகத் தூரியதரிசனத்திற் கண்டாளென்று அநுமானித்துக்கொள்ளுவோம். இனி, இற்றைக்கு இரண்டுவருஷங்களின்பின் றெண்டல் ஹறிஸ் என்னும் சாஸ்திரி அல்லது பழம்பொருள்தேடும் வேறொருவர் இரண்டாயிரம்வருஷமாக மண்ணுட்புதைத்திருந்த ஒரு பழம் இலைச்சாதனத்தைக் 'கண்டெடுக்கிறாரென்றும், அதனைவெகுபிரயாசையோடு வாசித்துப்பார்த்தவளவில்அது மேரிமேயோ சொல்லிய வர்த்தகன் கிளேயோப்பாத்திறாவுக்கனுப்பிய ஓர் பற்றுச்சீட்டாகக் காணப்படுகின்றதென்றும், அதிலே கிளேயோப்பாத்திறாவின் பெயரும், அவன் அவளுக்கு விற்ற சாமானும விலையும் முதலிய விபரமெல்லாம் மேரிமேயோ சொல்லியபடியே இருக்கிறதென்றும் வைத்துக்கொள்ளுவோம். அப்போதுதான், நாம் யோசனையோடு உட்கார்ந்திருந்து மறுபிறப்பினுண்மையைப்பற்றிச் சிந்திக்கவேண்டியவர்களாவோம். அப்போதும், அது மறுபிறப்பினுண்மைக்கு ஓர் “பிரத்தியட்ச” சாட்சியாவதற்கு இன்னுமோர் தடையிருக்கும். அதாவது: மேரிமேயோ முன்னே கிளேயோப்பாத்திறாவாயிராமலுமே இவ் விபரங்களை, ஒன்றில் அந்த இராணியின் ஆன்மாவினால், அல்லது வர்த்தகனின் ஆன்மாவினால், அலலது பிசாசினால் அறிவிக்கப்பட்டுச் சொல்லியிருக்கலாமேயென்ற சந்தேகம் நமக்கு இன்னுமுண்டாகக்கூடும்.

ஆதலால் “இந்துசாதனம்” கூறும் “பிரத்தியட்ச சாட்சி” இன்னுமுலகத்துக்குக் கிடைக்கவில்லையெனபது நிச்சயமே.

IMPRIMATUR.

J. B. Baron O. M. I.

*15th. Septr.* 06. *Admir.*

Printed by L. John-Mary S. S. J. Colombogam, Jaffna.

# Answers to Saivites

## PART. I.

# சைவர் ஆட்சேப சமாதானம்.

முதலாம்பாகம்.

"சமன்செய்து சீர்தூக்குங்கோல்போல் அமைந்தொருபாற் கோடாமை சான்ரோர்க்கணி." [திருவள்ளுவர்.]

*Permissu Superiorum.*

Jaffna, St. Joseph's Catholic Press, 1907

# CATHOLIC TRACTS.

---

1. **Two Capital Lies**—இரண்டு படுபொய்கள்
2. **An Important Duty**—ஒரு பெருங்கடமை
3. **The Royal Road**—இராச பாதை
4. **The Soul**—ஆத்துமம்.
5. **The Divine Teacher**—சற்குரு.
6. **The Nature of God**—கடவுளிலட்சணம்.
7. **Idolatry and Image-worship**—விக்கிரகாராதனையும் சுரூபவணக்கமும்.
8. **Metempsychosis**—மறுபிறப்பு.

☞ மேலே காட்டிய துண்டுப்பத்திரங்களை யாழ்ப்பாணம் அர்ச். சூசைமாமுனிவர் அச்சியந்திரசாலைத் தலைவருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

CATHOLIC TRACT
NO. 9.

# ANSWERS TO SAIVITES.

# சைவர் ஆட்சேபசமாதானம்.

முதலாவது

## தேசாசாரப் பிரகரணம்.

1 ஆட்சேபம்.—கிறீஸ்துசமயம் தமிழராகியநமக்குட் பரவுமாயின் நம் தேசாசாரங்களெல்லாம் கெட்டழிந்துபோமென அஞ்சவேண்டியிருக்கின்றது.

சமாதானம்.— கிறீஸ்துசமயம் கத்தோலிக்கமானது: அதாவது; சகல காலதேசங்களுக்கும் பொதுவானது. ஆதலால், அது ஐரோப்பிய ஆசாரங்களை நாட்டுதலுஞ் செய்யாது. தமிழ் ஆசாரங்களை அழித்தலுஞ்செய்யாது.

அவ்வத்தேசத்தையும் குலத்தையும் சார்ந்தவர்களாயுள்ள நல்லாசாரங்கள் லௌகிக ஒழுக்கத்துக்குரிய விஷயங்களேயன்றிப் பரகதியைப்பற்றியவைகளல்ல. ஆதலால், மோக்ஷத்தை அடைவிப்பதையே தன் இலக்காகக்கொண்ட சத்தியசமயத்துக்கு இவைகள் பொதுமலான விஷயங்களாம். இவைகளை அது விதித்தலும் செய்யாது. விலக்குதலும் செய்யாது. சத்தியசமயம் கத்தோலிக்கமானது; அது எவ்வெத்தேசத்துக்கும் எவ்வெக்காலத்துக்கும் ஏற்றது. தற்காலம் அதை ஐரோப்பியர் நமக்குப் போதிக்கநேர்ந்தமையொன்றுபற்றி, அது ஐரோப்பிய சமயமாகாது. ஆதியில் அச்சற்சமயம் உற்பத்தியானது ஆசியாவிலேயே. அதன் ஆதிக்குரவர்களும் ஆசியரே. கிறீஸ்துநாதரின் திருச் சீடர்களுள் ஒருவரான தோமாஸ் அப்பர், நம் இந்தியாவிலும்வந்து சத்தியசமய ஒளியைப் பரப்பினர். அவர்காலந்தொட்டு இந்தியாவின் மேற்பாகத்தில் கிறீஸ்தவர்கள் என்றும் விளங்கியிருக்கின்றனர். கி. பி. நாலாம் நூற்றாண்டின் சுற்றிலேயும் இந்தியாவின் திருச்சபையிலே பிராமண குலத்தவர்கள் குருக்களாய் விளங்கினார்களென்பதைத் திருச்சபைச் சரித்திரகற்றோர் அறி

வர். ஆசியாவில் முதன்முதற் பரவியதாகிய சத்தியசமயமெனும் ஞான சூரியன், தான் தோன்றிய திசையிற் றன் ஒளியை அடக்கிவையாது அதனை ஐரோப்பாவிலும் உலகத்தின் எண்டிசையிலும் பரப்புவதாயிற்று. அப்பால் ஆசியராகிய நாங்கள் காலகதியிற் சீரிழந்து கொடுங்கோன்மன்னர் வசப்பட்டு எங்கள் ஆதிநாகரீகத்தையும் பறிகொடுத்து அஞ்ஞானசமயங்களில் அமிழ்ந்தினோராய் நெடுநாட்கிடந்துவிட்டோம். அதன்பின்னர், ஐரோப்பியர், தங்கள் திருத்தமான நாகரீகத்தோடு, தாங்கள் ஏலவே மேற்கொண்ட சத்தியசமயத்தையும் எங்களுக்குக் கொண்டுவரவே, முன் ஒருகால் அவர்கள் எங்களிடம் கற்றதையே நாங்கள் இப்போது அவர்களிடம் கற்கவேண்டியவர்களானோம். ஆதலால், ஐரோப்பியரால் இக்காலம் அறிவுறுத்தப்படல் அவசியமாய் வர்தமைபற்றி, சத்தியகத்தோலிக்க சமயமானது ஐரோப்பிய சமயமாகாது. அதிலே ஐரோப்பியரோ ஆசியரோ, வெள்ளைமனுடரோ காப்பிரிகளோ, சீனரோ அமரிக்கரோ, ஆரியரோ மிலேச்சரோ, பண்டிதரோ பாமரரோ, வடதுருவத்தைச் சார்ந்ததேசத்தவர்களோ தென்துருவத்தைச்சார்ந்த தேசத்தவர்களோ, சகலருமேயுட்பட்டுத் தத்தம் தேச குல ஆசாரங்களுக்கு ஒருசிறிதும் பங்கமின்றி ஒழுகிவருகின்றார்கள். கத்தோலிக்கசமயம் ஐரோப்பிய அரசுமுறையை விதித்ததுமில்லை. ஆசியாவின் அரசுமுறையை விதித்ததுமில்லை. ஐரோப்பிய தேசாசாரங்களை விலக்கியதுமில்லை. ஆசியதேசாசாரங்களை விலக்குவதுமில்லை. லௌகீக சதாசாரங்கள் * எல்லாம் அதற்கு நொதுமலானவிஷயமாமெனை முன்னரும் சொன்னோம். கத்தோலிக்க சமயமானது அனைத்தையும் படைத்தளித்தழிக்கும் ஏக கடவுளையும், கருணைகரக்கடலான அவர் மானுடரை ஈடேற்றத் திவ்விய சற்குருவாய் எழுந்தருளிவந்தமையையும், அவரை வழிபட்டு உய்யும் மெய்ஞ்ஞான மார்க்கத்தையுமே கற்பிக்கின்றது.

ஆயின், சைவசமயமோ ஓர்தேசத்துக்குமாத்திரமுரியதென்பது அதற்கு இன்றியமையாதவைகளாகிய ஆசாரங்களாற் பெறப்படும். வருணாச்சிரமம் அல்லது குலதருமமே முத்திக்குச் சோபான முறையானவழியென்பது பகவத்கீதை முதலிய இந்துநூல்களின் சாரமாம். மச்சமாமிசங்கள் புசியாதிருத்தல் சைவசமயத்துக்கு மேலான சாதனமாம். தினந்தோறும் ஸ்நானம்செய்தல், தோய்த்துலர்ந்தவஸ்திரம் தரித்தல், வெறுந்தேகத்தின் பல

---

* முழுதும் லௌகிகமான, சத்ஆசாரங்களையே இங்கு குறிக்கின்றோம். இந்துசமயகொள்கைகளோடு சேர்ந்தவைகளான உடன்கட்டையேறுதல், நரபலியிடுதல், நீரிலாழ்ந்து தற்கொலைசெய்துகொள்ளுதல், தீக்குளித்துமாளுதல், கழுத்தையறுத்துக்கொள்ளல் முதலிய துர் ஆசாரங்களுக்குக் கிறீஸ்துசமயம் ஓர்போதும் இடங்கொடாது. கிறீஸ்துசமயபோதனையினாற் திருத்தம்பெற்றோரான ஐரோப்பியரின் அரசு இந்தியாவுக்கு வந்தமையினாலேயே இக்கொடுமைகள் ஒருவாறு குறைந்திருக்கின்றன. சிறுபிள்ளைவிவாகம், சிறுபிள்ளைவிதவைகளுக்கு மறுவிவாகஞ்செய்ய இடங்கொடாமை, நியோகம் [இறந்த மலடன்றனையனைவுணரிற் றன்குலத்தொருவனையெய்தித் சொற்றகுமனைவியுடன் முயங்குவித்துப்புதல்வனைப் பெறுதல் தொன்னெறியே. "சந்தானதீபிகை"— என்பதிலடங்கிய முறைமை]முதலியன துராசாரங்களேயாம் எனத்தற்கால இந்திய தேசாபிமானிகளெல்லாம் ஒப்புகின்றனர். "நிதாரநிகாரண நிக்கிரகம்" 19,22-ம் பக்கங்களிற் பாக்கக்காண்க.

விடங்களில் விபூதி பூசுதல் இவையெல்லாம் அகத்தியமான சங்கேதங்க
ளாம். புண்ணியபூமியென விசேடித்துக் கூறப்படும் பரதகண்டத்திற் பிறந்
தவர்களுக்கே வேதமும் ஆகமங்களும் ஓதப்படலாம். மற்றையோரெல்
லாம் மிலேச்சராதலால் அவர்களுக்கு இவற்றை உபதேசித்தல்பெரும்பாதக
மாம் எவரும் புண்ணியபூமியாகிய இந்தியாவில் உயர்குலத்திற்பிறந்தபின்
னே முத்திக்குரிய உபதேசத்தை அடைதல்வேண்டுமாதலால் மற்றையோர்
முத்தியடைதல்கூடாது. அன்றியும், பிராமணர் கடல்தாண்டிப் பிறநாடுக
ளிற்செல்லுவரேல் சாதியிழந்து பதிதராய்ப் பேர்வார்கள். இன்னனபல
ஆசாரங்களைத்தன் சமயவுபதேசங்களாகக்கொண்டதாகியசைவசமயம்இந்
தியாவையொழிந்த பிறதேசங்களில் எப்படிப்பரவுதல்கூடும்? ஐரோப்பியர்
தமது விஸ்தாரமான தொழில் துறைகளிலெல்லாம் வருணாச்சிரமத்தை
அநுசரித்தல்வேண்டுமாயின், அவர்களது உயர்தரச் சீர்திருத்தம் எத்து
ணைச் சிறுபொழுதிலே நிலைதடுமாறித் தலைகீழாகாது! ஐரோப்பிய வேலைத்
தலங்களிற் சாதியாசாரத்தை அநுசரித்தல் எங்ஙனம் அமையும்? வட
தென் துருவவாசிகள் மச்சமாமிசங்களின்றிப் பிழைத்திருத்தலுங் கூடுமா?
அப்பால், நெடுநாட்களாய் நெருப்புமூட்டிக் குளிர்காய்ந்துகொண்டிருக்க
வேண்டியவர்கள், நாடோறும் ஸ்நானம்பண்ணை யாதுசெய்வார்கள்? இவற்
றையாதுக்கெடுத்துரைக்கின்றோம்?—கடல்தாண்டிச்சென்று மிலேச்சதே
சங்களிற் சைவசமயத்தை உபதேசிப்போர், சாதியிழந்து ஒழுக்கமிழந்து
எரிவாய்நரகுக்காளாவர் என்றிருப்பதினால், சைவசமயம் இந்தியாவுக்கப்
பாற் தலைகாட்டுவது எங்ஙனம்? * இந்நாட்களில் அமரிக்காவில் விவே
காநந்தர் சென்றுபோதித்தனரே, லண்டன்நகரிலும் ஓர் இந்துக்கோவில்
உண்டே எனில், விவேகாநந்தர்சென்று போதித்த சமயம் சைவசமய
மன்று, அது அவர்தாம் கிறிஸ்துசமயமுட்படப் பலசமயங்களிலுமின்று
பொறுக்கிச்சேர்த்ததோர் புதுமோடியான சமயமாம். அன்றி, விவேகாநந்
தர் அமரிக்காவிற் போதித்தது சைவசமயமே எனில், அவர் கடல்கடந்து
(டக்தர் பரோஸ் முதலியோர் அந்நாட்களிற் சாட்சியிட்டபடி) அமரிக்கா
வில் மாட்டிறைச்சிதின்று ஒழுக்கங்கெட்டதோடு, "நால்மறைபயிலாநாட்
டி"லே பிறந்தோராய் "தவஞ்செய் சாதியிலே" பிறவாது, "பரசமயங்கட்
சென்"றோராயுள்ள (சிவஞானசித். 2, 30) மிலேச்சருக்குமுத்திநெறியைப்

* சாதிக்கட்டுப்பாடுள்ள ஓர்சமயம் எங்கெங்கும் அநுசரிக்கப்படத்தக்க
தாயிருத்தல் கூடாதென்பது வெளிப்படை. இதனைத் தற்கால இந்துக்
களுள் வியுற்பத்திமான்களாயுள்ளோர் மேலும் மேலும் உணர்ந்துவரு
கின்றார்கள். "இந்துசாதன"ப்பத்திரிகையிலே( 1906-ம் ஆண்டு புரட்
டாசி 5-ந்திகதி)அனுவதிக்கப்பட்ட ஓர் விஷயத்திலே பின்வரும் வார்த்
தைகள் காணப்படுகின்றன: ' ஜாதிவேற்றுமையானது ஸநாதனதர்மத்
தோடு சம்பந்தப்பட்டதல்லவென்றும், அது சில சவுகரியங்களை உத்
தேசித்து மனிதர்களால் செய்துகொள்ளப்பட்ட கட்டுப்பாடேயாகும்
என்றும் ஸ்வாமி அபேதாநந்தர் அபிப்பிராயப்படுதல் கவனிக்கப்படத்
தக்கது"—சுவாமி அபேதாநந்தர்கூற்று உண்மையேயாயினும் அது
இந்துநூல்களுக்கு எதிரானதேயாம். ' வருணங்களின் நால்வகையான
பிரிவு என்னாற் செய்யப்பட்டது" எனப் பகவத்கீதையிற் கிருஷ்ணன்
சொல்லுதலையும், மனுஸ்மிருதி (8-ம்புத். 413) முதலியனவையுங்
காண்க.

போதிக்கச்சென்றமை மகா பாதகமென்க.* அப்பால், லக்ஷோம்புரியி லுள்ள இந்துக்கோவில் அங்கு ஒழுக்கந்தவறிப்போய்க் குழுமியிருக்கும் சில இந்தியருக்காகவும் இந்தியராலேயும் எடுக்கப்பட்டதாதலால் அதனைக் கொண்டு முடிக்கும் நியாயம் ஒன்றுக்கும் பற்றாது என விடுக்க.

ஆதலாற் கத்தோலிக்க சத்தியசமயமே உலகெங்கணும் பரவுதற்குரிய சமயம்; அஃதொன்றுமே ஆதிதொட்டு உலகெங்கணும் பரந்திருக்கின்ற சமயம். அது ஐரோப்பிய சமயமன்று, எத்தேசத்துக்கும் பொதுவான சமயம்; ஆதலால் அது தமிழராகிய நமது சதாசாரங்களை அழியாது அழியாது.

**2. ஆக்ஷேபம்.—ஆயின் கிறீஸ்துசமய போதனை சாதிப்பகுப்பிற்கு விரோதமாய் நிற்கின்றதன்றோ?**

*சமாதானம்*— **உண்மையான கிறீஸ்துசமயபோதனை நியாயமான சாதிப்பகுப்பிற்கு விரோதமன்று, சகோதர அன்புசெய்யாமைக்கே விரோதமானது.**

கிறீஸ்துசமயத்தினின்றும் புரண்டு பதிதராகிய மாட்டீன் லுத்தரும் பிறரும் உண்டாக்கிய போலிக் கிறீஸ்துசமயமாகிய புறோட்டெஸ்தாந்து (இறப்பிறமாது) மதத்தவர்களே நியாயமான சாதிப்பிரிவையும் அழிக்கத் தேடுவர். அன்றியும், இங்கிலீஷ் அரசின் சார்பும் நந்தேசத்துச் சாதிப்பிரிவுக்கு எதிரானதேயாம். ஐரோப்பிய அரசும் சீர்திருத்தமும் இங்கு வந்தமையினாலேயே, ஐரோப்பிய உடைதரித்தல், மாமிசம் மது முதலியவைகளை மிதமிஞ்சி அருந்துதல், ஸ்திரீகள் ஆடவர்களுடன் கைகுலுக்குதல், அரங்கத்திற் களியாட்டயர்தல் † முதலியவைகளோடு, சாதிப்பிரிவு அழிதலும் நமக்குட் பெருகிவருகின்றதன்றிச் சத்தியசமயத்தின் முயற்சியாலன்று. உலக வியவகாரத்திலே வண்ணான் அம்பட்டன் பறையன் பள்ளன் எனவிருப்பது சத்தியசமயத்துக்கு எதிரிடையன்று. சில சாதிகள் பிறப்பி

---

*"பரிபக்குவம் இருவினையொப்பு தீட்சை ஊழ் என்பனவற்றைக்கருதாது முத்திநெறியாகிய சைவ சித்தாந்தத்தைக் கண்டபடி யார்க்கும் போதிப்போர் எரிநரகுக்காளாவர்" என்பது சைவசமயநூல்களின் துணிபாம்.

† இது நம்தேசாசாரத்துக்கு மாறேயாயினும், ஸ்திரிகள் மரியாதையோடு வெளிநாடுதலும் ஆடவர்கூடிய சபைகளிலேயும் சமுகமாயிருத்தலும் நமது பூர்வ ஆசாரங்களுக்கு மாறன்று. இந்தியபெண்கள் பட்டிக்குள் அடைபடும் ஆடுகளைப்போல வீட்டுக்குள் அடைபடும் வழக்கம், இந்தியாவை இடைக்காலத்தில் தம்மடிப்படுத்தியிருந்த மகமதியரது ஆசாரமேயாம். மகமதிய அரசுமேலிடுவதற்கு முன்னிருந்த நம்பிதாக்களது நிலையை மகாபாரதம், இராமாயணம், இரகுவம்சம், ஆதி உபநிஷத்துக்கள், இருக்குவேதம் முதலிய நூல்கள் சாட்சியாகப் பார்க்குமிடத்து, பெண்கள் அக்காலம் மேலாக நடத்தப்பட்டும் கல்வியூட்டப்பெற்றும், இட்டமாய் வெளியே உலாவியும் வந்தனரென்பது வெளியாகக்கிடக்கின்றது. தற்காலம் சைவர் மகமதியரைப்பின்பற்றிக் காவற்றனிபூட்டிவைப்பதே மாதரதுகற்புக்குவழியாமெனக்கருதுதலைமறுத்து "சிறைகாக்கும் காப்பெவன்செய்யுமகளிர் நிறைகாக்கும் காப்பேதலை" என்றார் திருவள்ளுவரும்.

ளல் ஈனமானவைகளெனவும், அவைகளுக்குமெய்ம்மறையை உபதேசித்தல் கூடாது எனவும், அவைகளுக்கு மோக்ஷமில்லை எனவும் சைவசமயம் கூறுகின்றமையும், அவ்வீனசாதிகளை ஒடுக்கிநடத்தும் சார்பாக இந்நூலோர்கள் வகுத்த ஒழுங்குகளுமே எதிரிடையாம். உள்ளபடி இந்தியாவிலே "பிராமணருள்ளும் நியமாசாரமுடைய செட்டிவேளாளருள்ளும் கிறீஸ்துமதத்திலே புகுந்தவர்கள் பலர்."* யாழ்ப்பாணத்திலே பிராமணரையொழிந்த எல்லாச்சாதிகளினின்றும் தமிழர் கத்தோலிக்க சற்சமயத்தைத் தழுவியிருக்கின்றனர். இங்ஙனம் கிறீஸ்தவர்களாகிக்கொண்ட நம் தமிழர் தமக்குட் சகோதராவாத்சல்லியத்தளவில் ஒற்றுமையுடையோராயிருப்பினும், பந்தி பாவாடை ஆதியவைகளில் நம்தேசத்துக்குரியசாதி ஒழுக்கங்களை அநுசரித்தே ஒழுகுகிறார்கள்.

இனி, தமிழராகிய நமக்குள்ளே நற்போதுள்ளதாகிய சாதிவித்தியாசம் எற்பட்டது மிகப் பிறகிட்டகாலங்களிலேயாம் என்பதை நாமெல்லாம் மனத்திலிருத்திக்கொள்ளுதல்வேண்டும். சென்னை பண்டிதர் வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் கூறுவது: "வடமொழியாளர் (வடஇந்தியாவினின்றும் வந்த ஆரியர்) தமிழர்களிடத்தில்லாதிருந்த அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்ற நால்வகைச் சாதிமுறையை மெல்லமெல்ல நாட்டிவிட்டனர். 'முற்படைப்பதனில் வேறாகிய முறைமைபோல் நால்வகைச்சாதியிந்நாட்டினீர் நாட்டினீர்' என்று முழங்குங்(கபிலரகவ)லையுங் காண்க" என்கின்றார். (தமிழ்மொழியின் வரலாறு 14-ம் பக்.) ஆரியருள்ளும் சாதிவித்தியாசம் இப்போது நமக்குள்ளிருக்கின்றமைபோல இருந்திலது என்பது மலையிலக்கு. யாழ்ப்பாணம், ஸ்ரீ. ஆ. முத்துத்தம்பிப்பிள்ளைப் பண்டிதர்கூறுவது: "வேதத்திலே பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் என நான்குஜாதியுமேகூறப்படுதலின், பூர்வத்தில் அவற்றின்மேல் ஜாதிபேதம் வேறில்லையென்பது நன்றாகத்துணியப்படும். இந்நான்குபாகுபாடும் ஒருவராற்செய்யப்படாது இயல்பாகவே உளவாகுமாதலால் மகாரிஷிகள் அப்பாகுபாட்டின் படிக்கிரமத்தைநோக்கிப் பிரமாவினது சிரசிலே பிராமணரும். புஜத்திலே க்ஷத்திரியரும், தொடையிலேவைசியரும், பாதத்திலே சூத்திரரும் தோன்றினரென்று உபசரித்துரைத்தனர்போலும்" என்கிறார். (அபிதானகோசம்: ஜாதி) இந்தியரான ஆரியரும் பூகோளத்தின்பிற்பாகத்திலுள்ளோரைப்போல் ஒரேமனுடனினின்று உற்பத்தியானவர்கள் என்பது நிச்சயம் பிரமாவின்தேகத்தின் வெவ்வேறுபாகங்களினின்று நான்குவருணத்தாரும் உண்டானார்களென்பது உபசாரமான, அன்றேல் புழுகானதோர் வர்ணனையேயாம். இப்படிப்பட்ட புழுகுகளில் நந்தேசத்துப் புராணகாவியங்கள் மிகப்பேர்போனவைகள். முன்னோருடைய ஞானவாக்குகளைவாசித்து உபதேசிக்குந் தொழிலுடைய பிராமணரைப் பிரமாவின் வாயினின்றுண்டானவர்களெனவும், தோள்கொடுத்துப்பொருதும் க்ஷத்திரியரைத் தோளினின்றுண்டானவர்களெனவும், தனதானியங்களினால் அனைவரையும் நிலைபெறப்பண்ணும் வைசியரைத்தொடையினின்று உண்டானவர்களெனவும், காலாலிட்டவேலையெல்லாஞ் செய்யும்படியாயடக்கப்பட்டிருந்த ஆதிச்சுதேசிகளைக் காலினின்றுண்டானவர்களெனவும் கூறிப்போந்தமை ஆரிய புலவர்களுக்குரியதோர் அலங்காரவர்ணனையேயாம். இவ்வர்ணனையின்படியேயும் சாதி ஒன்றேயென்றாவதொழிய நான்கென்றாகாது. எங்ஙனமெனில், ஒரேபிதாவிடத்திற் பிறந்த நால்வர்

* யாழ்ப்பாணச் சமயநிலை பக். ௩௯.

சகோதரர் நான்குசாதியாராவாரா? * அதுநிற்க தொழில்வேறுபாட்டால் இயல்பாயெழுந்து சிலகாலம் நிலைத்த இப்பகுப்பு பின்தலைமுறைகளிற் கலவாதிருக்கும் பொருட்டுச் செய்யப்பட்ட கட்டுப்பாடோவெனில் ஒவ்வொரு சாராரையும் தத்தம் தொழிலிலே குறைவின்றிச் செலுத்தும்பொருட்டு எழுந்ததாம். மனுஸ்மிருதி முதலிய நூல்கள் (கி மு 600-ம் ஆண்டுக்குப் பிற்பட்டகாலம்) இக்கட்டுப்பாட்டை வலியுறுத்திப்போந்தன. இவ்வலியுறுத்தல்களுக்கும் எதிராய் நான்கு வர்ணங்களும் காலகதியிலே தமக்குட் பெரிதும் கலப்படைதலும், பெரும்பாலும் இக்கலப்பினின்றே இப்போதுள்ள நானாபேதமான சாதிகளெல்லாம் உண்டாயின. காலகதியிலுண்டான இப்பேதங்களைப் பிற்காலச் சமயநூல்கள் பின்னும் பெரிதாக்கி, சாதிப்பிரிவு கடவுளாற்செய்துவைக்கப்பட்டதெனப் பொய்யுரைகூறி, மேற்சாதிகள் கீழ்ச்சாதிகளைத்தீண்டாமை, இவர்கள் அவர்களது சங்கத்திற் சேராமை ஆலயங்களுட்செல்லாமை, இவர்கள் தீண்டியவற்றை அவர்கள் தீண்டாமை முதலிய அநியாயஆசாரங்களையும், அவ்வச்சாதிக்கு வெவ்வேறு கற்பனைதெய்வங்கள் ஆலயங்கள் வழிபாடுகளையும் நியமித்துப்போந்தன.

சாதிப்பிரிவுகளுக்கு இந்து சமயநூல்கள் தெய்வீக உற்பத்திகொடுத்து நன்றாய்ப்பிரித்து வைத்தனவேயாகவும் இக்காலம் கலப்பில்லாச்சாதி ஒன்றுமில்லையெனலாம். சாதிநூலோர் சம்மதப்படி, தற்காலம் இந்தியாவிலுள்ள சிலகாட்டுமனுடரே சுத்தத்தமிழிரத்தமுள்ளவர்களாம். மற்றத் தமிழராகிய நாமெல்லாம், முறையே கோளாரியர் நாகர் தூரானியர் ஆரியர் துலுக்கர் முதலிய பலசாதிகளோடு கலப்புண்டவர்களாமென்னில், இனி, நமக்குள்ளே உட்பிரிவுகளாய்க்கிடக்கும் பறையர் பள்ளர் வேளாளர் பிரா

---

* மானுடர் சகலரும் ஒருகுலமேயென்பதனை மனுஸ்மிருதி கூறுமதற்கூறியதுபோல் வேறுசில இந்துநூல்களும் கூறுகின்றன.

> " அரசர்க்கரசே அறம்வளர்க்குஞ்சேயே
> முரசக்கொடிவேந்தே முன்னம்—பிரசமலர்ப்
> புங்கவன்றன்கைத்தொழிலாற் போந்தமனுநூனூண்
> தங்கருமத்தாற் சாதிதான்." [பாரதவெண்பா]

" ஒருவகைச்சாதியாம் மக்கட்பிறப்பு "
" குலமுமொன்றே குடியுமொன்றே
பிறப்புமொன்றே இறப்புமொன்றே" [கபிலரகவல்]

> " சாதியிரண்டொழியவேறில்லை...
> இட்டோர்பெரியோர் இடாதோர் இழிகுலத்தோர் [நல்வழி]

" நல்லகுலமென்றுந் தீயகுலமென்றும்
சொல்லளவல்லாற் பொருளில்லை" [நாலடியார்]

> " பிர்மசத்திரிய வைசியசூத்திரர்
> கர்மசூத்திரங்கள்கட்டினார் நூல்விதி
> தூர்மவிசேஷ சுயசெகசாலமே
> வர்மமறிந்தருள்வள்ளுவஞானிஞன்" [ஞானவெட்டியான்

" குலமொன்றாய் நீபடைத்த குறியையறியாமல் நான் பின்னை
மலபாண்டத்துள்ளிருந்து மயங்கினேன் பூரணமே [பட்டணத்துப்

மணர், "கள்ளர் மறவர் கனத்த அகம்படியர்" என்னும் பகுப்புக்களின் கலப்புக்களைச்சுட்டிப் பேசுதலும் வேண்டுமோ? நம்மிற் கலப்பில்லாதோர் பூச்சியமாகவே, என்சாதிபெரிது உன்சாதி சிறிது என்னும் வீண்வாக்கு வாதத்தை ஒழித்துச் சகலமானுடரும் ஒரே பிதாவின் மக்களாம் என உணர்ந்து, அவ்வவ்வூருக்குரியகுற்றமில்லா ஆசாரங்கள் எப்படியிருப்பினும் சத்தியசமயபோதனைப்படி ஒருவரிலொருவர் அன்புகூர்ந்து நடத்தலே தகுதியாம்.

3. ஆட்சேபம்.—கிறீஸ்துசயம் மச்சமாமிசபட்சணத்தைக் கற்பிக்கிறதன்றோ?

சமாதானம்.— கிறீஸ்துசமயம் மச்சமாமிச போசனம்பண்ணல் வேண்டுமெனக்கற்பிக்கிறதில்லை.

கத்தோலிக்க கிறீஸ்தவர்களுள்ளும் சிலர் ஓர்போதும் மச்சமாமிசங்கள் புசியாதோராயிருக்கின்றார்கள். ஐரோப்பாவிலே கார்த்தூசியம் (Carthusians) முதலிய சந்நியாச சபைகள் சில மச்சமாமிச போசனத்தைக் கைக்கொள்ளாதொழுகுகின்றன. இது சரீர சுகத்தையும் தேசஆசாரத்தையும் சார்ந்ததோர் வழக்கமேயன்றி, சத்தியசமயத்தோடு சம்பந்தமுள்ளதொன்றல்ல. சரீரசுகத்துக்குத் தாவரபோசனமே அதிக உசிதமானது என்பது நமக்கும் சம்மதம். ஐரோப்பியர் பெரும்பாலும் மாமிசம் உண்ணும் வழக்கம், அவர்கள் நாகரீகமற்றமாக்களாய், கிறீஸ்துசமயத்தை அறியாதவர்களாய் இருந்த காலத்திலும் அவர்களுள்ளிருந்ததேயன்றி, கிறீஸ்துசமயபோதனையினால் எழுந்ததன்று. ஒருபோதும் மச்சமாமிசங்கள் சாப்பிடாதிருத்தல் மிகநன்றே. ஆதாந்தொடக்கம் சலப்பிரளயம்வரையிலே மனுடருக்குள் மச்சமாமிச உணவு வழங்கியதில்லை. தாவரஉணவை மனுடர் எல்லாருங்கொள்ளக்கூடுமாயின் நமக்கு அதுமுக்காலும்சம்மதம்.

"இந்தியரும் இலங்கையாரும் கிறீஸ்துசமயம் வந்தபின்தான் மச்சமாமிசம் புசிக்கத்தொடங்கினார்களா? அதற்கு முன்னரில்லையா? எக்காலத்திலும் சைவர் மச்சமாமிசம் புசித்துவந்தவர்களாயும் புசித்துவருகிறவர்களாயுமிருக்கவும், கிறீஸ்தவர்கள்மேலே குறைபேசிவருவதேனோ? கிறீஸ்துசமயமானது அதைப்புதிதாக இந்நாட்டுக்குக்கொண்டுவந்ததில்லையே. வலைஞர் என்னும் மீன்பிடிகாரர் சைவருக்குள்ளேயுள்ள சாதி வகுப்புக்களிலொரு வகுப்பார். அச்சாதியாருஞ் சைவர். அது தொன்று தொட்டசாதி. அச்சாதிச் சைவர் அக்காலந்தொட்டு எக்காலமும் மீன்பிடி தொழிலை நடத்திக்கொண்டே வருகிறார்கள். * அக்காலந்தொட்டு எக்கா

* தமிழையும் சைவத்தையும் ஒருங்கே வளர்த்தோராகிய பாண்டியர்களும் மீனக்கொடியுடையோராய் மீன்வேட்டையாடுவோராய் இருந்தனரென "பரதகுலபாண்டியர்பழமை" என்னும் நூல் இனிதுநாட்டுகின்றது. (திரீதியோபசந்நியாசம்) அன்றியும் சைவருடைய திருவிளையாடற் புராணத்தின்படி, சிவனுடையமனைவியாகியபார்வதி"மீன்படு"க்கின்றோரான "பரதவர் மகளாய்" தண்டுறைப்பாக்கத் தலைவனுககுப்பிள்ளையாய்ப் பிறந்திருக்க, சிவனும் பரதனாகி மீன்படுக்குந் தொழிலுழைத்துவந்து ஒருகால் தண்டுறைப்பாக்க வலைஞரெவரும் அகப்படுத்தக்கூடாத சுறுவொன்றை அகப்படுத்திய வீரச்செயலுக்குச் சன்மானமாய் அப்பரத்தியை மணந்தனரென்றிருத்தலால் (வலைவீசினபடலம், 5, 45, 46), சைவரதுகடவுளும் மீன்பிடித்துண்ணல் சரியெனக்காட்டிவிட்டார் என்க.

லமும் சைவரே அவர்கள்பிடிக்கும் மீன்களைத்தின்று தொலைத்துக்கொண் டுவருகிறார்கள். கிறீஸ்துசமயம் இந்நாட்டுக்குவந்தபின்னர் மாத்திரம் மச் சம்பிடிக்கவும் போசனத்துக்காக மிருகபறவைகள் கொல்லவும்பட்டதில் லை. கிறீஸ்துசமயம்வருவதற்கு முன்னுள்ள அக்காலம் நடந்தபடியே இக் காலமும் நடந்துவருகின்றது. பெரியகடை சின்னக்கடை தட்டாதெருச் சந்தை கைக்கோளச்சந்தை முத்திரைச்சந்தை முதலியவைகளிலும், மற் றுமுள்ளகடைகள் சந்தைகள் துறைகளிலுமுள்ள மச்சமாமிசங்களைத்தின் று தொலைப்பவர்கள் சைவர்களே. சைவக்கோவில்களிலே வருஷந்தோ றும் பலியிடப்பட்டுவரும் ஆயிரக்கணக்கான ஆட்டுக்கடாக்களை உதராக் கினியிற்போட்டுத் தகனம்பண்ணிவிடுகிறவர்களும் சைவரே......இது விஷயத்திலே கிறீஸ்துசமயத்தையிழுத்து அதிலே மச்சமாமிசபோச னவழக்கத்தைச் சொருகிப்பேசுவதற்கு ஒரு நியாயத்தையுங் காணோம்." (சத்தியவேதபாதுகாவலன் 1904) இக்கருத்தினையே "நிகாரநிகாரணநிக் கிரகம்" என்னும் நூல் ஓர்சிறிது காரசாரமாய்ப் பின்வருமாறுரைக்கின்ற து. [இந்நூலின் தர்க்கசண்டவேகத்தோடுகூடிய நடையையன்று கருத் துக்களையே நாம் ஒப்புகின்றோம் எனக்கொள்க.] "சைவர் சீவ இரக்ககார ணமாக மாமிசபட்சணந் துறந்தனராம்! சைவருள் எத்தனைபேர் மாமிச பட்சணந் துறந்திருக்கின்றனர்?......தற்காலம் பிராமணருட் பலரும் மா மிசபட்சணிகளென்றால் மற்றையோரைக்குறித்தேன்பேசுவான்? "ஆரண வாயினர் மாடாடுகளை அடித்தவித்துப், பாரணஞ்செய்யப் பழகிக்கொண் டார்" என்பதையும், "தேனோடுமூனுண்ணும் அந்தணர்க்கஞ்சிச் சிவன் கரத்தில் மானோடிப்புக்க" என்பதையும் "ஊன்றாக்கியுண்ணும் பிராம ணர்க்கஞ்சி உமாபதியும் மான்றாங்கிறான்" என்பதையும் கண்டுணர்க. பூர் வத்தில் அகஸ்தியர் முதலிய முனிவராதியரும் புலாலுண்டு அதன்பேற் றை விளக்கியிருக்க, நீயோ பூசினிக்காயைத்திருடி முற்றத்தில் வீழ்ந்தகள் வன் பத்தா இதுதானா பூலோகமென்றாற்போலவும், இரவில் ஆடு மாடா தியவற்றைத் திருடித்தின்று பகலில் சிற்றெறும்புமிதிபடுமென்று உறியிலே தூங்குஞ் சமணர்போலவும் சீவ இரக்கம் பார்க்கின்றாய். கீரைக்குள்ளே காணப்படும் புழுக்களை என்செய்தாய்? சுவாமிக்கபிஷேகஞ்செய்யுங் கஸ் தூரி கொலையின்றி வந்ததா? மூடத்தனத்தால் யோசியாமற் பேசாதே. விலங்குகளுக்குந் தாபரங்களுக்கும் ஆன்மாவுண்டெனச் சாதிக்கும் நீவிர் விலங்கையொழித்துத் தாபரத்தை வதைத்துக்கொல்வது சீவ இரக்கமா குமா? நீவிர் குடிக்கும் தண்ணீராதியவற்றிலேஎத்தனைகோடி கிருமிகீடா திகளுண்டு? ஆபத்துக்குப் பாவமில்லையென்பீராக்கும். இச்சீவராசிகளை வதையாது பட்டினிகாத்தாலன்றோ சீவ இரக்கமாகும்! தாபர புசிப்புக் குப் பிராயச்சித்தமுண்டு என்பீரேல், மாமிசபட்சணத்துக்கும் பிராயச்சித் தமாக்கலாமே. கடவுள் பிராயச்சித்தஞ்செய்து பாவம்போக்கவேண்டிய ஒருணவைக் கற்பிப்பாரா? சீதளமண்டலங்களில் வசிப்போர் மிருகபட் சணமில்லாதிருத்தல் கூடாதே. எம்மண்டலங்களில்வசிக்கும் மாந்தராயி னும் தண்ணீரருந்தாமலும் தாபர அல்லது மாமிசபோசனமில்லாமலு மிருத்தல்கூடாதே. ஆகையால், நீவிர் போற்றுங்கொள்கை சர்வமானுஷீய இஷ்டைகாரணமாகக் கொடுக்கப்பட்டதன்றென்பது சித்தாந்தமாம். சீவராசிகளியாவற்றுக்கும் மனுஷனைப்போல் ஆன்மாவுண்டெனச்சாதிக் கும் நீவிர், அச்சீவராசிகளை உண்ணாதுவிடுதலே சீவ இரக்கமாம். மனுட னுக்குமாத்திரம் ஆன்மாவுண்டு, மற்றவைகள் மனுடபிரயோசனங்கருதி உண்டாக்கப்பட்டனவென்பது கிறீஸ்துவேதகொள்கை. அதனால் நரமா

மிசம்நீக்கி மற்ற யாவற்றையுண்ணலாமென்பது விதி. கிறீஸ்தவர்களே யாவர் புத்திக்குந் தம்வேதநூலுக்கும் ஏற்கடந்து சீவ இரக்கமுள்ளோரா யிருக்கின்றனரென்பது யாவருமறிந்தகாரியம்" (பக். 23-24)

மச்சமாமிசங்கள் உண்ணுதல் இந்தியாவிலே ஆதிதொட்டு உள்ளதோர் வழக்கமென்பதையும், பௌத்த சமய எழுச்சியின் பின்னே (முக்கியமாய் சமணர் தென்னிந்தியாவிலும் பரவியகாலமாகிய கி. பி. 6-ம் நூற்றாண்டு தொடங்கி 13-ம் நூற்றாண்டுவரையிலே) அவ்வழக்கத்தைச் சிற்சில மதங்கள் நீக்கிவைக்கத்தொடங்கினவென்பதையும் நாம் மறந்துபோகவொண்ணாது. இந்தியாவின் வேதமந்திரங்கள் எழுதப்பட்ட காலத்து ஆரியர்களெல்லாம் மாட்டிறைச்சி முதலியமாமிசங்களைப்புசித்துச் சோமபானமுங் குடித்துவந்தனரென்பதுதைத்திரீயபிராமணம் முதலிய வேதபாகங்களைப் பார்வையிட்டோர் யாவரும்அறிந்தவிஷயம். ஆரியர்பொரித்தமாட்டிறைச்சி உண்ணுவதைப்பற்றி கிருஹ்யசூத்திரத்தினுள்ளும், அனைவருக்கும் இறைச்சியைப் பகிர்ந்துகொடுத்தலைப்பற்றி அசுவலாயன சூத்திரத்தினுள்ளும், குதிரையிறைச்சி உண்ணுவதைப்பற்றி இருக்குவேதம் 1-ம் மண். 162-ம் சூக்தத்தினுள்ளும் பிறவிடங்களிலுங்காண்க. முற்காலத்தில் மாமிசவுணவு சாதாரணமாயிருந்ததென்பதைச்சைவநூல்களும்மறுக்கமாட்டாதிருக்கின்றன. பிரமாணம், அருட்பிரகாசம்:—" மருந்திற்றிகியினுயிருய்யும்வாயின் மகமதனி—னருந்தற் கியல்பதெனினுங் கிருதுவினன்றியுளம்— பொருந்திப்புலாலுண்பரே கலியூடறம் பூண்டிமையோர்—விருந்திற்சிறந்தமுதூட்டப் பொன்னுட்டுறவேண்டினரே" [கொலைமறுத்தலினுட்கண்டது] இதன்பொருள்: முற்பட்டகாலங்களிலே, மருந்திற்கும் உயிர் உய்யும்பொருட்டும் சீவனத்தின்பொருட்டும் மாமிசம் உண்ணுதல் சாத்திரவிதிதமாயினும், இக்கலியுகத்தில் [புத்தமத எழுச்சியின்பின்?] யாகத்தின்பொருட்டன்றிக் கொன்றுதின்றல் தகாது என்பதாம். யாகத்தின்பொருட்டுமாத்திரம் கொல்லுதல் பொருந்தாதென்பதைச் "சைவமகத்துவதிக்கார" நூல் பின்வருமாறுகாட்டுகின்றது: "யாகவிதிப்படி வேள்வியின்கண் கொலையுண்ட ஓர்மிருகத்தின் உடல் உருத்திராதிதேவ அர்ப்பிதமாவதும், அதனால் அந்தவுடலின்கண்ணிருந்தசீவன் திவ்வியபோகத்தையடைவதும், வேள்விமுடித்த பூசுரரும் அவ்வாறு பரசீவகிதஞ்சாதித்தலின் திவ்வியபதவிச்சிறப்பினை அடையாநிற்பதும் சகசமாயின்; தமக்குப் பலிசெலுத்திமாத்திரம் புசிக்கலாம், மற்றைப்படி புசித்தால் நிரயத்திலிட்டுவாதிப்போம் என்பதா தேவநீதி?...தேவுக்களுக்காளுற் சீவவதைசெய்து அவிப்பாகமளிக்கலாம், மனுஷருணவுக்காகச் சீவவதை புரிவதுமாத்திரமா பாவம்?" என்கின்றது அந்நூல்.

மனுஸ்மிருதி எழுதப்பட்டகாலத்திலேயும் மாமிசமுண்ணும் வழக்கம் முற்றாக அற்றுப்போகவில்லையென்பது அதன் சில பாகங்களாற்பெறப்படும். அதன் 5-ம் புத்தகத்திலே சொல்லியிருக்கின்றமையாவது: விதிக்கப்பட்ட மிருக பட்சிகளைப் பிராமணர் பலியின்பொருட்டும், ஆதரிக்கப்படுகின்றவர்கள் உண்ணும் பொருட்டும் கொல்லுவார்களாக. ஏனெனில், அகஸ்தியரும் முன்னே (அவ்வாறு) செய்தனர் (22). சாஸ்திரவிதிதமான மிருகங்களின் மாமிசத்தை நாள்தோறும் உண்பவன்றானும், பாவத்திற் குட்படான். ஏனெனில், பிரமா சில சீவர்களை உண்ணப்படவும் வேறு சீவர்களை அவற்றையுண்ணவும் சிருட்டித்தார் (30). தான்விலைக்குவாங்கிய அல்லது வளர்த்த அல்லது பிறனொருவனிடம் பெற்றுக்கொண்ட

ஓர்மிருகத்தின் மாமிசத்தைத் தேவர்களுக்கும் பிதிர்களுக்கும் பாகங்கொடுத்தபின் உண்பவன் குற்றமுள்ளவனல்லன் (32) . எனும் இன்னன பல வாக்கியங்களினால் ஆதிதொட்டு இந்தியாவில் மாமிசபக்ஷணம் பிராமணருள்ளும் வழங்கிவந்ததென்பது பிரத்தியக்ஷமாயிருக்கின்றது. எமதுகாலம் வரையிலேயும், வடஇந்தியாவின் பிராமணகோத்திரங்கள் சில எப்போதும் மாமிசபட்சணிகளாகவேயிருக்கின்றன. சாக்தர்கள் எல்லாம் மாமிசவுணவோடு மதுபானமும் கைக்கொண்டுவருகின்றார்களென்பது உலகப்பிரசித்தம். ஆதலால் மச்சமாமிசங்கள் புசிக்கும் வழக்கத்தைப்பற்றிச் சைவர்கிறீஸ்தவர்கள்பேரில் ஏற்றுகின்ற பழிகள் யாவும் அபதூறுகளேயாம்.

4. ஆட்சேபம்—கிறீஸ்துசமயம் தேடிப்பணங்கொடுத்துச் சீடரைப் பிடிக்கின்றது. சீடரன்றே குருவைத்தேடி வழிபட்டு உய்தல்வேண்டும்!

சமாதானம்— கிறீஸ்துசமயம்பணங்கொடுத்துச் சீடரைப்பிடிக்கின்றதென்பது சுத்த அபதூறு. சத்தியசமய குரவர்கள் பரோபகாரசிந்தையுள்ளவர்களாதலால், அவர்கள், சீடர் தங்களைத்தேடிவந்து தட்சணை கொடுத்தாலன்றிச் சத்தியத்தை உபதேசியோமென்றிரார்கள்.

கிறீஸ்துசமயமே சகல மனுடருக்கும் பொதுவான முத்திநெறியென்பதற்கு இதுதானும் ஓர் அத்தாட்சியாகின்றது. சூரியன் சிலருக்கு மாத்திரம் பிரகாசியாமல் சகல சீவர்களுக்கும் பிரகாசிக்கும். ஞான ஒளிச்சுடராகிய சத்தியசமயமும், ஞானசேட்டையுள்ள ஆன்மாவையுடையோராகிய சகலமானுடருக்கும் ஒளிசெய்வதாகும். சத்தியசமயம் சகலருக்கும் ஏக பிதாவாகிய கடவுளால் உண்டானதொன்று. அவர் அதனைத் தமது மக்கள் அனைவருக்கும் பட்சபாதமின்றி உபகரிப்பரேயன்றி, ஓர் சிறுத்தேசப்பரப்பினுள் அடங்கியோருக்குமட்டும் உபகரியார். இன்னன பிறவேதுக்களாலும் கத்தோலிக்க சமய குரவர்கள் செய்வதே கடவுளினது அநந்த காருண்ணியத்துக்கு ஏற்றதாகி, அத்திருச்சமயத்தின் உண்மைக்குச்சான்றுகின்றது. இதனைச் "சைவமகத்துவதிமிரபாநு" நூல் பின்வருமாறு உணர்த்திற்று: "ஒருசமயத்தைப்பற்றி ஒருவர் சிறிதேனும்பேசக்கேட்டாலன்றி அதில் மற்றொருவனுக்கு விருப்பமுண்டாகக்கூடாது. தற்செயலாய் ஒரு புத்தகத்தையொருவன் வாசித்தறியின், அதுவும் அப்புத்தகத்தைச்செய்தவன் சொல்லக்கேட்டதேயாம். சைவசமயங்கூறுகிறபடியேயும் ஆன்மா மலங்களாற் பந்திக்கப்பட்டு அஞ்ஞானமுடையதாதலால், மனிதன்தானே அறிந்துகொள்ளும் சக்தியிலன்...ஆதலால், பன்றிக்குணம் நாய்க்குணமுடையோரையொழித்து மற்றவரை வலியத்தேடிப்போய் மெய்வேதத்தை உபதேசிப்பதே முறைமை. கிறீஸ்துவேதம் அப்படியே கற்பிக்கின்றமையால் அதுவே மெய்வேதமெனவும், அதனால் அதுகூறுங் கடவுளே மெய்க் கடவுளெனவும் ;சைவம் அப்படியெங்கும்பிரசங்கிக்கப்படாதெனப்படுதலினால் "நஞ்சுடைமைதானறிந்து நாகங்கரந்துறையும்" என்றவாறு சைவம் நஞ்சும் கரவுமுள்ளதெனவும், ஆதலால் ஒளிவர இருள்சுருங்கியாங்கு இது தேய்கின்றதெனவும், அதனால் இது கூறிய கடவுளாகிய சிவனும் மெய்க் கடவுளல்லரெனவுமறியக் கிடத்தலறிக." (பக் ச)

இனிப் பணங்கொடுத்தலைப்பற்றிய அபதூறை விசாரிக்குங்கால், கிறீஸ்துசமய குருமார் பணங்கொடுத்துப்பிடிக்கின்றார்கள் என்பதல்ல, மெய்

யுபதேசவலையிலே பிடிக்கப்பட்டவர்கள் துன்பப்பமெவேளைகளிற்பணங் கொடுத்தும் உதவுகின்றார்கள் என்பதே சத்தியம். தன்னைப்போற் பிறனையும் சிநேகித்தல்வேண்டுமென்பது சத்தியசமயத்தின் முக்கியபோதனை. உள்ளபடியே தயை, இரக்கம் முதலிய பிறர்சிநேகக்குணங்கள்பூண்டிருப்போராகிய கிறீஸ்தகுருமார், தங்களால் ஆன்மநோய்நீக்கிக் கைதூக்கப்பட்டோர் சரீரநோய் பசியாதியவற்றால் வருந்தக் காண்பார்களேயாயின் அவர்கள்மீது இரங்காமலும், தம்மிடத்துள்ளவைகள் யாவையும் பரித்தியாகம்பண்ணவேண்டிவரினும் பரித்தியாகம்பண்ணி அவர்களுக்கு உதவிபுரியாமலுமிரார்கள். பஞ்சம் கொள்ளைநோய் முதலிய கேடுகள் பரவுங்காலங்களில் பிறசமய குருக்களல்ல, சத்தியசமயகுருமார்களே, சனங்களுக்குக் கைதந்து உதவிநின்றிருக்கின்றனர், நிற்கின்றனர் என்பது, அரசாட்சியுத்தியோகஸ்தர்களாலும் மெய்ச்சப்பட்டவிஷயம். "அன்பிலாரெல்லாம் தமக்குரியர் அன்புளார் என்புமுரியர் பிறர்க்கு" என்னுந் திருவள்ளுவர் வாய்மைக்கிசைய, இவர்களே மெய்யன்புள்ளார் என்பதும், இவர்களுக்கு மெய்யன்பை உபதேசித்த சமயமே சற்சமயமென்பதும் மலையிலக்கே. பொருள் பெறுதற்கும் கல்விகற்றுக்கொள்வதற்குமென நூற்றுக்கணக்கான சைவர் (முக்கியமாய்ப் புரோட்டெஸ்தாந்த) கிறீஸ்துசமயத்திலுட்பட்டுச் சிலநாள் மாரீசம்பண்ணிவிட்டு, பொருள் உத்தியோகம் முதலியவைகளை அடைந்துகொண்டபின் கொழுத்த சைவராய், சைவப்பிரசங்கங்கள்பண்ணிச் சைவவித்தியாசாலைகளை ஏற்படுத்துவோராய், சைவஸ்தாபனஞ்செய்துகொண்டுவருகின்றார்களேயெனில், அவர்களாற் பெரும்பாலும் ஏமாந்துபோன கிறீஸ்துசமயபோதகர்களல்லர், இவர்களை ஏமாற்றிய அவர்களே படுபாதகர்களாயும், அன்னியதேசத்தவர்களுக்கும் சற்சமயதானஞ்செய்யும் இணையில்லாப் பரோபகாரசிந்தையை இப்போதகர்களுக்குப்புகட்டிய சமயமல்ல, அப்படுபாதகர்களாலே நிலைநிறுத்தப்படுவதாய் வருஞ் சமயமே பொய்ச்சமயமாயும் காணப்படும். வேடதாரிகள் அத்துணைப்பேர் நம்சைவருட் காணப்படுவது பரிதாபம்பரிதாபமே. இவர்களைப் பற்றியவிரிவை "யாழ்ப்பாணச்சமயநிலை" என்னும் சைவநூலிற்காண்க.

சைவசமயமோ புண்ணியபூமியிலே உயர்குலத்திலே பிறவாதோருக்குத் தன்னை உபதேசிக்கப்படாது எனக் கூறுகின்றமையால், தான் மனுடர் அனைவருக்கும் ஏகபிதாவாகிய கடவுளால் உண்டான சமயமல்லவெனத் தன் வாயாலேயே சாட்சிசொல்லிநிற்கின்றது. பொதுநன்மையை எட்டுணையும்சிந்தியாது, ஆர்குடிகெடினும் நீகுடிமிளகுசாறு என்றவன்சீலமாய் "தக்ஷணையை வாங்கிக்கொண்டு உடனே ஓட்டம்பிடிப் "போராய், சைவர் "வருந்திச் சம்பாதித்துக்கொடுக்க எளிதில் வாங்கி உண்டுடுத்துக்கொண்டு வெட்கஞ் சிறிதுமில்லாமல் மாப்பிள்ளை மாடுகள்போலத்திரிகின்" றோராய், "போகம்விற்றுண்ணும் பொதுப்பெண்களுடைய வீட்டிலேநுழைதற்குக் கூசா"தோராய், "பொதுப்பெண்களைக் கோயில்களில்வைத்து அவர்கள் பொருட்டுச் சிவத்திரவியங்களை எடுத்து உபயோகிப்"போராய், "பொய், களவு, நம்பிக்கைத்துரோகம், கற்பழித்தல், வீடுகொளுத்துதல் முதலிய தீமையெல்லாம் ஒருங்கு உடையோ"ராய் உள்ளவர்களெனச் சைவப்பிரகாச சபையாரால் அறிக்கையிடப்பட்ட* பிராமணர்களைச் சைவர் "கும்பிட்டுக் கும்பிட்டு அவர் வேண்டுவனவெல்லாம் உவப்போடு கொடுக்க" வேண்டுமென ஏற்படுத்திவிட்ட சைவசமயமானது, தன்போதனை பிறர்

* "யாழ்ப்பாணச் சமயநிலை" பக். ௨௪—௩௩.

சிநேகபோதனையல்லவெனத் தானே காட்டுகின்றது. வாங்கிக்கொண் டேஉபதேசித்தல்வேண்டுமென்னும் சைவகோட்பாட்டினிமித்தம், அநேக சைவகுருமார் வாங்கிக்கொண்டும் உபதேசியாமல்விடுகிறார்கள். இதற்குச் சைவப்பிரகாசசபையாரும் சாட்சி. அவர்கள் யாழ்ப்பாணச்சைவரை விளித்து வெகு புலம்பலோடு கூறியது: "சிலகாலத்துக்குமுன்னிருந்த கிறீஸ்தசமய குருமாருள்ளே சிலர், தங்களைத் தூஷித்தல் கல்லாலெறிதல் அடித்தல் முதலிய தீமைகளைச் செய்தவர்களுக்குந் தங்கள் சமயத்தைப் போதித்தார்களே. உங்கள் சைவசமயகுருமாரோ, தங்களைக் கண்டகண் ட இடமெல்லாம் செருப்புக்கழற்றியும், உத்தரீயமெடுத்தும், வாய்புதைத் தும், ஆசனத்திருத்தியும், சுவாமீ சுவாமீ அடியேன் அடியேன் என்று அடியற்றமரம்போல விழுந்து நமஸ்கரித்தும், தங்கள் சமீபத்தில் ரூபாக் களைக் கலகலெனக்கொட்டியும் வழிபட்டொழுகுந் தங்கள் சீடர்களுக் குந் தங்கள் சமயத்தைப் போதிக்கின்றார்களில்லையே"* சத்திய கத்தோ லிக்கசமயமோ, கொடுப்பதிலும் வாங்குவதேநன்று என்னும் சைவசமயக் குருக்களின் சாதனைக்கு மாறாக, வாங்குவதிலும் கொடுப்பதே நன்று என்னும் போதனையைக் கற்பிக்கின்றது. தன் போதகர்கள் "தூஷித் தல் கல்லாலெறிதல் அடித்தல் முதலிய தீமை"களுக்கும் அஞ்சாமல் அனைவருக்கும் எக்காலத்திலும் எத்தேசத்திலும் தன்னைப்போதித்தல் வேண்டும் என ஏவுகின்றது. ஆதலால், இந்நியாயங்களாலும் கிறீஸ்து சமயமே கடவுளால் அருளப்பட்ட சற்சமயமாமென்பது துணிபு.

* யாழ்ப்பாணச் சமயநிலை பக். ௩௩.

## இரண்டாவது

# சமயாசாரப் பிரகரணம்.

5. ஆட்சேபம்.—கிறீஸ்துசமயம், தலயாத்திரை விக்கிரகவணக்கம் புண்ணியதீர்த்தம் முதலியவைகளைக் கண்டிக்கின்றது. மனுடனுடைய இயல்புக்கும் பக்குவாபக்குவங்களுக்கும் ஏற்றவைகளாய்த் தோன்றுதோட்டு உலகெங்கணும் வழங்கிவருகின்ற இத்தீங்கற்ற வழிபாடுகளைத் துவேஷிக்கும் சமயமும் மெய்ச்சமயமாகுமா?

சமாதானம்.— கிறீஸ்துசமயம் மெய்யான கடவுட்சம்பந்தமான தலங்களையாதல் சுரூபங்களையாதல் தீர்த்தங்களையாதல் துவேஷியாது. போலிக் கிறீஸ்துசமயமாகிய புறோட்டெஸ்தாந்துமதமே இவற்றைப் பகுப்பின்றிக் கண்டிக்கின்றது.

கடவுள் எங்குஞ்நிறைந்து வியாபித்திருக்கின்றனரெனினும், அவர் தமது அருளைச் சிலதலங்களில் விசேடமாக அநுக்கிரகித்தருளுதல்கூடும். மனுடரும் அத்தலங்களுக்கு யாத்திரைபண்ணிப், பிரார்த்தித்து, அருளை அடைதல்கூடும். ஆதலால், மெய்க்கடவுட் சம்பந்தமாயுள்ள தலங்களைக் கிறீஸ்துசமயம் தானும் ஒப்புகின்றது. அப்பால், கடவுள் மானுட அவதாரம் செய்தபோது கொண்ட திருவடிவையும், அவரது திருத்தொண்டர்களைக் குறிக்கும் ரூபங்களையும் ஞாபகக்குறியாய்த் தாபித்துவைத்து, அவற்றின்முன்னே அவைகளாற் குறிக்கப்படுவோருக்குச் சேரவேண்டிய ஆராதனை வணக்கம் முதலியவைகளைச் செலுத்துதலும் முறையே. பின்னும், கடவுள் தமது அருளைச் சில தீர்த்தங்களிலே அநுக்கிரகித்தலும் கூடாததொன்றல்ல என்பது பிரத்தியட்சம். ஆதலால் அன்றோ கிறீஸ்துசமயத்திலேயும் திருயாத்திரைத்தலங்களும் திருச்சுரூபங்களும் லூர்துகெபிச்சலவூற்றைப்போலும் அற்புத சுனைகளும் விளங்குகின்றன.

இனி, சைவரும் தாம் வழிபடும் சிவன் மெய்யான கடவுளாம் எனச் சந்தேகமற்ற மனசோடு நம்பிக்கொண்டும், சிதம்பரம் முதலிய தலங்கள் அச்சிவனுக்குரிய விசேட தலங்களாமென எண்ணியும், சிவலிங்கம் முதலியன அவரது ஞாபகசின்னங்கள் மாத்திரமேயாமெனமதித்தும், கங்கை கீரிமலை முதலியவைகளில் ஸ்நானஞ்செய்தலானது பாவவிமோசனத்துக்கெனக் கடவுளால் நியமிக்கப்பட்ட வழியாமென மனச்சான்றுக்கொப்ப விசுவசித்துக்கொண்டும் தலமூர்த்த தீர்த்தங்களை உபயோகிக்குமிடத்து, கிறீஸ்தவர்களாகிய நாங்கள் அவர்களை இகழ்தல் ஓர்போதும் தகாது. சிவன் கடவுளல்லாதிருக்குமிடத்தும், அவரைக் கடவுளெனத் தவறுய்ப் பாவிக்கின்ற சைவரது வழிபாடுகள் அபுத்திபூருவமான பாபங்களேயாமன்றிப் புத்திபூருவமான பாபங்களாகா. ஆயின், வாஸ்தவமாக சிவன் மெய்யான கடவுளல்லர் என்பது வேறுபல ஏதுக்களால் [அவற்றைப் பின்னுமோர் பிரகணத்தில் விளக்குவோம்.] அறியப்படுகின்றமையால், அச்சிவனை அறியாமையினுற் கடவுளாக அநுசரித்தலினுலுண்டாகும் அபுத்தி பூருவமான பாபத்தைத்தானுங் கட்டிக்கொள்ளுதல் பரிதாபத்துக்குரியதோர் தீமையேயாம். ஆதலால், சைவரை சிவவழிபாட்டின்நிமித்தம் நாம் இகழ்தல்

முறையல்லவாயினும், அவர்கள் கட்டிக்கொள்ளும் அபுத்திபூருவமான பாபத்தின்நிமித்தம் நாம் மனம்வருந்தி, அவர்களிடத்தில் அப்பாபமும் நிலை பெறாதபடிக்கு மெய்யான கடவுளை அவர்களுக்கு உணர்த்துதல் கடனேயாம். அன்றியும், அவர்களது சிவவழிபாடு, உள்ளபடி மெய்த்தெய்வ வழிபாடல்லவென்பதின்நிமித்தம், நாம் அவ்வழிபாட்டை விக்கிரகாராதனை என நமக்குட் குறிப்பிட்டு அழைத்தலுந் தகுதியே. விக்கிரகாரதனை என்பது ரூபங்களை அமைத்தலைப்பற்றியதொன்றல்ல. பொய்த்தெய்வ வழிபாடே விக்கிரகாராதனையாமென்பது சற்சமயத்தின் பொருட்கோளாம்.*

புரோட்டெஸ்தாந்தர் இதனையுணராமல், விக்கிரகாராதனையென்பது மரம் கல் செம்பு முதலியவைகளாற்செய்த ரூபங்கள் தாம் தெய்வங்களுமாமெனக்கொண்டு அச்சடப்பொருட்களை வழிபடுதலாமெனமயங்கி, நம் சைவநண்பர்கள்மேல் வீணே பழியேற்றுவர். இப்பழி தம்மைச் சாராதபடி சைவரும் நியாயத்துடனேயே வாதாடுவர். "விக்கிரகவணக்க விஞ்ஞானம்" முதலிய சிறுபுத்தகங்கள் இவ்வாதின்பொருட்டுச் சைவரால் எழுதப்பட்டன. சிலநாட்களின்முன்னும் "விக்கிரகவணக்கவிளக்கம்" என்னுமோர் சிறுபுத்தகம் இதற்கெனவே "இந்துடிராக் சொசைட்டி" யால் பிரசுரிக்கப்பட்டது. 62 பக்கங்கொண்டதாகிய இச்சிறுபுத்தகம் முழுதும், கிறீஸ்துசமயத்துக்கல்லப் போலிக்கிறீஸ்து சமயமாகிய புரோட்டெஸ்தாந்துமதத்துக்கே எதிரானதாம்.

மெய்யான கிறீஸ்துசமயத்தின்படி, மெய்யான கடவுட்சம்பந்தமாய்ச் சுரூபங்களைவைத்தலும், அவற்றின்முன்னே அவற்றினாற் குறிக்கப்படுவோருக்குரிய கிரமமான வணக்கத்தைச் செலுத்துதலும் முறையேயாம். ஆயின், சைவருடைய ரூபங்கள் பொய்த்தெய்வ சம்பந்தமானவைகள் என்பதின்நிமித்தமே நாம் அவைகளை "விக்கிரகங்கள்" என விசேடித்து அழைத்தும், அவைகள் மூலமாய்ப் (பெரும்பாலும் அபுத்திபூருவமாகப்) பொய்த்தெய்வங்களுக்குச் செலுத்தப்படும் ஆராதனையை விக்கிரக ஆராதனையென வழங்கியும் வருகின்றோம். இங்ஙனமே சைவருடைய தலங்களும் தீர்த்தங்களும், அவற்றோடுகூடிய அபிஷேகம் நைவேத்தியம் தூபதீபம் ஆசௌசம் சரீரசுத்தி தியானம் நமஸ்காரம் தவம் புண்ணியகாலம் முதலியனவும் தம்மியல்பின்படியல்ல, தாம் சார்ந்துநிற்கும் பொய்த்தெய்வ சம்பந்தத்தின்நிமித்தமே விக்கிரகாராதனையின்பாற்படுகின்றன. இதனையும் பிரித்துக்கூற அறியாது, புரோட்டெஸ்தாந்தர், தலம் தீர்த்தம் ஆதியவற்றை மதியீனமாய் ஒருங்கே கண்டித்து இடர்ப்படுவர். "சைவதூஷணபரிகாரம்" முதலிய நூல்கள் இப்போலிக் கிறீஸ்துசமயிகளுக்கெதிராய்ச் சைவரால்விடுக்கப்பட்டன. சைவருடைய தல மூர்த்த தீர்த்தங்கள் காரியத்தளவில் (Objectively) விக்கிரகாராதனைச் சம்பந்தமுள்ளவைகளேயன்றிப் பெரும்பாலாரான சைவருடைய கருத்தளவில் (Subjectively) விக்கிரகாராதனைச் சம்பந்தமுள்ளவைகளல்ல என்பதை நன்றாய் அவதானித்துக்கொள்ளுதல்வேண்டும். இதனை அவதானித்துக்கொள்ளுவோமாயின், சைவரைப்பரசிநேகமின்றி வீணே இகழ்தலையொழித்து, அவர்களுக்கு மெய்க்கடவுளின் உத்தம லட்சணங்களையெடுத்து ஓதுதலையும், அவர்களும் சத்தியசமயமாகிய கத்தோலிக்குசமயத்திற்சேர்ந்து உய்யுமாறு அன்போடு புத்திகூறுதலையுமே மேற்கொள்ளுவோம் என்க.

* இவற்றின் விரிவை "விக்கிரகாராதனையும் சுரூபவணக்கமும்" என்னும் 7-ம் இலக்க கத்தோலிக்க துண்டுப்புத்தகத்திலே காண்க.

6. ஆட்சேபம்.—புறேட்டேஸ்தாந்த சமயத்தைக் கிறீஸ்துசமய மல்லவென்றேதுக்குதல் சரியா?

சமாதானம்.—சரியே. ஏனெனில் புறேட்டேஸ்தாந்தமதம் கிறீஸ் துசமயப்போலியேயன்றி மெய்யான கிறீஸ்துசமயமன்று.

கிறீஸ்துநாதராற் பூரணமாக்கிப் பிரசங்கிக்கப்பட்ட ஆதிச்சமயமே கிறீஸ்துசமயம். இச்சமயபோதகத்தை உலகெங்கணும்பரப்பும்பொருட்டு, கிறீஸ்துநாதர் பன்னிருசீடர்களைத் தெரிந்தேற்படுத்தி அவர்களுடைய பரம்பரையான குருபீடமானது உலகமுடியுமட்டும் நிலைக்கும்படி செய்த ருளினர். இக் குருபரம்பரையே போதிக்குஞ்சபை (Ecclesia Docens) எனவும், இதன்போதகத்தை ஏற்று ஒழுகுவோரின் திருக்கூட்டமே போ திக்கப்படுஞ்சபை (Ecclesia Discens)எனவும் வழங்கும். போதிக்குஞ் சபையிலேயும் கிறீஸ்துநாதர் அதிகாரவரிசை ஒன்றை ஏற்படுத்தி, குரு மார்களுட் சிலர் அத்தியக்ஷர்களாயிருக்கும்படியும் அத்தியக்ஷர்களனைவ ருள்ளுமொருவர் அதிசிரேட்ட அத்தியக்ஷராய் விளங்கும்படியும் நியமித் தருளினர். அதிசிரேட்ட அத்தியக்ஷரே பிற்காலம் 'அதிபிதா' எனும் அர்த்தமுள்ளதாகியபாப்பாண்டவர்(Pope) எனும் நாமத்தினல் அழைக்கப் படுவோராயினர். யேசுக்கிறீஸ்துநாதராற்தாபிக்கப்பட்டதாகிய இத்திருச் சபையின் ஆதி அதிசிரேட்ட அத்தியக்ஷர் அர்ச். இராயப்பர் என்பவராம். இவர் தமது நாட்களில் அதிசிரேட்ட அத்தியக்ஷகுருபீடத்தை ரோமாபுரி யின்கண்ணே ஸ்தாபித்துவைத்தனர். அப்பட்டினமே இதுகாறும் திருச் சபை அனைத்திற்கும் அதிசிரேட்ட குருபீடமாய் விளங்குகின்றது.

பாப்பாண்டவராகிய அதிசிரேட்டஅத்தியக்ஷரோடுகூடிய போதகசங்கம் தமது திருப்போதகத்தை எஞ்ஞான்றும் தவறாதுகாத்து உலகிற்குப்பிரசங் கிக்கும்படியேசுக்கிறீஸ்துநாதர்தாமே அச்சங்கத்தோடு"உலகமுடிவுபரியந் தம்"இருப்போமெனவாக்குப்பண்ணியருளினர்.(மத். 28;20)இத்திருவாக் கினற் திருச்சபையானது "சத்தியத்தின் தூணும் அஸ்திபாரமுமாய்" (1 தீமோ. 3;15) நிலைபெறுகின்றது. கடவுளாற் காட்டியருளப்பட்ட ஈடேற்றவழியை அறியவிரும்புவோரெல்லாம் இத்திருச்சபையின் போத கத்தை ஏற்று, அதன் அதிசிரேட்டரைக் கிறீஸ்துவின் தானபதியாகப்பா வித்து அவரைத் தலைமேய்ப்பராகக்கொண்ட திருச்சபை என்னும் மந்தை யினுட்பட்டோராயிருத்தல்வேண்டும் என்பது யேசுக்கிறீஸ்துவின் திருச் சபையைப்பற்றியபோதனுசாரமாம். (இதன்விரிவை "பிரிவினைமதங்களும் பைபிளும்" என்னும் நூலினுட்காண்க.)

யேசுநாதராற் திருச்சபையிலே ஏற்படுத்தப்பட்ட இம்முறைமையா ன அதிகாரத்தை எதிர்த்தெழுந்தவராகிய மாட்டின் லுத்தரால் இற்றைக்கு முந்நூறுவருடங்களின்முன் அடியிடப்பட்டதே புறேட்டெஸ்தாந்தபிரி வினைமதமாம். இது கிறீஸ்துவினல் "சத்தியத்தின் தூணும் அஸ்திபாரமு" மென நிறுத்தப்பட்டதாகிய குருபரம்பரையின்சாட்சியினலன்று, ஆதிக் குரவர்களுட்சிலரால் எழுதிவைக்கப்பட்டனவாகிய புதியேற்பாட்டுநூல் களை அவரவர் தத்தமக்குத் தோன்றியபடி பொருள்விரிப்பதினலேயே கிறீஸ்துசமயத்தின் உண்மையான போதனைகள் அறியப்படும் என்னும் தவறுபொதிந்த மூலகோட்பாட்டினையுடையது. ஆதலாலன்றே போலிக் கிறீஸ்துசமயமாகிய இப் புறேட்டெஸ்தாந்த பிரிவினை யேசுநாதராற் தாபிக்கப்பட்ட மெய்யான திருச்சபையைப்போல ஒன்றய், தன்போத

கத்தில் மாறுததாயிராது, நூற்றுக்கணக்கான பலவேறுகிளைமதங்களாய்ப் பிரிந்து பலரூபங்களை வகித்துப் பலபோதகங்களைப் பின்பற்றிக் "கோட்பாடுகளென்னும் காற்றுக்களால் அங்குமிங்கும் அலைகளைப்போலடிபட்டு" (எபே. 4;14) பிராஞ்சு சர்மனி முதலியவிடங்களில் அநேகர் சுவக்கியான மதத்திலும் (Rationalism) நீரிச்சுரவாதத்திலும் (Atheism) போயிறங்குதற்குங்காரணமாய் நிலைகுலைந்து தலைதடுமாறி நிற்கின்றது.

இதன்போதனையெப்படியோ சாதனையுமப்படியாதலால் இதனைச் சைவராதியோர் நியாயத்துடனேயே கண்டித்துப்பேசுவர். மெய்யான கிறீஸ்துசமயத்தையோ பலவிஷயங்களிற் புகழ்ந்துகொண்டாடுவர். அங்ஙனமே யாழ்ப்பாணச்சைவப்பிரகாசசபையார் செய்த "யாழ்ப்பாணச் சமயநிலை" என்னும் சிறுபுத்தகம் சத்தியசமய குருமாருக்கும் புறொட்டெஸ்தாந்துமதப்பாதிரிமாருக்குமிடையேயுள்ள தாரதம்மியங்களிற் சிலவற்றைப் பின்வருமாறு எடுத்துக்கூறிற்று. "இத்தேசத்திலுள்ள பாதிரிமார்கள் தங்கள் பள்ளிக்கூடங்களிலே படிக்கிற சைவசமய பிள்ளைகள் விபூதி அழிக்கும்பொருட்டு வலாற்காரம்பண்ணுகிறார்கள். ஞாயிற்றுக்கிழமைகளிலே தங்கள் பிரசங்கங்கேட்கவராத பிள்ளைகளையும், சைவசமயத்திருநாட்களிலே சைவசமயக்கோயில்களுக்குப்போகும் பிள்ளைகளையும் தண்டிக்கிறார்கள்....கத்தோலிக்க குருமார்மாத்திரம் இப்படிப்பட்டவலாற்காரங்கள் செய்யக்காணோம்" (பக். கூ) "பாதிரிமார்களோ அதிசௌக்கியமுள்ள நாடு நகரங்கள்தேடி அங்கே வசிக்கின்றார்கள்...பாதிரிமார்கள் தாங்கள்சௌக்கியமில்லாதவைகளென்று வெறுத்துவிட்ட ஊர்களிலே கத்தோலிக்க குருமார் வசிப்பதறியார்களா?...பாதிரிமார்களோ தங்களையும் தங்கள் பெண்டீர் பிள்ளைகளையும் மிக அலங்காரஞ்செய்து பெருஞ்சிறப்புடைய குதிரைவண்டிகளில் ஏற்றிக்கொண்டு சாயங்காலத்தில் வீதிகளிலே மிக ஒய்யாரமாக உலாவுவார்கள்...இப்படித்தான் கிறீஸ்துவும் அவரப்போஸ்தலர்களும் நடந்தார்களா?...கத்தோலிக்க குருமார்களுடைய நன்னடைகளைப்பார்த்தும் பார்த்தும் தாங்கள் திருத்தமடைய விரும்பாததென்னையோ? (பக். கச. கரு)

பூச்சுப்பொன்னினின்றும் சுத்தபொன்னைப் பிரித்தறிவார்கள் அறிவாளிகள். அங்ஙனமே கிறீஸ்துவிலே வாக்குமாத்திரத்தாலுள்ள கிரியைகளற்ற விசுவாசம் என்னும் பூச்சோடு கிறீஸ்துசமயம் எனநடிக்கும் இப்போலிச்சமயத்தினின்றும், மெய்யான கிறீஸ்துசமயமாகிய கத்தோலிக்க சற்சமயத்தைப் பிரித்தறிந்துகொள்ளுதல்வேண்டும். மெய்யான கிறீஸ்து சமயமே சகலமானுடருக்கும் பொதுவாய்க் கடவுளால் அருளப்பட்ட சமயமாதலால், அது மனுடனுடைய சுபாவத்தினால் வேண்டப்பட்டனவாயுள்ள சமயாசாரமொன்றனையும் தள்ளாது. அவனுடைய சுபாபத்துக்கேற்ற ஆசாரங்கள் வழிபாடுகள் யாவும் அதிலே பூரணமாகவிளங்கும். ஆகலாலன்றோ கத்தோலிக்கசமயத்திலே சேர்ந்துகொள்ளும் சைவர், தங்கள் முன்னைய நற்பழக்க வழக்கங்களுளொன்றையும் நீக்கிவிடாது, தாங்கள் முன் அறியாத் தெய்வங்களைநோக்கி அநுசரித்தவைகளை, பின் மெய்யான கடவுளைநோக்கி அநுசரித்து உத்தம சமயாநுசாரிகளாய் ஒழுகிவருகின்றார்கள்.

மூன்றாவது.

## ஆதிச்சமயப் பிரகரணம்.

7. ஆட்சேபம்—கத்தோலிக்கமென்னும் உண்மையான கிறீஸ்து சமயந்தானும் இற்றைக்கு ஆயிரத்துத்தொள்ளாயிர வருடங்களின் முன்னேயே உண்டானது. ஆதியிலேயிருந்ததென்று நீவிர் சொல்லுகின்ற சமயத்தை மோசே மாற்றியதும், அப்பால் அதனை யேசுக்கிறீஸ்துநாதர்மாற்றியதும் உண்டெனில், கிறீஸ்துசமயம் ஆதிச்சமயமாவதெப்படி?

*சமாதானம்*— ஓர்மரத்தின் பிஞ்சுங் காயும் பழமும்,பருவம் முதிர்ச்சி சுவை முதலியனவகளில் வேறுபடினும் பொருளளவில் ஒன்றேயாம். அங்ஙனமே ஆதியில் மனுமக்கள் அநுசரித்த மெய்ச்சமயமும் யூதருடைய வரிவேதமும் கிறீஸ்துசமயமும் ஒன்றாய்விளங்குகின்றன.

ஆதிமனுடன் பாவியாய்ப்போயினபின்னும் அளப்பருங் கருணைத்திறனுடையவராகிய மெய்க்கடவுள் அவனையும் அவன்குலத்தாரான மனுடரையும் கைவிடாதவராகி, அவனது பாபத்துக்கு எற்ற பிராயச்சித்தஞ் செய்து மனுடருக்கு நல்வழியைக்காட்டத் தாமேபரமசற்குருவாய் எழுந்தருளுவோமெனத் திருவாக்கருளினமையை நம்பி, அவர் பிரசன்னராய்ப் பூமியில் எழுந்தருளுவதற்கு ஞாபகமான பலிக்கிரியைகளைச்செய்து சன்மார்க்கராய்ச் சீவித்தல்வேண்டுமெனக் கற்பித்த சமயமே ஆதிச்சமயம். கிறீஸ்துவாகிய சற்குருவை எதிர்நோக்கி, அவரது பரமபிராயச்சித்தத்தை முன்னிட்டுப் பாவவிமோசனத்துக்குரிய கிரியைகளைச்செய்யும்படி கற்பித்தமையினால், இச்சமயம் ஆதிக் கிறீஸ்துசமயமேயாம். ஆதிக்கிறீஸ்துசமயம் ஆரம்பத்தில் ஓரிடத்திலேயே வசித்திருந்த மனுடருட் சிதைவின்றியும், பின்பு ஆங்காங்கு பிரிந்துபோன கோத்திரங்களுட் காலகதியிலே சிதைவுற்றும் காணப்பட்டது. ஆயின் யூதருக்கு மோசேமூலமாய் அருளப்பட்ட வரிவேதத்தினால், அவ்வாதிக் கிறீஸ்துசமயம் பூவுலகத்திலே ஓர் சாதியாருள்ளேனும் சிதைவற்றதாய், விஸ்தரிக்கப்பட்டதாய், அச்சாதியினாற் பிறசாதிகளுக்கும் உபகரிக்கப்படத்தக்க பெற்றியுடையதாய்க்காக்கப்பட்டது. ஆபிரகாம் முதலியோரான தங்கள் பிதாக்களது புண்ணிய பலத்தினால் வரிவேத அநுக்கிரகத்தைப்பெற்றுக்கொண்ட யூதசாதியார், அதிவிரிவும் கிரியாபாகமும் நீதிமுறையான ஒழுக்கமும்சேர்ந்ததும், யூதகிறீஸ்தசமயமென அழைக்கப்படத்தக்கதுமாகிய சற்சமயத்திலொழுக, துன்மார்க்கராய் ஆசாபாசங்களுக்கிரையானோராய் ஆங்காங்கு சிதறுண்டு கிடந்த சாதிகளோ, சிதைவுற்ற ஆதிச்சமயத்தோடு தங்கள் யுத்திக்குத் தோன்றிய தோன்றியபடியெல்லாம் புதுக்கோட்பாடுகளைக்கலந்து அதனை வெவ்வேறுசமயங்களாகத்திரித்து மயக்குற்றிருந்தன. இங்ஙனமே இந்தியாவின் ஆதிச்சுதேசிகளுட் பிசாசவணக்கமும், ஆரியாவர்த்தத்தில் பௌதிகவணக்கமும், பார்சிகத்தில் அக்கினி வணக்கமும், சீனத்தில் பிதிர்

கள் வணக்கமும், யவனதேசத்தில் வீரவான்கள் வணக்கமும், ரோமில் பலதேவவணக்கமும்,பிரித்தானியாமுதலியதேசங்களில் இறந்தோராவிகளின் வணக்கமும், பண்டைக்காலங்களில் ஏற்பட்டன. ஆயினும் இப்பிரதேசங்களிலிருந்தோரெல்லாம் நெடுங்காலம் ஆதிச்சமய உண்மைகளுட் சிலவற்றை யாதோர்விதத்தில் அழிந்துபடாமற் காத்துவைத்திருந்தமை, கிறீஸ்துசமயங்கூறும் ஆதிச்சமய ஒற்றுமைக்கு மிகப்பலத்ததோர் சான்றாகின்றது. உலகத்திலே வெகுபழமையான இதிகாச சின்னங்களையுடைய சாதியார் எபிரேயராகிய யூதரும், எகித்தியரும், பபிலோனிய அசீரியரும், நம் இந்தியரும், பார்சீகரும், கிரேக்கரும், ரோமரும் என்ப. எபிரேயருடைய இதிகாச சின்னமாகிய பஞ்சாகமம் கி. மு. 1500ஆண்டு வரையிலுள்ளதென்பதும்;எகித்தியருடைய இதிகாசசின்னங்களாகியசதுரக்கோபுர சித்திர பாஷிதங்களும்,பபிலோனிய அசீரிய ஆப்புவடிவ எழுத்துள்ள செங்கற்புத்தகங்களும் அக்காலத்தின்பின்னுனவையாமென்பதும்; நமது இருக்குவேதமந்திரங்கள் கி. மு. 1500 க்கும் 1200 க்கும் இடையில் இயற்றப்பட்டுத் தலைமுறை தலைமுறையாய் வாய்ப்பாடத்திலிருந்து கி. மு. 600 வரையிலே புத்தகபாடமாக்கப்பட்டனவென்பதும்; பார்சீகருடைய செண்டவிஸ்தா அதற்கும்பிற்பட்டகாலத்தது என்பதும்;கிரேக்கருள் ஹோமர் ஹெசியட் என்போரது நூல்கள் கி. மு. 1000ஆண்டளவில் எழுந்திருத்தல்வேண்டுமென்பதும்; ரோமரது கிரந்தங்கள் கி.மு. 200 அளவில்மாத்திரம் உதித்தன என்பதும் பண்டைச்சரித்திரவாராய்ச்சிநூலோர் கருத்து.* இப்பழைய இதிகாசசின்னங்களிலெல்லாம் மானுடோற்பத்தி, ஆதிமனுடனின் பூரணநிலை, ஆதிப்பாபம், சற்குருவைப்பற்றிய நம்பிக்கை, சற்குரு ஞாபகமான பலிசெலுத்துதல் முதலிய ஆதிச்சமய உண்மைகளுக்குச்சாட்சியும், சலப்பிரளயம் முதலிய ஆதிச்சம்பவங்களைக்குறித்தகதைகளும் காணப்படுகின்றன.

அப்பால் மேற்கூறிய யூதசமயமாவது, கிறீஸ்துவின்வருகைக்குச் சமீப ஆயத்தமாய், அவ்வருகையைச் சனங்களுக்கு அதிக துலாம்பரமாய்ச்சித்திரித்துக்காட்டுவதாய் விஸ்தரிக்கப்பட்ட ஆதிச்சமயமேயாம். யூதசமயம்யூதரது சாகியமுறைக்கும், அயற்தேசத்தவர்களது பழக்கவழக்கங்களுக்குமொப்ப, தேவாலயங்களும் தூபதீபங்களும் ஆசாரியரும் பண்டிகைகளும் முதலிய புறக்கோலங்கள் பலவற்றோடுங்கூடி இயங்குவதாயிற்று. ஆதலால் பிஞ்சுமுதிர்ந்து காயானதுபோல, ஆதிச்சமயமே விருத்தியடைந்து யூதசமயமாயிற்றன்றி, யூதசமயம் ஆதிச்சமயத்திற்கு மாறானதாய், புதிதாய் ஏற்படுத்தப்பட்டதன்று.

ஈற்றில், யேசுக்கிறீஸ்துநாதர், தாம் யூதசமயத்தை அழிக்கவல்ல நிறைவேற்ற வந்தவரெனத் தாமே கூறியருளியபடி (மத். 5; 17.) கிறீஸ்து சமயம் யூதசமயத்தின் விரிவும் நிறைவேற்றமுமேயாயிற்று. யூதசமயத்திலே ஞாபகங்களாய் நிழலாய்நின்ற சடங்குகளினிடமாய், கிறீஸ்துசமயத்தின் ஞாப்பியங்களும் பொருளும் வந்தன. குறிப்பிடப்பட்டவைகள் நிறைவேறிய சம்பவங்களானபின், இனி, குறிப்புக்கள் அவசியமில்லையாதலால் அவை தாமாயொழிந்தன. அபூரணமாய் அறியப்பட்டிருந்த உபதேசங்கள் திவ்விய சற்குருவாகிய யேசுக்கிறீஸ்துவினுற் பூரணமாய் உபதேசிக்கப்படவே, அபூரணசமயம் பூரணசமயமாயிற்று. இங்ஙனமே காய்

* இவற்றின்விரிவை Primitive Common Traditions, (by Rev. A. Hegglin S. J,)—என்னும் நூலினுட் காணலாம்.

முற்றிக் கனியாகியவாறு, வருவாரென்ற நம்பிக்கையையுடைய யூதசமயம் வந்தார் என்னும்விசுவாசத்தையுடைய கிறீஸ்துசமயமாய்ப் பிரகாசிக்கின்றது.

ஆதிதொட்டுச் சிதைவுறாமற் காக்கப்பட்டும், முறைமையாக விரிந்தும் பூரணப்பட்டதாகிய கிறீஸ்துசமயமே இனிமைபொருந்திய நற்கனிக்கு உவமிக்கப்படத்தக்கது. ஏனைச்சமயங்கள் பிஞ்சிலே காயிலே வெம்பி அழுகிய கனிகளுக்கு உவமிக்கப்படத்தக்கன. ஆதிச்சமய உண்மைகள்சில ஏனைச்சமயங்களிலும் குழை மறை காய்கள்போல் உள என்பதனை முன்னரும் சொல்லியிருக்கிறோம். இந்தியாவிலே இவ்வாறு ஆதிச்சமய உண்மைகள் சில பொதிந்த சமயங்களுள் நம் தமிழரது சைவசித்தாந்தமே அதிவிசேடம்பெற்றது என்பது எமது துணிபு. சைவசித்தாந்தமானது சில தத்துவ சாஸ்திர உண்மைகளை விளக்கியிருக்கும்பெற்றி உள்ளபடியே வியப்புக்குரியது. அது தமிழரது யுக்தித்திறனுக்கு மங்காததோர்சான்று. ஆயின், சைவசித்தாந்தமுடிபுகளின் முடிபு கிறீஸ்துசமயமேயாம். நம் சைவர் கிறீஸ்துசமயத்தைப் பாரபட்சமற்றமனதோடு சீர்தூக்கி ஆராய்வரேல், நிச்சயமாய் அதினாற் கவரப்பட்டு அதனைத் தழுவி மகிழுவர். மாணிக்கவாசகர் முதலாம் சைவகுரவர்களும் தாயுமானவர் முதலாம் ஞானிகளும் வாஞ்சித்துத்தேடிய உண்மைநிலை சற்சமயமாகிய கிறீஸ்துசமயநிலையேயாம். கிறீஸ்துசமயமே திருஞான சம்பந்தர் முதலியோரது முற்றியபக்திக்கு இலக்காகத்தக்கது. அதிலுள்ள துறவே பட்டணத்துப் பிள்ளை முதலியோருடைய துறவுக்கும் மேல்வரிச்சட்டமாயுள்ளது. அதிலுள்ள ஞானமே சித்தாந்தநூல்களின் நடுநாயகமாகிய சிவஞானசித்தியை இயற்றிய அருணந்திசிவாசாரியருடைய நுண்ணிய அறிவையுந்துலக்கி நெறிப்படுத்தத்தக்கது. அதின் ஆனந்த சௌகரியமான திருநாட்களே நம் சைவபத்திமான்களெல்லாம் ஞானப்பரவசத்தோடு கொண்டாடப்படத்தக்கவைகள். அதின் திவ்விய போதகமே தமிழராகிய நம்மைச் சீர்படுத்தி, உயர்த்தி, சிறப்பிக்கும் பெற்றியுள்ளதாம் அன்றோ.

8. ஆட்சேபம்.—சைவசமயமோ "அநாதியானது" "அதற்குத் தொடக்கமுமில்லை முடிவுமில்லை."

சமாதானம்.— சைவசமயம் தொடங்கிய காலத்தைக் கற்றோர் ஒருவாறு வரையறுத்துக்கூறுகின்றார்கள். இந்தியாவிலே சைவசமயத்தின்முன்னும் பல வேறுசமயங்களிருந்தன.

தமிழராகியநாம் கடவுளைச் "சிவன்" எனவழங்கத்தொடங்கிய காலம் ஆரியர் தென்னிந்தியாவினுள்ளிறங்கியதற்குப் பிற்பட்டகாலமேயாதல் வேண்டும். ஏனெனில், "சிவன்" "சிவம்" எனுஞ்சொற்கள் தமிழ்ச்சொற்களன்று; சமஸ்கிருதச் சொற்களாம். தமிழர் ஆரியருக்கு முன்னேயே இந்தியாவினுளிறங்கி முன்பு நங்காதீரங்களிலும் பின்பு தென்னிந்தியாவிலும்வந்து குடியேறினார்கள் என்பது சாதிநூலோர் துணிபு. (தமிழ் மொழியின் வரலாறு அதி. 1) தமிழ்மொழியும் சமஸ்கிருதமொழிக்கு முழுமையும் வேறாகிய பாஷையென்பதனை யார் அறியாதார்? (அபிதானகோசம் 'தமிழ்' காண்க.) ஆதலால், தமிழருட் கடவுள் சிவனென அழைக்கப்பட்டதும், ஆகவே, சைவசமயம் தமிழருள் உண்டானதும் ஆரியர் நருமதையாற்றின் தென்பாகங்களில் இறங்கியபின்னேயாமென்பது நன்றாகத்துணியப்படும். தமிழ்ச்சாதியார், கடவுளை எப்பெயரால் அழைத்துவந்

தனர், அக்கடவுளுக்கு எவ்விதலட்சணங்களைச் செயல்களைக் கற்பித்திருந் தனர் என அறிதல் எளிதன்று. சிலர் முருகவேளே தமிழரது ஆதித்தெய் வம்போலும் என்பர். (தமிழ்மொழியின் வரலாறு பக். 78) அஃதெவ்வா றிருப்பினும் தமிழர் ஆதிதொட்டுச் சிவனைத் தந்தெய்வமாகப் போற்றியுள் ளார்களல்லரென்பது ஆன்றோர் சகலர்க்கும் ஒத்ததுணிபு. பிஷப் கால்ட் வெல் ஆதிய சில வித்வசிரோன்மணிகளது அபிப்பிராயப்படி, ஆரியர் வெகு கஷ்டத்துடனேயே, தந்தெய்வமாயிருந்த சிவனைத் தமிழர் அங்கீக ரிக்கச்செய்தனர். தக்கனும் அவனைச்சார்ந்தோரும் சிவனை அங்கீகரியா து இகழ்ந்ததும், சிவன் தமது சுய உருவத்தோடு தக்கன்சபையிற் தமது முதன்மையை நாட்ட இயலாது, பிசாசங்களைச் சிருட்டித்து அவைகளுக் குத் தலைவனாய்த் தாமும் ஓர் பிசாசுரூபமாய் (வீரபத்திரன்) சென்றபோ தே தக்கனுதியோரை அடக்கித் தமது முதன்மையை நாட்டியதுமாகிய கதை, பெரும்பாலும் பிசாசவணக்கமுடையோராகிய தென்னாட்டவர் ஆரியரது சைவசமயத்தை அங்கீகரிக்க உடன்படாதிருந்தகாலையில், ஆரியர்கள் சிவனை அத்தென்னாட்டுக்கு உவப்பானதோர் பிசாசவடிவ மாய்க் கற்பித்துக்காட்டிச் சைவத்தை இவர்களுள் நிலைநிறுத்திய சம்ப வத்தின் குறிப்பே என்பது சில வியுற்பத்திமான்களது கருத்து. (See Yalpana-Vaipava-Malai, Note LXI.) ஆரியர் தங்கள் மேலான சீர் திருத்தத்தைத் தென்னாட்டில் நாட்ட விரும்பியபோது, அத்தென்னாட்டா ருடைய தெய்வங்களெல்லாம் தங்கள் தெய்வத்தின் அவதாரமேயா மெனக் கதைகளாற் சோடித்து வர்ணித்துப் புராணங்களாகப் பாடிக்கொ டுத்து, இவர்களைத் தமக்கு வசப்படுத்தியிருப்பார்கள் என்பது நம்பப்ப டத்தக்கதேயாம். (தமிழ்மொழியின் வரலாறு பக். 14.)

சிவன் தமிழராகிய நமக்கு ஆதித்தெய்வம் அல்லரென்றோம். இனி, ஆரியர்தமக்கும் அவர் ஆதித் தெய்வம் அல்லர். ஆரியருடைய ஆதிச்சமயக் கொள்கைகளுக்கு இனிய சான்றாக விளக்குகின்றது இருக்குவேதசங் கிதை. இருக்குவேதத்தில் எவரும் கண்டுகொள்ளத்தக்கதாய்க் கிடக்கின் றதியாதெனில், ஆதி ஆரியரெல்லாம் பூதியங்களையும் வானசோதிகளை யுமே ஒவ்வோர் தெய்வமாகப்பாவித்து யாகாதிகளால் வழிபட்டனர் என்பதாம். பண்டிதர் யோண்மூயிர் கூறியது: "வேதமந்திரங்களை ஆக்கி யவர்கள், இயற்கையின் அதிசயத்துக்குரியதோற்றங்களாற் கவரப்பட்டு, உலகத்திலே எங்கெங்கும் சக்தியாரூடராகிய தெய்வங்கள் உண்டென வும், பிரபஞ்சத்தின் ஒவ்வோர் இயற்கைச் செயலையும் ஒவ்வோர் தெய் வம் நடத்திக்கொண்டிருக்குமெனவும் நினைத்தவர்களாய், அனைத்தையும் ஆக்கி அளித்துக்கொண்டுவருகிற ஏககடவுள் ஒருவரே உண்டென்பதனைக் கண்டுபிடித்திராதவர்களாயிருந்த நிஷ்கபடமான புலவர்களாம். இது, அவ்வத் தெய்வத்துக்குக்கொடுத்தோதப்படுகின்ற தொழில்களால்மாத்தி ரமன்று, ஒவ்வோர் பூதத்தினுக்கு, அன்றேல் வானசோதிக்கு உரியன வாய் அவைகள் தரித்திருக்கும் நாமங்களாலும் நன்றாய் நிச்சயிக்கப்படும்" என்கின்றனர். (Studies, p. 142) இத்தெய்வங்கள் ஒவ்வொன்றும் ஏக கடவுளாகவும் உயர்த்திப் போற்றப்பட்டிருக்கின்றது. நல்லூர் ஸ்ரீ ந. வே. கநகசபாபதி ஐயர் "மோக்ஷத்தின் மூலத்தைக் கொடுக்கிறவர்" என அருத் தப்படுத்தி, மோக்ஷமூலரெனப் புகழ்ந்து பாராட்டுவாரோடு தாமும்பாராட் டிய [வைதிக சைவ பரிபாலினி இலக். 2 பக். 12] மாக்ஸ் முல்லர் அவர் கள் கூறுவது: " வேதத்தின் பல மந்திரங்களிலே ஏறக்குறைய ஒவ்வொரு தெய்வமும் தனிமுதலாய், பரமபதியாய்க் கூறப்பட்டுள்ள வாக்கியங்களைத்

தெளிவாய்க்காணலாம். இரண்டாம் மண்டலத்து முதலாம் மந்திரத்தி லே அக்கினி, உலகத்தினை ஆள்வோன், மானுடரின்பதி, ஞானம்நிறைந்த ராசா, பிதா, சகோதரன், மகன், நண்பன் என்றழைக்கப்பட்டிருக்கின் றனன். அதுமட்டா, மற்றையதெய்வங்களின் சக்திகளும் நாமங்களும் எல்லாம் அக்கினிக்குச் சூட்டப்பட்டிருக்கின்றன... இந்திரன், மந்திரங்க ளிலும் பிராம்மணங்களிலும் தெய்வங்களனைத்தினுள்ளும் அதி பெல வானாகப் போற்றப்படுகின்றான். ஓர் சூக்தத்தின் பல்லவம் 'விச்சு வஸ்மாத் இந்த்திர உத்தர' இந்திரன் அனைவருக்கும் மேலானவன் என் றிருக்கின்றது. சோமன் பெரியவனாய்ப் பிறந்தவன், எவரையும் வெல் லுகின்றவன் எனப்படுகின்றான். அவனே உலகநாயகன், அவனே மானு டரின் சீவியகாலத்தை நீடிப்பவன், அவனே மேலுலகத்தையும் பூமியை யும் அக்கினியையும் சூரியனையும் இந்திரனையும் விஷ்ணுவையும் சிருட் டிக்கிறவன் எனவும்படுகிறான்... அப்பால் வர்ணனுக்குச் சொல்லப்பட் டதாய் அடுத்துவருகிற மந்திரத்தை வாசிக்குமிடத்து, இதிலே தொழுது கொள்ளப்படும் தெய்வமே இம்மந்திரத்தைப்பாடிய புலவனதுமனசிலே பரமமானதும் சருவவல்லமையுள்ளதுமான தெய்வமாயிருந்ததெனக் காண்கின்றோம்." (Ancient Sanskrit Literature pp 533-4) இங்ஙனம் வேதத்திலே சொல்லப்படுவது பலதேவ வணக்கமேயோவெனில், அப்ப டியன்று, பல தனித்தேவவணக்கமே என்பது மாக்ஸ் மூல்லராதியோர் கருத்து * அதெங்ஙனமெனில், நெடுங்காலப் பரப்பினுள்ளே சீவித்தோ ரான வைதிக புலவர்கள் அவ்வக்காலத்திலே ஒவ்வோர் தெய்வத்தை மேலான தனிமுதலாகப்போற்றித் துதித்தார்கள். இப்படியே பலருக்கு ஏகபரத்துவம் சொல்லப்பட்டது என்ப. ஆயினும், பரத்துவத்தை மாறி மாறி அடைந்துகொண்டுவந்த இப்பலதெய்வங்களைத் தொழுமுன் ஆரி யர் வணங்கியது தியௌஸ்பிதா (பரமண்டலங்களிலிருக்கும்பிதா) எனப் பெயரிடப்பட்ட ஏக கடவுளையாம்; இவ் ஏக கடவுட்கொள்கையானது இருக்குவேதத்தின் பல தனித்தெய்வகொள்கைகளூடே கார்மேகங்களி னூடே நீலாகாயந்தோன்றுவதுபோல ஆங்காங்கு காணப்படுகின்றதென் று மேற்சுட்டிய சாஸ்திரவியுற்பத்திமான் கூறியுள்ளார்.†

இருக்குவேத சங்கிதையிலே சிவன் என்னும் பெயருள்ள ஓர் சிறு தெய்வமும் காணப்படுதலில்லையென முன்னரும் குறிப்பிட்டிருக்கிறோம். கருமகாண்டமெனவும் அற்பசுருதியெனவும் தற்காலச் சைவர் ஒதுக்கி வைக்கின்ற இவ்வாதிநூலிலேமாத்திரமன்று, ஞானகாண்டமும் பிரபலச் சுருதியுமென அவர்கள் போற்றும் உபநிஷத்துக்களுள் அதி பழமையான வைகளாயுள்ள முக்கிய உபநிஷத்துக்களிலேயும் சிவனும் சைவமும் காணப்படாது போகின்றன. தற்போது அச்சிலுள்ள நூற்றெட்டு உப நிஷத்துக்களோடு பின்னும் சில இந்நாட்களிலும் கரலிகிதங்களாய்க் கண்டுபிடிக்கப்படுகின்றன. இது எங்ஙனமெனில் மாக்ஸ் மூல்லர் கூறு வது: "இந்திய சரித்திரத்தின் பிற்பட்டகாலங்களிலே புதுப்புது மதங்க

---

* மாக்ஸ் மூல்லர் இதனை (Henotheism) என்னும் புதுப்பெயரால் அழைத்தனர்.

† உதாரணம். இருக்குவேதம் I 164,46 "ஒன்றேயாயிருக்கின்றதனை அறிஞர் பலவிதமாய்க் கூறுவார்கள். அவர்கள் அதனையே அக்கினி, யமன் மாதரிஸ்வன் எனப் பெயரிடுவார்கள்." சகல தேவர்களையும் ஒருங்கே கூட்டி "விஸ்வேதேவா" எனப் போற்றிய வாக்கியங்களுமுள.

ளைத் தாபித்தோர், பழைய உபநிஷத்துக்கள் தங்களுக்கு இசையவில்லை யெனக் கண்டபோது, தாங்களே புதிதாய் சில உபநிஷத்துக்களை இயற்றப்பின்னிட்டார்களுமிலர்; அது அவர்களுக்குக் கஷ்டமாயிருந்துமிலது. இப்படியே இவ்வகைநூல்கள் வரவரத்தொகையில் வளர்ந்துகொண்டுவருதல் எங்ஙனமென்பது வெளியாகின்றது... அன்றியும், தற்காலம் மிகப் பிறகிட்டு இயற்றப்பட்ட உபநிஷத்துக்களும் உண்மையான பழைய நூல்களுக்குரிய அங்கீகாரத்தையே பெறுகின்றன"* இங்ஙனம் அநேகமான உபநிஷத்துக்களுள் வாதராயணர் முதலிய சூத்திர கர்த்தாக்களால் மேற்கொள்ளவும் சங்கராசாரியர்முதலிய பூர்வவியாக்கியாதாக்களால் விளக்கவும்பட்டவைகளே சந்தேகமற்ற பழமையுடையன. இவ்வுபநிஷத்துக்கள் எழுதப்பட்டகாலத்திலாயினும், தர்சன சூத்திரங்கள் எழுந்தகாலத்திலாயினும் சிவன் ஆரியரது கடவுளாக விளங்கியிலர். உள்ளபடி உபநிஷத்துக்கள் எவரையேனும் தெய்வமாகப்போற்றுதலுக்கும், பந்தகாரணமாகிய எவ்வித சமயாசாரத்துக்கும் எதிரானவைகளும், சமஸ்தமும் பரமான்மாவின் தோற்றமாம் எனப் போதிப்பவைகளுமாம். ஆதலால், சைவசமயாசாரங்கள் அவைகளில் இடம்பெறா. அவைகளில் தெய்வங்களின் பெயர்களும் சமயாசாரங்களைப்பற்றிய குறிப்பும் நிகழுகின்றனவேயெனில், அவை மித்திர வருண விஷ்ணு இந்திர முதலிய வைதிக தெய்வங்களும் அசுவமேதம் முதலிய வைதிக ஆசாரங்களுமேயன்றிச் சிவன்முதலிய ஆகம புராண தெய்வங்களும் சைவதல மூர்த்ததீர்த்த ஆசாரங்களுமன்று. அக்காலத்திற் கற்றோர்தழுவிய சமயம் சைவமுமன்று, வைஷ்ணவமுமன்று, கபிலர் பதஞ்சலி கணாதர் சைமினி கௌதமர் வாதராயணர் முதலியோர் போதித்த சாங்கியம் யோகம் வைசேடிகம் மீமாஞ்சை நியாயம் வேதாந்தம் என்னும் வைதிகசமயங்களும் விருகஸ்பதியாதியோர் சமைத்த லோகாயதம் முதலிய அவைதிக சமயங்களுமேயாம். அக்காலங்களிலேயும் பிரமா விஷ்ணு உருத்திரன் என்போர் சிற்சில ஆரிய குழாங்களாற் குலதெய்வங்களாய்ப் போற்றப்பட்டிருக்கலாம் என ஆன்றோர் ஊகிக்கின்றனர். ஆயினும், அப்பூர்வகாலங்களில் பிரமா, விஷ்ணு உருத்திரன் என்போர் அவ்வக்குழுவினரது தனித்தெய்வமாய்ப் பாவிக்கப்பட்டிருப்பரேயன்றி ஒருவருக்கொருவரை மேற்பட்டவராய்க் கூறும் வாது இன்னும் எழுந்ததில்லை. பின்னைச் சிவனையும் விஷ்ணுவையும் முறையே பரமபதியாகக்கொள்ளுகின்ற சைவமும் வைஷ்ணவமும் வெவ்வேறு சமயங்களாய்ஏற்படத்தொடங்கியதுஎப்போதோவெனில், வேதசங்கிதைகளும் ஆதிஉபநிஷத்துக்களும் எழுந்தகாலத்துக்குப் பிற்பட்டதும், ஆகம புராணங்கள் எழுதப்பட்டகாலத்துக்கு முற்பட்டதுமானதோர்காலத்திலேயேயாதல்வேண்டும். அதெங்ஙனமெனில், இவ் இடைக்காலத்திலே (கி. மு. 6-ம் நூற்றாண்டிலே) வைதிக தெய்வவழிபாடுகளுக்கும், யாகாதி ஆசாரங்களுக்கும் விரோதமானதாய் விருகஸ்பதியின் அவைதிக தத்துவ சாஸ்திரத்தைப் பெரிதும் தழுவுவதாயுள்ள பௌத்தமும், அதனோடு ஏககாலத்ததாகிய சமணம் அல்லது ஜைனம் என்னும் ஆருகதமும் மத்திய தேசத்திலே உதித்தன. பௌத்தசமயம் கி. மு. 4-ம் நூற்றாண்டிலே அசோகராசனின் உதவியால் மிக வலியடைந்து பரவத்தொடங்கியபோது சிலகாலம் வைதிக தெய்வங்களும் ஆசாரங்களும் கிடந்தவிடமுந்தெரியாதுபோய்மறைந்தன. பௌத்தவெள்ளம் அத்துணைப் பெலத்தோடு

---

* History of Ancient Sanskrit Literature p. 317.

பாய்ந்துகொண்டிருந்தது. பௌத்தர் இந்தியாவெங்கணும் பரந்தபோதே முன்னில்லாதவிதமான ஆலயங்களும் தேர்முதலியவைகளை வீதிவலஞ் செய்து விழாக்கொண்டாடுதலும் இந்தியாவில் ஏற்பட்டன. அப்போதே எவ்வுயிரையும் கொல்லாமை, மச்சமாமிசம் அருந்தாமை, பலிகள் வேள்விகள் செய்யாமை முதலிய வழக்கங்கள் தலைப்பட்டன. இக்காலமெல்லாம் துன்புற்றிருந்த பிராமணர் ஆருகதரை மெல்ல மெல்லத் துணைக்கொண்டு பௌத்தரைக் கலைத்தோட்டிவிட, இவ்வாருக மதமே தென்னாட்டிலேயும் கி. பி. 6-ம் நூற்றாண்டுமுதல் 13-ம் நூற்றாண்டுவரையிற் சிரேஷ்டம்பெற்றுநின்றது. ஆருகதர் தென்னிந்தியாவிற் பரந்திருந்தகாலத்திலேயே சைவ வைஷ்ணவ சமயங்கள் என்னும் பகுப்புக்கள் அதி துலாம்பரமாய்ச் செய்யப்பட்டுக்கிடக்கக் காண்கின்றோம்.* இக்காலப் பரப்பினுள்ளேயே புராணங்கள் எல்லாம் எழுந்தன. பௌத்த ஆருகத எழுச்சிகளால் "அந்தமில் மறையெல்லாம் அடிதலைதடுமாறிச் சிந்

* இக்காலத்தார் உபநிஷத்துக்களிலே பிரதிபாதிக்கப்படுகின்ற நிர்க்குணப்பிரமத்தைத் தேடாது, சகுணமூர்த்தங்களாகிய விஷ்ணுவையும் சிவனையும் பரமபதிகளாகக் கற்பித்து வழிபடுவோராயினமை எவ்வாறென்பது, வைதிககாலத்துக்குப் பிற்பட்ட நூல்களிலே தெளிவாய்க் காணப்படுகின்றதென ஆன்றோர் செப்புகின்றனர். ஆதி உபநிஷத்துக்களை இயற்றிய தத்துவசாஸ்திரிகள் தியானத்தினால்வழிபட்ட வாக்குமனாதீதமான பரப்பிரமம், சாமானிய சனங்களுடைய பக்திக்கும் சரியை கிரியைகளுக்கும் ஏற்புடையதாய்க் காணப்படவில்லை. மனுடருக்குரிய அநுதாபமும், கண்ணுக்குப் புலப்படக்கூடிய சாங்க உபாங்க அங்கப் பிரத்தியங்கங்களுங்கொண்ட தெய்வங்களே அவர்களால் வேண்டப்பட்டது. ஆதலால், இவ்விடைக்காலத்தார் பூர்வ ஆரியருடைய பௌதிக தெய்வங்களையே விரும்பத்தொடங்கினர். ஆயின், இக்காலவரையிலே பௌதிக தெய்வங்கள் படிப்படியாய் உருமாறி முற்றும் வேறுதொழிலுங் குணமுமுள்ளவைகளாய்ப்போயின. மழைக்கு அதி தெய்வமாயிருந்த இந்திரன் தேவர்களுக்கு அதிபதியாய்ப்போய் விட்டார். அனைத்தையும் தன் கவிப்பினுள்ளூடும் ஆகாயமாகிய வருணன் சமுத்திரத்தின் அதிதெய்வமாய் மாறிவிட்டார். சூரியனின் மூன்று தோற்றங்களையும் காட்டுகின்ற விஷ்ணு உலகத்தை ரக்ஷிக்கும் பொருட்டு மானுடருளோர் மானுடனாய் அவதரிக்கின்ற அதி மானுஷியமான ஓர் தெய்வமாகிவிட்டார். அழிவையும் பயங்கரத்தையும் உடன் கொண்டுசெல்வதினால் "அசிவ" எனவும் மங்கலமாகச் "சிவ" எனவும் அழைக்கப்பட்ட உருத்திரன் கைலாசபதியாகிய சிவனாகமாறி விட்டார். இங்ஙனம், பிற வைதிக தெய்வங்களும் காலகதியிலே மாறுதலடைந்திருந்தன. இவைகளுள் அதிக மானுஷியத்தன்மையுள்ளவராகச் சித்திரிக்கப்பட்ட விஷ்ணுவையே இடைக்காலத்தாருட் பெரும்பாலாரான இந்தியர் தங்கள் மனதுக்கினிய தெய்வமாக ஏற்றுப் பரமபதியாகப் போற்றினர். பைசாசவழிபாட்டைப் பெரும்பாலும் அநுசரித்துவந்த தென்னாட்டார், பைசாசரூபத்தையும் வகிக்கின்றவராகச் சொல்லப்படும் சிவனைத் தந்தெய்வமாகப் போற்றினர். பின்பு சைவ ஆகமங்களாலும் புராணங்களாலும் விஷ்ணுவுக்குப்போலவே இச்சிவனுக்கும் பரத்துவங்கொடுத்தோதப்பட்டது என்ப. cf. "Du Brahmanisme &c." par Mgr. Laouenan, Vol. II. pp. 234 & seq.

டை", காலநிரூபணவரம்புகள் அழிய, மெய் பொய்களின் வேற்றுமை ஒழிய, இச்சர்வ குழப்படியான கலக்கத்தினுள்ளே புராணங்கள் எழுதப் பட்டமைக்கு அப்புராணங்களே சாட்சி.

அக்காலமே, சமணருக்கெதிராய்ச் சைவ வைஷ்ணவ சமயஸ்தாபனஞ் செய்தோராகிய மாணிக்கவாசகராதியாம் குரவர்களும் வைஷ்ணவ ஆழ்வார்களும் தோன்றினர். மாணிக்கவாசகர் அரிமர்த்தன பாண்டியன்காலத்தவராதலால் கி.பி.பத்தாம் நூற்றாண்டிலிருந்தவர். திருநாவுக்கரசரும் சம்பந்தரும் கூன்பாண்டியன்காலத்தவர்கள். கூன்பாண்டியன்காலமோ கி.பி.11-ம் நூற்றாண்டாமென்பது சரித்திரசம்மதம். ஆகவே சைவசமயம் தென்னாட்டிலே உறுதியாய் ஸ்தாபிக்கப்பட்டது கி.பி. பத்தாம் நூற்றாண்டின் பின்னேயாம்.

இந்தியாவில் அன்றுதொட்டே பல வேறுசமயங்கள் ஒன்றுடனொன்று வாதுபுரிந்துகொண்டு தழைத்திருக்கின்றன. "உலகாயதன் சார்வாகன்முதலியோர் காணப்பட்ட பூதங்களே தெய்வம் என்பர். சௌத்திராந்திகனும், யோகசாரனும், மாத்தியாமிகனும், வைபாடிகனும் பிடக நூலிற் சொல்லப்பட்ட 23 வகைப்புத்தருமே தெய்வமென்பர். வேதாந்தி, மாயாவாதி, நிரீச்சுரசாங்கியன், பிரபாகரன், மீமாஞ்சன் முதலானோர் புருடதத்துவமே தெய்வமென்பர். பாட்டன், சத்தப்பிரமவாதி முதலாயினோர் வேதமே தெய்வமென்பர். வாமி, காளாமுகன், மிச்சிரசைவன் முதலாயினோர் சத்தியே தெய்வமென்பர். ஆசீவகன் நிகண்டவாதி முதலாயினோர் அருகனே தெய்வமென்பர். பாஞ்சராத்திரி, வைஷ்ணவன் முதலாயினோர் விஷ்ணுவே தெய்வமென்பர். ஆன்மவாதி, ஔஷதவாதி கன்மவாதி முதலாயினோர் ஆன்மாவே தெய்வமென்பர். சந்திரவாதி, சூரியவாதி, அசுத்த சைவர் முதலாயினோர் சகளவடிவுகளே தெய்வமென்பர். மாவிரதன் பாசுபதி முதலாயினோர் நிட்களவடிவே தெய்வமென்பர். சுத்தசைவர் முதலாயினோர் சகளநிட்களத்தைத்தெய்வமென்பர். யோகிகள் முதலாயினோர் விந்துநாதங்களைத் தெய்வமென்பர். இவற்றைத் தத்துவப்பிரகாசம்: பூதங்கள் இறையென்பார் புத்தனென்பார் புகழ் பிரமமேயென்பார் புருடரென்பார், வேதங்கள் இறையென்பார் சத்தியென்பார் மிகும் அருகனேயென்பார் விண்டுவென்பார், போதந்தான் அரனென்பார் வடிவுகளையுரைப்பார் புகழும் அருவென்பார் போய் அருவுருவென்பார், நாதங்கள் இறையென்பார்கட்கப்பாலாகும் நாதன்றன் திருப்பாதநாமறிந்துபுகல்வாம் என்பதாற் காண்க." இவற்றுட் தற்காலம் சைவமும் வைஷ்ணவமுமே தமக்குட் சண்டையிட்டு மண்டையுடைப்பதில்விசேஷித்தன. விஷ்ணுவைப் பரமபதியெனச் சாதிக்கும்புராணங்கள் முகமன்பேசும்புழுகுநூல்கள் எனவும் (கந்தபுராணம்). "விஷ்ணுவைக்கண்ணாற்கண்டாலும் சிவத்துரோகம், அந்தச்சிவத்துரோகத்தால் நரகயாதனையில் ஆழ்தல்நிச்சயமே, ஆகையால், விஷ்ணுநாமத்தை வாக்கினால் உச்சரித்தலுந்தகாது" எனவும் சைவ நூல்கள் கூறும். வைஷ்ணவ நூல்கள் "சிவனைப் பூசித்துச் சைவநூல்வழியொழுகுவோர் பாஷாண்டர்களும் சச்சாஸ்திரவிரோதிகளுமாம்" எனவும், "விஷ்ணுவைமறந்து இதரதெய்வங்களை வணங்குவோரும் இதரதெய்வங்கள் விஷ்ணுவுக்குச் சமமென்று சாதிப்போருமே பாஷாண்டர், வைஷ்ணவரல்லாப் பிராமணர்கண்ணெதிர்ப்பட்டாலும் கையாற்றீண்டலும் அவர் முன்னிலையிற் பேசலும் தோ

ஷம்" எனவும் (பதும புராணம்), "மச்சியம் கூர்மம் லேங்கம் சைவம் காந்தம் ஆக்கினேயம் என்ற சிவபுராணங்கள் தாமசகுணத்தினின்று உற்பத்தியாயின... தாமசகுண உற்பத்தியான இந்நூல்களைப் படிப்போர் எரிவாய் நரகுக்கு ஆளாவர், இவைகளை அறிஞர் வெறுப்பர்" எனவும் (பதும புராணம்) கூறும். சைவமும் வைஷ்ணவமும் தம் அநேக உட்பிரிவுகளோடுங்கூடித் தமக்குள்ளேயும் புறத்தேயும் இவ்வாறு வாதிட்டுநிற்க,இந்நூற்றாண்டிலே ஆரிய சமாசம் பிரமசமாசம் என்பனவே யாவற்றினும் மேலாய்விளங்கும் பக்குவத்தில் வடதென் இந்தியாவெங்கணும் பரவி வருகின்றன. அப்பால், கத்தோலிக்க சத்தியசமயம் இந்தியரால் மிகவும் சன்மானிக்கப்படுகின்றமையால் ஆயிரக்கணக்கானோர் அதிற்புகுந்து ஒழுகிவருகின்றார்கள். "இந்தியாவிலே தற்காலம் சைவசமய அறிவு சுருங்கக் கிறீஸ்துசமய அறிவு பரம்பிவருகின்றது....பலரும் சைவசமயத்தைக் கைவிட்டுக் கிறீஸ்துசமயத்திற் புகுகின்றார்கள்." எனச் சைவமகத்துவ நூலாசிரியரும்* "இந்தியாவிலே சைவசமயிகளுள்ளுஞ் சைவசமயத்தில் உட்பற்றில்லாதோர் பலரே"யென யாழ்ப்பாணச்சைவப்பிரகாச சபையாரும்† இற்றைக்கு அநேகவருடங்களின்முன்னேயே அறிக்கையிட்டிருக்கின்றனர். இதுவரையிற் சுருக்கமாய்க் கூறியவற்றினால், சைவசமயமே இந்தியாவின் ஆதிச்சமயமென மயங்குவோர், இந்தியாவின் சமயசரித்திரமறியாதோரேயாமென்பதும், தற்காலம் இந்தியாவிலே சைவசமயம்மேலோங்குவதாயல்ல கீழ்நோக்கியேநிற்கின்றதென்பதும்பெறப்படும்.

---

* சைவமகத்துவம் முதலாம் பாட்டுரை.

† யாழ்ப்பாணச் சமயநிலை பக். ௩௭.

நாலாவது

# வேதாகமப் பிரகரணம்.

**9. ஆட்சேபம்—நீவிர் உங்கள் பைபிளை வேதம் என்பது எப்படி? இருக்கு ஆதிய நான்கும் அன்றோ வேதம் எனப்படும்!**

**சமாதானம்—இந்தியாவிலேயும், இருக்காதி நால்வேதங்களன்றி ஆயுள்வேதம் தனுர்வேதம் உத்தரவேதம் முதலியனவுமுண்டு. மகாபாரதமும் "மறை நான்கோடைந்து" என ஐந்தாம்வேதமாகக் கூறப்படும். ஆயின், உள்ளபடி இவையல்ல, மெய்யான கடவுளொருவரைக்காட்டும்நூலே வேதமும் ஆகமமுமாம்.**

ஒழிவிலொடுக்கத்திலே "காரணகர்த்தாவொருவனுண்டு, அவனைக்காட்டுநூல் ஆரணமுமாகமமுமாம்" என இனிதுகூறியுள்ளபடி, மெய்க்கடவுளைக்காட்டும் நூலே வேதமெனவும், ஆகமமெனவும்படத்தக்கது. புத்தகங்களுட் சிறந்தபுத்தகம் என்ற அர்த்தத்தையுடைய "விவிலியம்" என்னும் கிரேக்குமொழியால் அழைக்கப்படுவது எவ்விதமானதோர் நூலெனில்: எங்கும் பரிபூரணமாய் நிறைந்துள்ள ஏக கடவுளானவர் தாம் உலகத்திலே சற்குருவாயெழுந்தருளிவருவதைப்பற்றி ஆதிமனுடருக்குச் செய்தருளிய வாக்குத்தத்தங்களையும், ஆதித்திருவடியார்களது சரிதங்களையும், விசேட தேவஅருள்பெற்ற மகான்கள் அக்கடவுட்சம்பந்தமாய்ச்செய்த தோத்திரங்களையும் அடக்கியதாகிய பழைய ஏற்பாடு எனும் 45 ஆகமங்களும்; கடவுள் திவ்விய சற்குருவாயெழுந்தருளிவந்து போதித்தருளியவைகளின் சங்க்ஷேபத்தையும், அவரை வழிபட்ட திருச்சீடர்களுட் சிலர் ஆதிக் கிறீஸ்தவர்களுக்கு எழுதிய நிருபங்களையும் அடக்கியதாகிய புதியஏற்பாடு என்னும் 27 ஆகமங்களும் கொண்டதாகிய நூலேயாம். இந்நூல் முதனின்று கடையீறாக காரணகர்த்தாவாகிய கடவுளையும், அவர் மானுடர்மாட்டுச்செய்தருளிய அநுக்கிரகங்களையும், அவ்வநுக்கிரகங்களைப் பெற்றோரின் சரித்திரங்களையுமே அடக்கியதொன்றாதலால், இது "வேதம்" * எனத் தமிழில் அழைக்கப்படத்தக்கதேயாம். விவிலியநூல் "வேதம்" என்றழைக்கப்பட்டது இன்று நேற்றன்று, கிறீஸ்துசமயம் இந்தியாவில் நுழைந்த அன்றுதொட்டேயாம் என்பதையும் கவனித்துக்கொள்ளுக.

இனி, தமிழில் வேதம் என எவ்வாற்றானும் அழைக்கற்பாலதாகிய விவிலியம் கடவுள் மானுடருக்கருளிய வெளிப்படுத்தலுக்கு ஏற்றதோர் சாட்சியேயன்றி, அந்நூல்தான் அவ்வெளிப்படுத்தலை மானுடருக்குணர்த்தும் கருவியென்றெண்ணிப் புரொட்டெஸ்தாந்தரைப்போல மலைவுறாதிருத்தல்வேண்டும். கடவுள் மானுடருக்குத் தம்மையும் அவர்கள் முத்தியடைவதற்கு அறிந்து கைக்கொள்ளவேண்டிய சாதனங்களையும் உணர்த்தத்திருவுள்ளத்திற்கொண்டபோது, ஆதியில் ஆதிமானுடனுக்கும், பின் ஆபிரகாம் முதலாம் பிரசாபதிகளுக்கும், அப்பால் மோசே முதலாம் தீர்க்கதரி

---

* "வேதம்" அறிதற்குக்கருவி எனப்பொருள்படும் ஓர் சமஸ்கிருதமொழி

சிகளுக்கும் தேவதூதர்வழியாகத் தரிசனைகொடுத்துத்திருவுபதேசஞ்செய்தருளினார். இவ்வுபதேசத்தினை ஆதாம் முதலியோர் மோசேவரையில் வாக்குமாத்திரமாய்த் தலைமுறை தலைமுறையாக வழங்குவித்தனர். இடைக்காலத்தில் மனுக்குலம் மிகப்பெருகியவிடத்து, வாக்குமாத்திரமாய் வழங்கியிருந்த மெய்ம்மறையினுண்மைகளை மானுடர் மறந்துபோகாதபடிக்கு, மோசே முதலியோர் கடவுளின் அருட்பிரசாதத்தினால் உந்தப்பட்டு அம்மெய்ம்மறையின் சாராம்சங்களிற் பலவற்றை எழுதிவைத்தனர். எழுதிய இச்சாதனத்தைக்காத்து ,வியாக்கியானிப்பதற்கு யூதக்கிறீஸ்து சமயத்தின் குருபீடமும் ஸ்தாபிக்கப்பட்டது. அக்காலந்தொட்டு மெய்ம்மறையின் திவ்விய உபதேசத்திற்கு, எழுதாத யூதகுருபீட சம்பிரதாயமும் எழுதிய பழைய ஏற்பாட்டுநூல்களும் சாட்சியாயின. சம்பிரதாயமும் எழுதிய நூல்களும் ஒன்றையொன்று வலியுறுத்திநின்றனவேயாகவும், சம்பிரதாயமே கடவுள் அருளிய மெய்ச்சமயத்தை மாந்தர்க்கு உபகரிக்கும் உயிருள்ள பிரதானகருவியாயிருந்ததென்பது வெளிப்படை.

இனி, வாக்குமனுஷீகரான கடவுள்,மானுடர்மேற்கொண்ட அளப்பருங் கருணையினாற் பின்பு தாமே மானுடச்சட்டைசாத்தி சற்குருவாயெழுந்தருளிவந்தபோது, தமது திருவுபதேசத்தை நூல்களின்வழியாயன்று,திருவாக்குப் பிரசங்கத்தின்வழியாகவே அருளுவாராயினார். அது ஒருமுறை அருளப்பட்டபின், அதனைத் தமதுசீடர் புத்தகங்களில்வரைந்து அப்புத்தகங்கள்வழியாய் உலகினருக்குணர்த்துதல்வேண்டுமெனக் கற்பியாது, அவர்கள் தாங்களும் வாக்குமூலமாகவே உலகத்தின் எத்திசையிலும் பிரசங்கித்தல்வேண்டுமென ஆக்கியாபித்தருளினார் * அச்சீடர்களும், பின்பு தம்மைப்போலும் போதிக்கும் அதிகாரமுள்ள பிறரை நியமித்து, இவ்வாறே தெய்வ அதிகாரமுள்ள போதகர்களின் சந்தானத்தை ஏற்படுத்தினர். இங்ஙனம், போதகசம்பிரதாயமே யேசுநாதருடைய போதகத்தை உலகினருக்கு உபகரிக்கும் தனிக்கருவியாய் ஸ்தாபிக்கப்பட்டதாயினும், அத்திருப்போதகத்தின் பல அம்சங்கள் ஓர் உறுதிச்சாதனம்போலும் புத்தகரூபமாய் ஆதிச்சீடருட் சிலரால் எழுதிவைக்கப்படுதல் தேவசங்கற்பமாயிற்று. இச்சாதனம் சந்தேகவிபரீதம் நீங்கியதாயிருக்குமாறு, மேற்படி நூல்களை எழுதியோர் விசேட தேவ அருளினாற் பிரகாசமடைந்தோரும் உந்தப்பட்டோருமாயினர் என்பது அத்திருச்சீடரின் பொய்மையகன்ற சாட்சியினாலேயே அறியப்பட்டதாகக்கிடக்கின்றது.

விவிலியநூல் எழுந்தவிவ்வாறாயிருத்தலின், போதகரது திருக்கூட்டத்தின் சம்பிரதாயமே மெய்ச்சமயத்தினை மானுடர்க்குணர்த்தக் கடவுளாற் றெரிந்தேற்படுத்தப்பட்ட கருவியாயும், விவிலியநூல், அச்சம்பிரதாயத்தினால் வியாக்கியானிக்கப்பெற்று, அச்சம்பிரதாயத்துக்குச்சாட்சியாய் நிற்கும் உறுதிச்சாதனமாகவும் விளங்குகின்றமை காண்க. விவிலியநூல் மெய்ச்சமய உண்மைகளுக்குச் சாட்சியாகக் காலத்துக்குக்காலம் எழுதப்பட்ட நூல்களின் திரட்சியேயன்றி, அச்சமயத்தை ஆதியோடந்தமாயுணர்த்துங்கருவியாகக் கடவுளாற் றோற்றுவிக்கப்பட்டதோர் நூலல்ல. ஆதலாலன்றோ அதிலே சரித்திரபாகங்களும், காலம் இடம் முதலியவைகளுக்கேற்பச்செய்யப்பட்டுப் பின்னொழிபடைந்த நியமங்களும் ஏராள

---

* இதன்விரிவை "பிரிவினைமதங்களும் பைபிளும்" எனும் நூலில் 21-ம் பக்கமுதற்காண்க.

மாய்க்காணப்படுகின்றன. ஆதலாலன்றோ சமய உண்மைகள் அதிலே கிரமமாய் விளக்கப்படாதவைகளாயும், பலபாகங்களை ஒருங்கு நிரைத்துப் பொருள்கொள்ளும்போதே தெளிவுறத்தோற்றுகின்றவைகளாயும், சில முக்கியமானவுண்மைகள் வெளிப்படையாய்க் கூறப்படாதவைகளாயும் கிடக்கின்றன. ஆயின், விவிலியநூலின் ஆகமங்களெல்லாம் கடவுள் திருவருளினால் உந்தப்பெற்றோராலும் அவரருட்பிரகாசத்தோடும் ஏற்றநோக்கத்தோடும் எழுதப்பட்டமையால், அவைகள் தம்முள் ஒருசிறிதும் முரணுதலின்றி, ஒரேகடவுளையும் அவரது காருண்யச்செயல்களையுமே பிரதிபாதிக்கின்றவைகளாய், அவர் சற்குருவாய் எழுந்தருளிவந்தமையென்னும் மகா உண்மையைப் பலபலவிதங்களிற் சாதிக்கின்றவைகளாய்ப் பிரகாசிக்கின்றன.

ஆயின், கடவுள் மானுடர்க்குத் தம்மையும் முத்திசாதனம் முதலியவற்றையும் உணர்த்தும் ஏக கருவியாக அநாதியே அருளினாரெனச் சைவராதியோர் கூறும் இருக்காதி வேதங்களோ இவற்றையுணர்த்தும்பொருட்டாக ஏற்பட்ட நூல்களல்ல என்பது அந்நூல்களின் அகச்சாட்சியினால் இனிது பெறப்படும். நால்வேதங்களில் ஏக கடவுள் விளக்கப்பட்டிலர். அக்கினி இந்திரன் வருணன் சூரியன் விஷ்ணு சோமன் உருத்திரன் மருத்துக்கள் ஆதியாமிவர்கள் மாறிமாறித் தெய்வங்களுட் சிரேஷ்டமானவர்களாய்க் கூறப்பட்டிருக்கின்றனர். இவர்களெல்லாம் பூதியங்களை உயிருள்ளவைகளாய்ப் பாவித்தமையால் எழுந்த அதிதெய்வங்களாம். எங்ஙனமெனில், நெருப்பை அக்கினியெனவும், மழைமுகில்களை இந்திரனெனவும், ஆகாயத்தை வருணனெனவும், பொழுதைச் சூரியன் எனவும், அச்சூரியன் ஆகாயத்தை மூன்றுகவடுபாய்ச்சி அளப்பதுபோற்றோன்றுவதை விஷ்ணு எனவும், சோமபானத்தையோ சந்திரனையோ சோமனெனவும், இடிமுழக்கத்தையோ காலத்தையோ உருத்திரனெனவும், சண்டமாருதங்களை மருத்துக்களெனவும் அக்காலத்து ஆரியர் பாவித்து வணங்கினர்.* ஆதலால், நால்வேதங்களிற் காணப்படுவது பௌதிக வணக்கமேயாம். இவ்வணக்கம் அசுவமேதம் (குதிரைப்பலி) கோமேதம் (பசுப்பலி) புருஷமேதம் (நரபலி) முதலிய பலிகளோடும், சோமப்பூண்டின் சாறுகிய மதுபானத்தோடும் கூடியதாயிருந்ததென்பதை இருக்கு யசுர் சாமம் என்னும் திரிவேதங்களை மேலோட்டமாயேனும் பார்த்தோர் உணர்வர். இதிற் சைவருக்கு முற்றும் விரோதமானது யாதெனில், வேதசங்கிதைகளிலே சிவன் பிறதெய்வங்களுளோர் தெய்வமாகவேனும் குறிக்கப்பட்டிராமையாம். உருத்திரன்பெயரே ஆங்காங்கு அவற்றில் நிகழ்கின்றது. ஆயின், வேதங்களிற் கூறப்படும் அவ்வுருத்திரன் இடிமுழக்கங்களின் அதிதெய்வமேயன்றி சைவருடைய ஆகமபுராணங்களின் உருத்திரனல்லரென்பதை அவதானித்துக்கொள்ளுதல்

---

*சமஸ்கிருத வியுற்பத்திமான்களாகிய கோல்புறூக், உவில்லியம்யோன்ஸ், மாக்ஸ் மூல்லர், மோனியர் உவில்லியம்ஸ் ஆதியோர் நால்வேதபாகங்களை அங்கிளத்திற் பாஷாந்தரப்படுத்தி உபகரித்தும், அங்கிளத்திலே வைதிக சமயசாரங்களை விரிவாய் எழுதியுமிருக்கின்றனர். மேலே நாம் குறிப்பாய்க் கூறியவற்றின் விரிவை இந்நூல்களினுள்ளும், தமிழிலே "மெய்ம்மறை உத்தியான"த்தினுள்ளும் காண்க.

வேண்டும்.* வேதங்களிலே சிவவணக்கமாத்திரமன்று, அதற்குச் சிறந்தசாதனமாகிய லிங்க உபாசனையோ, சிவாலய சிவசின்னங்களோ, சைவரது சாதிபேதமோ, மறுசனனமோ, புலால்மறுத்தலோ இவை ஒன்றும் கூறப்படாதிருக்கின்றன. ஆதலால், சைவரது கருத்துப்படியேயும் அவைகள் காரண கர்த்தாவொருவனைக்காட்டும் நூல்களாகாமற் போகின்றன.

இனி, பௌதிகவணக்கத்தையும் யாகங்களின் ஆசாரத்தையும் கற்பிப்பனவையாகிய இருக்காதிவேதங்களிற் பிற்காலத்தாருடைய தத்துவசாஸ்திரக்கொள்கைகளுமுண்டேயெனில், அவைகள் வெகுசொற்பம். அச்சொற்பமும் தெளிவற்றதாய், வேதசங்கிதைகளை இயற்றிய புலவர்களது நிச்சய ஞானமற்ற மனதின் நிலையைப் பிரதிபிம்பிப்பதாய் இருத்தலாலன்றோ, அவற்றின்பின்னே முறையே எழுந்த பிராம்மணங்களும் ஆரண்யகங்களும் உபநிஷத்துக்களும் ஒன்றற்கொன்று மாறான பலகொள்கைகளைச் சாதிக்கின்றன. சைவராதியோர் வேதம் என்னும்போது இருக்காதிவேத சங்கிதைகளோடு பிற்காலத்தனவாகிய பிராம்மண ஆரண்யக உபநிஷத்துக்களையும் சேர்த்தேபேசுவர். இவைகளுள்ளும் ஆரண்யக உபநிஷத்துக்களையே ஞானகாண்டமென முக்கியப்படுத்தியும் வேதசங்கிதைகளையோ கருமகாண்டமென ஓர்மூலையிலடக்கியும்வைப்பர். ஆயின், பிராம்மணங்களையும் வேதமென்னல்கூடாது. ஏனெனில், பிராம்மணங்கள் மேற்சுட்டிய பௌதிக தேவர்களுக்கு யாகங்கள்செய்யும் முறை(விதி)யையும் அவ்யாகங்களோடு சம்பந்தமுள்ள பற்பல கதைகள் வியாக்கியானங்களை (அர்த்தவாதம்) யுமே அடக்கியிருக்கின்றன. அப்பால் ஆரண்யக உபநிஷத்துக்களையும் வேதமெனல் அமையாது. எங்ஙனமெனில், அவைகளும் காரணகர்த்தாவொருவனைக்காட்டுதலை ஒழிந்து சமஸ்தமும் பிர

---

* இது இனிதுவிளங்கும்படி இருக்குவேதத்தில் உருத்திரனுக்குச் சொல்லப்பட்ட மந்திரங்களுள் ஒன்றிலே சிலவாக்கியங்களை உதாரணமாக எடுத்துக்காட்டுவோம். இருக். 1-ம் மண்டலம் 114-ம் சூக்தத்திலே சொல்லப்படுவது: "மகிழ்ச்சிதருவதும், இனியவைகளுளினியதுமாகிய இம்மந்திரம் மருத்துக்களின் பிதாவாகிய உருத்திரனுக்குச் சொல்லப்படுகின்றது. (உருத்திரனே) நீ எமக்கும் எமது பிள்ளைகளுக்கும் சந்தானத்துக்கும் இணக்கமாயிரு. எங்களுட் பெரியவர்களையாவது சிறியவர்களையாவது, வளருகிறவர்களையாவது வளர்ந்தவர்களையாவது கொல்லாதிரு. உருத்திரனே எம்மையும் துன்பப்படுத்தாதிரு..." இவ்வுருத்திரனின் உற்பத்தி பலவாறாகச் சொல்லப்பட்டுள்ளது. இவன் பிரசாபதிக்கும் உஷசுக்கும் பிள்ளையெனவும்; இவன் பிறந்தவுடன் அழுததைக்கண்டு பிரசாபதி எனழுகிறாயென, எனக்கு ஓர் பெயர் இடவேண்டுமென்றழுகிறேனென, பிரசாபதி நீ உருத்திரன் (அழுகிறவன்) எனப்படுவாய் என்றாரெனவும், அதனால் அக்கினி அவன் ரூபமாயிற்றென்றும் உருத்திரனே அக்கினியென்றும்; அப்பால் உருத்திரன் ஒருபெயர் தனக்குப்போதாதென்றழுதுகொண்டிருந்தமையால் பிரசாபதி பின்னும் எழுபெயர்களை அவனுக்குக் கொடுத்தாரெனவும் சதபத பிராம்மணம்கூறும். பிற்காலத்ததாகிய விஷ்ணுபுராணம், இக்கதையைச் சிறிது விகற்பித்து, பிரமா கற்பாதிகாலத்திலே பிரசாசிருட்டி பண்ணவேண்டுமென்று சிந்தித்துக்கொண்டிருக்கையில், உருத்திரன் அவருடைய மடியிலே உதித்து அழுதுகொண்டோடினனெனக்கூறும்.

மமே என மாய்ாவாதிகள்முதலியோரும், கடவுளிலரெனச் சாங்கியர்முத லியோரும், கடவுள் பசுக்களுட் தலைமைபெற்றவோர் பசுவென நையாயி கர் முதலியோரும் துணிதற்கிடனாய் மாறுகொளக்கூறிய உபதேசங்களை யுடையவைகளாய்க்கிடக்கின்றன. உபதேசமாறுபாடு உபநிஷத்துக்களி லேயல்ல அறுசமயங்களை அவற்றினின்றும் எடுத்துரைத்தோர் கருத்திலே யே உள்ளதெனின், அறுசமயநூலோர்கள் எவ்விதத்திலும் தெளிந்தயுக் தியுள்ள அறிவாளிகளேயாதலால், அவ்வறிவாளிகள் சந்தேக விபரீதமின் றி உணர்ந்துகொள்ளக்கூடாத கருத்தினையுடைய நூல்கள் கடவுளை அறி தற்குத் தனிக்கருவியாக ஏற்படுவதெங்ஙனம்? உபநிஷத்துக்களைச்சுட் டிச் சொல்லியவற்றை நால்வேதங்களிலேயும் ஒட்டிக் கண்டுகொள்க. அதுமட்டா, வேத பிராம்மண ஆரண்யக உபநிஷத்துக்களையும், இவற்றோ டுசேர்ந்த நூல்களையும் பூமியினோர்கோணத்திலுள்ள இந்தியாவிற் பிறந் தோராய் மிகு சிறுதொகையினராயுள்ள மூன்றுவருணத்து இந்துக்களு மே வாசித்தலும் கேட்டலும் ஏற்கும் என்பது போதனையாதலால், இதி னாலேயும் இந்நூல்கள் மானுடருக்கு ஈடேற்றவழியைக் கற்பிக்கும் கரு வியாகக் கடவுளால் அருளப்பட்டவைகளல்லவென்பது புலப்படும்.

இனி, உபநிஷத்துக்களுக்கு வெகுகாலம் பிற்பட்டனவாகிய ஆகமசாஸ் திர புராணங்களும் வேதமெனப்படுதல் கூடாது என்பதை "நிகாரநிகா ரணநிக்கிரகம்" தனக்குரிய பிரசண்டவேகமான தர்க்கநடையிலே பின்வ ருமாறு விளக்கிற்று. "முன்னோர் அநுசரித்தவணக்கத்தையும் அவர் வேத நூலையுந்தள்ளி இடைக்காலத்திற் சிலரெழுந்து ஆகமசாஸ்திரங்களைக்கட் டினர். 'நரிவால்கொண்டு கிணறுழம்பார்த்த' தன்மையிற் தம்சிற்றறி வாற் சர்வஞ்ஞபதியை அளக்கத்துணிந்து மூடரானார். திரிபதார்த்தம் அநா தியென நிறுத்திப் பதிக்குப் பஞ்சகிருத்தியவேலைகொடுத்து (வண்ணான் சீலையழுக்கை உவர்மண் முதலியவற்றால் நீக்கும்வண்ணம்) தநுகரண புவ னபோகங்களை விரித்து அசுத்தமாயாதத்துவங்களால் அநாதிதொடங்கி நீக்கக் கற்பித்தனர். அவ்வேலை இதுகாறும் முடியாமை பிரத்தியட்ச மாய்த் தெரிகின்றது. (அநாதிதொட்டு இதுகாறும் முடியாதது இனி ஒருபொழுதும் முடியாது என்பது நியாயநூற்றுணிபு.) இவ்வாறு பசுக் கள் வருந்த, அதிலும் பதி மிகவருந்த, சித்தாந்திகள் கட்டியகட்டு அங்கு மிங்கும்செல்லாது பித்தாந்தமாக, அப்பால் பதிக்கு உதவியாகச் சித்தாந் திகளுக்கு மறுதலையாகப் பௌராணிகர் பிற்காலத்தெழுந்தனர். இவர் கள் சித்தாந்திகள் பதிக்குப்பராக்காய்க் கட்டிய பஞ்சகிருத்தியத்தையொ ழித்துச் சிவனுக்குப் பார்வதியாதிதேவிகளைக் கற்பித்து விநாயகராதிபிள் ளைகளையுமாக்கிக் கைலைமலையிற் குடியிருத்திச் சற்றே ஆறுதற்படுத்தினர். அவர் பௌராணிகருக்குட்பட்டு ஆடிய திருக்கூத்துகள் அதிகம்.(பௌரா ணிகர் கூற்றின்படி அவரது வியபிசாரமாதிதுர்க்கிருத்தியங்களை வரையா தொழிந்தனம்...)இவ்வாறு சிவனாதிதேவரின் துர்ச்செயல்கள் நிறைந்துள ஆலகால கொடுவிஷம்போன்ற புராணநூல்களையே தம் சமயநூலாய்க் கொண்டு பத்திசெய்கின்றனர்... இக்காலத்தில் மிகுதியாய்க் கலியுக வரதரென்று கந்தரைப்போற்றி, கந்தர் தெய்வயானை வள்ளியம்மை சரித மடங்கிய கந்தபுராணத்தையே பொருட்செல்வம் மகப்பேறு முதலிய பயன்நோக்கி வெகு பத்திமுத்தியாய்க் கேட்டுவருகின்றனர்... இப்புரா ணங்கள் (சைவபுராணம் பத்தும் மற்றையவும்)வேதங்களுக்குமுழுமாறு. ஆகமங்களுக்குமவ்வாறே. ஆகமசித்தாந்திகள் 'புறச்சமயநெறிநின்று மகச்

சமயம்புக்கும் புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச்சிரம- வறத்துறை களவையடைந்துமருந்தவங்கள் புரிந்து மருங்கலைகள்பலதெரிந்து மார ணங்கள்படித்துஞ்- சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் வேதசிரப்பொ ருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்- திறத்தடைவரிதிற் சரியை கிரியாயோகஞ்செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச்சேர்வர்.' (சித். 8-11.) 'பசித்துண்டு பின்னும் பசிப்பானையொக்கும்- இசைத்துவருவினை யின்பம்-இசைத்த- இருவினையொப்பில் இறப்பிறவத்தால்- மருவுவனும் ஞானத்தைவந்து' (சிவஞானபோதம்) என்றவற்றைநீக்கி அரிசி, வசம்பு என்றேத அரியும் சிவசம்புவுமருள்கொடுத்தவகையே சரியை கிரியைக ளில் அற்பமான ஒன்றையே மனமில்லாது செய்யினும் அங்ஙனம் செய் தவன் பெரும்பாதகனுயிருந்தாலும் முத்தியடைவனென்ற சூழ்ச்சவழி யைப் பௌராணிகர் கட்டினர்'' (பக். 6-7.)

வேதாகமங்களின் பொருளைச் சாமானிய சனங்கள் எளிதில் உணர்ந்து கொள்ளும்பொருட்டுப் புராணங்கள் நவரசங்களும் பொருந்திய கற்பனு லங்காரங்களோடு அவ்வேதாகமங்களின் பொருளையே குறிப்பாகக்காட் டும் எனச் சைவர் தற்காலங்கூறிவருதலும் பொருந்தாதென மேற்சுட்டிய நூல்காட்டுகின்றமையாவது: "புராதனவேதாந்திகள் கட்டிய வேதங்க ளுக்கும், அவற்றுக்குமாருக இடைக்காலத்துச் சித்தாந்திகள்கட்டிய குதர் க்கபிண்டமாகிய ஆகமங்களுக்கும், அர்த்த சப்தங்களில் முழுவிரோதமாக நவீனகாலத்துப்பௌராணிகர் தம்முள்ளக்கிடக்கையால்விரித்த தேவர் துராசார தூர்க்கிருத்தியங்களை நிறைவாய்க்காட்டும் புராணங்களை ஒப்பி டின் ஆகுமா?...இவை குறிப்புப்பொருள் கொள்ள ஏற்றனவேயெனின், அற்றன்றென்பது பிரத்தியட்சமாம். வேதாகமங்களைத்தெளியுமாற்றலில் லார்க்கே புராணங்கள் அருளிச்செய்யப்பட்டனவென்றும், அவை சிவனு லுபதேசிக்கப்பட்டனவென்றும் உன்சமயநூல்கள் கத்தும். சாதாரணசன ங்களுட் கல்வியறிவுள்ளோர் மிகச்சிலர். அவருள்ளும் இலக்கணஇலக்கிய தருக்க வியுற்பத்திமான்கள் மிகச்சிலர். அவருள்ளும் செம்பொருள் குறிப் புப்பொருட்டிறம்பூண்டு வேதசிவாகமங்களையோதி அவற்றுக்கேற்ற பொ ருள்கொள்வார் மிகச்சிலர். ஆகவே, சாதாரண சனங்களுக்குள் நியுதாம் சமானவரே புராணங்கேட்க அதிகாரிகளாவர். அவரும் வேதாகமங்களை யுணர்ந்தன்றிப் புராணநூற்பொருள்கொள்ள வல்லாரல்லரெனின் இப் புராணங்கள் கொடுக்கப்பட்ட நோக்கந்தானென்னே?... அவ்வாறு யாவ ருங் கல்வியறிவுள்ளராய்க் குறிப்புப்பொருள் கொள்ள வல்லாரெனினும் அப்படியாகுக எனவைப்போம். சமயநூல்களிற் சிலபாகம் அரிதுணர்பொ ருளாய்க் குறிப்புப்பொருள்கொள்ளக்கிடக்கினும், சன்மார்க்கநெறியயிற் றிப் பத்திசாதனையூட்டும் போதனைகளும் தேவகிரியைகளும்,வெளித்தோற் றத்தும் அசத்தியமும் துன்மார்க்கமும் நிறைந்துள கதைகளாகாது பரி சுத்த கதைகளாயிருத்தல்வேண்டும். சிவன் மணம்முடித்தார், விக்கினேசுர ராதியரைப்பெற்றார், களிறும்பிடியுமாய்க் கலந்தார், கந்தர் வள்ளியைக் கலந்தார் என்பனவற்றையும், நக்கரூபம் மோகினிரூபம் அரிகரபுத்திரன் பிறந்தகதை இவற்றையும் வாசிக்குமெவருள்ளத்திலும் தீமையான கருத் தே முந்தவும் இலேசாகவும் பதியத்தக்கது. இவை தேவகிருத்தியங்க ளென்று போற்றப்படுவதால் இவ்வகைத் துராசாரகிருத்திய ரூபங்களா கப் புனைந்துபேசப்படவேண்டியதின்று......குறிப்புப்பொருள்கொள்ளி னும் வெளிப்பொருளால் அநேகர் பொல்லாவழியடையச் செய்கின்றமை

யால் அவை மனுஷருக்குச் சன்மார்க்கமும் பத்திநெறியுங்காட்டத்தகுந்தனவல்லவென்பது வெளிப்படை... குறிப்புப்பொருள் கொள்ளில் முழுவதுங் குறிப்புப்பொருளாகச் செம்பொருளென்பதிலதாய்முடியும். அன்றியும், அவை ஒற்றுமையுடையனவாய்ப்பொருந்தா. கந்தபுராணத்தையே முந்த இலக்காய்க்கொண்டு முன்பின்முரணாத குறிப்புப்பொருள் கொள்ள ஒற்றுமைப்படுத்திக்காட்டியபின்பு குறிப்புப்பொருட்டிறம்பேசல் உத்தமமெனப் புத்திகூறுகின்றோம்." (பக். 27-28)

10. ஆட்சேபம்—கிறீஸ்துசமயநூல்கள் மோசேமுதலிய மனுடரால் எழுதப்பட்டன இருக்கு ஆதியவேதாகமங்களோ அநாதியானவைகள்.

சமாதானம்—வேதாகமங்கள் அநாதியேன்பது யுத்திக்கோவ்வாது. மோசேமுதலியோர் தேவஅருளினால் உந்தப்பெற்று எழுதியநூல்கள் சற்சமயத்தின் போதனைகளுக்குத் திறம்பாச்சாட்சியாயிருத்தலே ஒக்கும்.

இருக்காதிநூல்கள் "காரண கர்த்தாவொருவனைக்காட்டா"திருக்கின்றமையால் அவைகள் கடவுளை அறிதற்குக் கருவியாகிய வேதங்கள் ஆதல் கூடாதெனை முன்னைய சமாதானத்தினுட்காட்டினோம். ஆதலால் அவைகள் அநாதியானவைகளென வாதிப்பதிற் பயனில்லை. இனி, விவிலிய நூலின் பாகங்கள் மோசேமுதலியசரித்திரசம்பந்தமானமனுடரால், சரித்திரசம்பந்தமானகாலங்களிலே எழுதப்பட்டனவென்பது ஒருதலையாய்ச் சம்மதத்துக்குரியதாய்க்கிடக்க, இருக்காதிவேதங்களினுற்பத்தியோ இந்துசமயநூல்களிலேயும் பலவாறுய்ச்சொல்லப்பட்டுப்பொருந்தாமற் போகின்றது. எங்ஙனமெனில், முன்பு வைதிகநூல்களின் சாட்சியைநோக்குமிடத்து: சர்வாங்கபலியாகிய புருஷனின்யாகத்தினின்றும் இருச்சாமன் யஜுஸ் என்னும் செய்யுட்கள் பிறந்தன என இருக்குவேதத்துப் புருஷசூக்தமும்; ஸ்கம்பம்என்னும் ஆதாரவஸ்துவினின்று இருக்குமந்திரங்கள் வெட்டவும் யஜுர் வறுகியெடுக்கவும்பட்டன, அவ்வஸ்துவின் மயிர்களே சாம அதர்வமந்திரங்களாம் எனவும்,இருக்குவேதம் இந்திரனினின்றும் இந்திரன் இருக்கினின்றும் பிறந்தான் எனவும் அதர்வவேதமும்; வேதங்கள் அக்கினி வாயு சூரியன் என்பவைகளினின்று பிறப்பிக்கப்பட்டன எனச் சாந்தோக்கிய உபநிஷத்தும்; பிரசாபதியின் தாடிமயிர்களே வேதங்களாமெனத்தைத்திரீயபிராம்மணமுங்கூறுகின்றன. அப்பால், பிற இந்துசமய நூல்களை நோக்குமிடத்து: இருக்காதி நூல்கள் அநாதியாமென வேதாந்த சித்தாந்த சமவாதம் முதலியனவும்; அவைகள் பிரமாவின் நான்குமுகங்களினின்றும் தோன்றின * எனப் பாகவதமும்; பிரமா இருக்குயசுர்சாமம் எனும் வேதத்திரயத்தினைமுறையே அக்கினி வாயு சூரியன் என்பன

* "பூர்வத்திலே பிரமா பஞ்சமுகனாயிருந்தானென்று இந்துமதஸ்தர் சொல்லுகிறார்களே. ஐந்துவேதம் புறப்படாதிருந்ததென்ன? அவன் பார்வதியை மோகித்ததைப்பற்றி சிவன் அவனுடைய முகங்களிலொன்றைக் கிள்ளியதற்குப்பின், மீதியான நாலுமுகங்களினின்று வேதங்கள் புறப்பட்டதென்பார்களாக்கும். அப்படியானால் வேதங்கள் ஆதியிலுண்டானதல்ல. மேலும்,பிரமா அந்தத்தப்பிதத்தைச் செய்ததைப்பற்றியும் தன்மகளைத் தனக்குப் பெண்சாதியாகக்கட்டிக் கொண்டதைப்பற்றியும் இந்துமதஸ்தர் அவனைப் புறக்கணித்துக் கோ

வற்றினின்று கறந்தனரெனவும், இதற்குமாறாய் அவர் மூன்று வேதங்களினின்றுமே காயத்திரிமந்திரத்தைக் கறந்தாரெனவும் மனுஸ்மிருதியும்; பிரமா காயத்திரி மந்திரத்தை உண்டாக்கி அதினின்றும் அவற்றைத்தோற்றுவித்தனரென ஹரிவம்சமும்; ஆதியிலே பிரணவமந்திரமொன்றே வேதமாயிருந்து, பின் திரேதயுக ஆரம்பத்திலே புரூருவசக்கரவர்த்தியினால் மூன்று வேதங்களாக்கப்பட்டதெனப் பாகவதமும்; விஷ்ணுவேவேதவியாசனாக ரூபமெடுத்து முன்னொன்றாயிருந்த வேதத்தை நான்காக வகுத்துப் பலபிரிவுகளால் விஸ்தாரமாக்கினர் என விஷ்ணு புராணமும்; சிவனது லிங்கத்தில் ஓம் என்னும் ஏகாக்ஷரம்தோன்றி அதினின்றும் சதுர்வேதம் பிறந்ததெனவும், சிவனுடைய பராசத்தி குடிலையைநோக்கியவழி வேதாகமங்கள் நாதவடிவாயும் அதன்பின் விந்துவடிவாயும் அதன்பின் அக்ஷரவடிவாயும் முறையே தோன்றின எனவும் சைவசித்தாந்த சமயம் ஆதியனவும்; சித்தியராகிய சதாசிவமூர்த்தியுடைய தற்புருடமுகத்தினின்றும் இருக்குவேதமும் அகோரமுகத்தினின்றும் யசுர்வேதமும் வாமதேவமுகத்தினின்றும் சாமவேதமும் சத்தியோசாதமுகத்தினின்றும் அதர்வவேதமுந் தோன்றின, சிவாகமமிருபத்தெட்டும் சதாசிவமூர்த்தியுடைய உச்சிமுகமாகிய ஈசானத்தினின்றும் தோன்றின எனச் சைவவினாவிடையும்; சிவனானவர் பிரமாவைப்பிறப்பித்து அப்பிரமாவுக்குவேதங்களைப்போதித்தார் எனப் பிரமோத்தரகாண்டமும்; சரஸ்வதியே வேதங்களின் மாதா எனச் சமஸ்கிருதமகாபாரதமும்; விஷ்ணுவே இருக்குவேதசொரூபியும் யசுர்வேத சொரூபியும் சாமவேதசொரூபியுமாம், இம்மூன்று வேதசாரமான பிரணவ சொரூபியுமாம் என விஷ்ணுபுராணமும்கூறி ஒன்றைமற்றொன்று அழித்துப்பேசுகின்றன. இத்துணை மாறுபாடுகளைக்கொண்ட கூற்றுக்களை நாம் மெய்யான கூற்றுக்களாய் எடுத்தாளுதல்கூடாது. ஆதலால் இருக்காதிநூல்களின் அகச்சாட்சியையே எடுத்துப் பிரத்தியட்சப் பிரமாண பூர்வமாய் அவைகளின் உற்பத்தியாது என ஆராய்வோமாக.

முன்பு, ஆதிவேதங்கள் நான்கல்ல மூன்றேயாம் என்பது பிரத்தியட்சம். அதெங்ஙனமெனில், பழையநூல்களிலெல்லாம் இருக்கு யசுர் சாமம் என்னும் மூன்றுமே பேசப்படுகின்றன; அன்றியும் நாலாவதான அதர்வவேதத்தின் பாஷைநடையும் பொருள் அமைப்பும் பின்னையதோர் காலத்தைக்காட்டுகின்றன என்பர் சமஸ்கிருதவியுற்பத்திமான்கள். அப்பால், பழையனவாகியவேதம் மூன்றினுள்ளும் இருக்குவேதத்தின் மந்திரபாகமே ஆதியானது என்பதைத் தாபிப்பதற்கு மூவேதங்களையும் ஒன்றுடனொன்றாக ஒத்துப்பார்வையிடுதலே போதும். இருக்கிலேகாணப்படும் மந்திரங்கள் அல்லது சூக்தங்கள் என்னப்படும் கீர்த்தனங்களுள் ஒவ்வோர் அம்சத்தையெடுத்து, யாககருமத்துக்குரிய முறைப்படி அடுக்கி அவ்யாகங்களுக்குரிய குறிப்புரைகளும் பிரார்த்தனைகளும் உடன்சேர்த்துச்செய்த தொகுதியே யசுர்வேதமும், யாககருமங்கள்செய்யும்போது பாடுவதற்குரியவிதமாய் இருக்குமந்திரங்களுட் சிலவற்றையெடுத்துப் பலபுதுவிஷயங்களுஞ்சேர்த்துச்செய்த தொகுதியே சாமவேதமுமாமென்பது பிரத்தியட்சமாயிருக்கின்றது. எனெனில், இருக்குமந்திரங்கள்பல சிற்சிலமாற்

---

விலும் ஆராதனை வணக்கமுமில்லாமல்விட்டதுபோல, அவன் முகங்களினின்று புறப்பட்டதாகச் சொல்லப்படுகிற வேதங்களையும் புறக்கணித்துத் தள்ளவேண்டாமோ?" மெய்ம்மறையுத்தியானம் பக்.௩௰௫.

றங்களோடு யசுரிலும் சாமனிலும் காணப்படுகின்றன. ஆயின் ஒரே மந்திரத்தொகுதி மூன்ருய்வந்தது யாதிற்கெனில், யாககருமங்களில் அவ்வத்தொழிலுக்குரியவர்கள் எளிதாய் உபயோகிக்கும்படி ஆதிமந்திரத்தொகுதியானது வேண்டியமாற்றங்களோடும் குறிப்புகளோடும் கூட்டுதல்களோடும் மூன்ருகச்செய்யப்படுவதாயிற்றென்க. இங்ஙனமே, இருக்கு என்னும் தொகுதியை ஹோத்திரு என்னும் நிவேதிக்குந் தொழிலாளிகளும்; யசுர்த்தொகுதியை அத்துவரியு என்னும் ஏவற்றொழிலாளிகளும்;சாமன் என்னும்தொகுதியை உத்காத்திரு என்னும் பாடுந்தொழிலாளிகளும் உபயோகித்தனர். அவ்வத்தொகுதிக்குரிய மந்திர அல்லது கீர்த்தனபாகமே சங்கிதை என்னப்படுவது. மற்று, விதி அர்த்தவாதம் ஆதியகுறிப்புரைகளின்தொகுதி பிராம்மணம் எனவும்,இவற்றின்பின் தத்துவ ஆராய்ச்சிச் சார்புள்ளவைகளாய்க் காலத்துக்குக்காலம் செய்துசொருகப்பட்டபாகங்கள், ஆரண்யகம் உபநிஷத்து எனவும்பட்டன.

இனி, இக்கீர்த்தனங்கள் எப்படி, யாரால் செய்யப்பட்டன என்பதற்கு இவைகளினுள்ளேயே போதிய அகச்சாட்சியிருக்கின்றது. ஒவ்வொரு மந்திரத்தையும் பாடிய இருஷியின் பெயரும், பெரும்பாலும் அவர்பிதாவின்பெயரும்; அவ்வவ்வேதத்தினுடன் சேர்ந்ததாகிய அனுக்கிரமணியென்னும் அட்டவணையிலே தரப்பட்டிருக்கின்றன. இவ்விருஷிகள்தாங்களே தங்கள் சொந்தப்புத்தியின் முயற்சியினுல் அவ்வக்கீர்த்தனத்தை இயற்றினுர்களென்று ஆங்காங்கு கூறியிருக்கிருர்கள். அக்கூற்றுக்களுட் சிலவற்றைமாத்திரம் அநுவதிப்போம்.

இருக். 1-ம் மண். 47-ம் சூக். 2. கண்ணுவர்கள் உங்களுக்கு ஒரு கீர்த்தனத்தை (பிரஹ்ம) உண்டாக்குகிறர்கள். அவர்களது கூப்பிடுதலே நன்ருகக் கேளுங்கள்.

இருக். 1; 64; 61 இந்திரனே, இப்படியே கோதமர்கள் உனக்குச் சித்திகரமாய் மந்திரங்களை இயற்றினுர்கள்.

இருக். 2; 39; 8 அச்சுவினிகளே இப்புகழ்ச்சிச்செய்யுட்களை, இக்கீர்த்தனத்தை கிருத்சமதர்கள் உங்களுக்கென உண்டாக்கினுர்கள்.

இருக். 10; 54; 6 கீர்த்தனங்களை இயற்றுகிறவனுன விறுகதுக்தனுல் இந்திரனுக்குப் பிரியமும் மேன்மையுமான ஒருகீர்த்தனம் இயற்றப்பட்டது.

இருக். 5; 2; 11 வல்லமையுள்ள (தேவனே) விப்பிரனுகிய நான் கைதேர்ந்த தச்சனுெருவன் ஓர் ரதத்தைச் சமைப்பதுபோல உனக்கு இத்தோத்திரத்தைச் சமைத்தேன்.

இன்னன பிறவுங்காண்க. அப்பால் இருக்கு சங்கிதையின் கீர்த்தனங்களுட் சிலபழையவைகளாயும் சில அவ்வப்போதே நவமாய்ச்செய்யப்பட்டவைகளாயும் பேசப்படுகின்றன. இதற்கும் இரண்டொரு உதாரணங்களைமாத்திரங்கொடுப்போம்.

இருக். 1; 12; 11. மிகப்புதியதான (காயத்ரேணநவீயசா) இக்கீர்த்தனத்தினுற் தோத்திரிக்கப்பட்டு எங்களுக்குச் செல்வமும் உணவும் மகப்பேறுங்கொண்டுவருவாயாக.

இருக். 1; 89; 3. பக, மித்திர (ஆதியோரை)நாங்கள் ஓர்பழைய கீர்த்தனத்தினுல் அழைக்கின்ருேம்.

இருக். 6; 44; 13. அவன் (இந்திரன்) போற்றுகின்ற இருஷிகளின் பழையனவும் புதியனவுமான கீர்த்தனங்களினால் வளர்ந்தவன்.

இருக். 9; 9; 8. (சோமனே) எங்கள் புதிய,மிகப்புதிய சூக்தங்களுக்கு வழிதிறந்துவிடு. முன்னர்ப்போல ஒளிகளைப் பிரகாசிக்கச்செய்.

இதுமட்டுமோ, இருக்குசங்கிதையிலே சிலபுலவர்கள் தங்களுக்குக்கவி பாடும் வரத்தைத்தரும்படி இந்திரனாதி தேவர்களைப் பிரார்த்தித்ததாக வும் (உதாரணம். இருக். 6; 47; 10)சொல்லியிருக்கிறது. "இந்திரன் பண்டைக்காலம் புலவர்களை ஊக்கிப்பவனும், புலமையை வர்த்திப்பவனுமா யிருந்தான்" என இருக். 8-ம் மண். 52; 4 இல் தெளிவாய்க்கூறப்பட்டு மிருக்கிறது.

ஆகவே, இருக்குகீர்த்தனங்களும் பிறவும் அநாதியாய் உள்ளவைகளு மல்ல, பிரமாவின் முகங்களினின்று புறப்பட்டவைகளுமல்ல, ஆரியபுல வர்களால் இயற்றப்பட்ட கவிகளேயாம். இக்கீர்த்தனங்கள் இயற்றப் பட்டகாலம் யாது என்பதற்கும் இவைகளினுள்ளே அத்தாட்சிகாணப்ப டுகின்றது. வைதிக சமஸ்கிருதபண்டிதராகிய யோண்மூயிர் கூறுவது:

"இருக்குவேதகீர்த்தனங்கள் இயற்றப்பட நேர்ந்த தருணங்களையும் அவைகள் இயற்றப்பட்டவிதத்தையும் நாம் நன்றாய் நிச்சயித்துக்கொள் வதற்கு வேண்டிய ஏதுக்கள் அக்கீர்த்தனங்களிலேயே ஏராளமாய்க் காணப்படுகின்றன. அவைகள்பாடப்பட்ட இடங்களைப்பற்றி மிகத்தெளி வான அடையாளங்களைக்காண்கின்றோம். அவைகளை இயற்றிய புலவர் களுக்குச் சிந்துவே மகாநதி. கங்கை இரண்டிடங்களில்மாத்திரம் சுட்டிப் பேசப்படுகின்றது. அவர்களுக்கு சரஸ்வதிநதி கிழக்கெல்லையாயிருந்தது.

"ஆரிய கோத்திரங்கள் தங்களைச்சூழ வசித்த சத்துருக்களோடு போர் பொருதும் நிலையிலேயிருந்தனவென்றும், (இச்சத்துருக்களுட் சிலர் வேறுகுலத்தவர்களும் பாஷையாளரும்போலும்) சற்றுச்சற்றாய் கிழக்கி லும் தெற்கிலும் ஊடறுத்துப் பரவிக்கொண்டுபோயினவென்றும், இக் கீர்த்தனங்களினால் நாமறிகின்றோம். இவைகளிலே அவ்வாரியரைப் போலும் நிலையிலுள்ளமாக்கள் இயல்பாகவே தாங்கள் வழிபடுந் தெய் வங்களைநோக்கிச் செய்ய ஏவப்படுஞ் செபங்களை, அதாவது, தற்காப்பும் வெற்றியும் தங்களுக்கு அருளவேண்டுமென்றும், மனுஷருடைய சாதார ணசுகபோகத்துக்குரியவைகளான பற்பல நன்மைகளைத் தங்களுக்குத் தரவேண்டுமென்றும் பிரார்த்தித்த மன்றாட்டங்களை அநேகமாய்க் காண் கிறோம்" *

ஆரியர் இந்தியாவின் ஆதிச்சுதேசிகளல்லரென்பது தற்காலம் கல்வி கேள்வி ஒருசிறிதுமாத்திரமுள்ளவர்களுமறிந்த விஷயம். "தமிழ்மொழி யின் வரலாறு" கூறுவது: "வடமேற்கே பல்லாயிரக் காவதத்திற்கு அப் புறமுள்ளதும், ஐரோப்பாக்கண்டத்தினொருபகுதியுமாகிய 'ஸ்காந்திநே வியம்' என்ற இடத்தினின்றும் ஆரியர் என்றசாதியார் புறப்பட்டு நாலா பக்கங்களிலும்சென்று சேர்ந்தனர். அவ்வாரியருள் ஒரு பிரிவினர் மத் திய ஆசியாவின் மேற்குப்பாகத்திலுள்ள 'துருக்கிஸ்தானம்' என்ற இடத் திற் தங்கினர். இவ்விடந்தங்கிய ஆரியர்களே 'கைபர்க்கணவாய்'வழியாக இந்தியாவினுட்புகுந்தனர். இவ்வாறு ஆரியர்கள் பெரும் பிரயாணஞ்

* Muir's Sanskrit Texts vol III pp 217, 218.

செய்து பற்பலவிடங்கட்கும் பிரிந்துபோனமையால் அவர்களது பாஷை யாகிய 'ஆரியமும்'ம் பல்வேறுவகையாயின. அவை: 'இலத்தீன்' 'கிரீக்கு' 'சமஸ்கிருதம்' 'எபிரேயம்' என்பனவாம். இவற்றினுள் 'சமஸ்கிருதம்' பேசும் ஆரியரே இந்தியாவுக்குவந்தனர்." (பக். 8-9) ஆரியர் இந்தியாவினுள் இறங்கியகாலத்தைக் கற்றோர் பலவாறாய்க்கூறுவர். எப்படியும் ஆரியர் கி. மு. 2000 -ம் ஆண்டுவரையில் சிந்துநதிதீரங்களிற் குடியேறிவிட்டன ரென்பது காலநிரூபண நூலாசிரியர்களது சாதாரண மதம். பூகோளத்தின் பிறவிடங்களில்வசித்த பூர்வமாக்களுட்போல, இவ்வாரியர்களுள்ளும் புலவர்களிருந்தனர். இப்புலவர்களே, தந்தெய்வங்களுக்கும் அரசர்களுக்கும் புகழாகவும், யுத்தஞ்செய்யப் புறப்படுவோருக்கு உற்சாகமாகவும், வெற்றியின்பின் தோத்திரமாகவும் கவிகளைப்பாடினர். பாடப்பட்ட கவிகளெல்லாம் சனங்களின் பொதுப்பொருளாகி அவர்கள் ஞாபகங்களாகிய புத்தகங்களிலே வரையப்பட்டன. ஞாபகங்களில் வரையப்பட்ட இக்கவிகள் காலகதியிலேமாற்றவும் பலகூட்டவும் சிலகழிக்கவும்பெற்று, பிற்காலம் பிரிந்துபிரிந்து வசித்த அவ்வக்கோத்திரங்களிலே வெவ்வேறு சாகைகளாகக் காக்கப்பட்டன. இருக்குவேத கீர்த்தனங்கள் இப்போதுள்ளபடி ஒருங்குசேர்க்கப்பட்டகாலம். கி. மு. 1500-ம் ஆண்டு வரையிலாக வேண்டுமென்பது பண்டிதர் மாக்ஸ்மூல்லரதுகொள்கை.* பிற வியுற்பத்திமான்கள் அக்காலம் அதற்குப்பின்னேயாமெனவுங் கூறுவர். இருக்குவேத கீர்த்தனங்கள் சேர்க்கப்பட்டகாலம் கி. மு. 1500-ம் ஆண்டுவரையிலெனில், மற்றைய வேதசங்கிதைகளும் அவற்றுட்சொருகியிருக்கும் பிராம்மணபாகங்களும் அதற்குப் பிற்பட்டகாலத்தினவேயாம். பிராம்மணங்களுட் சில தமது காலத்திலே புதியனவாய்க்கொள்ளப்பட்டனவென பாணினீயம்செய்த பாணினியாரும் (கி. மு. 4-ம் நூற்றாண்டு?) குறிப்பிட்டுப்போயினர். உபநிஷத்துக்களில் அதிகபழமையானவைகளும் பிராம்மணங்களின் காலத்தன என்ப. புதியனபல மிகப் பிற்பட்ட காலத்தன என்பது ஆன்றோர்சம்மதம். ஆரியரின் பழைய கீர்த்தனங்கள் இங்ஙனமே மூன்றுதொகுதியும் நான்குதொகுதியுமாகிய பின்னரும், ஒவ்வோர் பிராமணகுடும்பத்திலே ஞாபகத்தில்மாத்திரம் காக்கப்பட்டுப் பலநூற்றாண்டுகள் கழிந்தபின்னே வரிவடிவில் எழுதப்பட்டன.

இனி, இருக்காதிதொகுதிகள் "வேதம்" என்றழைக்கப்படலானதும், அவைகள் கடவுளால் அருளப்பட்டனவென்னும் கொள்கை ஏற்பட்டதும் எப்படியெனக்கூறுவோம். ஆரியரது பழைய கீர்த்தனங்களெல்லாம் பிற்காலத்திலே கருதியதைச் செய்துமுடிக்கும் வல்லமையுள்ள "மந்திரங்க"ளாக எண்ணப்பட்டன. முன்பு யாகமும், பின்பு யாகத்தோடு கூடியதாகிய செபமும் (பிரஹ்ம) நினைத்ததைக்கொடுக்கும் வலியுள்ளனவென ஆரியர்கள் காலகதியிலே நம்பிக்கொண்டனர். ஆதலால், இவர்கள் யாகாதிகளில் உபயோகித்த செபங்களாகிய கீர்த்தனங்களெல்லாம் நினைத்ததைப் பெறுவிப்பவைகள் (மந்திரங்கள்) ஆயின. இம்மந்திரங்களையும் இவற்றின்பலனையும் அறிந்தவனெவனோ ("யஏவம்வேத") அவனுக்கு இன்ன இன்ன சுகங்கள் உண்டாம் எனப் பிராம்மணங்களிலும் பிறவிடங்களிலும் மீண்டும்மீண்டும் சொல்லப்பட்டதினின்றும் இவைகளின் தொகுதிக்கு வேதம் என்னும் பெயர்வருவதாயிற்று. † அப்பால், கால

* India, What it can teach us, p 53.

† The Brahmanas of the Vedas p 5.

வரைவினுக்குட்படாத மிகுபழமையுடைய நூல்களெல்லாம் மாத்திரமன்று, பாஷையறிவுட்படச் சகல அறிவும் கடவுளால் நேரே மானுடனுக்கு உபதேசிக்கப்பட்டது என்னும் பூர்வ மாக்களுடைய நம்பிக்கைக்கிசைய, நம்முன்னோருள்ளும் இவ்வேதங்களைக் கடவுளே இருஷிகளுக்கு உபதேசித்தாரென்னும் எண்ணமும், அப்பால் சத்தம் அநாதியாயுள்ளது என்னும் சைமினியின்கோட்பாடெழுந்தபின், வேதங்கள் நாதவடிவாய் நித்தியமாயுள்ளவைகளென்னும் கொள்கையும் நிலைப்பட்டன என்க. ஒருதரம் இக்கொள்கைகள் எழுந்தனவேயாக, இனி, வேதங்களைப் பிராமணருட் சிலரேயன்றி மற்றையோர் கண்ணுற்சாணுமலும், அவற்றின் அடக்கம் யாதெனச்சிறிதும் அறியாமலும் இருந்தகாலமெல்லாம் தட்டிப்பேசுவோரில்லாமையால், இக்கொள்கைகளே நிலைத்துவிட்டன. தற்காலம் கல்வி கேள்விகளையுடைய சைவராதியோரும் வேதங்களின் உண்மையான உற்பத்தியை உணர்ந்தும் அறிக்கையிட்டும் வருகின்றனர்.

இருக்காதி வேதங்களே அநாதியல்லனவாக. இனி, ஆட்டுக்குத் தீர்ந்தே குட்டிக்குமாதலால், சைவரது ஆகமங்களைச்சுட்டி அதிகம்பேசுதல் வேண்டப்படாது. சமஸ்கிருத பண்டிதர் மோனியர் உவில்லியம்ஸ் கூறியது: "சைவதர்சனம் என்று விசேஷித்துக்கூறப்பட்டதக்கதாகிய தத்துவசாஸ்திரமதமொன்று கி.பி. 10-ம் அல்லது 11-ம் நூற்றாண்டிலே வழங்கத்தொடங்கிற்று. அதை ஆகமங்கள் என்னப்படும் 28 புத்தகங்களில் எழுதிவைத்தனர். ஆயின், இவ்வாகமங்களுட் பலஇப்போது அழிந்துபட்டுப்போயின. இத்தத்துவசாஸ்திரத்தைத் தென்னிந்தியாவிலுள்ள ஒருகட்சியார்கைக்கொள்ளுவர். இது வேதாந்தமதத்தின் அத்துவிதக் கொள்கைக்கு முற்றும்விரோதமானது. இதனை உண்டாக்கியவர் இராமாநுசரைப்போல மூன்றுவேறு பொருட்களின் உண்மையைப் போதித்தனர். 1-வது, பசுபதியெனப்படும் பதி (சிவன்). 2-வது பசு (மிருகம்) எனப்படும் ஆன்மா. 3-வது, பாசம் (தளை) எனப்படும் சடப்பொருள். எசமானாகிய பதிக்குரியதாகிய ஆன்மா மிருகத்தைப்போலத் தளையினாற் பந்திக்கப்பட்டுள்ளது. சைவ தத்துவசாஸ்திரத்தின் நோக்கமாவது, ஆன்மாவைத் தளைகளினின்றும் விடுவித்து உரிமையுள்ள எசமானிடம்போக விடுவதேயாமென்பது தானாய் விளங்கும். இக்கொள்கைகளுக்கும் ஈச்சுரசாங்கியத்துக்கும் மிகுந்த ஒற்றுமையுண்டென்பது வெளிப்படை." *

ஆகமங்களைப்போலவே பதினெண்புராணங்களும் கிறீஸ்துவுக்குப் பிற்பட்டகாலத்தவையென்பது காலநிரூபண சாஸ்திரிகளது சம்மதம். புராணங்கள் 8-ம் 16-ம் நூற்றாண்டுகளுக்கிடையில் எழுதப்பட்டிருக்கலாம் என W.W. ஹண்டர் பண்டிதரும்; இவற்றுள் அதிபழமையானவைகளும் கி.பி. 6-ம் நூற்றாண்டின்முன்செய்யப்பட்டனவல்லவென மோனியர் உவில்லியம்ஸ் பண்டிதரும்; எப்புராணமாயினும் கி.பி. 8-ம் நூற்றாண்டுக்கு முன்னையதாகக் கூடாதென W. J. உவில்கின்ஸ் பண்டிதரும் கூறிப்போந்தனர். இப்பண்டிதர்கருத்தே இப்போது சாஸ்திரிகளுட் சர்வசம்மதம். உவில்சன் பண்டிதரது கருத்தின்படி விஷ்ணுபுராணம் பதினெட்டனுள்ளும் அதிபழமையுள்ளதாகும். இப்புராணமும் மற்றையவும் நம்மிடம் இப்போதுள்ளபடி பத்தியங்களாகச் செய்யப்பட்டகாலம் எப்படியும் கிறீஸ்துவுக்குப் பிற்பட்டகாலமேயாயினும், இவைகளிலுள்ள கதைகள் வரலாறுகள்பல வைதிககாலம் மட்டுமென்று, மானுட

* Religious Thought & Life in India pp 88, 89.

ரின் ஆதிகாலங்கள்வரையிலுமே எட்டுகின்ற பழமையுள்ளவைகளாக லாம். இராசவம்சவரிசை முதலியவைகள் வெகுபழமையானவைகளே யாகவேண்டியன. முன் தங்களுக்குள் வழங்கிய கதை முதலியவைகளை யே பௌராணிகர்கள் விரித்தும் அலங்காரப்படுத்தியும் புராணங்களாக் கினர்போலும். தற்கால புராணங்களுக்கு முதனூல்களாகச் சிலபழைய புராணங்களுமிருந்தனவாகலாம். இக்கொள்கைக்கு விஷ்ணு புராணத்தி லேயும் ஓர் ஆதாரமிருக்கின்றது. முன் ரோமகர்ஷணர் என்பவரால் முற் பட்டகாலங்களின் கதைகள் வரலாறுகள் திரட்டி ஓர்சங்கிதை செய்யப் பட்டிருந்ததென்றும், அவ்வுரோமகர்ஷணரது சீடர்கள் அதினின்றும் நான்குசங்கிதைகள் செய்தார்களென்றும் அந்நான்கையுங்கொண்டுவிஷ் ணுபுராண ஆசிரியர் தமது கிரந்தத்தைச்செய்தனரென்றும் அதன் 3-ம் அம்சம் 6-ம் அத்தியாயத்திலே சொல்லப்பட்டிருக்கிறது. புராணங் களிலுள்ளனவெல்லாம் பொய்யென்றுசொல்லுவோர் நாமல்லோம். இருக்காதிவேதங்கள் நம்முன்னோருடைய பழக்கவழக்கங்களுக்கும் சம யக்கொள்கைகளுக்கும் எப்படிச்சான்றாகவிளங்குகின்றனவோ, எப்படி, ஆகமங்கள் இடைக்காலத்தாரது தத்துவ ஆராய்ச்சி முடிபுகளுக்கு இருப்பிடமாய் விளங்குகின்றனவோ, அப்படியே புராணங்களும் நம் தேசத்திலே அக்காலந்தொட்டு இக்காலம்வரையில் வழங்கிவந்த பல பழைய ஞாபகங்கள் கதைகளுக்குக் களஞ்சியமாகின்றன. முக்கியமாய், விஷ்ணுபுராணத்திலுள்ள ராசவம்சவரலாறு முதலியவைகள் சரித்திரசம் பந்தமான பல அமிசங்களைக்கொண்டிருக்கின்றன என்பது ஆன்றோர் கருத்து.



**CATHOLIC TRACT**
**No. 10.**

# THE PERFECT BEING
# பரிபூரண வஸ்து

## I. ஆறிலட்சண சுரூபம்.

வினா.— எல்லாவஸ்துக்களுக்கும் காரணமாய் உள்ள வஸ்து எது?
விடை.— கடவுள் எனப்படும் பரிபூரண வஸ்து.

வினா.— இந்தப் பரிபூரண வஸ்துவுக்கும் ஓர் காரணம் உண்டா?

விடை.— இல்லை, பரிபூரணவஸ்து மற்ற எல்லா வஸ்துக்களுக்கும் ஆதிகாரணமாய் உள்ளதாகையால் அதற்குக் காரணம் இருத்தல் கூடாது. ஆதிகாரணத்துக்கு வேறொரு காரணம் உண்டென்று சொல்லின் நியாய விரோதமாகும்.

வினா.— இதற்கு ஓர் திருஷ்டாந்தம் காட்டுக.
விடை — மரத்திலேயுள்ள காயானது பூவினால் உண்டாகும். பூ தழையினின்று உண்டாகும். தழை கொப்பினின்றும், கொப்பு மரத்தினின்றும், மரம் மூலத்தினின்றும் உண்டாகும். ஆயின், மூலம்வரையிற் பரிசோதித்தபின் அப்பால் பாதாளம் வரையிற் பூமியைத் தோண்டினும், அம் மூலத்திற்கு வேறோர் மூலம் காணப்படாது. இங்ஙனமே, சருவத்துக்கும் ஆதிகாரணமாகிய கடவுள், தமக்கு வேறொரு காரணம் இல்லாதபடி, தாமாகவே இருப்பர் என அறிக.

வினா — கடவுள் தாமாக இருக்கும் மேரையை ஓர் உவமையினால் விளக்குக.
விடை.—சூரியன் தன் பிரகாசத்தினாலேயே பிரகாசிக்குமன்றி, அதைப் பிரகாசிப்பிக்க வேறொரு சூரியன் வேண்டியதில்லை. நெருப்பு தன் அனலாலேயே காயுமன்றி, அதைக் காயச்செய்ய வேறு நெருப்பு அவசியமாவதில்லை. இங்ஙனம், கடவுள் தமது சுபாவ வல்லமையினால் தாமாகவே இருக்கிறார்.

வினா.— கடவுள் ஆதியும் அந்தமும் உள்ளவரா?
விடை.— கடவுள் ஆதியந்தம் இல்லாதவர். அது எங்ஙனமெனில், அவருக்கு ஆதி உண்டு என்போமாயின், முன்னில்லாதவர் பின்னொருகாலம் உண்டாயினார் என்று சொல்லப்பட்டு, தமக்கு வேறொரு காரணம் உள்ள

வராய்ப்போவார். போகவே, அவர் ஆதிகாரணர் அல்லர் என்றுசொல்லல் அவசியமாகும் ஆதலால், கடவுளுக்கு ஆதியில்லை. பின்னும், அவர் தமது சுபாவவல்லமையினாலேயே இருக்கின்றார். சுபாவ வல்லமையினால் இருக்கின்ற ஒரு பொருளோ அவசியமாக எப்போதும் இருக்கும். ஆதலால், கடவுளுக்கு அந்தமும் இல்லை.

வினா.—கடவுளுடைய நித்தியத்துவம் எனும் லட்சணத்தின் மகிமை என்னை?

விடை.—இலட்சம், கோடி, சங்கு, விந்தம், பதுமம், சமுத்திரம், வெள்ளம், பிரளயம், சஞ்சலம், விளம்புரி தண்பனை முதலான கணக்கெல்லாம் கூட்டிப் பெருக்கினும், இவ்வளவு தொகைப்பட்ட யுகங்களின் முன்னும் கடவுள் இருக்கிறார். சகல லோகங்களும் கணக்குப்புத்தகங்களால் எள்ளிட விடமின்றி நிறைந்திருப்பினும், இக்கணக்குகளுக்கு ஒரு தொடக்கமும் முடிவுமுண்டு. ஆகையால், இவைகளும் கடவுளுடைய நித்தியத்துவத்தை வெளிப்படுத்தமாட்டா.

வினா.—ஆழமும் கரையும் காணக்கூடாத சமுத்திரம்போலிருக்கின்ற இந்த நித்தியத்திலே பின்னும் உள்ள ஒரு விசேஷம் என்னை?

விடை—உண்டாக்கப்பட்ட சகல வஸ்துக்களுக்கும் சென்றகாலம் நிகழ்காலம் வருங்காலம் என மூன்று காலவரைவு உண்டு. இக்காலம் மூன்றும் ஒருங்கே இராமல், படைப்புண்ட பொருட்கள் இருந்தும் கழித்துக் கொண்டும் வருவதாகிய நிகழ்ச்சியின் அளவை நிமிஷம் நிமிஷமாகக்காட்டிக்கொண்டுவரும். ஆயின், கடவுளுடைய நித்தியமோ சென்றகாலம் நிகழுங்காலம் வருங்காலம் எனும் மூன்றையும் ஒரே அசைவில்லாத பரம நிமிஷமாக அடக்கிக்கொண்டிருக்கின்றது.

வினா.—இதற்கு உவமை என்னை?

விடை.—நித்தியத்தைச் சரியாக வெளிப்படுத்துதற்கு அநித்தியமான உலக பொருட்களுள் உவமை காணக்கூடாது. ஆயினும், காகிதத்திலே சம்பூரணமாய்க் கீறிய ஒரு வட்டத்தைக்கொண்டு ஒருவாறு அறிந்துகொள்க. அவ்வட்டத்தின் சுற்றுரேகையைப்பற்றி ஒரு எறும்பு ஊர்ந்துபோகுமாயின், ஊர்ந்துபோகின்ற எறும்புக்கு, தான் புறப்பட்ட இடமும் ஊர்ந்துகொண்டிருக்கிற இடமும் முன்னும் பின்னுமாக வந்துகொண்டிருக்கும். வட்டமோ அவ்வெறும்பு ஊரத்தக்க சகல இடங்களையும் அடக்கி ஒன்றாக இருக்கும். இப்படியே படைக்கப்பட்டபொருட்கள் இருந்தும் கழித்துக்கொண்டும்வருகின்ற சகலகாலமும் கடவுளுடைய நித்தியத்திலே ஒன்றாக அடங்கி இருக்குமென அறிக.

வினா.—இத்தேசத்தார் போற்றுகின்ற பிரமா விட்டுணு சிவன் எனும் தேவர்கள் மெய்க்கடவுளாதல் கூடுமா?

விடை.—கூடாது. இத்தேவர்களுள் ஒருவரும் நித்தியமான வஸ்துவல்ல. இவர்கள் மூவருக்கும் தொடக்கம் உண்டு. விட்டுணு பிரமாவைப் பிறப்பித்தாரென்றும், பிரமா சிவனைப் படைத்தாரென்றும் விட்டுணுபுரா

ணம் * சொல்லுகின்றது. சிவன் விட்டுணுவையும் அழித்துப்போவோ ரெனத் தத்துவப்பிரகாசம் † முதலிய நூல்கள் சொல்லுகின்றன.

வினு.— பிரமா விட்டுணு சிவன் என்பவர்களுக்கு தத்துவத்திலே சொல்லப்பட்ட உற்பத்தி என்னை?

விடை.—தத்துவம் பின்வருமாறு சொல்லுகின்றது: "பராபரமாகிய பரமேசுவரன் தராதலம்படைக்கத் தான் நினைந்தருளிப் பராபரத்திற் பரந்தோன்றி பரத்திற் சிவம்தோன்றி சிவத்திற் சத்திதோன்றி ‡ சத்தியில் நாதந்தோன்றி நாதத்தில் விந்துதோன்றி விந்துவில் சதாசிவந்தோன்றி சதாசிவத்தில் மகேசுவரன்தோன்றி மகேசுவரனில் உருத்திரன்தோன்றி உருத்திரனில் விட்டுணுதோன்றி விட்டுணுவில் பிரமாதோன்றி பிரமாவில் ஆகாசந்தோன்றி ஆகாசத்தில் வாயுதோன்றி வாயுவில் அக்கினிதோன்றி அக்கினியில் அப்பு தோன்றி அப்புவில் பிருதுவிதோன்றி பிருதுவியில் அன்னந்தோன்றி அன்னத்தில் நாய் நரிமிருகம் பட்சி மச்சம் தாவரசங்கமம் அனைத்துந் தோன்றின" என்பது. ஆதலால், பிரமா விட்டுணு சிவன் எனும் மூவரும் வேறு அநேக வஸ்துக்களின் பின்பு உண்டானவர்களே யாம்.

வினு.-- இவர்களுக்குப் புராணகாவியங்களிலே ஆயுசும் சொல்லப்பட்டிருக்கின்றதா?

விடை.— ஆம். பிரமாவுக்குப் பிறந்த நாள் உரோகணி, விட்டுணுவுக்குப் பிறந்த நாள் திருவோணம், சிவனுக்குப் பிறந்தநாள் திருவாதிரை என்று பிறந்தநாள் சொல்லப்பட்டதோடு, பிரமாவுக்கு அநேக கோடிவருஷங்களின்பின் பரம ஆயுசு முடியும் என்றும், அந்த ஆயுசு முடிவிலே ஒரு பரமரிஷியினுடைய ரோமம் ஒன்று உதிர்ந்துபோம் என்றும், அந்தப் பரம ரிஷியினுடைய ஆயுசு முழுதுங்கூடி விட்டுணுவுக்கு ஒருநாள் என்றும், விட்டுணுவுடைய ஆயுசுமுழுதுங்கூடி உருத்திரனுக்கு ஒருநாள் என்றும் காலசக்கரத்திலே எழுதியிருக்கிறது.¶ இவ்வாறு ஆயுசு உள்ள

---

* முதலம்சம் 8-ம் அத்.

† படைப்பவனுமுலகு காப்பவனும், என்றபாட்டு. பிரமபுராணம், பிரபஞ்ச உற்பவச்சருக்கம் (4)முதலியன.

‡ இது வேறுவிதமாய் வேறுநூல்களிற்சொல்லப்பட்டது:—

"சிவம் சத்தி தன்னையீன்றும் சத்திதான் சிவத்தையீன்றும்
உவந்திருவரும்புணர்ந்து உலகுயிரெல்லாமீன்றும்
பவன்பிரமசாரியாவான் பார்வதி கன்னியாவாள்
தவந்தெரி ஞானத்தோர்க்குத் தன்மையாய்த் தெரியுமன்றே"என்றும்,

"சிற்றிடைக்கொவ்கி நுடங்குந்திரு வயிற்றுளொருத்தி
பெற்றெடுக்குந் திருப்பிள்ளைகள்மூவர் அம்மூவரையும்
கற்றிடச்சொன்ன தொழிலொருமூன்றவரிற்கடைக்காற்
செற்றிடச்சொன்னவள் பிள்ளைக்கவளம்மை தேவியுமே", என்றும்,

"ஆதிசத்திமயம் பீசம், பீசசத்திமயம் சிவம். சிவசத்திமயம் விஷ்ணு சர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்றும்இன்னும்இவ்வாறே ஒன்றுக்கொன்று விரோதமாய்ச் சொல்லப்பட்டவைகளையுங் காண்க

¶ தத்துவபோதகர் "அஞ்ஞான நிவாரண"முங் காண்க.

வர்களாய், பிறந்திறக்கிறவர்களாயிருக்கிற வஸ்துக்களைக் கடவுள் எனச் சொல்லலாமா?

வி௵.— சைவமதத்தவர்களிற் சிலர் "சிவம்" என்பதே தங்களுக்குக் கடவுள் என்றும், சிவன் என்பவர் அந்தச் சிவத்தினின்றுந்தோன்றிய ஒரு மூர்த்திபேதமேயென்றும் தற்காலஞ் சொல்லுகின்றனரே. அது சரியா?

விடை.— சரியன்று. சைவ ஆகம புராணங்களிலெல்லாம் சிவனுடைய செயல்களும் வழிபாடும் சொல்லப்பட்டிருக்கின்றனவன்றிச "சிவம்" என ஒரு கடவுள் சொல்லப்பட்டில்லை. தமிழ்வேதமெனப்படுகிற தேவாரதிருவாசகங்களிலே போற்றப்படுகின்ற கடவுளும் சிவனேயன்றிச் "சிவ" மல்ல. சைவர் "சிவம்" எனும் ஒரு பரவஸ்துவை வழிபடுகிறவர்களெனில், சிவனுக்கும் அவருடைய பிள்ளைகளாகிய கந்தர் கணபதி வீரபத்திரர் ஆதியோருக்கும், மனைவிகளாகிய காளி மீனாட்சி முதலியோருக்கும் ஆலயங்களைக் கட்டியும் பூசை நைவேத்தியம் தேர் திருவிழாக்களைச் செய்தும் வருவார்களா? சிவத்துக்கு ஒரு கோவிலேனும் கட்டாது விடுவார்களா?

வி௵ — சிவத்தினின்றுதான் சிவன் தோன்றினுரென்று வைத்துக் கொண்டால், சிவனை வழிபடுவது சிவத்தையே வழிபடுவதாகாதா?

விடை.— "சிவம்" என்பது மெய்யான கடவுளாகிய பரிபூரணவஸ்துவாயின், அந்தச்சிவத்தினின்று இடையிலே சிவன்முதலாய்ச் சொல்லப்பட்ட மூர்த்தங்கள் தோன்றுதல் ஒருபோதும் கூடாது. பரிபூரணவஸ்து "எப்போதும் ஓரியல்பாயிருக்கும்" அன்றி ஒருபோதும் மாறமாட்டாது. அதினின்று சிவம் சத்தி நாதம் விந்து என ஒவ்வொன்று மாறிமாறித் தோன்றியும், அப்பால் அதுதானே பிரமா விட்டுணு உருத்திரனுகியும் வருமாயின், அது மாறுகிற ஒரு பொருளாகி, பரிபூரண வஸ்துவல்ல என்றுகிவிடும். அன்றியும், சிவனுக்குச்செய்யும் வழிபாடு சிவத்தையே சாருமெனில், சிவனுடைய வியபிசாரம்முதலிய துர்ச்செயல்களும் சிவத்தைச் சாருமே!

வி௵.—வேதாந்தமதத்தார் கூறுகிற நிர்க்குணப்பிரமத்தைப் பரிபூரண வஸ்து எனலாமா?

விடை.—வேதாந்திகள் தங்கள் நிர்க்குணப்பிரமமானது அவித்தை என்றுசொல்லப்படுகிற அஞ்ஞான மலத்தினுற் பந்திக்கப்பட்டு, ஒன்றுயிருக்கிற தன்னைப் பலவாக (பிரபஞ்சமாக) எண்ணி, அந்த அஞ்ஞான மயக்கத்தினுற் பிறவிச்சுழிக்குள் அகப்பட்டிருக்கும் எனவும், உலகமும் சராசரங்களும் ஆகிய எல்லாம் அஞ்ஞானத்தினுற் கனுக்காணுவதுபோலிருக்கின்ற அந்தப் பிரமமேயொழிய வேறல்ல* எனவும் கூறுகிருர்களாதலால், அந்த நிர்க்குணப் பிரமமும் பரிபூரண வஸ்துவல்ல. அளவில்லாச் சுதந்தரமும் நின்மலத்தன்மையும் உடையதாகிய பரிபூரணவஸ்து ஒருபோதும் அவித்

* சாந்தோக்கிய உபநிடதம், பஞ்சதசி, வாசுதேவமனனம் முதலிய நூல்களிற் காண்க.

தையினால் அறிவுமயங்கியிருக்கமாட்டாது. அதை எவ்வித பாசமும்சேர மாட்டாது.

வினா.— பரிபூரண வஸ்துவாகிய மெய்க்கடவுளின் வடிவம் யாது?

விடை.— கடவுள் வடிவம் அற்றவர். அவர் அசரீரி.

வினா.—அது எப்படி?

விடை.—சரீரமானது மட்டோடுகூடிய பல அவயவங்களினால் அமைந்ததாயிருக்கும். அப்படிப்பட்ட மட்டுள்ளசரீரம் மட்டில்லாத வஸ்துவுக்குப் பொருந்தாது. அன்றியும், சரீரமானது கண்டிப்பு முதலிய குறைகளை உடையது. ஆதலால், அது குறைவில்லாதவராகிய கடவுளுடைய சுபாவத்திலே சேர்ந்ததாயிருத்தல் கூடாது.

வினா —இத்தேசத்தவர்கள் தங்கள் தெய்வத்துக்கு நிலம் நீர் நெருப்பு காற்று ஆகாயம் சந்திரன் சூரியன் உயிர்கள் எனும் அஷ்டமூர்த்தங்கள், அல்லது எட்டு வடிவங்கள் உண்டு * எனச் சொல்லுகின்ற வார்த்தை என்னை?

விடை.—இப்படியான நீச வடிவங்களை உடையதாகிய தங்கள் தெய்வம் அசரீரியும் மட்டில்லாத மகிமைச் சோபனமுள்ளவருமாகிய கடவுள் அல்ல எனத் தாங்களே அறிக்கையிடுகின்ற வகையாம் என உணர்க.

வினா.— கடவுளுக்கு எவ்வடிவமும் இல்லையாயின் சிவம் சத்தி என்ற பேதமும் இல்லையா?

விடை.— இல்லை. கடவுள் பாதி ஆணும் பாதி பெண்ணுமாம் என நினைப்பதும், தலையிலேயாயினும் ஒக்கலையிலேயாயினும் மார்பிலேயாயினும் ஸ்திரீயைச் சுமந்துகொண்டிருக்கிறார் என்றெண்ணுவதும் அறிவின்குறைவினால் உண்டாகிய தப்பறைகளேயாம்.

வினா.— இந்தத் தப்பறை உண்டாகிய விதம் யாது?

விடை.—மெய்ஞ்ஞானவெளிச்சம் இல்லா மனுஷர்கள், தாங்கள் ஆணும் பெண்ணுமாயிருக்கின்றமையைக்கண்டு, தங்கள் தெய்வமும் அப்படியே இருக்கும் எனத் தீர்மானித்துக்கொண்டார்கள்.

வினா.—உலகத்திலே மனுஷர் சமுசாரம்பண்ணும் வகையைக் காட்டிக் கொடுக்கும்பொருட்டு கடவுள் தேவிசகிதமாய் இருப்பாரெனச் சொல்லலாமா?

விடை.—மனுஷர் சமுசாரம்பண்ணும் வகையைக்கடவுள்தாமே ஆணும் பெண்ணுமாயிருந்து காட்டிக்கொடுப்பது அவசியமாயின், யானைமுதல்

---

* ஊனாகி ஊனுள் உயிராய் உயிர்தோறுமாகி
வானாதியான பொருளாய் மதியாகிவெய்யோன்
தானாகி ஆண்பெண்ணுருவாகிச் சராசரங்கள்
ஆனான்சிவன் மற்றவனீள்கழற்கன்புசெய்வாம்—கந்தபுராணம்.

தானே கடன்மலை யாதியுமாய் நிற்கும்
தானே திசையொடு தேவருமாய் நிற்கும்
தானே உடலுயிர்தத்துவமாய் நிற்கும்
தானே உலகிற்றலைவனுமாமே—திருமந்திரம்.

எறும்பு ஈருகவுள்ள பிராணிகளெல்லாம் சமுசாரம்பண்ணும்வகையைக் காட்டிக்கொடுத்தது யாரோ? மிருகங்களிடத்திற்போல மனுஷரிடத்திலும் இயற்கையிலே அமைக்கப்பட்டுள்ள இச்சை ஒன்றே அதற்குப் போதியதாயிருக்கையில், பரிபூரண வஸ்துவாகிய கடவுள்மேல் சிற்றின்ப போகத்துக்குரிய தொழில்களை ஏற்றிப் பேசுவது மகா பாதகமாமென அறிக.

விஞ.— கடவுள் இருக்கும் தலம் யாது?

விடை.—கடவுள் தமது வரம்பில்லா ஞானத்திஞலும், சருவ வல்லமையிஞலும், சருவத்துக்கும் ஆதிகாரணமாயிருக்குந் தன்மையிஞலும் எங்கும் வியாபித்திருப்பார் அன்றி, எத்தலத்திலேயாயினும் அடங்கியிருப்பார் அல்லர்.

விஞ.—இத்தேசத்தாருடைய தெய்வங்களுக்கும் சருவ வியாபக லட்சணம் உண்டா?

விடை.—இல்லை. இத்தேசத்தார் சிவன் கயிலைமலையிலே பொற்கோவிலினுள்ளே பார்வதிசமேதராய் எழுந்தருளியிருக்கிருரெனவும்,* விட்டுணு வைகுண்டத்திலே அவ்விதமாகத் தமது தேவியோடு வாசம்பண்ணுகிருர் எனவும்† நம்புகிருர்கள். வைகுண்டத்திலே சிவன் இருப்பதாயாவது, கயிலையிலே விட்டுணு இருப்பதாயாவது அங்கீகரியார்கள். இப்படியே, சுப்பிரமணியர், வீரபத்திரர், காளி, அனுமார்முதலிய மற்றைத் தெய்வங்களும் ஒவ்வோர் தலத்திலேயே இருப்பவர்களாகச் சொல்லப்படுகின்றமையால் இவர்களுள் ஒருவரும் சருவ வியாபகரான மெய்க்கடவுளல்லர்.

விஞ.— கடவுள் சருவவியாபகரெனில், 'அவரை உலகத்தின் ஆன்மா எனவும், பாலில் நெய்போலவும் விறகில் நெருப்புப்போலவும் சராசரங்களிலெல்லாம் கலந்து நிறைந்திருக்கின்றவர் எனவும் சொல்லலாமா?

விடை.— உலகத்தின் சராசரங்களெல்லாம் கடவுளால் உண்டாக்கப்பட்டு, அவராற் தாங்கப்பட்டு, அவரது சருவ வல்லமையிஞலே நிலைபெறுவரினும், உலகம் வேறு கடவுள் வேறேயாம். வேதாந்திகள் முதலியோர் சொல்லுகின்ற சூத்திராத்துமாவைப்போலக் கடவுள் உலகத்தின் ஆன்மாவாயிருப்பாராயின், உலகத்தின் மாற்றங்களோடு அவருங்கூட மாறுகிறவராய்ப்போய்விடுவார்.

விஞ.—மெய்க்கடவுளானவர், தமது சருவ வல்லமையிஞற் தாங்கப்படுகிற உலகம் மாறிவருகையில், தாமோ மாருதிருப்பதை ஒரு திருஷ்டாந்தத்திஞல் விளக்குக.

விடை.— தடாகத்திலே விழும் சூரியவெப்பங் காரணமாய் அத்தடாகத்திலுள்ள மலர்களுட்சில முகிழ் விரிந்தும் சில கூம்பியும் சில வாடியும் இவ்வாருகத் தடாகத்திலே பலமாற்றங்கள் நடப்பினும், சூரியனே தடாகத்திலுட்படாததாய் அதில் நடக்கும் மாற்றங்களோடு தான் மாருததாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கும். இங்ஙனமே, கடவுளும் தமது வல்லமையிஞல் இயங்கி நிலைபெறுகின்ற உலகத்திலே ஆன்மா மேரை

* உபதேசகாண்டம், திரிபுரவிசயமான்மியம் 239 முதலியன காண்க.
† பாகவதச்சுருக்கம் வைகுந்தக்காட்சி முதலின காண்க.

யாய் உட்படாமலும், அதன் மாற்றங்களினுற் தாக்குருமலும் பிரகாசிப்பர் என அறிக.

வினு.—உலகமும், அதிலே தமது ஞானம் வல்லமை ஆதிகாரணத் தன்மை என்பவைகளினுல் வியாபித்த கடவுளும் வேறுவேறு என்பதற்குத் திருஷ்டாந்தம் என்னே?

விடை.— குயவனெருவன் தான் வனேந்த மட்கலங்களின் நடுவே உட்கார்ந்திருப்பானுயின், அதைக் கண்டவனெருவன், அக்குயவனும் அவனேச் சூழக்கிடக்கும் மட்கலங்களும் ஒன்றே எனத் துணிவானு? குயவனே மட்கலங்களின் ஆன்மா என்பானு? மட்கலங்களே குயவனின் சரீரம் எனச் சொல்வானு? சொல்லான். இவ்வுவமையினுல் உலகத்தைப் படைத்தவராகிய கடவுள் வேறு, அவ்வுலகம் வேறு எனக் கண்டு கொள்க.

## II. ஏகத்துவம்.

வினு.—எத்தனை கடவுள் உண்டு?

விடை.—சகலத்துக்கும் ஆதிகாரணமான பரிபூரண வஸ்து ஒன்றே ஆதலால், கடவுள் ஒருவரே உண்டு. மனுஷர் தங்களுக்கு உண்டாக்கிக் கொண்ட தெய்வங்களோ அநேகம்.

வினு.—மெய்க்கடவுளேயும் பொய்த்தெய்வங்களேயும் பிரித்தறிவது எப்படி?

விடை.—மெய்க்கடவுளின் லட்சணங்களேயும் பொய்த்தெய்வங்களின் அவலட்சணங்களேயும் பரிசோதித்து அறிந்துகொள்ளலாம்.

வினு.—மெய்க்கடவுளின் லட்சணங்கள் யாவை?

வினு—பரிபூரண நன்மையான சகலமும் அவருடைய லட்சணமேயாம். முக்கியமாய், தானுயிருத்தல், அநாதியாயிருத்தல், அரூபியாயிருத்தல், எங்கும் வியாபித்திருத்தல், சகலத்துக்கும் ஆதிகாரணமாயிருத்தல் எனும் ஆறிலட்சணங்களேச் சொல்லலாம். இவ் ஆறு லட்சணங்களேயும் முந்தின பாடத்திலே ஒருவாறு விளக்கினேம்.

வினு —பின்னும் சில லட்சணங்களேக் காட்டுக.

விடை.—பின்னும், சருவஞானமுடைமை, மாருத நன்மையும் நீதியுமுடைமை, அளவில்லாப் பரிசுத்தமுடைமை எனப் பல சுலட்சணங்களே எடுத்துச் சொல்லலாம்.

வினு.—இந்த லட்சணங்கள் கடவுளுடைய சிருஷ்டிப்பாகிய உலகத்திலே விளங்குகின்றதன்மை எப்படி?

விடை.--உலகத்திலே ஒன்றுக்கொன்று வேற்றுமையான கோடாகோடி பொருட்கள் உண்டாக்கப்பட்டிருந்தும், அவைகளெல்லாவற்றையும் அதிசயமான ஒழுங்கோடு நடத்துவதிலே கடவுளுடைய அளவில்லா ஞானம் காணப்படும். துஷ்டர்களே உடனுக்குடனே சங்கரித்துப்போடா

மல் பொறுத்திருப்பதிலேயும், அவர்கள் மனந்திரும்பி நல்வழிப்படுவதற்கான வரப்பிரசாத உபகாரங்களைப்பண்ணுவதிலேயும், சிஷ்டர்கள் வேண்டிய நன்மைகளை அளித்து உதவுவதிலேயும் அவருடைய நீதி நன்மைத்தனம் என்பவைகள் பிரகாசிக்கும். பாவத்தை எப்போதும் அருவருத்து பாவிகளைச்சிட்சிப்பதிலேயும் புண்ணியவாளரைச் சகல கஷ்டநஷ்டங்களிலும் ஆதரிப்பதிலேயும் அவருடைய பரிபூரண பரிசுத்ததனம் விளங்கும்.

வினு.—பொய்த்தெய்வங்களின் அவலட்சணங்களைக் காண்பது எப்படி?

விடை.—அவர்களுடைய நடபடிகள் எழுதப்பட்டிருக்கிற புராணகாவியங்களை வாசித்து அறிந்துகொள்ளலாம். அத்தெய்வங்கள் பெண்டுபிள்ளைகளை உடையவர்களென்றும், மேலும் தங்கள் காமநோயை அடக்கமாட்டாமல் பரஸ்திரிகமனம் பண்ணினார்களென்றும், கோபஆவேசமுள்ளோராய்க் கொலைத்தொழில்கள் சங்காரத்தொழில்களைப் புரிந்தார்களென்றும், வஞ்சனைகள் சூதுகள் முதலிய அநியாயங்களைச் செய்தார்களென்றும், பின்வருவதை அறியாமல் மோசமாகக் குற்றங்களிலுட்பட்டுச் சாபம் முதலிய தண்டனைகளை அடைந்தார்களென்றும் அந்தப் புராணகாவியங்களே சொல்லுகின்றன. *

---

* பிரமாவுக்குச் சருவஞானமின்மையை, கந்தபுராணம் அயனைச்சிறைபுரிபடலம் (9, 14, 15) உபதேசகாண்டம் சிவார்ச்சனைமான்மியம் (12, 13, 14) முதலியவிடங்களிலேயும்; நன்மையும் நீதியுமின்மையை, செவ்வந்திப்புராணம் பிரமாவினைசத்தியந்தீர்த்தசருக்கம் (2, 3, 4) முதலியவைகளிலேயும்; பரிசுத்தமின்மையை, அருணசலப்புராணம் பாவந்தீர்த்தசருக்கம் (12—17) கந்தபுராணம் மார்க்கண்டப்படலம் (12) முதலியவைகளிலேயும் காண்க.

விட்டுணுவுக்குச் சருவஞானமின்மையை, இராமாயணம் சடாயுவதைப்படலம் (156—159) கந்தபுராணம் அடிமுடிதேடுபடலம் முதலியவைகளிலேயும்; நன்மையும் நீதியுமின்மையை, உபதேசகாண்டம் மாயனருச்சனைமான்மியம் (134—141) இலிங்கபுராணம் சிவன் வராகத்தின் கொம்பைப்பிடுங்கின அத்தியாயம் (7) முதலியவைகளிலேயும்; பரிசுத்தமின்மையை, உபதேசகாண்டம் பூமகளருச்சனைமான்மியம் (4—18) கந்தபுராணம் ததிசியுத்தரப்படலம் (சலந்தரன் மனைவிவிருந்தையின்கதை) முதலியவிடங்களிலேயும் கண்டுகொள்க.

சிவனுக்குச் சருவஞானமின்மையை, கந்தபுராணம் உபதேசப்படலம் ("தானும் காண்கிலனின்னமும் தன்பெருந்தலைமை") பாகவதம் விருகாசுரனைக்கொன்றகதை முதலியவைகளிலேயும்; நன்மையும் நீதியுமின்மையை, உபதேசகாண்டம் வாணுசுரன்வதைமான்மியம் (27—42) கந்தபுராணம் தக்கன் வேள்விப்படலம் முதலியவைகளிலேயும்; பரிசுத்தமின்மையை, பாகவதச்சருக்கம் கூர்மாவதார அத்தியாயம் (மோகினியைக்கண்டு புணர்ந்தகதை) திருவிளையாடற்புராணம் வளையல்விற்றபடலம் (5—16) இலிங்கபுராணம் கணபதிதோற்றமுரைத்த அத்தியாயம் (களிறும்பிடியுமாய்ச் சேர்ந்தகதை) பாரதம் வாரணவதச்சருக்கம் (துரோணன் பன்னியை ஆடையின்றி உணவளிக்கச் செய்தகதை) கந்தபுராணம் ததிசியுத்தரப்படலம் (தாருகாவனத்துரிஷிபத்தினிகள் கற்பையழித்தகதை) முதலியவைகளிலேயும் காண்க.

"சிவனுடியோர் சாபத்துக்குள்ளானதை
விதியால்வருவதல்லால் வேதத்தோர்தங்கள்
மதியால்வருவதொன்றில்லை—பதிதோறும்
சங்கரனும் ஐயமேற்றுண்டான் தடங்கடல்சூழ்
மங்கையுடன் காடுறைந்தான்மால் (நல்வழி) என்பதனுலுங்காண்க.

வினு.—பிரமா விட்டுணு சிவன் எனும் தெய்வங்கள் செய்த வியபிசாரம் முதலிய துர்க்கிருத்தியங்களை அவர்களுடைய திருவிளையாடல்களென்று சொன்னால் என்னை?

விடை.—விளையாட்டுக்குச்செய்தாலும் இந்தக் கிருத்தியங்கள் துஷ்டாட்டமான மகா பாவங்களேயொழியப் புண்ணியமாகா. அன்றியும் விளையாட்டு புத்திகுறைந்த சிறுபையன்களுக்குப் பொருந்துமேயன்றி கடவுளுக்கு ஒருபோதும் பொருந்தாது. கடவுளைத் துஷ்டாட்டமுள்ள ஒரு விளையாட்டுப் பிள்ளையாக்குவது மகாபாதகம்.

வினு—இந்த நடத்தைகள் நமக்குப் பாவம்போலத் தோற்றினும் தெய்வத்தின் நடக்கையாகையாற் பாவமல்ல என்று சொல்லலாமா?

விடை.—பாவமான ஒரு செயலைத்தெய்வஞ்செய்தாலும் எவர் செய்தாலும், அதுபாவம் பாவமேயொழிய புண்ணியமாகாது. அழுக்கை இராசா தொட்டாலும் அழுக்கே, குடியானவன்தொட்டாலும் அழுக்கேயாம்.

வினு.—அப்படியாயின் பிரமா விட்டுணு சிவன் எனும் மும்மூர்த்தியாவது என்னை?

விடை.—அது பிருதுவி (மண்), அப்பு(தண்ணீர்), தேயு(நெருப்பு),எனும் மூன்று பூதியங்களையே அறியாமையினால் மூன்று தெய்வங்களென்று சொல்லியதாம்.

வினு.—அதெப்படி?

விடை.—பிருதுவியினால் சகலமும் உண்டாகும். அப்புவால் இரட்சிக்கப்படும். தேயுவால் அழியும். ஆகையால், பிருதுவியாகிய மண்ணை பிரமா என்றும், அப்புவாகிய தண்ணீரை விட்டுணு என்றும், தேயுவாகிய நெருப்பை உருத்திரன் என்றும் இத்தேசத்தவர்கள் பெயரிட்டழைத்துகொண்டார்கள்.

வினு.—இதற்கு அத்தாட்சி உண்டா?

விடை.—உண்டு. பிரமாவானவர், குயவன் மண்ணாற் சட்டிபானை வனைவதுபோல மாயையைக்கொண்டு சகலத்தையும் படைக்குந் தொழிலுடையவரெனவும், விட்டுணு பாற்கடலிலே அனந்த சயனத்திலே பள்ளிகொள்ளுகிறவரெனவும், சிவன் அக்கினிக்கொழுந்துகளைப்போன்ற சடையும், மின்னலைப்போன்றமேனியும் சூலமும், சாம்பற்பூச்சும் உடையவரெனவும் புராணகாவியங்கள் கூறுகின்றன. ஆகையால் பிரமாவுக்கு மண்ணோடு சம்பந்தமும், விட்டுணுவுக்குத் தண்ணீரோடு சம்பந்தமும், சிவனுக்கு நெருப்போடு சம்பந்தமும் காட்டியதாயிற்று.

வினு.—இந்தியாவிலே பிருதுவி அப்பு தேயு எனும் மூன்று பூதியங்களேயன்றி வேறு பூதியம் முதலியவைகளும் தெய்வமாகப் பாவிக்கப்பட்டனவா?

விடை.—வாயுபகவான் எனக்காற்றும், இந்திரன் என வானமும், சூரியன் சோமன் முதலியவைகளுமல்லாமல், சிற்சில மலைகள் ஆறுகள் மரங்கள் செடிகளும், பாம்பு குரங்கு பசு முதலிய மிருகங்களும் தெய்வமாகப்

பாவித்துவணங்கப்பட்டன. நல்லபாம்மை இந்நாட்களிலும்நாகதம்பிரான் என வணங்குகிறார்கள். சூரியனுக்கும் தைப்பொங்கல் செய்கிறார்கள். *

வினு.—பூதியங்கள் முதலியவைகளே தெய்வங்களாகப் பாவிக்கப்பட்டனவெனில், அவைகளுக்குப் புராணங்களிலே கட்டிவைத்திருக்கிற துராசார நடக்கைகள் எவ்வாறு உண்டாயின?

விடை.—பூதியங்கள் ஆதியிலே உயிருள்ள ஒவ்வொரு ஆள்போல எண்ணி நமஸ்கரிக்கப்பட்டுவந்தன. பின்பு மனுஷருட் காணப்படும்முறைப்படி, தெய்வங்களும் தனியே இருக்கப்படாதென்று அவ்வவருக்கு ஒவ்வொரு தேவியையுங் கற்பித்தார்கள். அப்பால், கவிராயர்கள் மனுஷரிடத்திற்காணப்படும் நெறிகெட்ட ஆசாபாசங்களே அத்தெய்வங்களுக்குமுண்டென்று நினைத்து, அவர்களைப்பற்றி வெட்கங்கெட்ட கதைகளைக்கற்பித்துப் புராணமாகப்பாடிவிட்டார்கள்.

வினு—பிரமா விட்டுணு சிவன் எனும் மும்மூர்த்திகளும், சிவனுடைய வேறு ரூபங்களான மகேசுரன் சதாசிவன் எனும் இருவரும் ஆகப் பஞ்சமூர்த்திகள் நமது சரீரத்திலே வாசமாயிருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறதென்னை?

விடை.—நமது சரீரத்திலே ஒருதெய்வமாவது ஐந்து தெய்வங்களாவது குடிபுகுந்திருக்கின்றன என்றல்ல, அதிலே முன்சொல்லிய மண் தண்ணீர் நெருப்பு எனும் மூன்றோடு, பின்னும் காற்று ஆகாயம் எனும் இரண்டு பூதியங்களும் உண்டு என்று இத்தேசத்துச் சாஸ்திரிகள் எண்ணியமையினாலேயே ஆதியில் இப்படிச்சொல்லப்பட்டது. அவர்கள் குய்யம் எனும் இடத்திலே மண்ணுக்குச்சரியான விந்துநாதம் என்னும் பதார்த்தங்களும், நாபியடியிலே தண்ணீரும், ஈரற்குலையிலே நெருப்பும், கண்டத்திலே காற்றும், நெற்றியிலே ஆகாயமும், உண்டென்று நம்பி, இந்தப் பஞ்சபூதியங்களையே பஞ்சமூர்த்திகளாகப் பாவித்தார்கள். இந்த ஐந்து பூதியங்களையும் குறிக்கும்படியே வைத்தியசாஸ்திரங்களும் பஞ்சாட்சர மந்திரத்தை வழங்குகின்றன.

வினு.—ஒருவரேயாகிய கடவுள்தாம் ஐந்து வடிவங்களாகி நமது சரீரத்தைக்காக்கும்பொருட்டாக அந்தந்தத் தானத்தில் வசிக்கிறார் என்று சொல்லலாகாதா?

விடை.—கடவுளுக்கு வடிவமும் மாற்றமுமில்லை ஆகையால்; அவர் அப்படிப் பலவடிவங்களாய் மாறியிருக்கமாட்டார். அன்றியும் உடலினுள்ளே குடிகொண்டிராமல் அவ்வுடலைக்காக்கக் கடவுளால் இயலாதெனில், அது அவருடைய தேவலட்சணத்துக்குப் பழுதாகுமே!

வினு.—ஆயின். பஞ்சமூர்த்திகள் உடலினுள் வசிக்கிறார்கள் என்ற எண்ணம் வந்ததெப்படி?

விடை.—அண்டம் என்னப்படுகிற உலகத்திலே உள்ளதெல்லாம் பிண்டம் ஆகிய சரீரத்திலேயும் உண்டென்ற ஒரு உவமானப்பேச்சு நமது தேசத்திலுண்டு. அப்பேச்சின்படி, உலகத்திலே பஞ்சபூதியங்களைக்கண்டு

* ஆத்மபோதினிப்பத்திரிகை (1907-ம் ஆ ஜனவரியீ 13-ந் உ) காண்க.

அவைகளை ஒவ்வொரு தெய்வமாக வணங்கிவந்த நமதுமுன்னோர், சரீரத்திலேயும் அப்பூதியங்களிருக்குமெனத் தீர்மானித்து அவைகளையும் தெய்வங்களாக்கி வணங்கத் தலைப்பட்டார்கள். இப்படியாகச் சொல்லப்பட்ட பஞ்சபூதியங்களைத் தெய்வங்களென்று கைதொழுவது, தன்சொந்தச் சரீரத்தைத்தானே தொழுவதற்குச்சரி. ஆகையால் மனுஷரால் உண்டுபண்ணப்பட்ட அநேகமான பொய்த்தெய்வங்களையெல்லாம் வெறுத்து மெய்யான ஏககடவுளையே வழிபடத்தகும்.

வினா.—மெய்யான ஏககடவுளுக்குரிய திருநாமம் யாது?

விடை.—மெய்யான கடவுளுடைய சுபாவத்தை அளவறுத்து அவருக்கு ஒருநாமம் இட மனுஷனாற்கூடாது. ஆயினும் அவருடைய அளவில்லாத தேவலட்சணங்களில் ஒவ்வொன்றைக் காட்டுகின்ற நாமங்களை அவருக்கு வழங்கலாம். இப்படியே பரிபூரணவஸ்து, சருவேசுரன், சுவாமி, கர்த்தர், சருவவல்லவர், ஆதியந்தமில்லாதவர், சுயம்பு, அநாதி, சருவவியாபி, சகலநன்மைச்சுரூபி, சருவஞானி எனும் நாமங்கள்சொல்லப்படும்.

வினா.—கடவுளைச் சிவன், விட்டுணு, பிரமா என்ற நாமங்களால் அழைக்கக்கூடாதா?

விடை.—சிவன் முதலிய நாமங்களுக்குரிய சொல்லொடுபொருளை (யோகார்த்தம்) பார்க்கும்போது சிவம் என்பது சுபம் என்றும், விட்டுணு என்பது வியாபித்தது என்றும், பிரமா என்பது அறிகிறது என்றும் பொருள்படும். ஆதலால், சொல்லொடு பொருளின்படி மெய்யான கடவுளுக்கும் இந்நாமங்களைச் சொல்லக்கூடும் என்பது மெய்தான். ஆயின், இப்படிப்பட்ட நாமங்கள், ஒருபோதும் கடவுளல்லாத பொருட்களுக்கு உலகவழக்கிலே இடப்பட்டவைகளாயிருக்கிறபடியால், உலகவழக்கிலே (ரூட்டியார்த்தம்) இந்த நாமங்களை மெய்யான கடவுளுக்கு ஒருபோதும் இடக்கூடாது.

வினா.—இதற்கு ஒரு உதாரணஞ்சொல்லுக.

விடை.—ஒருகிராமத்திலே ஆள்வான் என்ற நாமமுடைய ஒரு துட்டனிருக்கிறானென்று வைத்துக்கொள்ளுவோம். ஆள்வான் என்ற நாமத்தின் சொல்லொடுபொருள் (யோகார்த்தம்) ஆளுகிறவன் அல்லது இராசா என்பதேயாயினும், அதற்கு அந்தக் கிராமத்திலே நடைபெறுகிற வழக்கப்பொருள் (ரூட்டியார்த்தம்) ஒருதுஷ்டனுடைய நாமம் என்பதேயாம். இப்படியிருக்குமிடத்து, அக்கிராமத்துச் சனங்கள் துஷ்டனாகிய ஒருவனைத் தாங்கள் அழைக்கிற பெயரால் தங்களுக்கு அதிகதயவுள்ள இராசாவையும் அழைக்கத்துணிவார்களா? துணியார்கள். சொல்லொடுபொருள் எப்படியிருப்பினும் வழக்கப்பொருளின் நிமித்தம் அப்பெயரை இராசாவுக்கு ஒருபோதும் வழங்காதிருக்கவே கவனிப்பார்கள். இப்படியே சகல துஷ்டாட்டங்களுக்கும் உறைவிடமாய்ப் புராணம் முதலியவைகள் காட்டுகிறவர்களுக்கு வழங்குகிற பிரமா விட்டுணு சிவன் எனும் நாமங்களை அளவற்ற பரிபூரணராகிய கடவுளுக்கு ஒருபோதும் வழங்கக்கூடாது என அறிக.

## III. திரித்துவம்

வினு.—ஏகராகிய கடவுள் தமக்குள்ளே எப்படி இருக்கிறுர்?
விடை.—திரித்துவமாயிருக்கிறுர்.

வினு.—தேவதிரித்துவமாவது என்னே?
விடை.—ஒரே தேவசுபாவத்தினுள் மூன்று நாமாதாரங்கள் அல்லது மூன்றுபேர் உண்டாயிருப்பதே தேவதிரித்துவமென்று சொல்லப்படும்.
வினு.—அந்த மூன்றுபேரும் யாவர்?
விடை.—பிதா, சுதன், பரிசுத்தாவி அல்லது இஸ்பிரீத்துசாந்து என்பவர்களாம்.

வினு.—ஒரே கடவுளானவர் மூன்று நாமாதாரங்களானது எக்காலம்? எவ்விதம்?

விடை.—அநாதியாகவே மூன்று நாமாதாரங்களாயிருக்கிறுர். அது எங்ஙனமெனில், கடவுள் தமது அளவில்லாத ஞானத்தினுற் தம்மைத்தாமறிவார். இந்த அறிவினுற் பிறக்கின்றஞானம் எனும்வாக்கு சுதனென்றும், அதை அதுவாகவும் வேருகவும்நின்று பிறப்பிக்கின்றவர் பிதா என்றும் சொல்லப்படும். பின்னும், பிதாவும் சுதனும் தங்கள் சகல நன்மையும் நிறைந்த சவுந்தரியத்திலே நித்தியமாய் அந்நியோந்நிய பிரீதிகொள்வார்கள். இதிலே நித்தியமாய் உண்டாகிற ஆனந்தமே பரிசுத்தாவி என்று சொல்லப்படும்.

வினு.—இப்படி ஏககடவுளானவர் அநாதியாகவே மூன்றுபேராய் விளங்குகின்ற மேன்மையைத் தெளிந்துகொள்ளுதற்கு உதவியான உவமை யென்னே?

விடை.—ஒருவன் தன்முகத்தைக் கண்ணுடியிலே பார்க்கும்போது அதிற் தனது சாயலைக்கண்டு மகிழ்வான். இதிலே, கண்ணுடியிற் சாயலைக் கண்டவனும், கண்டசாயலும், அதனுல்வந்த மகிழ்ச்சியும் எனும் மூன்றும் ஒருவன் உள்ளகாலமெல்லாம் அவனிடத்திலே இருக்கக்கூடுமாயின் அதுதான் திரித்துவத்துக்குத் தகுதியான உவமையென்று சொல்லலாம்.
வினு.—இந்த உவமையின் விபரம் என்னே?
விடை.—காண்பதென்பது அறிவதாகவும், கண்ணுடியென்பது அறியும் சக்தியாகவும், சாயல் என்பது அறியப்பட்ட ஞானமாகவும், மகிழ்ச்சி என்பது பரமஆனந்தமாகவும்வைத்து உணர்ந்துகொள்க. கடவுள் தமது அறியுஞ் சக்தியினுற் தம்மை அறியும்போது, அறிகிறவராகிய தாம் பிதாவாகவும், அறியப்பட்டதாகிய ஞானம் சுதனுகவும்தம்மிடத்திலும் சுதனிடத்திலும் நின்று புறப்படுகிற அந்நியோந்நியமான ஆனந்தம் பரிசுத்தாவியாகவும் இருக்கின்ற இரகசியத்தை நுண்ணறிவாற் கண்டுகொள்க.
வினு.—பிதா சுதன் பரிசுத்தாவி எனும் மூன்றுபேருடையவும் இருக்கையிலே முன்பின் (பூர்வாபரம்) என்ற வித்தியாசமுண்டா?
விடை.—கடவுள் அநாதியாகவே தம்மையறிந்தும் நேசித்துங்கொண்டிருப்பாராதலால், அநாதியாகவே அறிகிறவராகிய பிதாவாகவும்; அறிவாகிய

சுதனாகவும், அன்பின் ஆனந்தமாகிய பரிசுத்தாவியாகவும் இருப்பார். ஆகையால் இம்மூன்றுபேருக்கும் இடையில் முன்பின் என்ற வித்தியாசமில்லை.

விஞ.—இதற்கு உவமையென்னை?

விடை.—நெருப்பு உள்ள காலமெல்லாம் அதற்கு ஒளியும் அனலும் நிறமும் இருக்குமன்றி, ஒளியாவது நிறமாவது அனலாவது முந்தி அல்லது பிந்தித்தோன்றாது. அதுபோல, அநாதியாயிருக்கிற சருவேசுரனிடத்திலே அவருள்ளளவும், அதாவது அநாதியாகவே, பிதா சுதன் பரிசுத்தாவி எனும் மூன்று பேர்வித்தியாசமும் முந்தினது பிந்தினது என்ற முறைமையில்லாமலே உண்டு.

விஞ.—தேவதிரித்துவத்தின் மூன்றுபேரையும் மூன்று தேவர்களென்று சொல்லாமல் ஒருகடவுளென்று சொல்லுவது என்னை?

விடை.—மூன்றுபேருக்கும் மூன்றுதேவசுபாவம் உண்டாயின் மூன்று தேவர்கள் என்னலாம். ஆயின், மூவருக்கும் ஒரே தேவசுபாவம்மாத்திரம் இருக்கின்றமையால் மூவரும் ஒருகடவுளே என்று சொல்லப்படும்.

விஞ.—இதற்கு உவமையென்னை?

விடை.—சூரியன் தன் அயனத்தினால் உதய சூரியனென்றும் மத்தியானச் சூரியனென்றும் அஸ்தமன சூரியனென்றும் சொல்லப்படினும், மூன்றுபேரையும் உடையது ஒரு சூரியனேயன்றி மூன்று சூரியர்களோவல்ல. மனுஷனுடைய ஆத்துமத்தில் மனது நினைவு புத்தி எனும் இம்மூன்றும் ஒரு ஆத்துமமேயாகும். இங்ஙனமே ஒரு தேவசுபாவத்திலே பிதாத்துவம் சுதத்துவம் பரிசுத்தாவித்துவம் எனும் இம்மூன்றும் ஒரே தேவத்துவமாமென்றறிக.

விஞ.—இந்துசமயத்திலே சொல்லப்படுகின்ற பிரமா விட்டுணு உருத்திரனெனும் திரிமூர்த்திகள் தேவதிரித்துவத்துக்குச சமமா?

விடை.—ஒருபோதுமில்லை. ஏனெனில் திரிமூர்த்திகள் எனும் வார்த்தையே மூன்றுசரீரமென்று பொருள்படுகின்றமையால், சரீரமில்லாதவராகிய ஏககடவுளுடைய திரித்துவத்தன்மை மும்மூர்த்திகளிலே இராது. அன்றியும், மும்மூர்த்திகள் எதிரிடையான கருத்தும் தாரதம்மியமான புத்தியும் வெவ்வேறு சுபாவமும் உள்ளவர்களாய், தம்முட் சண்டையிட்டுக் கொள்ளுவோராய் இருக்கிறார்களாதலால் மூன்றுபேரும் ஒருவஸ்துவேயெனச் சொல்ல இடமில்லை.

விஞ.—திரிமூர்த்திகள் பண்ணிய சண்டைகளின் வரலாறு என்னை?

விடை.—அவ்வரலாற்றை ஆகமபுராணகாவியங்களிலே விரிவாய்க்காணலாம். பிரமாவும் சிவனும் நான் பெரியவன் நீ பெரியவன் என்று தர்க்கித்தபோது சிவன் பிரமாவின் தலையைப்பிடுங்கிவிட அதனாற் சிவனுக்குப் பிரமகத்திதோஷமுண்டாயிற்றென்றும், அப்பாவந்தீரச் சிவன் பிரமகபாலத்தைக் கையிலேந்தியபடி பன்னிரண்டுவருஷம் ஐயமேற்றுண்டா

ரெனவும் சொல்லியிருக்கிறது * இதிலே சிவனுக்கும் பிரமாவுக்கும் மனதிலும் அறிக்கையிலும் வெகுவித்தியாசம் காணப்படுகின்றமையால் இருவரும் ஒருவஸ்துவல்ல. அப்பால் விட்டுணுவுக்கும் பிரமாவுக்குமிடையிலே நீ கடவுள் நான் கடவுளென்ற வாக்குவாதமுண்டானவிடத்து, சிவன் அவ்விருவருக்குமிடையில் ஓர் அக்கினித்தம்பமாகநிற்க அதன் அடிமுடிகளைக்காணும்படி பிரமாவும் விட்டுணுவும் முறையே அன்னமும் பன்றியுமாய் ரூபமெடுத்து மேலே பறந்தும் பூமியைத்தோண்டிக்கொண்டுபோயும் அடிமுடிகளைக் காணமாட்டாமல் நின்றார்கள் எனச் சைவபுராணங்கள் † சொல்லுகின்றன. இதிலே பிரமா வேறு விட்டுணுவேறு என்பது தெளிவாகக் காணப்படுகிறது. பின்னும், சிவனும் விட்டுணுவும் பல முறைகளிற் சண்டை போட்டுக்கொண்டார்களெனவும், ஒருகால் விட்டுணு தோல்வியடைந்தாரெனவும் ‡ ஒருகால் சிவன் தோல்வியடைந்தாரெனவும் ¶ புராணகாவியங்கள் கூறுகின்றன. இதிலே சிவனும் விட்டுணுவும் வேறுவஸ்துக்களென்பதுதேற்றம். இவற்றால் பிரமா விட்டுணு சிவன் எனும் திரிமூர்த்திகளும் அறிவும் மனமும் வல்லமையும் சுபாவமும் வேறுபட்ட வெவ்வேறு வஸ்துக்களேயென்பதும் மூவருள் ஒருவரும் பரிபூரண வஸ்துவாகிய கடவுளல்ல என்பதும் நன்றாக நிச்சயிக்கப்படும்.

வினா.—இந்துக்களுடைய மேலான சாஸதிரங்களின்படி, திரிமூர்த்திகளாகிறவர்கள் யார்?

விடை—மேலான சாஸ்திரங்களின்படி பிரமா விட்டுணு உருத்திரன் எனும் மூன்றுபேரும் பராபரவஸ்துவைச்சார்ந்த சாத்துவிகம் (நன்மை) இராசதம் (ஆசாபாசம்) தாமசம் (தீமை) எனும் முக்குணங்களினாலும் உண்டாகின்ற பொய்யான தோற்றங்களேயொழிய பராபரவஸ்துவல்ல. இவைகள் வெறுந்தோற்றங்களானபடியால் தோன்றியபடியே அழிந்தும்போகின்றவைகளாம் **

வினா.—மெய்ச்சமயமாகிய சத்தியவேதம் போதிக்கின்ற திரித்துவத்தின் மகிமை என்னை?

விடை —திரித்துவ சருவேசுரன் மூன்றுபேராயிருப்பினும் ஏகவஸ்துவாயிருக்கிறார். மூன்றுபேரும் நித்தியமாயும் தம்முட் சரியொத்தவர்களாயும் இருக்கிறவர்களேயன்றி இடையிலே தோன்றி அழிந்துபோகிறவர்களல்லர். மூன்றுபேருக்கும் ஒரேஞானமும் ஒரேசித்தமும் ஒரேவல்லமை

* அருணாசலப்புராணம் திருமலைச்சருக்கம், கூர்மபுராணம் சலந்தரனைக்கொன்ற அத்தியாயம் முதலியனகாண்க.

† கந்தபுராணம் அடிமுடிதேடுபடலம், பிரமபுராணம் பிரமன்மகிமைச்சருக்கம் முதலியனகாண்க.

‡ உபதேசகாண்டம் அரிபிரமாதியர் பூசைமான்மியம் முதலியன.

¶ விட்டுணுபுராணம் 5-ம் அம்சம் 33-ம் அத்தியாயம் முதலியன.

** சிவவாக்கியருடைய பின்வரும்பாடலையுங்காண்க:—

அரியுமல்ல அரனுமல்ல அயனுமல்ல அப்புறம்
கருமை வெண்மை செம்மையுங்கலந்துநின்றகாரணம்
பெரியதல்ல சிறியதல்ல பெண்ணுமாணுமல்லவே
துரியமுங்கடந்துநின்ற தூரதூரதூரமே.

யும் ஒரே தேவசுபாவமுமன்றி வெவ்வேறல்ல. மூன்றுபேரும் ஒருபரிபூரணவஸ்துவேயன்றி மூன்றுவஸ்துக்களல்ல. ஆகையால் பூமிக்கு ஆகாயம் எத்தனைதூரமோ அப்படியே தேவதிரித்துவத்துக்கும் மும்மூர்த்திக்குமிடையில் வேற்றுமையுண்டு. ஏகதிரித்துவரான இப்பரிபூரண வஸ்துவையே அறிந்து நேசித்துச் சேவித்து மோக்ஷ பரம ஆனந்தத்தை அடையக்கடவோம்.

வினா.—ஏகதிரித்துவரான மெய்க்கடவுளையல்லாமல் பொய்த்தெய்வங்களையும் தொழலாமா?

விடை.—தொழலாகாது. நம்மைப் படைத்தவரும் நம்மைப் பரிபாலிக்கிறவரும் நமக்கு மோக்ஷத்தை அருளவல்லவரும் மெய்யான ஏக கடவுள் ஒருவரேயாதலால், அவரொருவரையே நாம் முழுமனதோடும் சிந்தனை வாக்கு கிரியைகள் என்னும் மூன்றினாலும் தொழல்வேண்டும்.

வினா.— எவ்வெத்தெய்வத்தை வழிபட்டாலும் மெய்க்கடவுடான ஒருவரே அவ்வழிபாட்டை ஏற்று அருள் செய்வாரென்று* சொல்லலாகாதா?

விடை.—சொல்லலாகாது. பொய்த்தெய்வ வழிபாடு மெய்க்கடவுளுக்கு மகா அருவருப்பேயாகும். எண்ணிலடங்கா நன்றிகளைச் செய்தவரும் செய்துகொண்டுவருகிறவருமாகிய தம்மை மறந்துவிட்டு, தேவவழிபாட்டுக்குச் சற்றேனும் யோக்கியமில்லாத நீசச் சிருட்டிகளை வழிபடுவோரையெல்லாம் மெய்க்கடவுள் அவியாத அக்கினியிற் தள்ளி நீதிப்படி தண்டிப்பார்.

வினா —அதெப்படி?

விடை — ஒரு அரசன் தன் பிரசைகள் தனக்குச் செய்யவேண்டிய இராச மரியாதைகளையும், தனக்குரியதான கீழ்ப்படிதல் அரசிறைப்பணம் முதலியவைகளையும் வேறொருவனுக்குச் செலுத்தச் சகிப்பானா? சகியான். அதுபோல வரம்பில்லா நீதிச்சுரூபமாயிருக்கிற கடவுளும் நமக்குரியதான தேவவழிபாடுகளை மனுஷர் பொய்த்தெய்வங்களுக்குச் செலுத்துவதைச் சகியார் என அறிக.

வினா.—அப்படியாயின், பொய்த்தெய்வங்களை வழிபடுவோரைக் கடவுள் உடனே தண்டியாமல் விடுவது எப்படி?

விடை.—கடவுள் அளவில்லாப் பொறுமையுள்ளவராகையால், பொய்த்தெய்வத் தொழும்பர்களை உடனே தண்டியாமல், அவர்களுக்கு மெய்க்கடவுளாகிய தம்மைப்பற்றிய அறிவு உதிக்கும்படியான பலபலவழிகளைக் காட்டிக்கொண்டு காத்திருக்கிறார். "அரசன் அன்றறுக்கும் தெய்வம் நின்றறுக்கும்" என்ற முதுமொழிப்படி கடைசிநாளிலே கடவுள் நீதியைப் பூரணமாய்ச் செலுத்தியருளுவார்.

---

* "மனமது நினையவாக்கு வழுத்தமந்திரங்கள் சொல்ல
வினைமலர்கையிற்கொண்டங் கிச்சித்த தெய்வம்போற்றிச்
சினமுதலகற்றிவாழுஞ் செயலறமானவியார்க்கும்
முனமொருதெய்வமெங்குஞ் செயற்கு முன்னிலையாமன்றே"
சிவஞானசித்தி II;24.

வினா.—பொய்த்தெய்வக் கோவில்களிலே அருள்கள் கிடைப்பது எப்படி?

விடை.— சகலமனுஷருக்கும் பேதமின்றிக் கிடைக்கிற பொதுவான அருள்களேயன்றி விசேஷ அருள்கள் பொய்த்தெய்வக் கோவில்களிலே ஒருபோதும் கிடைப்பதில்லை. சூரியன் நல்லோர்மேலும் தீயோர்மேலும் ஒரேவிதமாய்ப் பிரகாசிப்பதுபோல, கடவுளும் தமது பாதுகாப்பு சரீர சுகம் முதலிய நன்மைகளை எல்லாருக்கும் வித்தியாசமின்றி வழங்கியருளுகிறார் "சாந்தனையும் தீயனவே செய்திடினும் ஆங்கவரை ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்" என்றபடி கடவுள் தம்மை மறந்து பொய்த்தெய்வங்களைத் தொழுவோரையும் காத்தருளுகிறார். ஆயின், பொய்த்தெய்வங்களை வழிபட்டோரை நடுத்தீர்வைநாளிலே தண்டியாமல் விடார்.

வினா.— பொய்த்தெய்வக் கோவில்களிலே சில மாயமான அருள்கள் பிசாசினால் கொடுக்கப்படுவதும் உண்டா?

விடை.—ஆம், மனுஷரைக் கெடுப்பதையே தனக்கு உத்தியோகமாகக் கொண்ட பிசாசானது பொய்த்தெய்வக் கோவில்களிலே சில மாயமான அருள்களைக் கொடுப்பதும் உண்டு. ஆதலால், இவைகளினால் மயங்கிப் போகாமல், மெய்யான கடவுளுடைய லட்சணங்களையும் பொய்த்தெய்வங்களுடைய அவலட்சணங்களையும் நன்றாய் அளவிட்டு அறிந்துகொண்டு மெய்யான கடவுளையே வழிபட்டு உய்யக்கடவோம்.

IMPRIMATUR. A. J., VIC. GEN.

PRINTED BY C. ANDREW AT ST. JOSEPH'S CATHOLIC PRESS, JAFFNA.

**CATHOLIC TRACT**
**No. 11.**

# THE ORIGIN OF THINGS
# உலக உற்பத்தி

## I. சிருட்டியின்காரணம்.

வினா.—உலகம் தானாக உள்ளதா? அன்றி, உண்டாக்கப்பட்டதா?

விடை.—உலகம் உண்டாக்கப்பட்டதேயன்றி தானாக உள்ளதல்ல.

வினா.—அது தானாக உள்ளதல்ல என எப்படி அறியலாம்?

விடை.—உலகத்தில் உள்ள பொருட்கள் எல்லாம் இது இந்த அளவுள்ளது, அது அந்த அளவுள்ளது என்றும். இது இத்தனை, அது அத்தனை என்றும் சொல்லப்பட்டு, சகலத்துக்கும் அளவும் கணக்கும் இருக்கின்றமையால், இப்படியான அளவையும் கணக்கையும் உலகத்திலே ஏற்படுத்தியவர் ஒருவர் இருத்தல் அவசியம்.

வினா.—இதற்கு உவமை என்னை?

விடை.—நாம் ஒரு வீட்டைப்பார்த்து அதன் அகலம் நீளம் உயரம் முதலியவைகளை அளந்து அறிந்துகொண்டு, இந்த வீட்டின் நீளம் ஒருமுழம் அதிகமாகாதது எப்படி? அகலம் ஒருமுழம் குறையாதது எப்படி? எனக் கேட்குமிடத்து, வீட்டைக் கட்டியவன் அதை இந்த அளவோடு கட்டினான் என்னும் மறுமொழியே கொடுக்கப்படும். அவ்வாறு, பிரபஞ்சத்திலுள்ள சூரியன் முதலான வஸ்துக்கள் எல்லாம் பரிமாணத்திலேயும் பலம் முதலிய மற்றக்குணங்களிலேயும் ஏற்றக்குறைச்சலுள்ளவைகளாய் மட்டுப்படுத்தப்பட்டிருக்கின்றமையால் இவைகளை மட்டுப்படுத்தி உண்டாக்கிய ஒரு கர்த்தர் அவசியமாய் வேண்டப்படும்.*

வினா.—அப்படியாயின் உலகம் யாரால் உண்டாக்கப்பட்டது?

விடை.—கடவுள்தாமே வேறொன்றுமில்லாதிருக்கையில் தமது வல்லமையொன்றினால் உலகத்தையும் அதிலடங்கிய சகலத்தையும் உண்டாக்கியருளினார்.

வினா—கடவுள் முன்பு இருந்த ஒரு பொருளைக்கொண்டு உலகத்தை உண்டாக்கியிருத்தல் கூடாதா?

விடை.—கூடும். ஆயின், முன்பு இருந்த அந்தப்பொருளும் கடவுளாலேயே ஆதியில் உண்டாக்கப்பட்டதாதல்வேண்டும். ஏனெனில் அளவும்

---

* "ஒருவனோடொருத்தியொன்றென்றுரைத்திடும் உலகமெல்லாம்
வருமுறைவந்துநின்று போவதுமாதலாலே
தருபவன் ஒருவன்வேண்டும்..."
எனச் சைவருடைய சிவஞானசித்தியிலே சொல்லப்பட்ட நியாயமும்

கணக்குமுள்ள பொருள் எதுவோ, அது தானாய் இருத்தல் ஒருபோதும் கூடாது.

வினா.—இந்து சமயத்தவர்கள் மாயை அல்லது பிரகிருதி என்னும் ஒரு வஸ்து ஒருவராலும் உண்டாக்கப்படாமல் அநாதியாகவே உண்டென்று சொல்லுகிறார்கள்.* அது சரியா?

விடை.—சரியல்ல; அவர்களுடைய கொள்கைப்படி மாயை அல்லது பிரகிருதியானது மண்முதலிய வஸ்துக்களுக்கெல்லாம் காரணமாயிருக்கும். மண் முதலிய கண்டிப்புள்ள வஸ்துக்களோ தொகைப்பட்ட அணுக் கூட்டங்களினாற் சேர்ந்தவைகளும் இவ்வளவு அவ்வளவு என்ற அளவுள்ளவைகளுமேயாமென்பது பிரசித்தம். ஆதலால் இவ்வஸ்துக்களுக்குக் காரணமாயுள்ள மாயை அல்லது பிரகிருதியும் அளவுகணக்குகளுள்ளதாகின்றது. அளவுள்ள பொருட்கள் அநாதியாகக்கூடாது. ஆதலால் மாயை அநாதியாயுள்ளதல்ல.

வினா.—மாயை அநாதியல்லவென்றாலும் மாயையின் அமிசங்களாகிய பரமாணுக்கள் அநாதியாகக் கூடாதா?

விடை.—கூடாது. பரமாணு என்றபோதே மிகநுண்ணியதாகப்பகுத்தவைகளாய் உண்டாக்குதற்கும் ஒருவர் அவசியம் வேண்டப்படும். சடப்பொருள் என்றதாயிற்று. இப்படி இவைகளைப் பகுத்து மகா சிறிய

வினா—அளவுள்ளது ஒன்றும் அநாதியாகக்கூடாது எனவும், அளவில்லாததுமாத்திரம் அநாதியாகக்கூடும் எனவும் ஓர் நியமமுண்டா?

விடை.—ஆம். "அநாதி" என்ற எண்ணத்திலே "எல்லாவிதத்திலும் அளவின்மை" எனும் எண்ணம் அடங்கியிருக்கின்றமையால், அளவுள்ள தொன்றும் அநாதியாகக்கூடாது. அளவில்லாதவோர் வஸ்துமாத்திரம் அநாதியாயிருக்கின்றது.

வினா.—அது எப்படி?

விடை.—அநாதியானது எதுவோ அது பிறகாரணமொன்றாலும் உண்டாகாமல் தானாயிருக்கும். தானாயிருப்பது எதுவோ அது இருக்கைசுருபமாகவேயிருக்கும். இருக்கைசுருபமானதெதுவோ அது தன்னிடத்திலே இன்மையென்று சொல்லப்படுகிற குறைகள் ஒன்றும் காணப்படாமல் நிறைவுள்ளதாயிருக்கும். நிறைவுள்ள வஸ்துவோ அளக்கப்படாமல் சகல அநந்த லட்சணங்களையுமுடையதாயிருக்கும். அப்படியுள்ள வஸ்து பரிபூரணவஸ்துவாகிய கடவுள் ஒருவரேயாம்.

வினா.—இதற்கு உவமை என்னை?

விடை.—தான் ஒன்றினாலும் சூடாக்கப்படாததாய் தன்னிடத்திலே சகல சூட்டையும் அடக்கி அனல்சுரூபமாயுள்ள அக்கினியிலே குளிர் என்னப்படுகிற குறைவு ஒருபோதும் காணப்படாது. இந்த அக்கினியினாற் சூடாக்கப்பட்ட பொருட்களுக்குமாத்திரம் அதிகசூடு குறைந்தசூடு என்ற பேதம் இருக்குமன்றி தானே அனல்சுரூபமாயிருக்கின்ற அக்கினியில் அப்படிப்பட்ட தாரதம்மியம் இராது. அதுபோல, வேறொரு பொருளினால் இருக்கையைப்பெறாமல் தானே இருக்கைசுரூபமாயுள்ள வஸ்துவானது இன்மை என்னப்படுகிற குறையொன்றுமின்றிப் பரிபூரணமாயிருக்கும்.

* "பதியைப்போற் பசுபாசமநாதி"

வினா—பானைசட்டி வனைதற்குத் திரிகையோடு மண்ணும் அவசியமாய் இருப்பதுபோல, உலகத்தையாவது உலகத்திற்கு முதற்காரணமாயிருக்கும் யாதோர்பொருளையாவது உண்டாக்குதற்குத் திரிகைக்குச்சரியான தேவவல்லமையோடு மண்ணுக்குச் சரியான உபாதானமும் அவசியம்* அல்லவா?

விடை.—அவசியமல்ல. கடவுளுடைய அநந்தமான வல்லமை ஒன்றே உலகத்தை உண்டாக்குதற்குப் போதியது. ஆகையால் அவருக்கு மண்போன்ற முதற்காரணம் வேண்டியதில்லை. அன்றியும், உலகத்தை உண்டாக்குதற்கு மண்ணைப்போன்ற ஒரு முதற்காரணம் வேண்டுமானால் அந்த முதற்காரணத்தை உண்டாக்குதற்கும் ஒருவர் வேண்டுமே.

வினா.—முதற்காரணமின்றி உலகத்தை ஆக்கக் கடவுளாலும் ஆற்றாது என இந்துசமயிகள் வாதிக்கின்றார்கள் † அன்றோ?

விடை.—ஆம். ஆயின், முதற்காரணமின்றி ஆக்க இயலாத இவர்களது கடவுள் ஒரு பெருங் குயவன் எனப்படுவரேயன்றிக் கடவுளாகார்.

வினா—முதற்காரணமின்றி யாதொன்றை ஆக்குதல் இயல்பிலேயே அசாத்தியம் என்றன்றோ சொல்லுகிறார்கள். இயல்பிலேயே சாத்தியமல்லாததொன்றைச் செய்யக்கூடாதிருத்தலிலே சர்வவல்லமைக்குப் பங்கமுண்டா?

விடை—இயல்பிலேயே அசாத்தியமானது எதுவோ அது சூனியமே [யாதொன்றுமல்ல] ஆதலால் அது சர்வவல்லமைக்கு விஷயமாகாது; சர்வவல்லமைக்குப் பங்கமுமாகாது.

வினா—இதனை மேலும் விளக்குக.

விடை.—ஒரேமுறையில் வட்டமும் சதுரமுமான ஒரு வடிவத்தை எழுதுவது இயல்பிலேயே அசாத்தியம் என்கிறோம். ஏனெனில், வட்டத்தன்மை சதுரத்தன்மையையும் சதுரத்தன்மை வட்டத்தன்மையையும் பரஸ்பரம் அழித்துக்கொண்டிருக்கின்றனவாகவே, அவ்வாறான ஓர் வடிவத்தை மனதினாற்கருதவுங்கூடாது. அவ்வாறான ஓர்வடிவம் சூனியமேயாம். சூனியமோ கிருத்தியம் எனப்படும் யாவற்றுக்கும் மறுதலையாய் நிற்கின்றது. ஆகவே, எவ்வெக்கிருத்தியத்தையும் செய்யும் ஆற்றலே சுரூபமாகிய சர்வவல்லமைக்கு அது ஓர்போதும் விஷயமாகாது. விஷயமாகாதபோதே அதைச்செய்யக்கூடாமை பங்கமுமாகாது.

வினா.—இன்மையினின்று உண்மையைத்தோற்றுவித்தலும் இவ்வாறு இயல்பிலேயே அசாத்தியமானதல்லவா?

விடை.—இன்மையினின்று உண்மையைத் தோற்றுவித்தலிலே பரஸ்பரம் விரோதமில்லை. ஆதலால், அது இயல்பிலேயே அசாத்தியமானதல்ல.

வினா.—அதெப்படி?

விடை.—“இன்மைதானே உலகமாக்கப்பட்டது” என்போமாயின் இதிலே பரஸ்பரம் விரோதமிருக்கும். ஒரேமுறையில் இன்மை உலகமாகவும், உலகம இன்மையாகவும் நிற்றல் என்பது சூனியமேயாகும். ஆயின்,

---

* “காரியகாரணங்கள் முதல் துணை நிமித்தங்கண்டாம்
பாரின்மண் திரிகைபண்ணு மவன்முதல் துணை நிமித்தம்
தேரின் மண் மாயையாகத் திரிகைதன் சத்தியாக
ஆரியன்குலாலனாய்நின் றாக்குவனகிலமெல்லாம்” சி. சி. 1; 18

† சைவமகத்துவம் 26-ம் பக். கிறிஸ்துமதகண்டனம் 21-ம் பக். முதலியன.

கடவுள் இன்மையினின்று உண்மையைத் தோற்றுவித்தார் எனும்போது, முன் யாதொன்றும் இல்லாதிருந்ததாகவே, பின் உலகம் உண்டாக்கப்பட்டது என்பதே கருத்து. ஆதலால், இதில் பரஸ்பரம் விரோதமில்லை. ஆதலால், கடவுள் முதற்காரணமின்றி உலகத்தை ஆக்குதல் சாத்தியமே* எனவும் இவ்வாறுசெய்யும் ஆற்றலில்லாதவர் கடவுளாகார் எனவும் அறிக.

வினா.—இனி, சிலந்திப்பூச்சி தனது சரீரத்தினின்று நூல் நூற்பதுபோல கடவுள் தம்முடைய சொந்தப் பதார்த்தத்தினின்றே உலகபொருட்களை உண்டாக்கினார் என்று வேதாந்த நூல்கள் சொல்லுகின்றன.† இது கடவுளுடைய சுபாவத்துக்குப் பொருந்துமா?

விடை.—மண்ணினின்று குடமுண்டாவதுபோல கடவுளினின்று உலகபொருட்கள் உண்டாயினவெனில், கடவுளும் உலகபொருட்களைப்போன்ற ஒரு சடப்பொருளாய் அளவுகணக்குகளுள்ள ஒரு பதார்த்தமாய்ப்போய் விடுவார். பரிபூரணவஸ்துவாகிய கடவுளுக்கு இப்படியான குறைகளைச் சொல்லுவது பாதகம்.

வினா.—மண்போன்ற சடப்பொருட்கள் கடவுளிடத்தினின்று உற்பத்தியாதல்கூடாதாயினும், மனுஷ ஆத்துமம்போன்ற சித்துப்பொருட்கள் அவரிடத்தினின்று உற்பத்தியாகியிருத்தல் கூடாதா?

விடை.—கூடாது. பகுக்கக்கூடிய பொருட்களினின்று யாதேனும் உண்டாகலாமேயன்றி, பகுக்கப்படக்கூடாத சித்துப்பொருட்களினின்று ஒன்றும் உண்டாகக்கூடாது. கடவுளோ பகுக்கப்படாத சித்துப்பொருள். ஆகையால் அவரிடத்தினின்று ஆத்துமாக்கள்தாமும் உண்டாயிருத்தல் கூடாது.

வினா.—கடவுள் திருவிளையாடலின்பொருட்டு வெவ்வேறு ஆன்மாக்களாக நிற்பர் என்பது பொருந்துமா?

விடை.—பொருந்தாது. பரிபூரணவஸ்துவாகிய கடவுளுக்கு எவ்வித விளையாட்டும் பொருந்தாதென முன்னரே காட்டினோம்.‡ கடவுள் ஆன்மாக்களாக நிற்பாராகில் மாறுகிறவராகவும் வேண்டும். மாறுகிற வஸ்து பரிபூரணவஸ்துவாகாது.

வினா.—இவ்விஷயத்திலே இந்துசமயத்தவர்கள்கூறும் தவறுகள் எவை?

விடை.—ஒன்றாகிய பரமான்மாவே பலவாகிய சீவான்மாக்களாக நிற்கிறதென்று வேதாந்தமதத்தார் கூறுகிறார்கள்.¶ இதற்குத் திருஷ்டாந்த

---

* கடவுள் முதற்காரணமின்றித் தமது சங்கற்பமொன்றினாலேயே அனைத்தையும் சிருஷ்டித்தார் என்பது இந்துசமய நூல்களுள்ளும் சிலவற்றில் ஒருவாறு கேட்கப்படுகின்றது. பின்வரும் சுலோகத்தைக் கவனிக்குக:

“ சிதாத்மைவ ஹி தேவோ (அ)ந்தஸ்திதமிச்சாவசாத் பஹி:
யோகீவ நிருபாதான மர்த்தஜாதம் ப்ரகாசயேத் ”

அதாவது: உள்ளே [தமதுசங்கற்பத்தில்?] அமைந்தபொருள் அனைத்தையும் சிதான்மாவாகிய கடவுளே யோகிபோல இச்சாவசத்தினால் உபாதானமின்றிப் புறத்தே பிரகாசிப்பிக்கின்றனர். (நீலகண்டபாடியத்துட்கண்டது. 1-2-9)

இருக்குவேதம் 10ம் மண்டலம் 129,ம் சூக்தத்துள்ளும் காண்க.

† முண்டகோபநிடதம் 1; 1.7-9 சாந்தோக்கிய உபநிடதம் 3; 14.

‡ பரிபூரணவஸ்து 9 ம் பக்.

¶ “பேசரிய பரத்தினிலாரோபமதாமூலப்
பிரகிருதிதோன்றும்தி்ற்சாத்திக மாமாயை

மும் சொல்வார்கள்: எங்கும் செறிந்திருக்கிறதாகிய பர ஆகாயமானது ஒரு குடத்தினுள்ளிருக்கும்போது குடாகாயம் என்று சொல்லப்படும்; குடத்தை உடைத்துவிட்டாலோ குடாகாயம் பராகாயத்திலே கலந்துகொள்ளும். அதுபோல, கடவுளாகிய ப்ரமான்மாதான் தாவரமிருக மானுட சரீரங்களிலே அடைபட்டு தாவரசீவன் மிருகசீவன் நரசீவன் என்று சொல்லப்படும் என்றும், தேகசம்பந்தம் முற்றாய் ஒழியும்போது இவைகளெல்லாம் ப்ரமான்மாவிலே ஒடுங்கிப்போமென்றும் சொல்லுவார்கள்.

வினா.—இது தெளிந்த யுத்திக்கு ஒக்குமா?

விடை.—பகுக்கப்படாப்பொருளாகிய கடவுளுக்கு பகுக்கப்படும் பொருட்களின் திருஷ்டாந்தத்தைக்காட்டுவதும், அதிக சூக்கும சித்துப்பொருளாகிய கடவுள் சடப்பொருட்களைப்போல துண்டுதுண்டாக்கப்படலாம் என எண்ணுவதும் தெளிந்த யுத்திக்கு ஒவ்வாது.

வினா—உள்ளபடி பிரமமாகிய பரப்பொருள் ஒன்றேயென்றும், அதுதான் அஞ்ஞானத்தினால் (அவித்தையினால்) தன்னைப் பலவாக எண்ணிக்கொள்ளுகிறதென்றும், ஆகவே உள்பொருளாகிய அப் பரப் பொருளைத் தவிர மற்று உலகம் பஞ்சபூதம் சராசரம் என்பனவெல்லாம் வெறுங்கற்பனையேயென்றும் மாயாவாதிகள் சொல்லுவது* பொருந்துமா?

விடை.—பொருந்ாது. ஞானமே சுரூபமாகிய பரப்பொருளில் அஞ்ஞானம் உண்டென்பது அக்கினியிலே குளிர் உண்டென்பதுபோலும்முழு மதிகேடான பேச்சேயொழிய வேறல்ல. எக்காலத்திலும் முற்றறிவுடையவராய் விளங்குகிற கடவுள் ஏமாந்துபோயிருக்கிறார் எனச் சொல்வோர் யாரோ அவர்களே பரிதாபத்துக்குரியவிதமாய் ஏமாந்துபோயிருக்கிறார்கள் என அறிக.

வினா.—சைவசித்தாந்த மதத்தாருடைய தவறு யாது?

விடை.—இவர்கள் ஆன்மாக்களை சம்புபக்க ஆன்மாக்கள் என்றும் அணுபக்க ஆன்மாக்கள் என்றும் இரண்டு பிரிவாக வகுத்து, இருவகையாலும் தவறுக்குள்ளாகிறார்கள்.

வினா.—அதெப்படி?

விடை.—சம்புபக்க ஆன்மாக்களாவது சிவனே ஒவ்வோர்காலத்தில் ஒவ்வோர் விசேஷ தொழில்செய்து முடிக்கும்பொருட்டு தம்மிடத்தினின்றுந் தோற்றுவித்த ஆன்மாக்கள் என்பார்கள். இவ்விதமாக சுப்பிரமணியர் (கந்தசுவாமி) கணேசர் (பிள்ளையார்) வீரபத்திரர் ஆகியோர் சிவனிடத்தினின்றுந் தோன்றியவர்களாமெனக்கொண்டு சிவனுக்குச்செலுத்தும் தேவ ஆராதனையையே இவர்களுக்கும் செலுத்துகிறார்கள்.

---

"சனிதிற்றேன் அமிராசதமவித்தை சீவ
னிதிற்றேன்றுந் தாம்சுத்தா வரணம்விட்சேபமதாஞ்
சூசகவிட்சேபமதிற் சூக்கும பூதமதாஞ்
சூக்கவுடலிருளணத்தாற் றேன்றிடுந்தாமதத்தின்
மாகில் பஞ்சீகரணமதாயைம்பூதவடிவா
யதிற்றால சடந்தோன்று மனைதது மிவ்வாறடங்கும்." உபநிடதப்பாட்டு.

* "ச்லோகார்த்தேந ப்ரவக்ஷ்யாமி யதுக்தம் க்ரந்தகோடிபி: ப்ரஹ்ம ஸத்யம் ஜகந் மித்யா ஜீவோ ப்ரஹ்மைவ நாபர" (கோடிகிரந்தங்களில் விபரிக்கப்பட்டிருக்கின்றதை ஓர்பாதிச் சுலோகத்திலே சொல்லுவேன்! பிரமமே உள்ள பொருள், உலகமெல்லாம் மித்தை, சீவர்களெல்லாம் பிரமமேயன்றி வேறல்ல. (இது மாயாவாதிகளின் ஓர் பிரபலவாக்கியம்.)

வினா.—இதிலுள்ள தவறு என்னை?

விடை.—சிவன் பரிபூரணவஸ்துவேயாகில் பகுக்கப்படாத வஸ்துவாயிருப்பர். பகுக்கப்படாத அவ்வஸ்துவிலிருந்து சுப்பிரமணியர் ஆதியோர் இடைக்காலத்தே தோன்றுதல் கூடாது. ஆகையால், ஒன்றில் சிவன் கடவுளல்லர் எனச் சொல்லுதல் வேண்டும்; அல்லது சுப்பிரமணியர் ஆதியோர் அவரிடத்தினின்று தோன்றவேயில்லை எனச் சொல்லுதல் வேண்டும்.

வினா.—சுப்பிரமணியர் ஆதியோர் சிவனிடத்தினின்று தோன்றியவர்களல்லவென்றும் சிவனால் வேலைகொள்ளப்பட்ட புண்ணிய ஆன்மாக்களேயென்றும் சிலர் சொல்லுகிறார்களே.* அது ஒக்குமா?

விடை.—அதுவும் ஒவ்வாது. கடவுள் சிருட்டித்தல் ஆகிய தொழில்களைத் தாமாகத் தமது சங்கற்பம் ஒன்றினாலேயே செய்வர். சிருட்டித்தல் சர்வ வல்லமையோடுகூடிய தொழிலாதலால், அதனை அநந்த சக்தியுள்ளவராகிய அவர் ஒருவரே செய்யவல்லவருமாம். ஆதலால் அவருக்கு இத்தொழில்களிலே உதவியாட்கள் இருத்தல்கூடாது. அன்றியும் சுப்பிரமணியர் ஆதியோர் புண்ணிய ஆன்மாக்கள்மாத்திரமேயெனில் சைவர் அவர்களுக்குத் தேவாராதனை செலுத்துதல் மகா அக்கிரமமாகும்.

வினா.—உள்ளபடி சுப்பிரமணியர் ஆதியோர் யார் ஆதல் வேண்டும்?

விடை.—சுப்பிரமணியர் ஆதியிலே ஓர் வீரசூரசேனாபதிபோலும்.† இவரைப் பிற்காலம் தெய்வமாக்கி இவரது அக்கினியைப்போலும் வலிமையுள்ள வீரசூரத்தைநோக்கி, இவர், அக்கினியே ரூபமாகிய சிவனுடைய நெற்றிக்கண்ணினின்று அக்கினிப்பொறியாகத் தோன்றியவரென்றும் புகழ்ந்திருப்பார்கள். இவரது வெற்றி விஜயங்களைக் குறிப்புப்பொருள் புனைந்து அகப்புறப்பொருட்துறைகளைத் தழுவிக் கற்பனா அலங்காரங்களோடு பாடியதே கந்தபுராணம் என்பது ஆன்றோர் கருத்து.

வினா.—சுப்பிரமணியருக்குச் சிருட்டித்தொழில் சொல்லப்பட்டது எப்படி?

விடை.—சைவர் திரிமூர்த்திசேனுட் பிரமாவையும் விட்டுணுவையும் கீழாக இகழ்ந்து இவர்களுக்குப் பிற்பட்டவராகிய சிவனையே பரமபதியாகக்கொள்ளத் தொடங்கிய காலத்திலே, பிரமாவுக்குப்பதிலாகச் சுப்பிரமணியரையும், விட்டுணுவுக்குப் பதிலாகக் கணேசரையும் வைத்துக்கொண்டார்கள் எனத் தோன்றுகின்றது. சுப்பிரமணியர் பிரமாவைக் குட்டிச் சிறையிலிட்டுச் சிருட்டித்தொழிலை நடத்தியிருந்தார் ‡ என்ற புராணக் கதை இதையே குறிக்கின்றதாகலாம்.

வினா.—கணேசர் விட்டுணுவுக்குப் பதிலானது எப்படி?

விடை.—தண்ணீரானது உலகத்தைச்சூழ்ந்து அடக்கியிருக்கின்றபான்

---

* சைவமகத்துவம் 27 ம் பக்.

† கந்தர் என்பவர், இமாலயத்தினின்று முதற்புகுந்த ஆரியசேனையொன்றின் தலைவராமெனவும், இக்கந்தர் கதிர்காமத்திலிருந்த வேடர்களின் தலைவன் ஒருவனுடைய மகளை மணமுடித்தார் எனவும், வள்ளி என்னும் அம்மகளின் நாமம் இந்நாளிலும் வேடருள் அதிகமாய் வழங்குகின்றமையும், மெஸ். பொ. அருணாசலந்துரை (Census Report Vol. I. p. 77.) சொல்லியதையும் கவனிக்குக

‡ கந்தபுராணம் அயனைச் சிறைபுரிபடலம் காண்க. முற்காலம் பிரமாவே நால்வேதங்களுக்கும் ஆக்கியோனாகவும் கொள்ளப்பட்டிருந்தார். சைவர்

மையாய் தண்ணீர் எனும் பூதியமேயாகிய * விட்டுணுவும் சகல சராசரங்களையும் பிரளயகாலத்தில் தமக்குள் அடக்கி மறுபடி தோற்றுவிப்பார் என்றது விட்டுணுவைப்பற்றிய கொள்கை இந்த இலட்சணங்களையே சைவர் கணேசருக்குக்கொடுத்து சராசரங்கள் அனைத்தையும் அடக்குகின்ற பாவனையாகத் தொந்தியயிற்றையும், சகலத்துக்கும் உற்பத்திதானம் என்று சொல்லப்படுகிற ஓங்கார ரூபமாகிய யானைத்தலையையும் அவருக்குக் கற்பித்தார்கள் எனத் தோன்றுகின்றது.

விஞ—வீரபத்திரர் ஆகிறவர் யார்?

விடை.—இவர், தென்னாட்டுத் தமிழ்ச்சனங்கள் தொழுதுகொண்டுவந்த ஒரு தெய்வமென்றும், வடநாட்டுச் சிவவழிபாட்டுக்காரர் பிற்காலத்தில் இத்தெய்வத்தைத் தங்கள் சிவனுடைய ரூபங்களுள் ஒன்றாக அமைத்துக் கொண்டார்கள் என்றும் ஆன்றோர் அநுமானிக்கிறார்கள்.†

விஞ.—இனி, அணுபக்க ஆன்மாக்கள் என்ற வகுப்பைப்பற்றிச் சித்தாந்திகள் கூறும் தவறு யாது?

விடை.—அணுபக்க ஆன்மாக்கள் என்றது மனுஷருடைய ஆன்மாக்கள் முதலியவைகளை. இவ்வான்மாக்களும் அநாதியாயிருக்கின்ற வஸ்துக்கள் என்கிறார்கள் அநாதியாயுள்ளவஸ்து எது, அது பரிபூரண வஸ்துவாகிய கடவுளேயாதல் வேண்டும் என முன்னர் கூறியதைக்கண்டுகொள்க. ஆதலால் ஆன்மாக்கள் அநாதியாய் உள்ளவைகள் என்பது தவறேயாம்.

விஞ.—உலகத்தில் உள்ள சடப்பொருட்களைப்போல் சித்துப்பொருட்களும் ஆதியுடையவைகளேயெனில், இவைகள் அனைத்தையும் கடவுள் உண்டாக்கிய மேரை என்னை?

விடை.—கடவுள் உண்டாகக்கடவது என்று சங்கற்பிக்கவே சகலமும் அவர் நியமித்தமுறைப்படி உண்டாயின.‡

---

இந்த முதன்மையையும் பிரமாவிடத்திலிருந்து பறித்தெடுத்துவிட்டவகை கவனிக்கத்தக்கது. வேதங்களுக்கு மூலம் "ஓம்" எனும் பிரணவமந்திரமாம் என்றது இந்துசமயத்தார்கொள்கை. ஆகவே வேதங்களைத்தந்தவரெனக் கொள்ளப்பட்ட பிரமா பிரணவத்தின்பொருளை அறியாமற்போனார் என்றும் சுப்பிரமணியரே அதை அறிந்து சிவனுக்குததானும் போதித்தார் என்றும் கந்தபுராணத்தில் ஏற்படுத்திவிட்டார்கள் விடவே, சுப்பிரமணியர் "மறையவன்" "குரவன்" என முற்காலம் போற்றப்பட்ட பிரமாவுக்கு மேற்பட்ட குருமாத்திரமன்று "சிவகுருவு"மாக உயர்ந்துவிட்டார்.

* "பரிபூரணவஸ்து" 9 ம் பக்கங்காண்க.

† "பரத கண்டபுராதனம்" 127 ம் பக்கங்காண்க.
"சைவராட்சேப சமாதானம்" 22 ம் பக்கத்திலுங்காண்க.

‡ சைவசித்தாந்தத்திலே இதற்கு ஒத்த ஒருகொள்கைகாணப்படுகின்றது. ஓம் எனும் தனிமொழியே சுத்தமாயை எனவும் குடிலை எனவும் சொல்லப்படுவதென்றும், அந்த ஓம் எனும் தனிமொழியாலேயே எல்லா உலகங்களும் எல்லாசசுருதிகளும் தோன்றி நின்றொடுங்கும் என்றும் சைவநூல்கள் கூறுகின்றன. [கந்தபுராண நவநீதம் 9-ம் 12-ம் பக்கங்காண்க.] பின்வரும் பாடலையும் கவனிக்குக.

"ஓமென்னு மோங்காரத்துள்ளேயொருமொழி
ஓமென்னு மோங்காரத்துள்ளேயுளபேதம்
ஓமென்னு மோங்காரத்துள்ளேயுருவரும்
ஓமென்னு மோங்காரமொண்முத்திசத்தியே."

வினு.—இன்மையினின்று ஒன்றும் உண்டாகாது என ஒரு கோட்பாடு உண்டே. அது தவறு?

விடை.—தவறல்ல. இன்மையினின்று ஒன்றும் தானுக உண்டாகாது என்பது மெய்தான். இன்மையானது தானே ஒன்றுமல்ல; ஆகையால் யாதொன்றைத் தோற்றுவிக்கக்கூடியதுமல்ல. ஆயின், எல்லாம் வல்லவரான கடவுள் முன் ஒன்றுமில்லாதிருக்க பின் ஒரு பொருளை உண்டாக்கக்கூடியவரே என்பதிற் சந்தேகமில்லை *

வினு.—சத்தியவேதத்திலே கடவுள் சகலத்தையும் ஒன்றுமில்லாமையிலிருந்து உண்டாக்கினுர் என்று சொல்லப்படுகிறது. (2-ம் மக்கபேயர் 7; 28) அப்படியாயின் இன்மையெனும் உபாதானத்தைக்கொண்டுதான் உலகத்தை உண்டாக்கினுர் என்றுகொள்ளல் வேண்டுமா?

விடை.—இன்மை என்பது ஒன்றுமல்ல; ஆதலால் அது உபாதானமாதல் ஒருபோதும் கூடாது. முன் ஒன்றுமில்லாதிருக்க, கடவுள் சகல பொருட்களையும் தமது திருச்சங்கற்பமொன்றினுல் உண்டாக்கினுர் என்பதே கருத்து. இக்கருத்தை அமைத்தே "அவர்சொல்ல உண்டாயின, அவர் கற்பிக்க சிருட்டிக்கப்பட்டன" என்று சங்கீத ஆகமத்திலே (32; 9) சொல்லப்பட்டது என அறிக.

வினு.—உலகம் சிருட்டிக்கப்பட்டு இப்போது எவ்வளவு காலமாகின்றது?

விடை.—இதற்கு நிச்சயமான விடை கண்டுபிடிப்பது எளிதல்ல. அது சிருட்டிக்கப்பட்டு எண்ணில்லா யுகங்கள் சென்றன என வானசாஸ்திரிகளும் பூவகசாஸ்திரிகளும் பலகணித நுட்பங்களைக்கொண்டு உத்தேசிப்பார்கள். மனுஷன் சிருட்டிக்கப்பட்டது மிகவும் பிற்பட்டேயாயினும், அக்கால எல்லையைப்பற்றியும் நிச்சயமில்லை.

வினு.—மனுஷ சிருட்டி கி. மு. ஆருயிரம் வருஷங்களின் முன்னேயே என விவிலியநூல் கூறுகின்றதா?

விடை.—விவிலியநூல் இதுபோன்ற ஓர் வருஷக் கணக்கைக்கூறவில்லை. சில முற்காலத்துச் சாஸ்திரிகள் ஆதாம் முதலிய அதிபிதாக்களின் ஆயுசுக்களைக் கூட்டிக் கணக்கிட்டு அவ்வாறுசொல்லிப்போயினர் என்பது மெய்யே. ஆயினும் அதிபிதாக்கள் எல்லாரும் இடையீடின்றிக் குறிக்கப்பட்டிருக்கிறுர்கள் என்று நிச்சயமாய்ச் சொல்லக்கூடாமையாலும், விவிலியநூலிற் சொல்லிய வருஷக்கணக்குகள் வெவ்வேறு பிரதிகளில் வெவ்வேறுவிதமாய்க் குறிக்கப்பட்டிருக்கின்றமையாலும், இக்கணக்கை நாம் ஒப்புதல்கூடாது. மனுஷசிருட்டியின் காலம், வேறு சாஸ்திரங்களால் ஊகித்தறியப்படவேண்டியதாய்க்கிடக்கின்றது.

## II. சிருட்டியின்நிமித்தம்.

வினு. கடவுள் உலகத்தைச சிருட்டித்தருளிய நோக்கம் யாது?

விடை.—தமது நன்மைத்தனம் விளங்குதற்காகவே உலகத்தைச் சிருட்டித்தருளினுர்.†

வினு.—அப்படியாயின் கடவுளினது நன்மைத்தனம் முன்பு விளக்க

---

* முன் 4-ம் பக்கத்திற்கூறியவைகளையுங்காண்க.

† இசையாஸ் 43;— 7. Summa Theol. 1a., q. 44 a 4.

மின்றியிருந்ததா? முன்பு விளக்கமின்றியிருந்து பின்பு விளங்குகின்றது என்போமாயின் பரிபூரணவஸ்துவாகியஅவரிடத்தில் ஒருகாலத்தில் குறைவும் இருந்ததெனப்படுவதாகுமே?

விடை—சுயஞ்சோதியாகிய கடவுளினது நன்மைத்தனம் நித்தியமாகவே நிலைபெற்றதாயிருக்கின்றது. அது தன்மட்டில் கூடுவதுமல்ல, குறைவதுமல்ல; ஆயினும் உண்டாக்கப்படும் சிருட்டிகளுள் புத்தியுள்ளவைகளால் அந்த நன்மைத்தனம் அறிந்து துதிக்கப்படும்போது அது அச்சிருட்டிகள்மட்டில் விளக்கம் பெறுவதாகும். இவ்வகையான புறத்துவிளக்கமே கடவுள் உலகத்தைச் சிருட்டித்த நிமித்தம் என அறிக.

வி.— புத்தியுள்ள சிருட்டிகள் கடவுளுடைய நன்மைத்தனத்தை அறிவது எப்படி?

விடை. ஒன்றுமில்லாதிருக்கையில் கடவுள் அநந்த காருண்ணியத்தினால் தம்முடைய இருக்கை, ஞானம், ஆநந்தம் எனும் மூன்று நன்மைகளிலேயும் பங்குபற்றக்கூடிய சிருட்டிகளாகிய தங்களை உருவாக்கி, தங்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் வேண்டியவைகளையெல்லாம் அளித்திருக்கிறதைக்கண்டு அவருடைய நன்மைத்தனத்தை அறிந்து கொள்ளலாம்.

வி— புத்தியில்லாதவைகளாகிய சடப்பொருட்களாலும், தாவரமிருகங்களாலும் கடவுளினது நன்மைத்தனம் விளங்குவதெப்படி?

விடை—கடவுள் இப்பொருட்களை ஒன்றுக்கொன்று உபயோகமாகவும் சகலமும் புத்தியுள்ள வஸ்துவாகிய மனுஷனுக்கு ஒவ்வோர்வகையில் உபயோகமாகவும் ஏற்படுத்தியிருக்கின்றமையால், மனுஷன்மீது அவர் வைத்தருளிய அன்பு வெளியாகி அவரது நன்மைத்தனம் விளங்கும்.

வி.—கடவுள் உலகத்தைச் சிருட்டிக்கத் திருவுளமானபோது, தமது நன்மைத்தனம் விளங்குதலையன்றி வேறொருநோக்கத்தைக்கொண்டிருத்தல் கூடாதா?

விடை - தானேயிருக்கின்ற ஏக வஸ்துவாகிய அவருடைய எக்கிருத்தியத்துக்கும் தாமே அந்திம கதியாதல்வேண்டும். ஆதலால், அவர் சிருட்டிக்கத்திருவுளமானபோது "தமக்காகவே அனைத்தையும் சிருட்டித்தார்." (நீதிமொழி பாகமம 16, 4.) அவர் தாம் செய்தருளுகின்ற எவ்வெக் கிருத்தியத்தாலும் தமது நன்மைத்தனத்தை விளங்கச்செய்கின்றார்.

வி.—கடவுள் சிருட்டிப்பினால் தமது நன்மைத்தனத்தை விளங்கச் செய்யுமிடத்து உண்டாகும் பயன் யாது?

விடை—சிருட்டிகள் அவருடைய அளவற்ற நன்மைகளிலே பங்குபற்றி மகிழுதலே பயனும்.

வி.—கடவுள் நம்மிடம் வற்றாத ஊற்றணிபோல விளங்கும் நன்மைகளைச் சிருட்டிகளுக்கு அளித்து அதனால் தமது நன்மைத்தனத்தைப் பிரகாசிக்கச் செய்கின்றமைக்குக் காரணம் யாது?

விடை.—அவர் தம்மையும், தமக்குட் தமது சாயலாகக் காண்கின்ற அனைத்தையும் நேசிக்கின்றவராய் இருத்தலே காரணம். இதனாலேதான் "தேவன் அன்பாயிருக்கிறார்" என வேதமும் முழங்குகின்றது. (1-ம் அரு. 4. 8.)

வி—கடவுள் தமது சாயலாயுள்ள சிருட்டிகளைச் சுபாவமாகவே

நேசித்துத் தமது நன்மைகளை அவைகளுக்கு அளிக்கின்றவராயிருத்தற்கு உவமை காட்டுக.

விடை.—நீர்நிறைந்த மேகமானது சுபாவமாகவே அந்நீரைப் பூமியின் மேற் பொழிவதுபோலவும், சலம்பெருகிய சமுத்திரமானது ஆறுகளில் வழிவதுபோலவும், பால்சுரந்து நிறைந்த பயோதரமுள்ள தாயானவள் அவ் அமுதத்தைத் தன்னிடத்தில் அடக்கமாட்டாமல் பிள்ளைக்கு அதனை ஊட்டத் தேடுவதுபோலவும், சகல நன்மையும் நிறைந்து பெருகி வழியும் சாகரமாகிய கடவுள் தம்முடைய நன்மைகளால் சிருட்டிகளையும் பூரிப்பிக்கத் திருவுளமானார் எனக் காண்க.

வினா.— உலகசிருட்டிப்பினால் கடவுளுக்கு இன்பம் அதிகரித்தல் கூடுமா?

விடை.—உலகசிருட்டிப்பினால் சிருட்டிகள் கடவுளுடைய நன்மைகளிலே பங்குபற்றி இன்புறுவதேயன்றி, அளவிறந்ததாகிய கடவுளுடைய நித்தியாநந்தம் அதிகமாகாது.* ஆதலால் தமது நன்மைத்தனம் ஒன்றினால் எம்மை உருவாக்கியருளிய இறைவன்மீது என்றும் அன்பு பாராட்டக்கடவோம்.

## III. அசீவசிருட்டி.

வினா.—உலகத்தில் உள்ள சகல பொருட்களும் எத்தனைவகையில் அடங்கும்?

விடை.—சீவனற்ற பொருட்கள் நாலுவகையும் சீவனுள்ளவைகள் நாலுவகையுமென எட்டில் அடங்கும்.

வினா.—சீவனற்ற பொருட்கள் எவை?

விடை.—மண், நீர், நெருப்பு, காற்று என இந்நான்குமாம்.

வினா.—இந்துநூல்கள் எத்தனைவகை அசீவபொருட்களை அங்கீகரிக்கின்றன?

விடை.—இந்துநூல்கள் பெரும்பான்மை ஆகாயத்தையுங்கூட்டி ஐந்து பொருட்களாக்கி அவைகளைத் தன்மாத்திரைகளென அழைக்கின்றன. தன் மாத்திரைகள் ஐந்தும் பஞ்சபுலன்களின் கணக்குக்கொப்ப வைக்கப் பட்டவைகளாம், ஐரோப்பிய சாஸ்திரத்தின்படியேயும் "ஈதர்" எனும் பொருள் கற்பித்துச்சொல்லப்படுகின்றதேயாயினும் அதன் தன்மை அறியப்படவில்லை.

வினா.—இந்துக்கள் கூறும் பஞ்சபூதியங்களின் நிலையென்னை?

விடை.—பிருதுவி (மண்) அதிக பாரமுள்ளதாதலால் சகலத்துக்குங் கீழேயும், அதன்மேல் அப்புவும் (தண்ணீர்), அதன்மேல் தேயுவும் (நெருப்பு), அதன்மேல் வாயுவும் (காற்று), அதன்மேல் ஆகாயமும் நிற்கும் என்பார்கள். இந்தமுறைப்படியே பிரமா, விட்டுணு, உருத்திரன், மகேசுரன் சதாசிவன் எனும் தங்கள் தெய்வங்களையும் வைப்பார்கள்.†

---

* மாணிக்கவாசகருடைய பின்வரும் கூற்றும் இவ்விடத்திலே கவனிக்கத் தக்கது:

" தந்ததுன்றனைக் கொண்டதென்றனைச் சங்கராவார்கொலோ சதுரர்
அந்தமொன்றில்லா வானந்தம்பெற்றேனியாதுநீபெற்றதொன்றென்பால்"
கோயிற்றிருப்பதிகம் 10

† "பரிபூரணவஸ்து" 10-ம் பக்கம்காண்க.

வினு.—பூமி தங்கியிருக்கின்றநிலை யாது?

விடை.—அது மையக்கவர்ச்சியினுற் சூரியமண்டலத்தைவிடாது இழுக்கப்பட்டபடியே சூரியனைச் சுற்றிவந்துகொண்டிருக்கும். சந்திரன் பூமியினுற் கவரப்பட்டபடியே அதனைச் சுற்றிக்கொண்டிருக்கும்.

வினு.—அப்படியாயின் பூமியானது ஆதிசேடனுலும் யானை ஆமை முதலிய மிருகங்களாலும் தாங்கப்பட்டிருக்கின்றதென இந்துநூல்கள் கூறுகின்றதென்னை?

விடை.—இக்கூற்று வானசாஸ்திர அறிவு பெருக்கமின்றியிருந்த ஒரு காலத்தில் நம் முன்னேரது அறியாமையினுல் எழுந்ததொன்றேயாம். பூமி யாதாயினும் ஒரு மிருகத்தின்மீது பொறுத்திருக்குமாயின், அம்மிருகத்தைத் தாங்குதற்கு வேறோர் ஆதாரமும், அப்பால் அவ்வாதாரத்துக்கு மேலுமோர் ஆதாரமும் வேண்டியதாகும். ஆதலால், இது பொருந்தாது. பூமி, சந்திரன், சூரியன், நட்சத்திரங்கள் ஆகிய சகல கோளங்களும் ஒன்றையொன்று கவர்ந்துகொண்டு அந்தரத்திலே நிலைபெறும்படியாக எல்லாம் வல்ல இறைவனுல் ஆக்கப்பட்டிருக்கின்றனவென்பதே உண்மை.

வினு.—பூமி எவ்வடிவமானது?

விடை.— சற்றேறக்குறைய உண்டைவடிவமானது. நமதுதேசத்துப் புராணகாவியங்களோ அது தட்டையானதென்றும், சக்கரவாளகிரியினுல் சூழப்பட்டதென்றும், ஒன்றைவிட ஒன்று பெரியனவும் வட்டவடிவமானவையுமாயுள்ள ஏழு சமுத்திரங்களினுல் சூழப்பட்ட எழு மோதிரம் போன்ற கண்டங்களாயுள்ளதென்றும் அக்காலத்தாரது எண்ணங்களுக்கொப்பச் சொல்லிப்போயினர்.

வினு.—மலைகள் பறக்கிறவைகளென்பது மெய்தானு?

விடை.—மலைகள் பறக்கின்றன என்பது புராணங்களிலே காணப்படுகின்ற கற்பனையேயன்றி உண்மையன்று.

வினு.—மகாமேரு என ஒரு மலை உண்டா?

விடை.—அப்படிப்பட்ட ஓர் மலை இல்லை. பூர்வ இந்துக்கள் பூமியின் மேகலாரேகையை, அதாவது வடதென் துருவங்களுக்குமத்தியிற் பூமியின் வண்டியெனத்தக்கதாக உயர்ந்திருக்கும் பாகத்தையே மகாமேரு என அழைத்தனர் எனவும், இடைக்காலத்துப் புலவர்கள் அதை ஓர்மலையாகப் பாவித்துப் பாடிவிட்டார்களெனவும் எண்ண இடமிருக்கின்றது.

வினு.—அருணசைலமலை சிவனுடைய ஒருவடிவம் என்னப்பட்டதெப்படி?

விடை.—லிங்கவணக்கக்காரர் அம்மலை ஓர் லிங்கம்போல நெடுத்து உயர்ந்திருக்கின்றமையைக்கண்டு அதனைச்சிவலிங்கமெனவணங்கத் தலைப்பட்டனாபோலும். தென்னுட்டார் ஓர்காலம் சிலைகளையும் கும்பிட்டுவந்தார்களென இதனுற் தோன்றுகின்றது.

வினு.—பூமிநடுக்கத்துக்குக் காரணம் யாது?

விடை.—பூமிக்குள் இருக்கின்ற உருக்கிய உலோகத்தைப்போன்ற அக்கினி வெளிப்படும்வேளைகளில் உண்டாகும் வெடிப்பு தகர்வுமுதலியவைகளினுற் பூமியின் ஒவ்வோர்பாகத்தில் நிகழ்கின்ற அதிர்ச்சியே பூமி

நடுக்கமாம். பூமியைத் தாங்குகிற ஆதிசேடன் எனும் பாம்பு அசையும் போது பூமி நடுங்குமென நம் தேசத்தார் நினைப்பது அறியாமை.

வின.—மேகம், மழை, ஆலாங்கட்டி, பனி, எனும் இவைகளுக்குக் காரணம் என்னை?

விடை.—சமுத்திரம்முதலிய நீர் நிலையங்களினின்று சூரிய வெப்பத்தினால் கிரகிக்கப்பட்டு எழும்புகின்ற நீராவியே இவைகளுக்குக் காரணம். நீராவி ஆகாயத்தில் அதிக சூக்குமமானநிலையில் நிற்கும்போது வெண் மேகங்களாகத்தோன்றும். அந்நீராவி சற்றே இறுகிநிற்கும்போது சிறு நீர்த்திவலைகள்பொருந்திய கார்மேகமாகும். இக்கார்மேகம் அதிக குளிரினால் முற்றும் நீர்த்தன்மைபொருந்தி மழையாகப் பூமியின்மேல் இறங்கும். கனத்த குளிரினால் திவலைகள் பலசேர்ந்து இறுகிவிழும்போது ஆலாங்கட்டியாகும். நீராவியே பூமிக்குச் சமீபமாயிருக்கையில் குளிர்ந்து போய்ச் சிறு நீர்த்திவலைகளாகி புல் தளிர் ஆதியவற்றிற் படியும்போது பனி என்றுசொல்லப்படும்.

வின.—மின்னல் முழக்கங்களுக்குக் காரணமென்னை?

விடை.—கார்மேகங்களிற் செறிந்துள்ள மின்சாரம் ஒன்றினின்றொன்றைப்பற்றித் தாவும்போது இருமேகங்களுக்கும் இடைநின்ற வாயுவங்களில் மூளுகின்ற நெருப்பே மின்னலாய்ப் பளிச்சிடும்; வாயுவில் தீப்பற்றும்போது படீரென வெடித்தலே முழக்கமாம்.

வின.—மழையைப் பெய்விக்க வருணபகவான் என்றாவது இந்திரன் என்றாவது ஒரு தெய்வம் உண்டா?

விடை.—கடவுளால் இயற்கையிலே அமைக்கப்பட்டுள்ள சுபாவகாரணங்களினால் மழைவருவிக்குமேயன்றி, யாதொரு தெய்வத்தினாலல்ல. மேகங்களை விருத்திராசுரன் சிறைவைக்கின்றான் எனவும், இந்திரன் தன் வச்சிராயுதத்தினால் அவனைவென்று மழையை வருவிக்கின்றான் எனவும் சொல்லப்பட்டது புராண கற்பனையே என்க. ஆதலால், இந்திரன் என ஒருதெய்வம் உண்டென எண்ணி அவனுக்குப் பொங்கல்செய்து அவனை ஆராதிப்பது விக்கிரக ஆராதனையேயாம்.

வின.—இந்திரவில்லாவது யாது?

விடை.—அது சூரிய கிரணங்கள் கார்மேகங்கள்மீதே சரிவாய் விழும் போது அக்கிரணங்களிலடங்கிய நிறங்கள் பிரிவுபட்டுத் தோன்றும் தோற்றமேயாம். இந்திரவில் என்பதற்கு வானவில் என்பது கருத்து (இந்திரம்=வானம்).

வின.—ஆகாயகங்கை என ஒன்றுண்டென்றும், அது விட்டுணுவின் காற்பெருவிரலினின்று பாய்கின்றதென்றும், அதன்பிரவாகத்தைச் சிவன் தமதுசடையில் தாங்கிக்கொண்டாரென்றும் புராணங்களிற் சொல்லப்படுகின்றது மெய்தானா?

விடை.—புராணகாரர் அறியாமையினாலோ அல்லது அறிந்தும் உவமையாகவோ அப்படிக் கற்பித்துப் பாடிவிட்டார்கள். உண்மையைப் பரிசோதிக்கும்போது ஆகாயகங்கை மழையேயொழிய வேறல்ல. விட்டுணு என்பது தண்ணீரெனும் பூதியமேயாதலால், மழையானது விட்டுணுவின் காற்பெருவிரலினின்று பாய்கின்றது என்றார்கள். சிவன் என்பது நெருப்பு எனும் பூதியமேயாதலாலும் நெருப்பு மின்னலிலே தான் அதிக விளக்கமாய்க் காணப்படுமாதலாலும், மின்னல் மழையைக்

கொண்டுவரும் என்ற உண்மையைத்தான் சிவன் கங்கையைச் சடையிற் சுமந்துகொண்டிருப்பார் எனப் பாடிவிட்டார்கள் எனத் தோன்றுகின்றது. "மின்னுக்கெல்லாம் பின்னுக்குமழை" எனும் பழமொழியையுங் காண்க. இப்படிப் புராணங்கள் சொல்லுகிறபடியேயும் சிவனும் விட்டுணுவும் நெருப்பும் தண்ணீருமே* ஆதலால், இவர்களைக் கடவுளென்று சொல்லவும் வழிபடவும் கூடாதெனை அறிக.

வினு.—கிரகங்களுக்கும் நட்சத்திரங்களுக்கும் உயிர் உண்டா?

விடை.—அவைகள் பூமியைப்போலும் லோகவகைகளாலான வெறும் சடப்பொருட்கள்; அவைகளுக்கு உயிரில்லை. அருந்ததி துருவன் ஆதியோர் நட்சத்திரங்களாகிப்போய் இருக்கிறார்களெனக்கூறும் புராணக் கூற்றுக்கள் பொய்யே என்க.

வினு.—கிரகங்களால் மனுஷருக்கு நன்மை தீமைகள் வருதல் கூடுமா?

விடை.—அவ்வக் கிரகநிலையினால் சீதளம் உட்டணம்முதலிய சுபாவத்துக்கடுத்த நன்மைதீமைகள் உண்டாகக்கூடுமேயாயினும் மனுஷனுடைய சுயாதீனமனதைப்பொறுத்த காரியங்களொன்றும் அவைகளால் நடத்தப்படாது.

வினு.—கிரகநிலைகளைக்கணித்து ஒருவனுக்கு இன்ன இன்னகாலத்தில் இன்ன இன்ன நன்மை தீமைகள் உண்டாகும் எனக்கூறும் சோதிட சாஸ்திரத்திலே யாதும் உண்மை உண்டா?

விடை.—முன்சொல்லியபடி சீதளம் உட்டணம் முதலிய சுபாவநன்மைகளைப்பொறுத்த காரியங்களை சோதிடசாஸ்திரத்தினால் அறிதல் கூடுமன்றி அவனவனுடைய தன்னிஷ்டமான நடக்கையைப்பற்றி அச்சாஸ்திரத்தால் அறிதல் கூடாது. மழை, மழையின்மை, கிரகணம், சரீரசுகம்முதலியவைகளே சோதிடசாஸ்திரத்துக்குரிய முக்கிய விஷயங்களாம். ஆதலால், ஒருவனுக்குப் பிற்காலம் சம்பவிக்கப்போகின்ற சகலத்தையும் கணித்துச்சொல்லுகிறோம் எனக்கூறுகின்ற சோதிடர்கள் தாங்களே மயங்கி மோசமபோகிறார்கள்; அல்லது பிறரைமயக்கி மோசஞ்செய்கிறார்களென அறிக.

வினு.—சந்திரசூரிய கிரகணங்கள் உண்டாவது எப்படி?

விடை.—சந்திரன் மாசத்துக்கு ஒருமுறை பூமியைச்சுற்றியும், பூமிதன்னைச சுற்றுகின்றதாகிய சந்திரனோடுகூட வருஷத்துக்கு ஒருமுறை சூரியனைச்சுற்றியும் வருகின்றன. இங்ஙனம் சுற்றிவருங்காலையில், சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையில் பூமி குறுக்கிடுமாயின், பூமியின் நிழல் சந்திரனில்விழுந்து சந்திரகிரகணமுண்டாகும். சூரியனுக்கும் பூமிக்கும் இடையில் சந்திரன்குறுக்கிடுமாயின் சந்திரனின்நிழல் பூமியில்விழுந்து சூரியகிரகணம் உண்டாகும். இதுவே சந்திர சூரிய கிரகணங்களுக்குக் கார

* இதனைப் பரிபூரணவஸ்து 9-ம் பக்கத்தில காண்க. சிவன் அக்கினியே என்பதை "சோதிசொரூபன்" "சுடலையாடி" "அழலாடி" "அழலேந்தி" என அவருக்கிருக்கும் நாமங்களாலும், கார்கபத்தியன்முதலிய அக்கினிகள் ஐந்தும் அவருடைய அநுசரர்கள் எனச சொலலப்பட்டிருப்பதாலும், அக்கினிப் பிழம்பாய்நின்று தமது முதன்மையை ஸ்தாபித்தார் என இருப்பதாலும் அறியலாம். சிவன் அக்கினி என்பதைக் காட்டுதற்கே அக்கினி கடைந்து எடுக்கும் துளைப்பலகையும் தடியும் எனும் இரண்டும் சிவனுக்கு விசேஷ அடையாளமாக வழங்கப்பட்டனவென்றும், அத்திக்கடை கோல்கள் இரண்டினும் வடிவமே லிங்கம் எனவந்தது என்றும் மேதாவிகள் கூறுவதையும் கவனிக்குக.

ணம். அன்றி, கரும்பாம்பு செம்பாம்பு சந்திரசூரியர்களை விழுங்கிக் கக்குதல் என ஒன்றில்லை எனவும், கிரகணகாலங்களிலே மனுஷருக்குப் புண்ணியமேனும் பாவமேனும் விளைவதில்லை எனவும் அறிக.

## IV. சீவசிருட்டி

வினா.—இனி, சீவனுள்ளபொருட்கள் யாவை?

விடை.—தாவரம், மிருகம், மனுஷன், அரூபி எனும் நான்குவகையும் சீவனுள்ள பொருட்களாம்.

வினா.—சீவனுள்ள இப்பொருட்கள் எல்லாம் தம்முட் சமானமானவைகளா? வேற்றுமையானவைகளா?

விடை.—தம்முள் மிகவும் வேற்றுமையானவைகள்.

வினா.—அந்த வேற்றுமை என்னை?

விடை.—தாவரத்துக்கு வளர்ச்சிவிருத்தி மாத்திரம் உண்டு. மிருகத்துக்கு வளர்ச்சியோடு பஞ்சேந்திரிய விருத்தியும் உண்டு. மனுஷனுக்கு வளர்ச்சிவிருத்தி பஞ்சேந்திரியவிருத்தி எனும் இவைகளோடு புத்திவிருத்தியும் உண்டு. அரூபிகளுக்கு முழுதும் புத்திவிருத்தியேயன்றி வளர்ச்சி விருத்தியாவது பஞ்சேந்திரியவிருத்தியாவது இல்லை. [விருத்தி, சேட்டை, முயற்சி என்பன ஒருபொருட்சொற்கள்.]

வினா.—தாவரசீவன் மிருகசீவன் எனும் இவையிரண்டினும் சுபாவம் என்னை?

விடை.—இச்சீவன்கள் சரீர ஆதேயமானவைகள்; அதாவது சரீரத்தோடு உண்டாகியவைகளும் சரீரத்தின் ஆதாரமின்றி நிலைபெறக் கூடாதவைகளுமாம். ஆதலால், தாவரசரீரமும் மிருகசரீரமும் தத்தம் சுய நிலைமைகெட்டு அழியும்போது அவற்றை ஆதாரமாகக்கொண்டிருக்கின்ற சீவனாகிய சூக்குமப்பொருளும் அழிந்துபோகும்.

வினா.—இச்சீவன்கள் சரீர ஆதேயமானவைகள் என்பதற்கு அத்தாட்சி யாது?

விடை.—இவைகள் சரீரத்தோடு கூடிச்செய்யும் விருத்திகளாகிய வளருதல் காண்டல் கேட்டல் முதலியவைகளையன்றி வேறு விருத்திகளைச் செய்யமாட்டமலிருப்பதே அத்தாட்சியாகும்.

வினா.—சில மிருகங்களிடத்தில் நட்பு, பகை ஆதியகுணங்களைக் காண்கிறோமே. ஆதலால், அவைகளுக்குப் புத்தி உண்டு என்றுசொல்லலாமா?

விடை.—மிருகங்களிடத்தில் பஞ்சேந்திரியங்களோடு சம்பந்தப்பட்ட நாட்டமும் வெறுப்பும் உண்டேயன்றி, மனுஷரிடத்திற்போலப் புத்தியோடு சம்பந்தப்பட்ட நட்பும் பகையும் உண்டென்று சொல்லுதல் பொருந்தாது * மிருகங்கள் தங்கள் பஞ்சபுலன்களுக்கு உவப்பான பக்ஷணங்களைக் கொடுப்போரை நாடுவதும், அடிமுதலியவைகளாற் தங்

* இந்துசமயநூல்களும் மிருகாதிகளுக்குப் "புத்தி" இல்லையெனக் கூறுகின்றன:

"ஐந்தறிவின்மேல் அதிகமாமனமே" அகஸ்தியர்

"விலங்கும் பறவையும் அந்நான்கனோடு (ஸ்பரிச, ரச ரூப, கந்தங்கள்) சத்தத்தையும் அறியும் ஐயறிவுயிர்கள். தேவர்களும் மனிதர்களும் அவ்வைந்தனோடு சித்தத்தாலறியும் அறிவுடைய ஆறறிவுயிர்கள்" ஆறுமுகநாவலர் 4-ம் பாலபாடம்.

களை வருத்துவோரை அகன்று ஓடுவதும், எதிர்த்தோரைச் சருவுவதுமாகிய இம்முயற்சிகளுக்கு பஞ்சேந்திரியங்களுக்குரிய இச்சை* ஒன்றே போதிய காரணமாம்.

வினா —தாவர மிருக சீவன்கள் அழிந்துபோம் பொருட்களே என்பதற்கு உலகப்பிரசித்தமான அத்தாட்சி ஒன்று உண்டா?

விடை — ஆம்; இறந்துபோகின்ற மனுஷர் நற்கதியடையும்படியாகச செபதபங்களை அநுஷ்டிக்கிறோம். பட்டுப்போகிற மரங்களுக்காகவேனும் சாகும் மிருகங்களுக்காகவேனும் செபதப தானதருமங்களை நடத்துவோர் ஒருவருமில்லை. தாவரமிருகங்களுக்கு அழியாத சீவனில்லை என்பதற்கு இது உலகப்பிரசித்தமான அத்தாட்சியாம்.

வினா.—உணவின்பொருட்டு தாவரங்களையும் மிருகங்களையும் உயிர்போக்குதல் பாவமாகுமா?

விடை. — கடவுள் மனிதருக்கு உணவாகப் படைத்தவைகளைக் கொன்று தின்னல் ஒருபோதும் பாவமாகாது † ஆயின், அவசியமின்றி மிருகங்களைக் கொல்லுதலும் இரக்கமின்றி அவைகளை வருத்துதலும் நன்றல்ல.

வினா—உலகத்தில் யாரேனும் மிருகாதிகளைக் கொல்லாது சீவித்தல் கூடுமா?

விடை.—கூடாது. ஆகாரத்துக்காகவும் மிருகாதிகளைக் கொல்லலாகாது என்று வார்த்தையளவில் மறுக்கின்ற சைவர்கள்தாமும் செய்கையளவில் அளவில்லாச் சீவபிராணிகளை உயிர்போக்கி உண்போரேயாகிறார்கள். "அவர்கள் பசுமுதலியவற்றிற்குப் புல்முதலியவைகளை ஆகாரமாகக்கொடுக்கிறார்கள். வீடு முதலியவைகளைக்கட்டப் பனைமுதலிய மரங்களை வெட்டிக் கொல்லுகிறார்கள். கறிக்குக் கீரைத்தண்டு சேமத்தண்டு முதலியவைகளைப் பிடுங்கி அவைகளைக் கொல்லுகிறார்கள். தங்கள் தலையிலுள்ள பேனைக் கொல்லுகிறார்கள். தங்கள் பசுக்களுக்கு உண்ணிபிடிக்கும்போது அவைகளைக் கொல்லுகிறார்கள். தங்கள் தெய்வ விக்கிரகத்துக்கு முத்துமாலைமுதலியவைகள் செய்யச் சிப்பிகளைப் பதைக்கப்பதைக்க அறுப்பிக்கிறார்கள். அல்லது சிப்பிகள் செத்து அழுகும்படி செய்விக்கிறார்கள். கறிக்கென்று எடுக்கிற கீரைமுதலியவைகளில் இனிதாய்ப் பிழைத்திருக்கும் புழுமுதலியவைகளை வேறுபடுத்தலாற் கொல்லுகிறார்கள். தண்ணீரைக் காய்ச்சுவதாலும் உண்ணுவதாலும் அநேக பூச்சிகளைக் கொல்லுகிறார்கள். மருந்தின்நிமித்தம் அநேகபிராணிகளைக் கொல்லுகி

---

* Instinct.

† இதை இந்துநூல்களும் சொல்லுகின்றன:

மனுஸ்மிருதி 5. 28. ஏனென்றால் பிரமன் இவ்வுலகம்முழுதும் ஜீவனுக்கு ஆகாரமாக உண்டுபண்ணினார்; ஆகையால் நெல்லுமுதலான தாவரமும் மிருகமுதலான சங்கமமும் ஜீவனுக்கு ஆகாரமாகவேயிருக்கின்றன.

5. 29. எப்படி என்றால் மான்முதலிய சரங்களுக்குப் புல்லுமுதலிய அசரங்களும், புலிமுதலிய கோரைப்பல்லுள்ளவைகளுக்கு மான்முதலிய கோரைப்பல்லில்லாதவைகளும், மானுடர்முதலிய கையுள்ளவர்களுக்கு மீன்முதலிய கையில்லாதவைகளும், சிங்கம்முதலிய வீரமுள்ளவைகளுக்கு யானைமுதலிய பயமுள்ளவைகளும் ஆகாரமாகவிருக்கின்றன.

5. 30. ஆதலால் பிராணன்போகிறகாலத்திலும் புசிக்கத்தகுந்த ஜெந்துக்களைத் தினந்தோறும் புசித்தபோதிலும் தோஷத்தை அடையமாட்டான். பிரமனாலேயே புசிக்கத்தக்கவர்களும் கொல்லத்தக்கவைகளும் சிருட்டிக்கப்பட்டிருக்கின்றன அல்லவா?

றார்கள். தங்கள் தேவர்களுக்கு ஆடு கோழி எருமைக்கடா முதலியவை களைப் பலியிடுகிறார்கள்.''*

வினு.—இனி, நரசீவனாகிய ஆன்மாவின் சுபாவம் யாது?

விடை.—நரசீவனாகிய ஆன்மா சரீரத்தோடு சம்பந்தமுள்ளதாயிருப்பினும் சரீர ஆதேயமானதன்று; ஆதலால், சரீரம் அழிந்தும் தான் அழியாமல் நிற்கின்ற ஒரு சித்துப்பொருள்

வினு.— ஆன்மா சரீர ஆதேயமானதல்ல என்பதற்கு அத்தாட்சியாது?

விடை.—அது சரீரத்திலுள்ளனவாகிய பஞ்சேந்திரியங்களின் துணையாற்செய்யும் முயற்சிகளையொழிந்து வேறுமுயற்சிகளையும்செய்தலே அத்தாட்சி. ஆன்மா தன்நிலைகளைத தான் அறிகின்றதென்றும், கடவுள் பாவம் புண்ணியம்முதலியவிஷயங்களைக் கிரகிக்கின்றதென்றும், வான சாஸ்திரம் கணிதம் சிற்பம் முதலிய அரியகலைகள் வித்தைகளைச சூழ்ச்சிக்கின்றதென்றும் அநுபவத்தால் அறிகிறோம். இவைகளெல்லாம் பஞ்சேந்திரியங்களுக்கு மேற்பட்ட சைதன்னிய முயற்சிகளாதலால் இவைகளைச் செய்கின்ற ஆன்மா பஞ்சேந்திரியங்களில் ஆதேயமாயிராத ஓர்சித்துப்பொருள் என்பது தேற்றம்.

வினு.— ஆன்மா சிருட்டிக்கப்பட்ட ஒரு பொருளாயின் அழிவெய்துமே. "எது தொடக்கமுள்ளது அது முடிவுள்ளது" என்பதன்றோ சித்தாந்தம்?

விடை.—.ஆன்மா தன்னை உண்டாக்கிய காரணமாகிய கடவுளால் அழியலாமேயன்றி, சடப்பொருட்களைப்போலஇடைக்காரணங்களால்அழியாது. சடப்பொருட்கள் பலகூறுகள் ஒருங்குசேர்ந்துள்ளவைகளாதலால் வெப்பம் தட்பம் ஆதியகாரணங்களால் பிரிந்தும் இறுகியும், மாறுபடும்போது அழிந்துபோனவைகளாகச சொல்லப்படும். [ஆயினும் எப்பொருளும் நிருமூலமாவதில்லை] ஆன்மாவோ கூறுபடுத்தக்கூடாத தனிப்பொருளாதலால், வெப்பம் தட்பம் ஆதியவற்றால் அழியாது. தன்னைத் தாங்குகின்றவரான கடவுளின் சக்தி தாங்காதொழியுமாயின்மாத்திரமே நிருமூலமாகலாம்.

வினு.—ஆன்மா அவ்வாறு நிருமூலமாவது உண்டா?

விடை.—இல்லை. கடவுளின் அநந்த சக்தியால் சிருட்டிக்கப்பட்டவைகள் அவ் அநந்த சக்தியாலே நிலைபெறும். ஆதலால், ஆன்மா ஒருபோதும் நிருமூலமாகாது.

வினு.—இனி அரூபிகளின் சுபாவம் யாது?

விடை— அரூபிகள் சரீரத்தோடு சற்றேனும் சம்பந்தமற்றவைகளான சித்துப்பொருட்கள்.

## V. சிருட்டிக்கிரமம்.

வினு.—உலகம் எனும் தொகுதியிலே அடங்கிய சிருட்டிகளாகிய சீவ அசீவப்பொருட்கள்யாவும் எக்கிரமத்திலே படைக்கப்பட்டன?

விடை—சிருட்டிகள் படைக்கப்பட்ட கிரமத்தைசசுட்டி இதுவரையில் நிசசயமாக ஒன்றையும் அறியோம் இவ்விஷயத்தைப் புத்திமான்கள் பலவாறாக ஊகித்துக்கொண்டுவருகிறார்கள்.

---

* சைவமகதத்துவ திமிரபாநு 25-ம் பக்.

வினு.—சிருட்டிக்கிரமத்தை நாம் விவிலியநூலினின்று அறியக்கூடிய தாயிருக்கின்றதா?

விடை —மனுஷருக்குமுன் அரூபிகள் படைக்கப்பட்டிருந்தார்கள் என்பதுபோன்ற இலவிபரங்கள்மாத்திரமே விவிலியநூலினின்று நிச்சயமாய் அறியக்கூடியவைகளாயிருக்கின்றன

வினு.—ஆதியாகமம் 1-ம் 3-ம் அதிகாரங்களில் சிருட்டிக்கிரமம் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறதாகத் தோன்றுகின்றதே; அது எப்படி?

விடை —அவ்வாக்கியங்களுக்கு வேதசாஸ்திரிகள் பலவாருகப் பொருள் கூறுகின்றார்கள் உலகபொருட்கள் எவ்விதமாய் எக்கிரமத்தில் உண்டாக்கப்பட்டன என்பதை உலகசாஸ்திரமுறையாகத் தெரிவிப்பது அவ்வாக்கியங்களின் தாற்பரியமன்று; சருவதத்துக்கும் ஆதிகாரணரான ஏக கடவுளால் சகலமும் உண்டாக்கப்பட்டன எனும் உண்மையையும், ஓய்வுநாள் அநுசரிப்பைப்பற்றிய போதகத்தையும் சித்திரித்துக்காட்டும் நோக்கமாகவே அவை எழுதப்பட்டன எனப் பலமேதாவிகள் கூறுவர்.*

வினு.—சிருட்டிக்கிரமத்தைத் தெரிவிப்பது அவ்வாக்கியங்களின் தாற்பரியமல்லவெனில், அவைகள் வேதாகமத்தில் எழுதப்பட்ட நோக்கம் தான்யாது?

விடை —மெய்ச்சமய உண்மையை வெளிப்படுத்த எடுத்துக்கொண்ட வேதாகம நூலாசிரியர்கள், தங்கள் தமகாலத்தாருள்ளிருந்த ககோள பூகோள சாஸ்திரகொள்கைகளைத் தழுவி அவ் உண்மைகளை வெளியிட்டிருக்கின்றார்கள். வேதநூல் ஆசிரியர்கள் தத்தமகாலத்தாருடைய அறிவுக்குமேற்பட்ட சாஸ்திரக்கொள்கைகளைத்தான் அறிந்து வெளியிட்டிருப்பினும் அக்காலத்தாருக்குப் பிரயோசனமாயிருந்திராது அன்றியும், ககோள பூகோள சாஸ்திர அறிவைப் பயப்பதல்ல, பரகதிக்குரிய உண்மைகளை அறிவிப்பதே வேதாகமங்கள் எழுந்தநோக்கமாதலால் சனங்களுள் அவ்வக்காலத்திலிருந்த கொள்கைகளைத் தழுவி அவ் உண்மைகள் போதிக்கப்பட்டிருக்கின்றன,†

வினு —இதனைச் சில உதாரணங்களால் விளக்குக.

விடை.—வேதாகமநூலில் ஆங்காங்கு பூமியின்மேல் வானமுகட்டென ஓர் கணடிப்புள்ள எல்லையிருக்கின்றதென்பதாகவும், பூமி அசையாதபடி மகா பாதாளங்களின்மேல் நிறுத்தப்பட்டிருப்ப அதற்கு ஒளி வழங்குகின்ற சூரியனே கிழக்கில் எழுந்தும் மேற்கிற்போய் மறைந்துங்கொண்டு வரும் என்பதாகவும இன்னன பல பழையகொள்கைகள் காணப்படுகின்றன. இவைகள் அவ்வவ் ஆகமம எழுதப்பட்ட காலத்தாருடைய கொள்கைகள். இவற்றை எடுத்துக்காட்டாகக்கொண்டு, 'நாம் பூமியின்மேல் இருப்பதாகச்சொல்லுகின்ற வானமுகட்டைக் கடவுளே சிருட்டித்தார்; பூமி பாதாளங்களின்மேல் நிறுத்தியிருக்கிறது எனக் கைக்கொள்ளுகிறோமே, இந்த அருஞ்செயலை இயற்றிய சருவவல்லவரும் அவரே; சூரியன் உதித்தும் அஸ்தமித்தும வருகின்றதென நம்புகின்றோமே; அந்தமுறை

*St. Thomas Aq. In ii Sent , 12, art 2– Summa Theol. i, q. 68. a 1.— St. Augustin, De Genesi ad litter. i, 18 etc.

† அக்குனுதோமையார் இதனை ஏலவே (13ம் நூற்றாண்டில) பின்வருமாறு குறிப்பிட்டுப்போயினர்: " Moyses rudi populo loquebatur quorum imbecillitati condescendens, illa solum eis proposuit quae manifeste sensui apparent " Sum. Theol. i, q 70; a, I ad 3um.

யை வகுத்த சர்வஞ்ஞரும் அவரே" என்றபடியேதான் வேதாகம நூலாசிரியர்கள் சமய உண்மைகளை விளக்குதற்கு தங்காலத்தாருடைய சாஸ்திர கொள்கைகளை உபயோகித்துக்கொண்டார்கள்* எனத்தோன்றுகின்றது.

வி.—யாத்திராகமம் 20-ம் அதிகாரத்தில் (11-ம் வச.) கடவுள் ஆறு நாட்களிற் சிருட்டிசெய்துமுடித்தார் என்றும், ஆதியாகமம் 1-ம் அதிகாரத்தில் இன்ன இன்ன நாளில் இன்ன இன்ன சிருட்டி செய்யப்பட்டது என்றும் கூறப்பட்டிருக்கின்றது. இவ்வாக்கியங்களை நாம் எவ்வாறு விளங்கிக்கொள்ளல்வேண்டும்?

விடை—இவைகளும் பூர்வகாலத்தாரது நாடோடிக்கொள்கைகளை ஒட்டிச் சமய உண்மைகளைத் தெளிவிக்கும்படியாக ஏற்பட்டவைகளே என்பதுதான் வேதசாஸ்திரிகளுட் பெரும்பாலும் அங்கீகாரமாகின்றது. வேதநூலாசிரியர்கள் இவ்வாறு செய்ததும் இயல்பேயாம் சிருட்டியைப் பற்றிய இவ்விதகொள்கைகள் பூர்வகாலந்தொட்டு மானுடருள் கதைரூபமாயும் பாடல்ரூபமாயும் வழங்கிவந்தன. அக்கொள்கைகளை நமது நூலாசிரியர்கள் இருந்தபடியே எடுத்துக்கொண்டு அவற்றிற்கு ஆதாரமாயிருந்த சமய உண்மைகளைப் போதித்துப்போயினார்கள். பூர்வசனங்கள் கைக்கொண்டதாகிய இந்தச் சிருட்டி ஒழுங்கு முற்றும் நியாயமின்றியும் வைக்கப்பட்டதல்ல. இதன் பல அமிசங்கள் ஆதிமனுஷனுக்கு அருளப்பட்ட ஓர் ஆதிவெளிப்படுத்தலினின்று உண்டாகிப் பூர்வ மகாசனங்களுள் வெவ்வேறுரூபமாக வழங்கியவைகளுமாகலாம்.

வி.—சிருட்டியைப்பற்றிய இதுபோலும் கொள்கை எபிரேயரை (யூதரை) ஒழிந்த வேறு பூர்வ சனங்களுள்ளும் இருந்ததா?

விடை—இக்கொள்கை எபிரேயருட்போல அவர்கள் காலத்தவரும் முற்பட்டோருமாகிய பூர்வ பபிலோனிய அசீரியர்களுள்ளும் அவர்களுடைய பொய்ச்சமய வழக்கங்களோடு கலந்து கிடந்ததென்று சென்ற நூற்றாண்டில் இச்சனங்களின் பழைய இருப்பிடங்களிற் கண்டெடுக்கப்பட்ட செங்கற் புத்தகங்களால் வெளியாகின்றது †

வி.—ஆதியாகமத்திலும் பிறவிடங்களிலும் சிருட்டிக்கிரமத்தைச்சுட்டி எழுதப்பட்டிருக்கின்றவாக்கியங்கள் சாஸ்திரமுடிபுகளைநோக்க, தவறுகளே எனச்சொல்லலாமா?

விடை—தவறுகள் என்றபெயர் இவைகளுக்குச் செல்லாது வேதாகமம் தேவவாக்காதலால் அதிலே எவ்விதத்திலும் தவறுகள் இருத்தல் கூடாதென்பதும், அது உண்மையையே போதிக்கின்றது என்பதும் ஒருதலை. ஆயினும் சமய உண்மைகளை வேதாகமம் போதிப்பதற்கு எடுத்துக்கொண்ட விஷயமன்றி, ககோள பூகோளசாஸ்திரமல்ல ஆதலால், வேதாகமத்தை நாம் ஓர் ககோள சாஸ்திரப்புத்தகமாகவாவது பூகோளசாஸ்திரப் புத்தகமாகவாவது எண்ணி, உலகசாஸ்திர உண்மைகளை அதிற்தேடப்

* இதுவே தற்காலம் வேதசாஸ்திரிகளுள் பெருவழக்காயிருக்கின்ற வேதாகமப்பொருள்கோள். இவ்விஷயமாய்த் திருச்சபை யாதொன்றையும் நிர்ணயித்திருக்கவில்லை. தற்காலசாஸ்திரத்துக்கு பழைய ஏற்பாட்டின் சிலகூற்றுகளுக்கும் இடையிலுள்ள வேற்றுமையை வெவ்வேறுவகையாக சமரசப்படுத்துகின்ற வேதசாஸ்திரிகளும் உளர். cf Fr. Gigot, Special Introd. to the study of SS. p. 151 & seq.

† Gigot l. c. ஆதிபரம்பரையினின்று பிறந்துவந்த ஒருசிருட்டி ஒழுங்கே நம் இந்தியாவில் முற்காலம் வந்துகுடியேறிய பூர்வ ஆரியருள்ளும் இருந்ததெனத் தோன்றுகின்றது. மனுஸ்மிருதி 1-ம் அத்தியாயம் 5-24 வரையிற்காண்க.

படாது. உலக சாஸ்திரங்களைச்சார்ந்தவைகளாய் அதிலே வருகின்றவாக்கியங்கள் சமய உண்மைகளைப்போதிப்பதற்கு எடுத்துக்காட்டாகமாத்திரம் வழங்கப்பட்டிருக்கின்றன. அக்கூற்றுக்கள் அக்காலத்தாருடைய அறிவுக்கொத்தனவும் இயற்கைத்தோற்றத்தின்படிதுணியப்பட்டனவுமான உண்மைகளையேயன்றிச் சாஸ்திரசம்பந்தமான உண்மைகளை விளக்குவன வல்ல.*

வினா.—மனுஷவாக்கான நூல்களில் இவ்வாறு தோற்றத்தின்படிமாத்திரம் துணியப்பட்ட காரியங்கள் எடுத்தோதப்படுவதிற் குறையில்லை. உதாரணமாக: வெகு சாஸ்திரிகளானோரும் "சூரியன் உதிக்கின்றது படுகின்றது" என்றபடியே நூல்களிலும் பேசுவார்கள். ஆயின் தேவவாக்காகிய வேதாகமத்தில் இப்படியான கூற்றுக்கள் காணப்படலாமா?

விடை.—வேதாகமம் தேவவாக்கெனச் சொல்லப்படுவது எவ்விதத்தில் என அறிந்துகொண்டால் இக்கேள்விக்கு இடமிராது. அது தேவவாக்கென்னும்போது கடவுளே ஒவ்வொரு வார்த்தையையும் தாமாக இறகுபிடித்து எழுதினர், அல்லது மனுஷருடைய கைகளை ஒரு இறகுபோலக் கருவியாகக்கொண்டு எழுதினர் என்பது திருச்சபையின் போதகமன்று. ஆயின் கடவுள் அவ்வவ் வேதாகம நூலாசிரியர் அவ்வந்நூலை எழுதும்படியாகத் தூண்டி, எழுதவேண்டிய விஷயங்களையும் தவறின்றி அவர்களது புத்தியிலே வருவித்தார் என்பதும், அதனுற்றான் வேதாகமநூல்களும் அவைகளில் அடங்கிய சகலமும் தேவவாக்கு என்று அழைக்கப்படும் என்பதுமே திருச்சபையின் போதனை. ஆதலால் உலகநூலாசிரியர்களைப்போல வேதாகம நூலாசிரியர்களும் தத்தம்போக்குக்கும் காலத்துக்கும் இயைந்த வார்த்தைகள் வசனங்கள் எடுத்துக்காட்டுகள் உவமைகள் எனும் இவைகளைக்கொண்டு தாங்கள் எழுதும்படி தூண்டப்பட்ட விஷயங்களை வரைந்துவைத்திருப்பதில் எவ்வாற்றாலும் இழுக்கில்லை.

வினா.—ஆதிமனுஷன் சிருட்டிக்கப்பட்டவிதம் யாது?

விடை.—அவன் சரீரம் மண்ணினின்று உண்டாக்கப்பட்டது. அச்சரீரத்தை உயிர்ப்பிக்கும் ஆத்துமம் ஓர் உபாதானமுமின்றிக் கடவுளால் நேரே உண்டாக்கப்பட்டது.

வினா.—கடவுள் மண்ணைக் கையால் எடுத்துச் சரீரத்தை உண்டாக்கினார் என்றும், சீவசுவாசத்தை வாயினுல் ஊதிவிட்டாரென்றும் கொள்ளலாமா?

விடை.—கடவுள் அசரீரியாதலால் இவ்வாறுகொள்ளுதல் கூடாது. விவிலிய நூலில் வர்ணனைகளோடு எழுதப்பட்டிருக்கின்ற விபரங்களைச்

---

* The Sacred Writers "did not seek to penetrate the secrets of nature, but rather described and dealt with things in more or less figurative language, or in terms which were commonly used at the time, and which, in many instances, are in daily use at the present day even by the most eminent men of science. Ordinary speech primarily and properly describes what comes under the senses, and somewhat in the same way the Sacred Writers—as the Angelic Doctor reminds us—'went by what sensibly appeared', or put down what God, speaking to men, signified in the way men could understand and were accustomed to." Encyc. Provid. Deus, p. 36 & seq. Official Trans.

சொல்லொடு பொருளாயல்ல, விஷயத்துக்கிசையவே விளங்கிக்கொள்ளல்வேண்டும்.* கடவுள் மனுஷனை மண்ணால் உண்டாக்கினார் என்பதன் பொருள் மனுஷனுடைய சரீரம் மண்முதலிய பூதியங்கள் சேர்ந்த ஒரு பொருளே என்பதும், அது தானாய் உண்டானதல்ல, கடவுளால் உண்டானதென்பதுமேயாம். சீவசுவாசத்தை நாசியில்விட்டார் என்பதன் பொருள், மனுஷன் சுவாசிக்கிறவனாய் அதாவது சீவனுள்ளவனாய்வரும்படியாக அவனுக்கு ஓர் ஆத்துமத்தை நவமாய்ச் சிருட்டித்தருளினார் என்பதேயாம்.

வினா.—ஆதிமனுஷி சிருட்டிக்கப்பட்டவிதம் யாது?

விடை.—அவள் ஆதிமனுஷனின் விலாவெலும்பினின்று சிருட்டிக்கப்பட்டாளென்று விவிலியநூல் கூறுகின்றது. இதற்கு வெளிப்படையான பொருள்கொள்ளவேண்டும் என்பதே பெரும்பாலான வேதசாஸ்திரிகளின் கொள்கை.† இதுவும் திருச்சபையினால் நிர்ணயிக்கப்படாத ஓர் விஷயமாதலால் சாஸ்திரிகள் வேறுவிதமாகவும் கூறுவர்.

---

*இதை ஏலவே அகுஸ்தீனாரும் குறிப்பிட்டுப்போயினார். De Genesi ad litt. lib. vi, c. xii § 20.

† ஆதிமனுஷனின் சரீர அம்சத்தினின்று ஆதிமனுஷியின் சரீரம் சிருட்டிக்கப்பட்ட உண்மை நம் இந்தியாவின் பூர்வகாலக்கொள்கைகளுள்ளும் ஒருவாறு காணப்படுகின்றது. பிரமா [சிருட்டிகர்த்தர்] மானசபுத்திரரென்னும் தமக்குச் சமானரான ஒன்பதின்மரைச் [நவவிலாசசம்மனசுகள்?] சிருட்டித்தபின் உலகிலே [illegible]சாவிருத்திபண்ணும்படியாக ருத்திரமூர்த்தியை [ஆதாமை?]ப் பாதியுடம்பு ஆணும் பாதியுடம்பு பெண்ணுமான அர்த்தநாரிரூபமாகச் சிருட்டித்தாரென்றும், பிரமா ருத்திரரை நோக்கி "இரண்டு விதமாக இருக்கிற உன்னைப் பிரத்தியேகமாகப்பிரி" என ஆக்கியாபிக்க, ருத்திரர் ஸ்திரீபுருஷரூபமான தமது உடம்பை தனித்தனியே ஆணும் பெண்ணுமாகப்பிரித்துப் பிரசாவிருத்திபண்ணினாரென்றும், இவரிருவரினின்றும் உற்பத்தியான பிரசைகள் "சவுமியங்களும் பயங்கரங்களும் சாந்தங்களும் கோரங்களும் கறுத்தவைகளும் வெளுத்தவைகளுமாக" [காயின் சந்ததியும் சேத்துசந்ததியும்?] இருந்ததினால் [இச்சந்ததியால் உலகமழியக்கண்டுபோதும்] அதை இரட்சிக்கத் தம்முடைய அம்சத்தினாலே [தமக்கு உவந்தவராக?] சுவாயம்புவமனுவைச் [மா-நோவா?] சிருட்டித்தாரென்றும் சம்ஸ்கிருத விஷ்ணுபுராணம் முதலம்சம், ஏழாமத்தியாயத்திற் சொல்லியிருக்கிறது.

IMPRIMATUR. C. B., V. G.—*Jaffna 10 1-09.*

PRINTED BY C. ANDREW AT ST. JOSEPH'S CATHOLIC PRESS, JAFFNA.

CATHOLIC TRACT
No. 12.

# CHRIST THE GOD-MAN

# கிறீஸ்துவின் கடவுட்டன்மை



உலகத்திலே கலவிமான்களாயும் சீர்திருத்தமுள்ளவர்களா யும் விளங்கிய மனிதர்களுட் பெருமாங்கானவர்கள் இற்றைக்கு ஆயிரத்துத் தொள்ளாயிர வருஷங்களாக யேசுக்கிறீஸ்துநாதரு டைய கடவுட்டன்மையை ஏற்று, அவரே தங்களுக்காக உலகத் தில் திருமேனிகொண்டு எழுந்தருளிவந்த கடவுளாம் என்று கைக் கொண்டுவந்திருக்கிறார்கள். கிறீஸ்துநாதர் மனித அவதாரம் செய்தருளிய கடவுளே என்ற உறுதியான கொள்கை இன்றைக் கும் பூமண்டலவாசிகளுள் மகா பெருந் தொகையானோருடைய இருதயங்களிலே அசையாமல் வேரூன்றியதாகவேயிருக்கிறது. காலஞ்செல்லச்செல்ல, மனுக்குலத்தாருடைய அறிவு விரியவிரிய மனிதர்கள் கிறீஸ்துநாதர்மேல் கொண்ட அன்பும் சிரத்தையும் என்னுமிவைகளும் வளர்பிறைபோல மேலும் மேலும் பெருகி வருகின்றனவேயன்றிக் குறைந்துவருகின்றனவல்ல.

நம் இலங்கையின் பாடென்ன! இங்கே யேசுக்கிறீஸ்துநாத ரைத் தங்கள் சற்குருவாகவும் மீட்பராகவும் கடவுளாகவும் கைக் கொள்ளுவோருடைய படையணியானது சுருங்கிவருகிறதா? விரிந்துவருகிறதா? அது "நாளொருவண்ணம்பொழுதொருமேனி யாய்" விரிந்துகொண்டுவருகின்றது என்பதற்கு ஏறக்குறைய ஒவ்வோர் வருஷமும் அங்கங்கு புதுக்கிறீஸ்தவர்களுக்காகக் கட் டியெழுப்பப்படும் தேவாலயங்களும், உண்டாக்கப்படும் புதுப் புது "மிஷன்கள்" அல்லது விசாரணைப்பிரிவுகளும் உரத்துச சாட்சிகூறுகின்றன. நமது யாழ்ப்பாணத்திலேமட்டும் சென்ற மூன்றுவருடங்களுள் பிறசமயிகள் மத்தியிலே இரண்டு புதுக் கோவில்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. இம்மூன்றுவருடங்

---

* இது "சத்தியவேத பாதுகாவலன்" பத்திரிகையிலே முதன்முதல் வெளிப்பட்டது.- 34-ம் புத். 19-ம் இலக்கம் முதல்.

களுள் யாழ்ப்பாண மேற்றிராசனத்திலேமாத்திரம் முன்னூற்றைம்
பதுபேருக்கதிகமான பிராயப்பட்ட இந்துசமயிகள் ஞானத்தீட்
சைபெற்று திருச்சபையிற் சேர்ந்திருக்கிறார்கள். இலங்கையின்
பிற மேற்றிராசனங்களையும், முக்கியமாய இந்தியாவையும் சேர்த்
துப்பார்ப்போமானால், நம் அயலிலேயே வருஷந்தோறும் ஆயிரக
கணக்கானோர புதிதுபுதிதாகக் கிறீஸ்துநாதரின் தேவத்துவத்தை
ஆவலோடு ஏற்று, அதிலேயே தங்களுக்கு இனிய ஆனந்தத்தை
யும் ஆறுதலையும் மேலான மனரம்மியதையும் அடைவோராகி
றார்கள் எனக் காண்போம.

ஆனால், வெள்ளிடைமலைபோல விளங்குகிற இச்சம்பவங்கள்
நம் சைவநண்பர்களுட் சிலருக்குமாத்திரம மறைந்திருப்பவைகள்
போலத்தோற்றுகின்றன. யாழ்ப்பாணத்திலே இரண்டொருவரு
ஷமாய் நடைபெற்றுவருகிறதாகிய "ஞானசித்தி" எனும சைவ
சமயப்பத்திரிகையை நடத்துகிறவர், மேலான புத்திமான்களெல்
லாம் ஒப்புகின்றதாகிய யேசுநாதசுவாமியின் கடவுட்டன்மையை
அழித்துப்போடலாமென்ற நோக்கத்தோடு, அடிக்கடி அப்
பத்திரிகையிலே எழுதிக்கொண்டுவருகிறார். அவருடைய எழுத்
துக்களுட் சிலவற்றை அவ்வப்வேளையிலே "சத்தியவேத பாது
காவலன" மூலமாகக்கண்டித்து உண்மையை நாட்டினோம். ஞான
சித்தியாரோ அக்கண்டனங்களுக்கு விடையொன்றும் சொல்லா
மலும், அவைகளால் உண்மையை உணர்ந்து கைப்பற்றிக்கொள
ளாமலும், மேலும் மேலும் அதே வீண எழுத்தை வெவ்வேறு
விதமாய எழுதி வெளியிட்டுக்கொண்டுவருகிறார். இதுவரையில்
அவர் செய்கைகளைப்பார்க்குமிடத்து அவர் உண்மையைக்காண
வேண்டுமெனும் அவாவினாற் தூண்டப்பட்டு எழுதுகிறவராகத்
தோற்றவில்லை. ஆயினும், அவர் மீண்டும் மீண்டுமகொண்டுவரு
கிற தடைகளையும் கேள்விகளையும் வாசிக்கிற பிறசமயிகள், அவர்
கூறுகிறவைகளை உண்மையென மயங்கி மோசம்போகாதபடிக்கு,
மீண்டும் ஒருமுறை அவர்கூற்றுக்களைச சுருக்கமாக மறுத்து
உண்மையைநாட்டுவது அவசியமாகின்றது.

## I கிறீஸ்துவின் மனிதசுபாவம்.

சைவர் பெரும்பாலும் கிறீஸ்தவர்களுடைய கொள்கைகளை
உள்ளபடி அறிந்துகொள்ள முயற்சிசெய்யாமையினால், கிறீஸ்தவர்
கள் ஏற்கக்கொள்ளாத போதகங்களை அவர்களுக்கு ஆரோபித்து,
இல்லாத தவறுகளைத் தாங்களாகவே உண்டாக்கிச் சொல்லுவார்
கள். உள்ளபடி, ஒருவன் தன்சமயமல்லாத மற்றொன்றின் போத
கங்களைச் சரியாய் அறிந்துகொள்ளாமல் எழுதும்போதும் பேசும்
போதும், எண்ணில்லாத தவறுகளும் பொய்விளக்கங்களுமே
உண்டாகும். நமது ஞானசித்திநண்பருடைய தவறுகளும் கிறீஸ்

தவர்களின் கொள்கைகளை அறியாமையினாலேதான் உண்டாயின என்பது பின்னால் நாம் சொல்லவிருக்கிறவைகளால் விளங்கும்.

கிறீஸ்துநாதரிடத்திலே கடவுட்டன்மையும் மனிதத்தன்மையும் ஓரே ஆளிற்சேர்ந்திருக்கின்றன என்பது சத்தியவேதபோதகம். நம் பத்திராதிபர் இதையுணராமல் தேவசுபாவத்தையும் மனிதசுபாவத்தையும் கலந்துகட்டிப்பேசிக் கிறீஸ்துநாதரின் கடவுட்டன்மைக்கு எதிராக எட்டு நியாயங்களைச்சொல்லுகிறார்.* அவற்றைச்சொல்லுமுன் அவர் முகவுரையாகக்கூறுவது:

கடவுட்டன்மையாவது, நம்மைப்போலப் பிறப்பில்லாமல் எங்கும் நிறைந்து ஞானசொரூபமாய் ஆனந்தமாய் விளங்குதல்...கிறீஸ்துவினுடைய சரித்திரத்தை நோக்கும்போது மேற்சொல்லிய கடவுட்டன்மைகள் அவரிடத்து இருப்பனவாகக் காணப்படவில்லை.

கடவுள் பிறப்பில்லாதவர் என்பதிற்சந்தேகமில்லை. பிறப்பென்பதென்ன? தொடக்கம்; உற்பத்தி. கடவுளோ தொடக்கமும் உற்பத்தியுமில்லாதவர். ஆகையால் கடவுள்பிறந்தார் என்றுசொல்வது பொருந்தாத கூற்றேயாம். கடவுள் எங்கும் நிறைந்து ஞானசொரூபமாய் ஆனந்தமாய் விளங்குகிறவர் என்றதிலும் அற்பமேனும் சந்தேகமில்லை. ஆனால், கிறீஸ்துநாதர் ஆகிறவர் யார்? அவர் மனிதனாய்ப்பிறந்த கடவுள். ஆகையால் அவருடைய மனிதசுபாவம் இடையிலே உண்டானதன்றி அவர் இடையிலே உண்டான ஒருவரன்றுவல்ல. மனிதராகிய நாமெல்லாம் இடையிலே உண்டானவர்கள். நமக்குப்பிறப்பென்பது முன்னில்லாத இருக்கை இடையிலே உண்டாவதாகிய ஒரு நிகழ்ச்சி. ஆகையால், பிறந்தவர்களாகிய, அதாவது இடையில் உண்டாக்கப்பட்டவர்களாகிய நாம் வெறும் சிருட்டிகளேயாம். கிறீஸ்துநாதரோ மனிதனாய்ப் பிறக்குமுன்னும் அநாதியான, அதாவது பிறப்பில்லாத, வஸ்துவாயிருக்கிறார். இதைவிளக்கித்தான் அவர்தாமே தம்மை விசுவசியாமலிருந்த யூதர்களைநோக்கி: ஆபிரகாம் இருக்குமுன்னும் நான் இருக்கிறேன் என்று திருவுளம்பற்றினார்.† ஆபிரகாம் கிறீஸ்துநாதர் பிறப்பதற்கு இரண்டாயிரச்சொச்ச வருஷங்களின்முன் இருந்தவர். இவ் ஆபிரகாமுக்கு முன்னும் தாம் இருப்பதாகக் கிறீஸ்துநாதர் சொல்லியபோது யூதர் ஆச்சரியப்பட்டார்கள். ஆயினும், அது பரம உண்மையேயாம். ஏனெனில், கிறீஸ்துநாதர் பிறந்தாரென்று சொல்லும்போது அநாதியாயுள்ள கடவுள் ஓர் காலம் மனிதசுபாவத்தைத் தாங்கினார் என்றதே கருத்து. கடவுளல்ல, கடவுள் எடுத்துக்கொண்ட மனிதசுபாவமே இடையில் உற்பத்தியை அடைந்தது.

* ஞானசித்திப்பத்திரிகை 2-ம் புத். 11-ம் இலக்.
† அருளப்பர் சுவிசேஷம் 3 58.

ஆகையால், கிறிஸ்துநாதருடைய மனிதசுபாவம் இடையிலே உற்பத்தியாயிற்றென்றது அவருடைய கடவுட்டன்மைக்கு விரோதமல்ல. அவரது கடவுட்டன்மை நித்தியமானது; பிறப்பில்லாதது. கடவுட்டன்மையிலே அவர் எங்கும்நிறைந்து ஞானசொரூபமாய் ஆனந்தமாகவே விளங்குகிறார். ஆனால், அவர் மனிதசுபாவத்தை எப்போது தாங்கினாரோ அப்போது அந்த மனிதசுபாவமாகிய திருவுருவம் பிறப்புள்ளதாகவும், மனிதருக்குரிய கிரியையுள்ளதாகவுமே காணப்படவேண்டியது. ஆதலால், கிறிஸ்துநாதருடைய உலகசீவியத்திலே "எங்கும் நிறைந்து ஞானசொரூபமாய் ஆனந்தமாய் விளங்குத"லாகிய "மேற்சொல்லிய கடவுட்டன்மைகளை"த்தேடுவது வியர்த்தம். கடவுள் மனிதனாய்ப் பிறந்தாரெனில், அவருடைய உலகசீவியம் மனிதசுபாவத்துக்குரிய இலட்சணங்களெல்லாங்கொண்டதாகக் காணப்படவேண்டும். அவர் தமது தேவமகிமையை உலகத்தாருக்குக் காட்டும்படியாக விசேஷ வல்லமையுள்ள திருச்செயல்களைச் செய்யவும், அம்மகிமையை விளக்கும்படி தமது திருவாய்மலர்ந்துபேசவும் சித்தமானாலன்றி, நாம் அவருடைய கடவுட்டன்மையை அவரது உலகசீவியத்தினால் மாத்திரம் மட்டிட்டறிந்துகொள்ளக்கூடாமலேயிருக்கும்.

"ஞானசித்தி"நண்பர் கிறிஸ்துநாதருடைய கடவுட்டன்மையை எவைகளிலே தேடினார்? அவருடைய உலகசீவியத்துக்குரிய மனுச்சுபாவச்செயல்களிலேமாத்திரம் தேடினாரென்பதற்கு அவர் கொடுத்த பின்வரும் இரண்டு நியாயங்களும் சாட்சி:

க. கிறீஸ்து என்பவர் மரியாளென்னும் ஒரு பெண்ணின் வயிற்றிற் பிறந்தபிள்ளை. ஆதலால் அவர் பிறப்புடையவராயிருந்தாரென்று தெரிகின்றது. அவர் கடவுளாயிருந்தால் ஒரு மாதாவின் கருவிற்றங்கிப் பிறப்பாரா! கடவுளுக்குப் பிறப்பிறப்புக்களும் உண்டா? எங்கும் பரிபூரணமாய் நீக்கமற நிறைந்த கடவுள் ஒரு மாதாவின் கருப்பையிலே தங்கி மனிதனாய்ப்பிறந்து வாழ்ந்துதிரிந்தாரென்றதைகேட்கும்போதேசிரிப்புக்கிடமாயிருக்கின்றது.

நமது பத்திராதிபருக்கு இலேசாகச் சிரிப்புவந்துவிடுகின்றதென முன்னும் கண்டிருக்கிறோம். இந்தச்சிரிப்பு அவர் கிறிஸ்துநாதரைச் சரியாய் அறியாமையினாலேதான் உண்டாகின்றதென்பதை வாசிப்போர்காண்பார்கள். கிறீஸ்துநாதர் பிறந்தார் என்பதில் அணுவளவும் சந்தேகமில்லை. மெஸ். சந்திரவர்மாவைப்போலும் அறக்கடையான உன்மத்தர்கள்மாத்திரம் அதை அழித்துப் பேசத்துணிவார்கள். கிறீஸ்துநாதரின் பிறப்பைப்பற்றி புத்தியுள்ளமனிதர்மத்தியிலே சந்தேகப்படுகிற எவனும் "நானெங்கே நானெங்கே" என்றுகேட்டுத்திரிந்த மூடசிகாமணிக்கு மூத்தசிகாமணியேயாவான். அதாசிற்க: கிறீஸ்துநாதர் "கடவுளாயிருந்தால் ஒருமாதாவின் கருவிற்றங்கிப் பிறப்பாரா? கடவுளுக்குப் பிறப்பு இறப்புக்களும் உண்டா?" என்கின்றார் நம் பத்திராதிபர். கடவு

னுக்குத் தேவசுபாவத்திலே பிறப்பிறப்புக்கள் இல்லைஎன்பது நிச்சயமென்றோம். ஆயின், கடவுள் மனிதசுபாவத்தைப் பரிக்கிரகித்து மனிதனாய் அவதரிக்கச் சித்தங்கொண்டால் அவர் ஓர் மாதாவின் உதரத்திற்றங்கி அந்த மனிதசுபாவத்தைத் தாங்குவதிலே உள்ள எதிரிடை என்ன? மனிதனாய அவதாரஞ்செய்யவிரும்பினால் ஓர்மாதாவிடத்தினின்று பிறப்பதல்லவோ சுபாவவழி? அப்பால், கடவுள் அணுவுக்கணுவாயும் அண்டத்துக்கு அண்டமாயும் நிற்பவரல்லவா? எங்கும் பரிபூரணமாய் நீக்கமறநிறைந்திருப்பவர் மாதாவின் கருவிலே உற்பவித்த மனித ஆத்துமசரீரங்களிலேயும் நீக்கமற நிறைந்து, அவ்வாத்தும சரீரங்களைத் தம்முடையவைகளாக்குவதிலேயுள்ள நியாய விரோதந்தானென்ன? கடவுள் மனிதனாகப்பிறக்கத் திருவுள்ளத்திற்கொள்ளுவது ஒன்றுமே அதிசயமான தயவு! ஆச்சரியமான அன்பின்பெருக்கம்! அவர் அப்படித்திருவுள்ளத்திற்கொள்ளுவாரானால், மாதாவின் கருப்பையிற்றங்குவதும் மனிதராய்ப்பிறந்து வாழ்ந்து திரிவதும் சிரிப்புக்கல்ல, அத்தியந்த வியப்புக்கும் சதாகால நன்றியறிதலோடுகூடிய ஆராதனைக்குமன்றோ இடமாகும்!

இதிலே நாம் குறிக்கத்தக்க வேறு ஒருகாரியம் யாதெனில், கடவுள் ஓர்மாதாவின்கருவிற்றங்கிப் பிறப்பதைச் சிரிப்புக்கிடம் என்று துணிந்துசொல்லும் நம்பத்திராதிபர், தமது சமயக்கொள்கையின்படி கடவுள் உலகத்திலே பிச்சாடனமூர்த்தியாகத்திரிந்து மனிதருக்கும் பொருந்தாத விபசாரமாதிய ஈனச் செயல்களைச் செய்தாரென்றிருப்பதை எப்படி ஏற்றுக்கொண்டாரென்று தோற்றவில்லை. சிவன் துரோணன்பன்னியிடம் சென்றவிதம், வளையல்விற்றமாதிரி, தாருகாவனத்தில் நடந்ததன்மை முதலிய அருவருப்புக்குரியசெயல்களைப் பத்தியாய்க்கேட்டு நம்புகின்ற நம்நண்பர், கிறிஸ்துநாதர் ஓர் மாதாவின் கருவிற்றங்கியதைப் பொருத்தமில்லாதசெயலென்று கூறுவது ஆச்சரியமல்லவா? மனிதனாய் எழுந்தருளச் சித்தங்கொண்ட கடவுள் ஓர்மாதாவிடத்திலே அந்த மனிதசுபாவத்தைப் பரிக்கிரகம்பண்ணுவதில் உள்ள பொருந்தாமைதானென்ன என்று மீண்டும் கேட்கிறோம்.

கடவுள் ஓர்மாதாவிடத்தினின்று பிறப்பது புத்திக்கு எதிரானதென்றல்ல. ஒத்ததென்றே நம்முன்னோர்களும் எண்ணியிருந்தார்களென்று தோன்றுகிறது. ஓர்மாதாவின் உதரத்திற்றங்கிப்பிறப்பது கடவுளுக்குப் பொருந்தும் என்ற எண்ணம் ஆதிதொட்டு இந்தியாவிலே வேரூன்றி இருந்தமையினால் அன்றோ, விட்டுணுவைப் பரமகடவுளென்று கைக்கொள்ளுகின்ற வைஷ்ணவர்கள் அவ்விட்டுணுவின் பத்து அவதாரங்களை நம்புகிறார்கள். பிறப்பிலி என்று கூறப்படுகிற சிவன்தாமும் சோமசுந்தரபாண்டியன் முதலியோராகப் பிறந்ததாகப் புராணங்கள்கூறுகின்றன. சிவனுக்குப் பிறந்

தநாளும் ஒன்று கூறப்படுகின்றது. "பித்தனார்பிறந்த நாளொடே மூநாளுமத்திமம்" என்பது முதலிய கூற்றுக்களை சகலருமறிந்தவைகள். விட்டுணுவானவர், கிருட்டிணர் இராமர்முதலியோராய்ப் பிறந்தாரேயன்றிச் சிவன் உள்ளபடி மாதாவின் கருப்பையிற்றங்கிப் பிறக்கவில்லை; சுத்தமாயையினால் ஓர் தேகத்தைத் தாமாகச் சிருட்டித்துக்கொண்டு ஒவ்வோர்வேளையில் ஒவ்வொருவருக்கு அருள்செய்யும்படி தோற்றப்பட்டார் என்று நமது நண்பர் கூறினால், அதற்கு வழக்கில்லை. தாம் கடவுளென்று கைக்கொள்ளுகின்ற சிவன் எவ்விதத்திலேயாவது ஓர்சரீரத்தை எடுத்தார் என்றும், அப்படிச்சரீரத்தை எடுத்தது அவருடைய கடவுட்டன்மைக்கு விரோதமல்ல என்றும் நம நண்பர் ஒத்துக்கொண்டாற்போதும். சிவன் சரீரமெடுத்தது கடவுட்டன்மைக்குப் பங்கமல்லவென்றால் கிறீஸ்துநாதர் சரீரமெடுத்ததும் கடவுட்டன்மைக்குப் பங்கமல்ல. சரீரமெடுத்தது பங்கமல்லவெனில், அச்சரீரத்தைப் பரிசுத்தமுள்ள ஓர்மாதாவுதரத்திலேயுள்ள மாயையினின்றெடுத்தென்ன, வேறிடத்திலேயுள்ள மாயையினின்றெடுத்தாலென்ன, இதிலே வித்தியாசம அற்பமேயாம்.

ஆகவே, கிறிஸ்துநாதர் பிறந்தார் என்பதிலே கடவுட்டன்மைக்கு அற்பமேனும் விரோதமில்லை. பத்திராதிபர் கொடுத்திருக்கிற இரண்டாம் நியாயமும் அவரது முதலாம நியாயத்தைப் போன்றதுதானே:

உ. கடவுள் உண்டுடுத்து உறங்கி வருந்திக் களித்துத்திரிபவரல்லர். கிறீஸ்து உலகத்திலே அவைகளெல்லாஞ்செய்து திரிந்தாரென்று தெரிகிறபடியால், அத்தன்மைகளைக்கூறும் அவருடைய சரித்திரமே அவர் ஒரு மனிதர் என்பதைக் காட்டுகின்றது.

சடையில்லா நியாயம் கிறீஸ்துநாதர் உண்டுடுத்து உறங்கி வருந்திக் களித்துத் திரிந்ததாகியதன்மைகள் அவருடைய மனித சுபாவத்தையே காட்டுகின்றன. கிறிஸ்துநாதர் நம்மைப்போல ஓர் மனிதனாய்ப்பிறந்து வந்தார் என்றது இவைகளினாலேதான் அறியப்பட்டது. இவைகளைக் கடவுட்டன்மைக்கு அத்தாட்சியாக ஒருவரும் எடுத்துச்சொல்லார். ஆயின் கிறிஸ்துநாதருடைய கடவுட்டன்மைக்கு வேறு அத்தாட்சிகளவேண்டும். அவ் அத்தாட்சிகள்போதியமட்டும் அவர்திருச்சரித்திரத்திலே காணப்படுகின்றன. அவைகளிற் சில "யேசுநாதசுவாமியின் தேவத்துவவிளக்கம்" என்னும் நூலிலே விபரிக்கப்பட்டிருக்கின்றன. இவ்விஷயத்தைத் தீரவிசாரிக்க விரும்புவோர் அந்த நூலைப் பார்க்கவேண்டியது.

## II. ஓர்கேள்விக்கு மறுமொழி.

இதுவரையுஞ் சொன்னவைகளைச் "சத்தியவேத பாதுகாவலன்" பத்திரிகையிலே அச்சிட்டபின்பு, 'ஞானசித்தி"ப் பத்திரி

கையிலே * ஒரு கடிதர் வெளிப்பட்டு, நம்மிடத்தில் ஒரு கேள்வி கேட்டார். அக்கேள்விக்கு இப்போது விடைசொல்லுவோம். அவ்விடையினால் நாம் விளக்கத்தொடங்கிய விஷயங்கள் அதிக தெளிவாகும்.

கடிதர் "கிறிஸ்துவினிடத்திற் கடவுட்டன்மை இருந்ததா? மனிதத்தன்மையிருந்ததா?" என்று கேட்கிறார். இரண்டும் ஓரே ஆளிற்சேர்ந்திருக்கின்றன என்று நாம் சொல்லியதைச் சரியாய் விளங்கிக்கொள்ளாததினாலேதான் இக்கேள்வி பிறந்தது. கிறிஸ்துநாதரானவர் உலகுக்கு அருள்செய்யத் திருமேனிகொண்டு எழுந்தருளிய சற்குருவாம் என்பது சத்தியவேதபோதனை. (இதைச் சைவர் உடனே ஏற்றுக்கொள்ளவேண்டியதில்லை. இதற்குரிய நியாயங்களைப் பாரபட்சமில்லாமற் பரிசோதிப்பதே அவர்கள் கடன்.) கடவுள் மனிதனாய்த் திருமேனிகொண்டார் என்றபோதே, தமக்கு எப்போதும் உள்ளதாகிய தேவசுபாவத்தோடு மனித சுபாவமும் ஒன்று அவராற் பரிக்கிரகிக்கப்பட்டதுஎன்றதாயிற்று. தேவசுபாவம் அவருக்கு இயல்பானதொன்று. அது மாறவுங்கூடாது. அதிலே வேறொன்று சென்றடைந்து கலக்கவுங்கூடாது. அச்சுபாவம் அப்படியேயிருக்க கடவுளானவர் வேறோர்சுபாவத்தைத் தம்முடையதாக்குவதிலேயோவெனில் நியாயவிரோதமில்லை. முன் சொல்லியபடி அச்சரியத்துக்குமாத்திரம் இடமுண்டு.

இவ்விதமாகக் கடவுள் வேறொரு சுபாவத்தைப் பரிக்கிரகிக்குங்கால் அவர் ஒருவராயிருக்கச் சுபாவம்மாத்திரம் இரண்டு உள்ளதாகும். இங்கே நாம் "அவர்" என்றது "ஆள்" அல்லது நாமதாரத்தை. "ஆள்" என்று சொல்லும்போது மனிதருள்ளேபோல சரீரமும் ஆத்துமமுமுள்ள ஓர் தனிமனிதனை (அல்லது தர்க்கபாஷையிலே "வியக்தி"யை) நாம் கருதவில்லை. இங்கே ஆள் என்றது, தெய்வீக முயற்சிகளுக்கு வினைமுதலாயிருக்கின்ற தன்மையையேயாம். ஆகவே, கிறிஸ்துநாதராகிய ஆள் தேவ ஆளேயாவர். அவரிடம் உள்ள சுபாவங்களோ, அவருக்கு நித்தியமாயுள்ள தேவசுபாவமும், இம்மையிலே அவர் உலகத்தாருக்கு உபகாரஞ்செய்யும்படி எடுத்தருளிய மனிதசுபாவமும் என இரண்டாகும்.

இதைவிளங்காமலே "ஞானசித்திக்" கடிதர்: "மனிதரிடத்து மனிதத்தன்மையும் கடவுளிடத்துக் கடவுட்டன்மையுமேயிருக்கும். ஒன்று ஒன்றாக மாறவாவது ஒன்றில் மற்றொருதன்மையிருக்கவாவது கூடாதென்று நாம் நியாயவாம்பினிற்கின்றோம்" என்றார். நாமும் இந்தவரம்பிலேதான் நிற்கின்றோம் என்றறிவது அவருக்கு மகிழ்ச்சியாகும். யேசுநாதசுவாமிக்கு எப்போதும் உள்ளதாகிய தேவசுபாவம் மனிதசுபாவமாய் மாறிப்போயிற்று என்ப

* ஞானசித்தி 2-ம் புத். 13-ம் இலக்.

து சத்தியவேதபோதகமல்ல. அப்படி மாறிப்போவதுங்கூடாது. அன்றியும், தேவசுபாவத்திலே மனிதசுபாவந் தங்கிற்று என்றதும் கொள்கையல்ல. தேவசுபாவத்திலே வேறொன்றும் தங்குதல் கூடாது. அப்படியே மனிதசுபாவத்திலே தேவசுபாவம் தங்குதலும் கூடாது. பரிசுத்த ஆன்மாக்களிடத்திலேதானும் தேவசுபாவம் உண்டாகலாம் என்று நம்பத்தகுவதல்ல. "ஞானசித்தி"க் கடிதர் இவ்விஷயத்திலே சொல்லியது முழுப் பொய். அதாவது: "பேய்பிடியுண்டானிடத்து விளங்கும் விசேடச்செயல் பேயின் செயலாமாறு........போலப் பரிசுத்தான்மாக்களிடத்தே காணப்படும் விசேடச்செயல்கள் அவர்களிடத்து விளங்கும் கடவுட்செயலாம்." வெறுமனிதன் ஒருபோதும் கடவுளாகக்கூடாது என்னும் இச்சத்தியத்தை நம் இந்துசமயத்தவர்களெல்லாம் மனதில் இருத்திக்கொள்ளுவது மிகநன்று. மனிதனின் ஆட்தன்மையானது தேவ ஆட்தன்மையை அடைவதென்பது ஒருபோதுங் கூடாத அசம்பாவிதம். தேவ ஆட்தன்மையும் அப்படியே மனித ஆட்தன்மையை அடைதல் கூடாது. தேவ ஆளானவர் தமது அள விறந்த வல்லமையினால் மனிதசுபாவத்தைத் தம்முடையதாக்குதல் மாத்திரங்கூடும்.

இனி, கடவுள் மனிதசுபாவத்தைப் பரிக்கிரகித்தாரென்பது புத்திக்கு ஒக்குமா? எங்கும் பரிபூரணமாய் நீக்கமறநிறைந்திருப்பவராகிய கடவுள், ஓர் மாதாவின் கருவிலே உற்பவித்த ஆத்தும சரீரங்களிலேயும் நீக்கமற நிறைந்து அவ்வாத்தும சரீரங்களைத் தம்முடையவைகளாக்குவதிலேயுள்ள நியாயவிரோதந்தானென்ன என்றோம். இதை எடுத்துச்சொல்லி நமது கடிதர் கூறுவது:

*மரியாள் மகவாய்ப்பிறந்த ஆத்தும சரீரங்களைக் கடவுள் தம்முடையவையாகக்கொண்டுநின்று அவ்வாயிலாக உலகுக்கு உபகாரஞ்செய்தார் என்பது போதனையாயின் அதனை மறுக்க நமக்கு நாவில்லை. அதுவே நமது கூற்று.*

என்கிறார். கடவுள் ஆத்தும சரீரங்களைத் தம்முடையவையாகக் கொண்டாரென்றதுதான் சத்தியவேத போதனை. தம்முடையவையாகக் கொண்டபோது, தாமே அவ்வாத்தும சரீரங்களையுடைய ஆள் (ஆள் என்றது முன் வெளிப்படுத்திய அர்த்தத்தின்படி) ஆகிறார். ஆகவே கிறீஸ்துநாதரிடத்தில் தேவ ஆளேயன்றி மனித ஆளில்லை. எனவே, கிறீஸ்துநாதர் தேவனேயாவார். இதுதான் நம் கடிதரது கூற்றாயின் அவரும் கிறீஸ்துநாதரின் பக்தர்களுள் ஒருவராகத் தடையில்லை.

கடவுள் மரியம்மாளிடம் பிறந்த ஆத்தும சரீரங்களைத் தம்முடையவைகளாக்கியிருக்கலாமென்று ஒத்துக்கொண்ட நம் கடிதர் அதே மூச்சில் சொல்லுவது இது:

கிறிஸ்து என்பவர் ஒரு பெரியவராயிருக்கலாம். அவர்காலத்திருந்த அத்தேசத்தார்க்கு அருள்செய்யத் திருவுளங்கொண்ட கடவுள், அவரிடத்தே தமது அருளைநிறுத்தி அத்தேசத்தார்க்கு அருள்செய்திருக்கலாம்.

இத்தேசங்களிலே திருஞானசம்பந்தர் முதலாயினோரிடத்து அவ்வாறு நிகழ்ந்த உண்மையும் நமக்கு அங்கீகாரமன்றோ. அன்றியும், அருக கபில கணாதாதியரையும் முதல்வன் அதிட்டித்து மதபோதனைகள் செய்வித்தனர் என்பதும் நம்மத சம்மதமேயாம். அவர்போல்வாரொருவர் கிறிஸ்துநாதர் என்பதே நம்கொள்கை.

இப்போது கடிதர் சொல்லியவைகள் முன்சொல்லியதற்கு முழுதும் மாறுபடுகின்றன. கடவுள் மனித ஆத்தும சரீரங்களைத் தம்முடையவைகளாக்கிக்கொண்டு எழுந்தருளினாரென்றால் அவ்வாறு எழுந்தருளிய திருமூர்த்தம் மனிதசுபாவத்தைத் தாங்கிய சாட்சாத் கடவுளேயல்லாமல் வேறல்ல. ஆயின், ஒருபெரியவரிடத்தே தமது அருளை நிறுத்தி ஓர் தேசத்தார்க்கு அருள்செய்வதென்றால் அது முழுதும் வேறான ஒரு காரியமல்லவா? திருஞானசம்பந்தர் முதலானோர் நாமும் பெரியவர்களென்றே வாழ்த்துகிறோம். அவர்களிடத்தில் தேவ அருள் விசேஷவிதமாய்ப் பதிந்திருந்ததென்பதற்கு அன்னோர்கள் அருளிச்செய்த தேவார திருவாசகங்கள் சிறந்த சாட்சியாகின்றன. ஆனால் தேவ அருள்பெற்ற ஓர் பெரியவர் உலகில் எழுந்தருளுவதும், கடவுள்தாமே மனித ஆத்துமசரீரங்களைத் தமமுடையவைகளாக்கிக்கொண்டு ஓர் அற்புதத் திருவடிவமாய் எழுந்தருளுவதும் ஒன்றுதானா? நமது கடிதரும் பிறரும் இதைச் சற்றே யோசிப்பார்களாக.

கிறீஸ்துநாதரானவர் "மானுடசட்டைசாத்திய" கடவுளே என்பதிலே புத்திக்கு விரோதமில்லாமலிருப்பினும் இந்த உண்மையைப் புத்தி கிரகித்துக்கொள்வதோ கூடாததாகின்றது. இது சிருட்டிக்கப்பட்ட சகல புத்திகளுக்கும் மேலான ஒரு அதிசயம் என்பதை யார் மறுத்துரைக்கக்கூடும்? இந்த அதிசயத்தைத்தியானித்தனரோ வீரமாமுனிவரும்:

> பாரமேவும் பழிநீப்பப் பகர்ந்தடங்காப் பரிவுள்ளிச
> சீர்மேவுந் திருவுளத்தைத் தெளிந்தமரருளம்பனிப்ப
> உருவில்லான் உருவாகி உலகிலொரு மகவுதிப்பக்
> கருவில்லாக் கருத்தாங்கிக் கன்னித்தாயாயினையே

என்று மரியம்பாளை விளித்துப்பாடினார்! (திருக்காவலூர்க்கலம்பகம்.) ஒரு சமயத்திலே புத்திக்கிரகணத்துக்கு மேற்பட்டதெல்லாம் நம்பக்கூடாததென்று முடித்துவிடுவது நம் சைவநண்பர்களுக்கும் உடன்பாடாகாது. "நாவினாலுரைப்பதற்கும் மனதினால் உணாவதற்குமரிய சர்வ ஞானசாகரரான மெய்க்கடவுள் அருளிய வேதத்திற் கூறப்படுவன ஆங்காங்குப் பலவிடத்தும் மானுஷிய யுத்திக்கெட்டாமலிருக்கும். அப்படியெட்டாதிருப்பது அவசியம்.

ஏனெனில், எத்துணை அறிவுகூரினும் மனுஷன் கிஞ்சித்துவஞான முடையனன்றிப் பிறிதன்று. கிஞ்சித்துவஞானங் கடவுளையும் அவரது லட்சணங்களையும் அளவிட்டு முற்றறியாது" எனச் "சைவமகத்துவ" நூலாசிரியர்கூறியது ஓர் மகா உண்மை. ஆகையால் கடவுள் மனிதனுனார் என்பது புத்திக்கெட்டாத இரகசியமாயிருக்கிறதே என்றால், அவ்விதம் எட்டாதிருப்பது, அவர் உள்ளபடியே மனிதனுனாரென்று காட்டத் திறம்பாத நியாயங்கள் உள்ளபோது அதை நம்பாதிருப்பதற்கு ஓர் நியாயமல்ல.

## III. மனித அவதாரத்தின் நோக்கம்.

"ஞானசித்தி"ச்சுடிதர் "மரியாள் மகவாய்ப்பிறந்த ஆத்தும சரீரங்களைக் கடவுள் தம்முடையவையாகக்கொண்டுநின்று அவ்வாயிலாக உலகுக்கு உபகாரஞ்செய்தார் என்பதுபோதனையாயின் அதனை மறுக்க நமக்கு நாவில்லை அதுவே நமது கூற்று" என்று சொல்லி, கிறீஸ்துநாதராகிய திருவுரு கன்னிமரியம்மாளிடத்தில் உற்பவித்த மனித ஆத்துமசரீரங்களைத் தம்முடையவையாகக் கொண்ட கடவுளே என்றதை ஒத்துக்கொண்டார். ஆனால், "ஞானசித்தி"ப்பத்திராதிபர் கிறிஸ்துநாதரின் கடவுட்டன்மையை எவ்விதத்திலும் மறுத்துப்போடவேண்டுமென்று எழுந்தபடியால் அதற்கு எதிராக ஒரு வீண்நியாயத்தைச்சொன்னார்.

௩. கிறிஸ்து கடவுள்தான்; ஆனால் மனிதரை இரட்சிக்கிறதற்காக இப்படியெல்லாம் பிறந்து உண்டு உடுத்துக் களித்து வருந்தித் திரிந்தார் மரித்தார் என்று சொல்லுகிறார்கள். விரும்பிய மாத்திரையே எல்லாம் செய்யத்தக்க சர்வசாமர்த்தியமுடைய கடவுள் இந்தச் சொற்பகாரியத்துக்காக இப்படிச்செய்ய ஆவசியமில்லை. அவர் நினைத்தவுடனேயே எல்லாப் பாவமும் நீங்கிவிடலாம். அதைவிட்டு ஏன் பிறந்திறந்து அவதிப்படவேண்டும். ஆதலால் இப்படிச்சொல்லுவது பொருத்தமற்ற கதையாம்.

கடவுள் "விரும்பிய மாத்திரையே எல்லாம் செய்யத்தக்க சர்வ சாமர்த்தியமுடையவர்" என்பது நிச்சயம். ஆனால், எல்லாம் செய்யத்தக்க சர்வசாமர்த்தியமுடையவர் "ஞானசித்தி"ப்பத்திராதிபர் நினைத்தபடிமாத்திரந்தான் செய்யவேண்டும்; வேறுவிதமாக ஒருகாரியத்தை நடப்பிக்கப்படாது என்று ஒருநியதம் உண்டா? மெய்யானகடவுளுக்கும் விதிவசமுண்டா? சிவன் விதிவசத்தினால் ஐயமேற்றுண்டார என்று தமிழ்நூல்களிலே கேட்கப்படுகின்றது என்பது மெய்தான். அதனால் சிவன் கடவுளல்லர் என்று வருமேயொழிய, மெய்யானகடவுள் யாராலேனும் சட்டுப்படத்தக்கவர் என்றுவராது. ஆகையால், "ஞானசித்தி"யார் சொல்லுகிறபடி கடவுள் "நினைத்தவுடனேயே எல்லாப்பாவத்தையும்நீக்கி" விடாமல் தம்முடைய அன்பின் பரப்பையும் பாவத்தின் அளவில்லா அவலட்சணத்தையும் காட்டுதற்காகத் தாமே மனிதனுய்வந்து

பாடுபட்டு பாவத்தைநீக்கும்வழியை ஏற்படுத்தத்திருவுளங்கொண்டால், ஏனிப்படிச் செய்தீர் என்று கேட்கத்தக்கவர்கள் ஒருவருமில்லை. அவர் தாமே தெரிந்துகொண்டருளியவழியை மனிதர் உணர்ந்து அவரைச் சதாகாலமும் போற்றுவதே செய்யத்தகுவது.

நம்முடைய "ஞானசித்தி" நண்பருடைய எண்ணங்கள் உணர்ச்சிகள் எப்படியிருந்தாலும், மெய்யான பத்திமான்களான சைவர் கடவுள் மனிதருக்காக மனிதனைப் "பிறந்து உண்டு உடுத்து உறங்கிக் களித்து வருந்து"வதிலே ஒரு பொருந்தாமையையுங் கண்டாரில்லை. காணுதற்கு மாறாக அவர்கள் கடவுள் அப்படியே ஒருகாலம் வந்துள்ளவர் என்று எண்ணியும் எழுதியுமிருக்கிறார்கள் ஒரு உதாரணமாத்திரம் இங்கு காட்டுவோம். "போற்றிப்பஃறொடை" என்றநூல் சைவசித்தாந்த சாஸ்திரங்கள் பதினான்கில் ஒன்று. அந்தநூலில் எழுதியிருக்கிறதாவது :

என்றும்

இறவாதவின்பத் தெமையிருத்தவேண்டிப்
பிறவாமுதல்வன்பிறந்து— நறவாருந்
தாருலாவும்புயத்துச் சம்பந்தநாதனென்று
பேரிலாநாதனொரு பேர்புனைந்து—பாரோர்தம்
உண்டியுறக்கம் பயமின்பமொத்தொழுகிக்
கொண்டுமகிழ்ந்த குணம்போற்றி

என்றிருக்கிறது. இதிலே பிறவாமுதல்வனாகிய கடவுள் மனிதராகிய எம்மை இறவாத இன்பமாகிய மோட்சகதியில் இருத்தும்படியாகச் சம்பந்தநாதனென்னும் ஒரு மனிதனாகப்பிறந்து ஒரு மனிதப் பேரும்தரித்து, மனிதரைப்போலவே உண்டு உறங்கி பயந்து இன்புற்று சஞ்சரித்தார் என்றுசொல்லியிருக்கிறதை நமது பத்திராதிபர் இன்னும் வாசித்ததில்லைப்போலும். கடவுள் எப்படிப்பிறக்கலாம், உண்டுடுத்து வருந்திக் களித்துத் திரியலாம் என்று வீணியாயம்பேசும் நமது பத்திராதிபருக்கு விடையாக, கடவுள் அப்படிப் பிறந்தார் உண்டு உடுத்தி வருந்திக் களித்தார் என்று இந்த மேற்கோளிலே தெளிவாகச் சொல்லியிருப்பதொன்றுமே எமக்குப் போதும். அப்படிப் பிறந்த கடவுளானவர் சம்பந்தநாதனென்றுபேர் புனைந்தாரோ என்பதைப்பற்றி நாம் இங்கே ஆராயத்தேவையில்லை. இந்தியாவிலே சம்பந்தநாதனென்று ஒருவர் தமதுசெய்கைகளாற் தம்மைக் கடவுளாகக் காட்டவுமில்லை, தம்மைக் கடவுள் என்று சொல்லவுமில்லை, மனுக்குலத்தாரனைவரும் இறவாதவின்பத்தை அடையும்படியான யாதொன்றைச்செய்யவுமில்லை. அப்படிச் செய்தவரும், காட்டியவரும், பேசியருளியவரும் உலகசரித்திரப் பரப்புமுழுதிலேயும் ஒருவர்மாத்திரமேயுண்டு. அவர்தாம் கிறீஸ்துநாதர். இந்தவிஷயம் பின்னர்வரும். நாம் இங்கே "போற்றிப்பஃறொடை"யிலிருந்து மேற்கோளை எடுத்தது அந்தநூல்

கிறிஸ்துநாதரைத்தான் மனிதனாய்ப் பிறந்துவந்தகடவுளாக ஏற்றுக்கொள்ளுகின்றது என்று சொல்லுவதற்கல்ல, கடவுள் மனிதரை நன்மைப்படுத்துவதற்காக **ஒரு மனிதனாய்ப் பிறந்துவரலாம்** என்ற உண்மை "ஞானசித்தி" யாருக்கு அரோசகமாகயிருப்பது போல மெய்யான சைவ ஆன்றோர்களுக்கு அரோசகமாயிருக்கவில்லை எனக் காட்டுவதற்காகவே என்றதை வாசிப்போர் மனதில் வைத்துக்கொள்ளுவார்களாக.

மேலும், மனிதரை இரட்சிக்கிறது ஒரு "சொற்பகாரியம்" என்றும் "இந்தச் சொற்பகாரியத்துக்காக" கடவுள் மனிதனாய்ப் பிறக்க அவசியமில்லையென்றும் பத்திராதிபர் சொல்லுகிறார். கடவுள் மனிதனாய்வராமல் வேறுவகையாயும் மனிதரை இரட்சிக்கக்கூடுமென்று முன்னும் சொன்னோம். ஆனால் கடவுள் எந்த வகையாக மனிதரை இரட்சிக்க எடுத்துக்கொண்டாலும், மனிதரை இரட்சிக்கிறது "சொற்பகாரியம்" அல்ல. அது தான் உலகம் முழுதிலும் மகா பெரியகாரியம். அநேகர் தங்கள் இரட்சணிய அலுவலைச் சொற்பமாக மதிக்கிறதினாலேயே மனிதரை இரட்சிக்க எழுந்தருளியவராகிய கிறீஸ்துநாதரை ஏற்றுக்கொள்ளாமல் உதரபோஷணைத்துக்குரியவைகளை மாத்திரம் விரும்பிச் செய்துகொண்டிருக்கிறார்கள் என்பது கவனிக்கத்தக்கது.

ஈற்றில் ஒருகுறிப்புச் சொல்லுவோம்: கடவுள் "நினைத்தவுடனேயே எல்லாப்பாவமும் நீங்கிவிடலாம்" என்கிறார் நம்முடைய நண்பர். நினைத்தவுடனே பாவத்தை நீக்காமல் வேறுவகையாய் நீக்குவது எல்லாம் "பொருத்தமற்றசதையாம்" என்றும் நாம் விளங்கவைக்கிறார். இவருடைய சைவசித்தாந்தக்கொள்கையின்படி சிவன் எப்படிப் பாவத்தை நீக்குகிறார்? அவர் பாவத்தை நீக்கும்வழி பொருத்தமுள்ளகதையா? இதைச் சற்றேபார்ப்போம். சைவகொள்கைப்படி உலகத்தில் புல் பூண்டுகள், மரஞ்செடிகள், மிருகாதிகள், மனிதர் எனும் சகலவஸ்துக்களிலும் நாசிவன்களாகிய ஆத்துமாக்களை அடைபட்டிருக்கின்றன. இந்த ஆத்துமாக்கள் இப்படிப் புல்பூண்டு ஆகிய சரீரங்களில் அடைபட்டிருப்பது ஏன் என்றுகேட்டால், இவைகளை அநாதியாகப்பற்றியிருக்கிற பாவ அழுக்கை (மலத்தை)ப் போக்குவதற்காகவே என்கிறார்கள். இவ்வாத்துமாக்கள் எவ்வளவுகாலம் அடைபட்டிருந்துவருகின்றன என்றால், அநாதியாகவே வெவ்வேறுசரீரங்களிலே அடைபட்டிருந்துவருகின்றன என்று மறுமொழி கொடுப்பார்கள். தங்களுடைய குற்றமில்லாமல் அநாதியாகவே மலத்திற் சிக்குண்டிருக்கிற ஆத்துமாக்களை இப்படிப் பிறவிகளிலேவிட்டு உலைத்து இவைகள் நித்தியமாய் "சுழல்கறங்கு பம்பரமதென்ன நீள் பிறவிச்சுழிக்குளே பட்டுழன்று" இதுகாலவரையிலும் மலம்போகாமல் "இன்னும் எத்தனையெத்தனை சென்மமோ" என்று ஏங்கிப் பரிதபிக்கவிட்டுக்

கொண்டிருக்கிறது யார் என்ருல் சிவபெருமானே என்பார்கள். இவ்விடத்திலே நமது பத்திராதிபருடைய கேள்விக்கு இடம் வருகிறது. 'சிவன் நினைத்தவுடனேயே எல்லாமலமும் நீங்கி விடாதா? கடவுள் விரும்பியமாத்திரையே எல்லாஞ்செய்யத்தக்க சர்வசாமர்த்தியமுடையவரல்லவா? சைவகொள்கைகளின்படி மல பந்தமென்னும் "மருளினை அருளால்வாட்டி" உடனேயே முத்தி யடைவிக்கும் வல்லமையும் சிவனுக்கு உண்டென்றிருக்கிறதே (சிவஞானசித்தியார் 5; 9) அவ்வல்லமையிருக்குமானுல் உலகத்தில் எழுவகைப்பிறப்பும் நால்வகைத்தோற்றமும் எண்பத்துநான்கு நாருயிரம் பிறவிபேதமுமான இந்த வில்லங்கங்களேன்? எண் ணில்லாக்கோடியுயிர்களாகிய ஆத்துமாக்களெல்லாம் "ஏன்பிறந்து இறந்து அவதிப்படவேண்டும்? ஆதலால் இப்படிச்சொல்வதே பொருத்தமற்றகதையாம்" என்றுசொல்லக் கிறீஸ்தவர்களுக்கே நல்ல நியாயமிருக்கிறது.

கிறீஸ்தவர்களுக்கே நல்ல நியாயமிருக்கிறது என்கிறோம். ஏனெனில் சைவகொள்கைப்படி உலகமென்றொன்று இருப்பதற் கும் ஆத்துமாக்களைப் பந்திக்தமலத்தைத்தவிர வேறுகாரணமில்லை. இவைகள் தங்கள் குற்றத்தினுலல்ல, தங்களுக்கு மேற்பட்ட ஏதோ ஒரு வல்லமையினுல் அநாதியாகவே மலத்திற் சிக்குண்டிருக்கின் றன. மலச்சிக்கை அறுப்பதற்கு ஏகவழி சிவனுடைய அருள் நோக்கு என்றும் சொல்லப்படுகிறது. இப்படிப்பட்ட அருள் நோக்குக்கு சரீரம் தடையாகுமேயொழிய உதவியாவதில்லை. இவ்வாறெல்லாமிருக்கச் சிவன் ஆத்துமாக்களுக்கு அருள்நோக்கஞ் செய்து அவைகளை முத்தராக்குவதற்குப்பதில் (சித்தாந்தக்கொள் கைப்படி) உலகத்தையும் சரீராதிகளையும் உண்டாக்கி இவை களில் ஆத்துமாக்களைப் பந்தித்துவிடுவதினுல் அவைகள் வீணே நித்தியகாலமாய்ப் பிறந்திறந்து உழன்றுகொண்டிருக்கும்படி நேரிடுகிறது. அநாதியானதொன்றுக்கும் முடிவிருக்கக்கூடாதாத லால் ஆத்துமாக்கள் அநாதியாய்க்கொண்டிருக்கின்றதாகிய பிறந் திறக்கும் தன்மைக்கும் முடிவிராது. அவைகள் என்றென்றைக் கும் பிறந்திறந்துகொண்டேயிருக்கவேண்டும். ஆகவே சிவன் கருணை யினுல் ஆத்துமாக்களின் மலபந்தத்தைப்போக்கத் திருவுளங்கொ ண்டார் என்று சொல்லுகிற சைவசித்தாந்தமே, அவர் அதைப் போக்குகிறவழியாய்ப் போக்காமல் ஆத்துமாக்களை நித்தியமாய் அலைக்கழித்துக்கொண்டிருக்கிறுரென்றும் சொல்லுவதாகின்றது.

சத்தியவேதகொள்கையிலே இப்படிப்பட்ட பொருத்தமின்மை நமக்கு இடமில்லை. கடவுள் அன்பினுல் மனிதரையுண்டாக்கி அவர்கள் தங்கள் புண்ணியநடக்கைகளுக்குச் சம்பாவனையாய்ப் பரகதியை அடைந்துகொள்ளும்படியாகப் பரீட்சைத்தலமாகிய இவ்வுலகத்தில் விட்டிருக்கிறுர். உலகமும் அதிலடங்கிய மற்றச்

சராசரங்களும் மனிதருக்காக உண்டாக்கப்பட்டன. மனிதர் பரகதியை அடையும்வழியைப் பாவத்தினால்விட்டு அகன்றுபோன போதிலும், அவர்களைக் கடவுள் கைவிட்டுவிடவில்லை. அவர்களுடைய பாவத்தினால்வந்த தேவநிந்தைக்குப்பொருந்திய பிராயச்சித்தத்தைத் தாந்தாமே செய்தருளவும், சிதறிப்போன ஆடுகளைப்போல சத்தியமார்க்கமாகியவழியைவிட்டு விலகிப்போயிருந்த மனுக்குலத்துக்குத் தாந்தாமே தமது முன்மாதிரிகையினாலும் திருப்போதகத்தினாலும் வழிகாட்டும் நல்லிடையனாய் எழுந்தருளவும் திருவுளமானார். தாம் மாறுமலிருந்துகொண்டு மனிதரையும் உலகத்தையும் படைத்தவராகிய அனந்தபரிபூரணகடவுள், மாறுமலேயிருந்துகொண்டு மனிதருக்காக மனிதனாகவும் வந்தருளினார்.

இப்போது சுருக்கமாய்ச்சொல்லிய இக்கொள்கையிலே பொருத்தமில்லாமையொன்றையும் எடுத்துக்காட்டமுடியாது. ஆனாலும் இதிலே சொல்லப்பட்ட சம்பவங்களைப்பற்றியோ சைவராதியோர் தர்க்கமிடக்கூடும். இன்னது உள்ளபடியே நடந்ததுதானோ அல்லவோ என்று சம்பவங்களைப்பற்றித் தர்க்கமிடுவது ஒன்று; இன்னவிதமாய்ச் சொல்லப்படும் இவைகள் தம்முட் பொருந்துகின்றனவோ என்று காண்பது வேறொன்று. நாம் விபரித்தவைகள் தம்முட் பொருந்துகின்றன என்பதை, வேறுவிஷயங்களில் நம்மோடு சற்றுமிணங்காத சிநேகிதர்களும் ஒத்துக்கொள்ளுவார்கள் என்பதே எமது துணிபு.

## IV. கிறிஸ்துநாதரை உலகம் விசுவசித்ததா?

கடவுள் மனிதனாய்ப்பிறந்ததற்கு ஏற்றதும் நமது புத்திக்குப் பொருந்தியதுமான மோக்ஷம் ஒன்று உண்டென்று காட்டினோம். "ஞானசித்தி" யார் மனிதனாய் அவதரித்த கடவுளைப்பற்றி வேறொரு சந்தேகத்தைச் சொல்லுகிறார். அதுதான் அவருடைய நாலாம் நியாயம்:

ச. அவர் பிரசங்கஞ்செய்து திரிந்தும் அவருடைய பிரசங்கத்தை அக்காலத்துச்சனங்கள் ஏற்கவில்லை. எல்லாரையும் தம்முடைய சொல்லைக்கேட்டு நடக்கவேண்டுமென்னும் அவருடைய எண்ணம் பலிதமாகவில்லை. அவர் கடவுளாகவிருந்தால் தம்முடைய எண்ணத்தின்படி அவர்களுடைய அறிவை வசப்படுத்தி யாவரையும் ஒப்புக்கொள்ளச்செய்திருக்கலாம். நினைத்தகாரியத்தை முடித்துக்கொள்ள இயலாதிருப்பது மனித சுபாவம். நினைத்த காரியத்தை அவ்வாறே முடிப்பது கடவுளுடையதன்மை. கிறிஸ்துவின் எண்ணம் முடிவுபெறாமையால் அவர் கடவுளல்லர், மனிதரேயென்பது ஸ்பஷ்டமாக விளங்குகின்றது.

மானுடச்சட்டைசாத்திவந்த கடவுள் தாம் நினைத்தகாரியத்தை முடிக்கமாட்டாமற்போனார் என்கிறார் "சித்தி"யார். கடவுள் நினைத்தகாரியம் என்னவென்றதை நமது நண்பர் அறிந்துகொண்டாரா? அக்காரியத்தை அறியாவிட்டால், அது சித்தியாகவில்லை

என்று எப்படித் துணிந்துசொல்லலாம்! நம் பத்திராதிபர் யேசுநாதசுவாமியுடைய திருச்சரித்திரத்தைக்கூறுகிற சுவிசேஷ புத்தகங்களைச் சரியாய்ப் படிக்கவில்லை. படித்திருந்தால் அவதரித்த கர்த்தர் அவைகளிலே தமது திருநோக்கத்தைப்பற்றித் தெளிவாய்ச் சொல்லியிருக்கிறதைக் கண்டிருப்பார்; கண்டிருந்தால இப்படி எழுதியிரார்.

கிறீஸ்துநாதர் தமது சீவியகாலத்திலே உலகத்தை மனந்திருப்பக் கருதவில்லை. தாம் மனித ஈடேற்றத்துக்காக மரித்து பரலோகத்துக்கு எழுந்தருளினபின்புதான் நன்மனமுள்ள ஆத்துமாக்களையெல்லாம் தம்மிடமாய்க் கவர்ந்திழுத்துக்கொள்ளுவோம் என்று வெளிப்படையாய்ச் சொல்லுகிறார். (யோ. 12; 32) அவர் பன்னிரண்டு சீஷரைத் தெரிந்தெடுத்து அவர்களுக்குக் "பரலோக இராச்சியத்தின் இரகசியங்களை"க் கற்பித்தது என்னத்திற்காக? தாம் தமது தெய்வீகத்தைக்காட்டி உயிர்த்தெழுந்தபின் அவர்கள் மூலமாக உலகத்துக்கு ஈடேற்றவழியைப் பிரசங்கிப்பதற்காகவேயாம். மனித ஈடேற்றத்துக்குரியவைகளெல்லாம் முடிந்தபின்பே அவ்வீடேற்றத்தைப் பிரசங்கிக்கிறவர்கள் பூலோகத்தின் எத்திசைக்கும்போய்ச் சகல சிருஷ்டிகளுக்கும் அதைக்கூறவேண்டும் என்றது கிறீஸ்துநாதருடைய திருச்சித்தமாயிற்று. திருச்சுவிசேஷங்களை மேலோட்டமாய் வாசித்துப்பார்க்கிறவர்களுக்கும் இது தெரியாமற்போகாது. நமது பத்திராதிபர்மாத்திரம் இதை அறியாமல், கிறீஸ்துநாதர் தமது சீவியகாலத்திலே சனங்களை மனந்திருப்பப் பிரயாசப்பட்டும் இயலாமற்போனார் என்று போலிநியாயம் சொன்னார். கிறீஸ்துநாதர் பிரசங்கித்த சாரமெல்லாம் "பரலோகராச்சியம் சமீபித்துவிட்டது, தவஞ்செய்யுங்கள்" என்றதிலேயே அடங்கியிருந்ததென்று சுவிசேஷகர்கள் சொல்லுகிறார்கள். (மத். 4; 17—மாற். 1; 15) தாமே உலகத்திலே பரலோகராச்சியமாகிய திருச்சபையை ஸ்தாபிக்கிறவராகிய சற்குரு என்றதைச் சனங்கள் படிப்படியாய் அறியவேண்டுமென்றிருந்தார். தாம் சனங்களின்முன்னே ஓர் போதகராக வெளிப்பட்டவுடனே தம்மை இன்னாரென்று அறிவிக்க அவர் சித்தமாகவில்லை. தமது பன்னிரண்டு சீஷருக்குங்கூடத் தம்மை உடனே அறிவித்தவரல்லர். உலகமும் தம்மை மெல்லமெல்லவே அறியவேண்டுமென்றிருந்தார். அப்படியே அவர்காலத்துச் சனங்களுள்மாத்திரமல்ல பின்வந்த சகல காலத்தாருள்ளும் நல்லோரெல்லாம் சட்டாயத்தினாலல்ல, சுயாதீனமாய் அவரை அறிந்து சிநேகித்து ஆராதித்திருக்கிறார்களென்பது சரித்திரசம்மதம்.

கிறீஸ்துநாதர் உலகத்திலேசெய்யவந்தவேலை என்னவெனில் மனுக்குலத்தாருக்குப் புண்ணியமாதிரிகையாகவும், உண்மைமார்க்கத்தைக்காட்டும் சற்குருவாகவும், அவர்களுக்குப் பரகதியின் மார்க்

சியத்துக்கு உரிமையைக்கொடுக்கும் திருப்பலியாகவும் விளங்குவதேயாம். இவ்வேலையை அவர் நிறைவாகச்செய்தருளி, சினர் காத்திருந்தபடி புண்ணியங்களைச் சமுத்திரம்போலப் பெருக்கியும், நம் இந்திய முன்னோர்கள் காத்திருந்தபடி சத்தியமார்க்கத்தைக்காட்டும் குருவாய்ப் பிரகாசித்தும், மன்னுயிர்க்காகத் தம் உயிரைத் தந்தும் தாம் முன்னேற அறிவித்தபடியே உயிர்த்தெழுந்து பரலோக ஆரோகணமானார். அவர் சீவியகாலத்திலிருந்த சனங்கள் அவர்செய்தவைகளுக்கும் திருவுளம்பற்றினவைகளுக்கும் சாட்சிகளாயிருப்பதே கடமையாயிற்று. அந்தக்கடமையும் அவர் விரும்பியபடி சரிவர நிறைவேறிற்று. பின்புதான் நன்மனதுள்ளவர்களைத் தம்மிடமாக இழுக்கிற பருவம் படிப்படியாய் உதிக்கவேண்டுமென்றது அவர் வெளியாகச்சொல்லியருளிய திருச்சித்தம். தமது சீஷரைநோக்கி: நீங்கள் பரிசுத்த ஆவியைப் பெற்றுப் பெலனடைந்து முதன்முதல் எருசலேமிலும், பின்பு யூதேயா முழுவதிலும், பின்பு சமாரியாவிலும் அப்பால் பூமியின் கடைசிபரியந்தமும் எனக்குச் சாட்சிகளாயிருப்பீர்களென்று திருவுளம்பற்றினார். (அப். 1; 8) அப்படியே நடந்தது. இன்னும் நடந்துவருகிறது. உலகத்திலே எந்தமதஸ்தாபகனுவது செய்யாத செய்யக்கூடாதவிதமாய் நடந்துவருகிறது.

கிறீஸ்துநாதர் மரித்துயிர்த்துப் பரலோக ஆரோகணமான பின்புதான் அவருடைய திருவேதம் பரம்பவேண்டியதாயிற்று என்றோம். அதைப்பரப்பும் உத்தியோகம் அப்போஸ்தலருக்கே கொடுக்கப்பட்டிருந்தது என்றும் கண்டோம். இவ் அப்போஸ்தலர்கள் முதன்முதற்பிரசங்கம்பண்ணியபோது நடந்ததென்ன? கிறீஸ்துநாதரைச் சிலுவையில் அறைவித்த அந்தச்சனத்துக்கே இவர்கள் பிரசங்கித்தார்கள், அர்ச். பேதுரு அச்சனத்தைநோக்கி: யேசுநாதர் உங்கள் மத்தியிலேசெய்த அற்புதங்களினாலும் அடையாளங்களினாலும் நீங்கள் அவரை அறிந்திருக்கவேண்டியது. அவரை நீங்கள் இன்னாரென்றறியாமலே பிடித்துச்சிலுவையிலறைவித்தீர்கள். அவரோ தமது தேவவல்லமையினால் மீண்டும் உயிர்த்துப் பரலோகத்துக்கு எழுந்தருளியிருக்கிறார். இவைகளுக்கு நாங்கள் எல்லாரும் சாட்சி. சிலுவையிலறையப்பட்ட அவர்தாம் உலகம் காத்திருந்த தேவசற்குரு என்றசாரப்படிபேச அன்றே யூதருள் மூவாயிரம்பேர் விசுவசித்து ஞானஸ்நானம் பெற்றார்கள். (அப். நட. 2-ம் அதி.) அடுத்தநாளில் ஐயாயிரம்பேர் மனந்திரும்பினார்கள். (ஷை 4-ம் அதி.) விரைவிலே கிறீஸ்துவேதமானது யூதேயா சமாரியா எனும் தேசப்பரப்புகளில் பரம்புகிறதைக் காண்கிறோம். நாள்தோறும் "திரளான புருஷர்களும் ஸ்திரீகளும் விசுவசித்துக் கர்த்தரிடமாய் அதிகமதிகமாகச் சேர்க்கப்பட்டார்கள்" (ஷை 5; 14) அப்பால் ஏறக்குறைய சமகாலத்திலேதானே வேதம்

பினீசியா சிப்புருஸ் அந்தியோக்கியா எனும் பிறநாடுகளிலும் பரவு கிறது. பிந்திய இந்த நாட்டிலே வேதம் எவ்வளவாகப் பரவிற்றென்றால் அதை அநுசரித்தோர் அவ்விடத்திலே ஓர் முக்கிய சாதியத்தாராகி முதன்முதற் கிறீஸ்தவர்கள் எனும் பெயரால் அழைக்கவும் பட்டார்கள். (அப். 11; 18-26) அதுமட்டோ? கிறீஸ்துநாதர் மரித்த சிலவருஷங்களுக்கெல்லாம் ரோமராச்சியத்தின் சகல பிரதான பட்டணங்களிலும் சத்தியவேதம் ஸ்தாபிக்கப்பட்டாயிற்று. அப்போஸ்தலர்களுடைய சீவியகாலத்திலேயே யேசுநாதருடைய திருவேதம் ரோம உலகம்முழுதிலும் பிரசித்தமாயறியப்படுவதாயிற்று. (ரோ. 1; 8—கொலோ. 1; 6) போந்து, கலாத்தியா, கப்பதோசியா, சின்ன ஆசியா, பித்தினியா என்னுமிடங்களிலெல்லாம் திரளான கிறீஸ்தவர்களிருந்தார்கள். கிறீஸ்துநாதரோடு கூடவிருந்தவர்களுள் ஒருவராகிய அர்ச். யோவான் அப்போஸ்தலர் எபேசு சிமேணு பெர்காமு தியாத்தீரு சார்திஸ் பிலதெல்பியா லவோதீசியா எனும் இடங்களில் பெலமாய் ஸ்தாபிக்கப்பட்டிருந்த ஏழுசபைகளினும் மேற்றிராணிமாருக்கு திருபமெழுதுகிறதைக் காண்கிறோம். பவுல் அப்போஸ்தலர் இடையிலே மனந்திரும்பியவிதமும் அவர் எத்தனையோ இடங்களிற் கணக்கில்லாத சனங்களைச் சத்தியமறையிற் சேர்த்துக்கொண்டுவந்தவிதமும் புதிய ஏற்பாட்டை வாசித்த யாவருக்கும் விளங்கும்.

அப்போஸ்தலர்காலத்தின் பின்னும் கிறீஸ்துவேதம் அதே விதமாய்ப் பரம்பிக்கொண்டுவந்தது. ஆகையாலேதான் யூஸ்தின் வேதசாட்சியார் கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலே எழுதியவிடத்தில்: "சிலுவையிலறையுண்ட யேசுக்கிறீஸ்துவின் நாமத்தினால் சகலருடையவும் சிருட்டிகராகிய பிதாவைப் பிரார்த்தித்துக்கொண்டும் அவருக்கு நன்றியறிந்த தோத்திரஞ்செலுத்திக்கொண்டும்வராத கிரேக்கசாதிகளுமில்லை மிலேச்சசாதிகளுமில்லை பூமியின் முகத்திலே வேறெவ்வித சாதியாருமில்லை" என்றெழுதினார்* ஐரேனியுஸ் எனும் பெயர்பெற்ற நூலாசிரியர் அதேகாலம்வரையில் எழுதி சத்தியவேதம் சேர்மனி ஸ்பானியா கலியா (பிராஞ்சு) எகிப்து லீபியாமுதலியவிடங்களில் மிகவும் செழித்தோங்கியதைக் காட்டியிருக்கிறார்.† மூன்றும்நூற்றாண்டில் கிறீஸ்துவேதம் மேலும் பரந்து அக்கியானமதங்களை வேர் அறுக்கத் தலைப்பட்டது. தெற்துல்லியானு எனும் ஆசிரியர் அக்காலத்திருந்த அக்கியானிகளை நோக்கிப் பின்வருமாறு எழுதினார்: "நாங்கள் நேற்றுப் பிறந்தவர்கள். ஆயினும் உங்கள் பட்டினங்கள், தீவுகள், நாடுகள், நகரங்கள், சங்கங்கள், பாளையங்கள், தொழிற்கூட்டங்கள், அரண்மனை, சேனைச்சங்கம், நியாயஸ்தலம் எனும் இவைகளையெல்லாம்

* Dialog. cum Tryph.  † Adv. Haeres. 1; 10.

கிரப்பிப்போட்டோம். உங்களுக்கு வெறுங்கோவில்களையே விட்டிருக்கிறோம்'' என்றார். *

இதுவரையுமெடுத்துக்காட்டிய ஆசிரியர்கள் கிறீஸ்தவர்களாகையால் இவர்கள்கூற்றை அதிசய உக்தியாக எடுக்கலாமேயென்றால், அக்காலத்துப் பிறசமய நூலாசிரியர்களும் இதற்குச் சாட்சியாயிருக்கிறார்கள். தசித்து எனும் றோமைச் சரித்திராசிரியர் தமது நாட்களிலே கிறீஸ்தவர்களின் தொகை எண்ணிறந்ததென்று வரைந்திருக்கிறார். † இளையபிளினி எனும் பித்தினியதேச ரோமாதிகாரி கிறீஸ்தவர்களால் பட்டணங்கள் மாத்திரமல்லக் கிராமங்களும் நிறைந்திருக்கின்றன என்று ரோமைச்சக்கரவர்த்தி திறயானுக்கு எழுதியிருக்கிறார். ‡ இச்சாரப்படவே சுவத்தோனியுஸ் செனேக்கா எனும் பிறசமயிகளும் கூறியிருக்கிறார்கள்.

இந்தப் பிரசித்தமான சம்பவங்கள் ஆச்சரியமுள்ளவைகள் அல்லவா? எளிய மீன்பிடிகாரராயிருந்த பன்னிரண்டுமனிதர், தத்துவசாஸ்திர அறிவோ கலைக்கியான அறிவோ புசபலமோ ஐசுவரியமோ ஒன்றுமில்லாத பன்னிரண்டுமனிதர் அக்காலத்துச் சீர்திருந்திய உலகமுழுதையும் வேற்றுருவாக்கிப்போடுகிறார்கள். எப்படி? கொஞ்சக்காலத்துக்குமுன்னே தானே ஒரு பெருங் குற்றவாளிபோலச் சிலுவையில் அறைந்து கொல்லப்பட்ட ஒருவருடைய நாமத்தைச் சொல்லி! யூதராலும் ரோமராலும் ஒரு நீசப் பாதகனாக எண்ணப்பட்ட இவரே அனைத்தையும்படைத்த கடவுளென்று போதிக்கிறார்கள். போதிக்க, கற்றோரும் கல்லாதோரும், ராசபிரபுக்களும் குடியானவர்களும், தத்துவசாஸ்திரிகளும் சாமானியர்களும் ஆகிய எண்ணில்லாசனங்கள் அதைநம்பிச் சற்றுக்குமுன்னே தங்கள் கண்காணவும் காதுகேட்கவும் சிலுவையில் அறையப்பட்டவரைச் சருவ ஈசுவரனென்று அடிபணிகிறார்கள்! கிறீஸ்துநாதருடைய போதகமோ சுசாலான ஒருபாதையைக் காட்டுகிற போதகமல்ல. ஆசாபாசங்களையெல்லாம் நிக்கிரகம்பண்ணிச் சிற்றின்பங்களையெல்லாந்துறந்து அகங்காரத்தை அடக்கித் தாழ்ச்சியையே போற்றவேண்டுமெனறது அப்போதகம். அந்தப் போதகத்தையும் கிறீஸ்துநாதரையும் ஏற்றுக்கொள்வதிலேயும் மனுச்சுபாவத்துக்கு வெறுப்பான எதிரிடைகளே இருந்தன. எலவே யூதராலும் ரோமராச்சிய அதிகாரிகளாலும் கிறீஸ்தவர்களாவோருக்கு விக்கினம்நேரிட்டது. யூத குருமாரும், அக்கியான பூசுரர்களும் கிறீஸ்துமார்க்கம்பரம்புவதினாலே தங்கள் சுயநயத்துக்குப் பங்கம் வருவதைக்கண்டு அதையழிக்க அரசர்களுடைய வலிய புசத்தை உதவியாகக்கொண்டார்கள். கிறீஸ்துமார்க்கம் பரம்பிய முதல்

---

* Apologet. XXXVII † Multitudo ingens.(Annal. XV. c. 44.)
‡ Liber X; 97.

மூன்று நூற்றாண்டுகளிலும் பத்தாந்தரம்வரையில் கிறீஸ்தவர்கள் பலவிடத்திலும் சர்வசங்காரஞ்செய்யப்பட்டார்கள். ஆயிரக்கணக்கானோர் கிறீஸ்துநாதரை விசுவசித்த குற்றம் ஒன்றுக்காகத் துஷ்டமிருகங்களுக்கு இரையாகப்போட்டும், முட்சில்லுகளில்வைத்து உருட்டியும், நெய்ச்சீலைசுற்றிக்கொளுத்தியும், அங்கச்சேதஞ்செய்தும் இப்படியே வாக்கிலடங்காத பல சித்திரவேதனைகளோடு கொல்லப்பட்டார்கள். இவ்வளவு நெருக்கிடைகளுக்கிடையிலும் எதிரிடைகளுக்கு எதிராயும் நாகரீகமுள்ள உலகத்தின் பெரிய ஒரு பங்கானது யேசுக்கிறீஸ்துநாதரை விசுவசித்திருக்கிறது. இந்நாளிலும் அவரையே மேலும்மேலும் விசுவசித்துக்கொண்டுவருகிறது. இந்த ஆச்சரிய சம்பவமொன்றே நல்லமனமுள்ளவர்களுக்குக் கிறீஸ்துநாதரின் கடவுட்டன்மையைக்காட்டப் போதியது. கிறீஸ்துநாதர் தாம் நினைத்தும் திருவுளம்பற்றியுமிருந்தபடி உலகம் அவர் வசமாக்கப்பட்டது. அவர் உலகத்திலே பத்தொன்பது சதாப்தங்களாய் விசுவாசத்தினாலும் அன்பினாலும் அரசாண்டுவருகிறார். ஆகையால் அவர் கடவுளேயாம் என்று நம் நண்பர் நியாயம்முடிப்பதே தகுதி.

கிறீஸ்துநாதர் தாம் திருவுளத்திற்கொண்டதையெல்லாம் பூரணமாக நிறைவேற்றியிருக்கிறார். மனுஷசுபாவத்தின்படி மேற்கொள்ளக்கூடாத எதிரிடைகளுக்கும் எதிராக அவர் மனிதபுத்திகளின்மேல் தமது சமாதான செங்கோன்மையை நாட்டியிருக்கிறார். இதை மேலும் விரிப்பிற் பெருகும். ஆகையால், இனி அப்பாற் செல்லவேண்டும். ஒன்றைமாத்திரம் நம் நண்பர்களிடத்திற் கேட்டுக்கொள்ளுவோம். கிறீஸ்துநாதர் தாம் கருதியதை அதிசயத்துக்குரியவிதமாய் முடித்துக்கொண்டபடியால் அவர் கடவுள்தாம் என்று துணியவேண்டியிருக்கிறது. நம் சைவநண்பர்களின் கொள்கைப்படி சிவனும் தாம் கருதியதை முடித்தனரா? அவர் ஆத்துமாக்கள் முத்தியடையும்படியாக அவைகளுக்கு நித்தியகாலமாகக் கொடுத்துவருகிற பிறவிகளுக்கும் முடிவுகா இடமுண்டா? இதை முன்னரும் குறித்தோம். இவ்விடத்திலும் இது பரியாலோசிக்கத்தக்கது.

## V. கிறீஸ்துநாதரின் திருப்போதகம்.

"ஞானசித்தி"ப்பத்திராதிபர் தமது ஐந்தாம் நியாயமாக கிறீஸ்துநாதரின் திவ்விய போதகத்தைப்பற்றி ஒரு தடைசொல்லுகிறார். அது வருமாறு:

௫. அவர் உபதேசித்த பிரசங்கவிஷயங்கள் மிக அரியனவாயிருந்தவால், அவர் கடவுளென்பதைக் காட்டும் என்கிறார்கள். அதைக்காட்டிலும் எத்தனையோமடங்கு சிறந்த உபதேசங்களை மனிதர் செய்திருக்கிறபடியால் அது போதுமான காரணமாகமாட்டாது. மனிதராயிருந்தே இந்த உபதேசங்களைச் செய்யக்கூடும்.

பத்திராதிபர் சொல்வது ஏறக்குறையச்சரி கிறிஸ்துநாதருடைய பிரசங்கவிஷயங்கள் அரியனவென்றாவது சிறந்தனவென்றாவது எடுத்துக்கொண்டு அதினால் அவருடைய கடவுட்டன்மையைக்காட்டுவது நம்முள் வழக்கமல்ல. உள்ளபடி உலகத்திலே மகான்களாய் விளங்கிய அநேகர் அரியவைகளும் சிறந்தவைகளுமான பிரசங்கங்களைச் செய்திருக்கிறார்கள். கிரேக்கருள்ளே கிறிஸ்துவுக்குமுன் பிளேற்றோ, அரிஸ்தோத்தல் ஆதியவர்கள் பெரும்புகழ்படைத்த ஞானிகளாகத் துலங்கியிருந்தார்கள். நம் இந்தியாவிலே கபிலர், வாதராயணர், மகாவீரர், புத்தர் ஆதியவர்கள் செய்த தர்க்கங்களும் எழுதிவைத்த வாக்கியங்களும் எவ்வளவோ அரியவைகள்; பெரும்பாலும் மிகச் சிறந்தவைகள். கிறிஸ்துவுக்குப்பின் சங்கராசாரியர், சைவசமயகுரவர்கள் ஆதியோர் அரிய பெரிய விஷயங்களை எழுதிவைத்துப்போனார்கள். கிறிஸ்துநாதருடைய திருவாக்குகளிலே துலங்குவது இப்படியான அருமையுமல்ல, சிறப்புமல்ல ஆனால் இவருடைய வாக்குகளுக்கும் முன்சொல்லிய ஞானிகளுடைய வாக்குகளுக்குமிடையிலே அளவில்லாத பேதமுண்டு. அதைச் சுருக்கமாகக் காட்டுவோம்.

முன்சொல்லிய ஞானிகளுடைய அரிய சிறந்த வாக்குகள் மனிதரால் புகழப்பட்டன. ஆனால், அவைகள் மனிதரைச் சீர்ப்படுத்தமாட்டாமற்போயின; உலகத்திலே நிலையான நன்மையொன்றையும் நாட்டமாட்டாமற்போயின; உலகமுழுதிலும் பரவமாட்டாமற்போயின. அவ்வாக்குகள் ஒருசனத்துள்ளே, ஒருதேசத்துள்ளே நின்றுகொண்டு, காலகதியிலே கூட்டியும் குறைத்தும் திரித்தும் உருமாற்றப்பட்டுக்கிடக்கின்றன. அவ்வாக்குகள் சனங்களைச் சீர்ப்படுத்துவதற்குமாறாய்ச் சனங்களே அவைகளை வேற்றுருப்படுத்திப்போட்டார்கள். அல்லது அவைகளை முற்றாக ஒதுக்கி வைத்துவிட்டார்கள். கிறிஸ்துநாதருடைய வாக்குகள் அலங்காரம்பொருந்தியவைகளல்ல. புத்தியை மகிழச்செய்யும்படியான நுட்பங்கள் செறிந்தவைகளல்ல. ஆனால், அவைகளே உலகத்தைச் சீர்ப்படுத்திய வாக்குகள்; சன்மார்க்கத்தை நிலைநிறுத்திய வாக்குகள். அத்திருவாக்குகளாலேதான் முற்கால ஐரோப்பாவின் காட்டுமிருண்டிகளான மகா சனங்களெல்லாம் சாதுக்களாகி, சீர்திருந்தியவர்களாகி இன்றைக்கும் நம்மை ஆண்டுநடத்துகிறவர்களாகிறார்கள். அவர்களுடைய சன்மார்க்கக் கோட்பாடுகளையும் சீர்திருத்தமுறைகளையும் பின்பற்றிய அளவிலேதான் உலகத்திலேயுள்ள பிறசாதிகளும் உயர்ச்சியை அடைகிறவைகளாயிருக்கின்றன. கிறிஸ்துநாதருடைய போதகந்தான் நமது இந்தியாவிலேயும் உடன்கட்டையேறுதல், சிசுக்களை முதலை ஆதியவைகளுக்குப்போடுதல், நரபலிசெலுத்துதல், அடிமையாட்சி, சத்திபூசையோடுசேர்ந்த சில கோரங்கள், ஆலயங்களில் நடத்தும் சில துன்மார்க்க கிரியைகளை

ஆதிய எத்தனையோ தீங்குகளை வேரோடறுத்து நம்மை இக்காலம் சுகமாய்வாழப்பண்ணிற்று. கிறீஸ்துநாதருடைய போதகந்தான் இந்தியாவிலே ராம்மோகன ராய், கேசுப் சண்டர் சென், சுவாமி விவேகாநந்தர் ஆதியோரையும், யாழ்ப்பாணத்திலே ஆறுமுகநாவலர் மெஸ். இராமநாதன் ஆதியோரையும் பரோபகாரிகளும் மார்க்க சீர் திருத்தக்காரருமாக்கிவிட்டது. கிறீஸ்துநாதருடைய போதகந் தான் நம் யாழ்ப்பாணச் சைவ ஆலயங்களிலே காமமிகு ஒருகாலம் நடந்துவந்த சதுர் ஆட்டங்கள், சன்னதங்கள், ஆடுகோழிவெட்டிப் பலியிடும் வேள்விகள் இல்லாதொழியவும், நம் சைவநண்பர்கள் தம்முள் ஐக்கியமாகிச் சபைகூட்டல், பிரசங்கஞ்செய்தல், பெண் களைப் பயிற்றல், சூத்திரருக்கு உபதேசஞ்செய்தல், சமயநூல் களைப் பிரசித்தப்படுத்தல், பத்திரிகைநடத்தல் முதலிய பல புது ஒழுக்கங்களை அனுசரிக்கத்தொடங்கவும் பண்ணிவிட்டது. அது மட்டோ! கிறீஸ்துநாதருடைய போதகந்தான் நம்பத்திராதிபர் நியா யத்துடனேயே சிரமேற்கொள்ளுகின்ற சைவ சித்தாந்தத்துக்கு அதின் மிக அருமையான சிலபோதகங்களைக் கொடுத்ததென்றால், அத் திருப்போதகத்தின் செல்வாக்கை அப்பால் எடுத்துக்கூற வேண்டியதென்ன!

இப்படி ஒருசனத்தையல்ல ஒருதேசத்தையல்ல உலகம் முழு தையும், ஒரு காலத்திலல்ல ஒரு நூற்றாண்டிலல்ல எல்லாக்காலத் திலும் திருத்தி உயர்த்திப் புனிதமாக்கிக்கொண்டுவருகிறதாய், ஒரு விஷயத்திலென்றாலும் அற்பதவறுமில்லாததுமான ஓர் போதகத் தைச்செய்த மனிதனை நம் பத்திராதிபர் காட்டட்டும். அம்மனி தனை நாமெல்லாம் கைதொழுவோம்! ஏனெனில், உலகம் முழுதை யும் புனிதமாக்கத்தக்கதும், உலகம் முழுதுக்கும் ஏற்றதுமான ஒரு சர்வகாலதேசிய சமயத்தை ஸ்தாபிக்கத்தக்கவர் சற்குருவாகத் திரு மேனிகொண்ட கடவுளையொழிய வெற்றுமனிதனாகமாட்டார்.

கிறீஸ்துநாதருடைய திருவாக்குகளிலே வேறொன்றிருக்கி றது. மனிதன் பிரசங்கிக்கும்போது யாதோ ஒரு சத்தியத்தை எடுத்துச்சொல்லி அந்தச் சத்தியத்தின்பேரால் தன்னோடொத்த மனுஷரை நன்மைக்குத் தூண்டுவான். உதாரணமாக: உண்மை பேசுதல் கடவுளுக்கு உவப்பு; ஆகையால், உண்மையினின்று வழுவாதேயுங்கள் என்று போதிப்பான். காமம் மயக்கத்தைத் தரும்; பழிபாவங்களை உண்டாக்கும்; மறுமையிலே நரகதண்ட னையைப் பெறுவிக்கும்; ஆகையால், காமத்தை அடக்கி வெல்லுங் கள் என்று உபதேசஞ்செய்வான். ஆனால், எவனாவது நானே உண்மை, நானே உங்களுடைய மறுமைப்பாக்கியம்; ஆகையால், என் நிமித்தமாக நீங்கள் உண்மையை விரும்புங்கள் என்றுசொல் லுவானா? காமத்துக்கு இடங்கொடுக்கிறவன் எனக்குத் துரோகஞ் செய்கிறான், அவனை நான் பரகதியிற் சேரேன் என்றுசொல்லு

வானோ? இப்படிச் சொல்லத்தக்க அதிகாரமுடைய மனிதனும் உலகத்தில் உண்டா? இவைகள் கடவுள் ஒருவரே சொல்லத்தக்க வார்த்தைகளல்லவா? சொஸ்தமான மனதோடிருக்கிற மனிதன் ஒருவன் இப்படிச்சொல்லுவானானால், இவ்வளவு அவ்வளவு என்று வரையறுக்கக்கூடாத மகா தேவதுரோகமாகுமல்லவா?

கிறீஸ்துநாதரோ உலகத்திலே எந்த மனிதனைவது பேசக்கூடாத இவ்விதமாய்ப் பேசியிருக்கிறார். அவர் மனிதர் அனைவரையும்நோக்கி: நானே உலகத்துக்கு ஒளி (யோ. 8; 12.) நானே சகலரும் பின்பற்றவேண்டிய உண்மையும் வழியுமாயிருக்கிறவர். (ஷை. 14; 6.) என் நிமித்தமாகச் சீவனைவிடுகிறவன் நித்திய சீவியத்தை அடைவான். (மாற். 8; 35.) என்னை விசுவசியாதவன் நித்திய ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான். (ஷை 16; 16.) நான் சகல மனிதரையும் கடைசிநாளிலே நடுத்தீர்த்து நல்லவர்களுக்கு மோட்சசுகத்தைக் கொடுப்பேன். தீயவர்களை அக்கினியிற் தள்ளுவேன். (மத். 25-ம் அதி.) இப்படியான பேச்சுமனிதபேச்சா? ஒரு வெற்றுமனிதன் இப்படிச் சொல்லியிருந்தால் யாரேனும் அதை ஆத்திரமான பேச்சென்று எடுத்திருப்பார்களா? கிறீஸ்துநாதர் பேசியதோ மனிதப்பேச்சல்ல என்பதற்கு அவரை விசுவசித்த, விசுவசித்துக்கொண்டிருக்கிற உலகமுழுதும் சாட்சி.

மனிதருடைய சிறந்த அருமையான பிரசங்கங்களுக்கும் யேசுநாதசுவாமியுடைய தேவ அதிகாரத்தோடுகூடிய இத்திருவாக்குகளுக்குமிடையிலுள்ள அளவிறந்த வித்தியாசத்தை நம் சைவ நண்பர்கள் நன்மனசோடே சீர்தூக்கிப்பார்ப்பார்களாகில், யேசுநாதசுவாமி வெற்றுமனிதனல்ல சாட்சாத் கடவுளே என்று அங்கீகரித்து அவருடைய திருப்போதகத்தைத்தழுவி மறுமைப்பேரின்பத்தைக் கைப்பற்ற முயலாமலிரார்கள்.

## VI. அற்புதங்களும் கடவுட்டன்மையும்.

கிறீஸ்துநாதர்செய்த அற்புதங்களால் அவருடைய கடவுட்டன்மை எவ்வாறு அத்தாட்சிப்படுத்தப்படும் என்ற நுட்பத்தைய றியாமல் "ஞானசித்தி"யார் தமது 6-ம் நியாயத்தை எழுதுகிறார்:

சு. அவர் பல அற்புதங்கள் செய்தபடியால், அந்த அற்புத சக்தியுடைமையே அவர் கடவுளென்பதைக் காட்டும் என்கிறார்கள். முடவனை நடக்கச்செய்தல், குஷ்டரோகியைச் சுகமாக்குதல், தண்ணீரை மதுவாகுதல், கொஞ்சமீனையும் அப்பத்தையும் அநேகர்க்குப் பகிர்ந்துகொடுத்துப் பெருகச்செய்தல்முதலிய சிலவே அவர் செய்தனவாகச்சொல்லும் அற்புதங்கள். இவ்வித அற்புதங்களைச்செய்யக் கடவுள் வேண்டியதில்லை, வெந்துநீறிய எலும்பைப் பெண்ணாக்குதல் விஷந்தீண்டி இறந்தோரை உயிர்ப்பித்தல், முதலைவிழுங்கியிறந்த பிள்ளையை எழுப்புதல்முதலிய அருமையான அற்புதங்களைத் திருஞானசம்பந்தமூர்த்திகள், திருநாவுக்கரசுசுவாமிகள், சுந்தரமூர்த்திசுவாமிகள்முதலிய அடியார்கள் செய்திருக்கிறார்கள். கிறீஸ்துசெய்த

அற்புதங்களைவிட இவை எத்தனையோமடங்கு சிறந்தவை. அடியார்களே இவ்வளவு அற்புதங்களைச் செய்யத்தக்கவர்களாயிருக்கிறபடியால், அற்புதஞ் செய்யக் கடவுள் வரவேண்டுமென்கிற அவசியமில்லை. அற்புதஞ்செய்தவர்களெல்லாம் கடவுளாயிருக்கவேண்டுமென்பதுமில்லை. மனிதருள் ஒருவராயிருந்தே கிறீஸ்து அற்புதத்தைச் செய்திருக்கலாம். அதனால் அவரைக் கடவுளென்றுசொல்ல இயலாது. கிறீஸ்துமாத்திரமல்ல எல்லாமதத்திலும் அனேகர் அற்புதங்கள் செய்திருப்பதாகத் தெரிகிறது. அவர்களையெல்லாம் கடவுளென்று ஒப்புக்கொள்ளலாமா? அன்றியும், சகல லோகங்களையும் படைத்து நிறுத்தி நடத்தும் மகா அற்புதச்செயலுள்ள கடவுளுடைய மகிமையை நோக்கும்போது கிறீஸ்துவின் இச்சிறிய செயலெல்லாம் ஓர் அற்புதமாகுமா! ஆதலால், அற்புதத்தைக்கொண்டு அவரைக் கடவுளென்று சொல்ல இயலாது.

"அற்புதஞ்செய்யக் கடவுள் வரவேண்டுமென்கிற அவசியமில்லை. அற்புதஞ்செய்தவர்களெல்லாம் கடவுளாயிருக்கவேண்டுமென்பதும் இல்லை."— நன்றாய்ச்சொல்லுகிறார் "ஞானசித்தி"ப் பத்திராதிபர். இதைப்போலும் தானேபோதரும் உண்மைகளை நாமுமறிவோம். கிறீஸ்துநாதருடைய அடியார்கள் கிறீஸ்துநாதர்செய்த அற்புதங்களைக்காட்டிலும் பெரிய அற்புதங்களைச்செய்தார்கள் என்றது நாமெல்லாரும் அறிந்த ஒரு உண்மை. ஏன்! "என்னைவிசுவசிக்கிறவன் நான்செய்யுங் கிரியைகளைத் தானும்செய்வான். இவைகளைப்பார்க்கிலும்பெரிய கிரியைகளையும் செய்வான்" என்று மாறுபடாச்சத்தியக் கடவுள்தாமேயும் அருளிச்செய்தாரே! (யோ. 14; 12) ஆகையால் கிறீஸ்துநாதர் அற்புதஞ்செய்தார் என்ற ஒன்றினால் அவர் கடவுளென்றுவது, அவருடைய அற்புதங்கள் பெரியவைகள் என்றதையினால் அவர் கடவுளென்றுவது நாம் சொல்லுவதாகப் பத்திராதிபர் எண்ணியது தவறு.

கிறீஸ்துநாதருடைய அற்புதங்கள் தங்கள் மூலமாகவல்ல பிறிதொன்றின்மூலமாகவே அவருடைய கடவுட்டன்மைக்குச்சாட்சியாகின்றன. கிறீஸ்துநாதர் இயற்கைவிதிகளைக்கடந்த செயல்களைச் செய்தருளியபோது அவர் கடவுளால் அனுப்பப்பட்ட ஒரு திருத்தொண்டராயாவதிருக்கவேண்டும் என்ற துணிபு பிறக்க இடமாயிற்று. ஏனெனில் கடவுளின் விசேஷ அனுக்கிரகத்தைப் பெற்று விளங்காத ஒருவர், விசேஷ தேவவல்லமையால் மாத்திரம் நடக்கக்கூடியவைகளாகிய மெய்யான அற்புதங்களைச்செய்ய முடியாது. அப்பால், கிறீஸ்துநாதர் தமது செய்கைகளால் தாம் கடவுளின் அனுக்கிரகத்தைப்பெற்ற ஒரு மெய்யான பரிசுத்தவான் என்றதைக் காட்டியபோதே அவருடைய வாக்குகள் நம்பப்படவேண்டியவைகளாம். இனி அவர் தம்மைப்பற்றிச் சொல்லியது என்ன? தாம் யாரென்றார்? தாம் இவ்வுலகத்திலே எழுந்தருளிய கடவுள் என்றார். இதை ஒரு தருணத்தில், யோசனையில்லாத ஒருநேரத்தில்மாத்திரம் சொல்லியவருமல்ல. தமது சீவியகால

மெல்லாம் இதை உணர்ந்தவராகி, தமது சிஷருக்கும், சத்துருக்களாகிய யூதருக்கும் திருப்பத்திருப்பச்சொன்னார். யூதருடைய மகா சங்கத்தின்முன்னும் தேச அதிபதிமுன்னும் தாம் கடவுள் என்றதைத் துலாம்பரமாய் வெளிப்படுத்தினர். இப்படிச்சொல்லியதற்காகவே மரணத்துக்கும் கையளிக்கப்பட்டார் என்பது பிரசித்தம் இவ்விடத்தில் ஒரு காரியம் கவனிக்கத்தக்கது: நம் சைவ நண்பர்கள் யேசுநாத சுவாமியை ஒரு மகா பக்தர், மகா சன்மார்க்கர், திருத்தொண்டரென்று போற்றுகிறார்கள். ஆனல் ஒருபோதும்பொய்சொல்ல அறியாதவரான இந்த மகான், கடவுளால் பூரணமாய் அங்கிகரிக்கப்பட்ட இந்தப் பரிசுத்தவான் தாமே கடவுள் என்றும், தம்மை விசுவசிக்கிறவனே முத்தியடைவான் என்றும் மீட்டும் மீட்டும் சொல்லியருளியதையோ காதாரக்கேட்டும் மனதிலே சிந்தியாதிருக்கிறார்கள். இது மகா அதிசயமல்லவா? இதுநிற்க.

கிறிஸ்துநாதர் செய்தருளிய அற்புதங்கள் தங்கள்மூலமாகவல்ல பிறிதொன்றின்மூலமாக அவருடைய கடவுட்டன்மையைக் காட்டி நிற்கின்றன என்றோம். ஆயினும் தாம் செய்வோமென்று அவர் முன்னேறவே கூறிய ஒரு மகா அற்புதமானது தன்மூலமாகவும் அவரது கடவுட்டன்மையைக்காட்டுகிறது. ஏனெனில், அதை அவர் தமது கடவுட்டன்மைக்கு அத்தாட்சியாக எடுத்துச் சொல்லியிருந்தார். அந்த அற்புதம் எந்த அடியாராவது எப்போதாவது செய்யாத, செய்யக்கூடாத ஒரு அற்புதம். உலகசரித்திரப்பரப்பு முழுவதிலேயும் தனக்கிணையில்லாத ஒரு அற்புதம். அது எது என்றால், கிறிஸ்துநாதர் சரீரமெல்லாம் காயப்பட்டு, கை கால்களும் துளைக்கப்பட்டு எத்தனையோ மணித்தியாலங்களாக இரத்தமெல்லாம் வடித்தபின் சிலுவையிலே மரிக்கிறார். மரித்தபின் அவரது இருதயம் ஈட்டியாற் குத்துண்ண அதினின்று மரணத்தின் நிச்சய அடையாளமாக இரத்தமும் தண்ணீரும் பாய்கிறது. பின்பு அவருடைய திருச்சரீரம் நூறு இறாத்தல் நிறை கொண்ட பரிமளவஸ்துக்கள் பொதிந்த சீலைகளால் நன்றாய் மூடிக் கட்டி கல்லிலே குடைந்த ஓர் பிரேதக்குழியிலிட்டு அதின்வாசலில் பெரியவோர் கல் லுருட்டிவிடப்படுகிறது. இக்கல்லறையின் மூடியிலே யூதர் முத்திரை பதிப்பித்து ஓர் கூட்டம் சேவகரை காவலும் வைக்கிறார்கள். இவ்வாறெல்லாமிருக்க கர்த்தர் தாம் முற்கூறியபடி உயிர்த்தெழுந்து விடுகிறார். மரித்தவர் தாம் முன் சொல்லியபடி தாமாகவே உயிர்த்தெழுந்தாரென்றால் இந்த அற்புதம் ஒன்றே கடவுட்தன்மைக்குப் போதிய அத்தாட்சியல்லவா?

இனி திருஞானசம்பந்த மூர்த்திகள் ஆதிய சைவ அடியார்கள் ''கிறீஸ்துசெய்த அற்புதங்களைவிட எத்தனையோமடங்கு சிறந்த'' அற்புதங்களைச் செய்தார்களென்கிறார் நம்பத்திராதிபர். இது சற்றே ஆராயத்தக்கது.

## VII. அடியார் அற்புதங்கள்.

சைவ அடியார்கள் அநேக அற்புதங்களைச் செய்ததாகப் பெரிய புராணமும் திருவிளையாடற்புராணம் ஆதிய வேறு சில நூல்களும் கூறுகின்றன. இந்த அற்புதங்கள் மெய்யாகவே நடந்தவைகள்தாமென்று வைத்துக்கொண்டால் இதனாற் பெறப்படுவதென்ன? சொல்லிய அடியார்கள் உண்மையான பத்திமான்கள், கடவுளுடைய விசேஷ அநுக்கிரகம் பெற்றவர்கள் என்பதுதான் பெறப்படும். கடவுள் தம்மை உண்மையாக நேசிக்கிறவர்களுக்கு விசேஷ அநுக்கிரகங்களையும் செய்தருளுகிறார் என்பது நிச்சயம். ஆகையால், சைவம் முதலிய புறச்சமயங்களிலே அறியாமையினால் இருந்துகொண்டு தாங்கள் அறிந்தளவிலே தம்மில் அன்புசெய்வோருக்குக் கடவுள் சிற்சில தருணங்களிலே அற்புதமான கிருபைகளைத் தந்தருளக்கூடுமென்று ஒத்துக்கொள்ளலாம். ஆனால், இந்த அற்புதமான கிருபைகள் அவ்விதமான அன்பர்களுடைய மெய்யன்பின்நிமித்தமும் அவர்கள் கைக்கொள்ளுகிற உண்மைப் பகுதியின்நிமித்தமும் கிடைக்குமொழிய, அவர்கள் அறியாமையினால் நிற்கிற பொய்ச்சமயத்தின்நிமித்தம் கிடைப்பதல்ல என்பதைக் கவனித்துக்கொள்ளவேண்டும். ஆகையால், இவ்விதமான அருள்கள் யாதொரு பொய்யான மார்க்கத்தை ஸ்தாபிப்பதற்கு உதவியாக அல்லது யாதொரு பொய்யான போதகத்துக்குச் சான்றாக ஒருபோதும் கிடைக்கமாட்டா. இதுவே சத்தியவேதத்தின் துணிபு. இதுவே சரியான புத்தியின் துணிபு.

பொய்ச்சமயங்களில் அறியாமையினாலேநின்ற மெய்யடியார்களுடைய பத்தியின்நிமித்தம் கடவுளால் அற்புதங்கள் நடத்தப்படலாம் என்றோம். ஆனால், புறச்சமயிகள் தங்கள் சமயகுரவர்களும் பிறரும் செய்ததாகச்சொல்லும் அற்புதங்கள் எல்லாம் அற்புதங்களுமல்ல; அற்புதஞ்செய்தாரெனச் சொல்லப்படுவோர் எல்லாரும் உள்ளபடியே அற்புதங்கள் செய்தோருமல்லர்.

சாமானியசனங்கள் அற்புதங்கள் என்றுசொல்லும் சம்பவங்களெல்லாம் உண்மையான அற்புதங்களல்ல. அவைகளுட் பல வெறும் இயற்கைத்தோற்றங்கள். பல செப்படிவித்தை கண்கட்டிவித்தை மாயவித்தைகளினால் நடத்தப்படும் அதிசயங்கள். பல பேய்மாயத்தினால் அல்லது பேய்வித்தையால் உண்டாகும் காரியங்கள். இப்படியான சம்பவங்கள் உலகத்திலே எல்லாத்தேசங்களிலும் எல்லாக்காலத்திலும் எல்லாச்சமயத்தவர்களுள்ளேயும் நடந்தேறியிருக்கின்றன. இவைகளால் அந்தந்தச் சமயத்தின் மெய்மையாவது பொய்மையாவது காட்டப்படுவதுமில்லை. இவைகள் பொதுவாக எந்தச்சமயத்தோடாவது 'சம்பந்தப்பட்டவைகளுமல்ல. இந்தியாவிலே இந்நாளிலும் "யோகிகள்" "சாதுக்கள்"

என்று திரிகிறபலர் அநேக அதிசயமான மாயவித்தைகளைக் காட்டு கிறார்கள். இவைகளைச் சனங்கள் அற்புதங்களென்று நம்பிக் கொள்ளுவது வழக்கம். யாழ்ப்பாணத்திலே சன்னியாசமாக வந்து திரிந்த ஒருவன் மலந்தின்கிறானென்றும் கையை உதறிவிடக் காசு காசாய்க் கொட்டுண்ணுகிறதென்றும் சனங்களுட் பிரஸ்தாபமாய் இருந்தது. இவனுடைய செப்படிவித்தைகளை அநேகசைவர் அற் புதமென்று நம்பிக்கொண்டு சாமி சாமி என்று கும்பிடத்தொடங் கினதையும் யாவருமறிவார்கள். இப்படியே காலத்துக்குக்காலம் வேடசாமிகள் இங்கு வந்து சாலம்போட்டு புத்தியற்ற சனங்களை ஏமாற்றிப் பொருள்பறித்துக்கொண்டு போகிறார்கள். வேட சாமிகளைப்பற்றிக் காலஞ்சென்ற "ஆத்மபோதினி"ப் பத்திரிகை சொல்லிய விநோதப்பிரசாரங்களை அநேகர் வாசித்திருப்பார்கள்.

திருஞானசம்பந்தர் ஆதிய சைவ அடியார்களும் இப்படியான சாலவித்தைகளைச் செய்தார்களா? அப்படி நம்ப இடமில்லை. அவர் கள் எவ்வித அற்புதங்களையாவது செய்ததற்கு ஆதாரமில்லை. உள்ளபடியே அவர்கள் கடவுட்பத்தியும் மேலான தமிழறிவும் உள் ள உத்தமர்களென்பது எமதுகொள்கை. அவர்கள் சீவியகாலத் தில் அற்புதமொன்றுஞ் செய்யவில்லை. அற்புதஞ்செய்தார்களென் றது பிற்காலத்துச் சனங்களால் கட்டப்பட்ட ஒரு பொய்யேயென் று தெரிகிறது. இதுதான் தற்காலம் பழையசரித்திர ஆராய்ச்சி வல்லோர்களான சைவபண்டிதர்களின் கருத்துமாம். உதாரண மாக திருஞானசம்பந்தர் பாண்டியனது கூனை நிமிர்த்தினாரென் றது அவனது முதுகின் கூனையல்ல, சமயகொள்கையின் கூனை யேயென்று காலஞ்சென்ற பண்டிதர் சுந்தரம்பிள்ளை விளக்கியிருக் கிறார்*. அதின்மேல்தான் பின்பு அப்பாண்டியனுக்கு நின்றசீர் நெடுமாறன் எனும் பெயர்வந்தது. மாணிக்கவாசகருக்காக இவன் நரியைப் பரியாக்கிய கதையின் நம்பத்தகும் உற்பத்தியை மெஸ் T. பொன்னம்பலபிள்ளை எனும் வேதாந்த சைவ நிபுணர் விளக் கியிருக்கின்ற தன்மையும் | கவனிக்கத்தக்கது. மலையாளப்பகு தியிலே சில சைவர் கிறிஸ்தவர்களாகிப்போயிருந்ததை உணர்ந்த சைவப்பிரசங்கியாகிய மாணிக்கவாசகர் அங்குபோய் அவர்களை மீண்டும் சைவராக்க வருந்திக்கொண்டிருந்ததைக்கண்ட ஆரியசம யப் பிராமணர்கள், இவர் நரிகளைப் பரிகளாக்க வருந்துகிறாரென்ற வசையைப் பரப்பிவிட, அது பிற்காலத்தாரால் ஓர் அற்புதமாக எடுத்தாளப்பட்டுத் திருவிளையாடற்புராணத்திலும் இடங்கண்டு கொண்டது என்பார் பொன்னம்பலபிள்ளை. மணிவாசகப்பெரு மான் புத்தர்களோடு வாதிட்டபோது அவர்களை ஊமைகளாக்

Some Milestones in the History of Tamil Literature.
Manikkavasagar and the Early Christians of Malabar.

கிறாரென்ற உருவகப்பேச்சோடு ஊமைப் பெண்ணைப் பேசச்செய்தாரென்ற அற்புதமும் ஒன்றுகூட்டப்பட்டது. பட்டபோதும் மாணிக்கவாசகருக்கும் ஊமைப்பெண்ணுக்குமிடையில் நடந்ததாக வைத்துக்கட்டிய திருச்சாழல் இறைக்கும் அந்தக்கதையோடு பொருத்தமில்லாமற்கிடக்கிறது. 4-ம் 10-ம் சாழல்களைக்காண்க. நால்வருடைய மற்ற அற்புதங்களும் இப்படியே அவ்வப்பதிகங்களுக்கு ஒவ்வொருசரித்திரம் கூறும்படியாகவும் பிற்காலத்தாருடைய பழங்கதைகளை அநுசரித்தும் கற்பிக்கப்பட்டவைகளாய்த் தோன்றுகின்றன.

இவ்வாறாகச் சைவ அடியார்களைப்பற்றிக் கதைகள் உண்டானதும் ஆச்சரியமல்ல. இந்தியாவிலே பெரிய மனுஷருக்குப் பெரிய செய்கைகளைக் கற்பித்துப்பேசும் வழக்கம் தொன்றுதொட்டுள்ளது. பாரதக்கதை, இராமாயணக்கதையெல்லாம் மட்டுத்திட்டமில்லாமல் அற்புதங்களால் நிறைந்திருக்கின்றன. புராணங்களிலேயுள்ள அற்புதங்களுக்கு ஒரு அளவில்லை. இந்தியாவிலே முற்காலம் என்று சொல்லப்படுவதெல்லாம் கோடிவருஷங்களுக்கு முற்பட்டது. முற்காலத்தவர்கள் என்று சொல்லப்படுவோர் எல்லாம சொன்னது சொன்னபடியே நடக்கப்பண்ணுகிறவர்கள். ஒருமலை இயற்கையாய்ப் பிளந்திருந்தால் இது கந்தசுவாமி பிளந்தது, பஞ்சபாண்டவர் பிளந்தது என்று சொல்லிப்போடுவார்கள் கடலிலே ஒரு திடர் பாலம்போலிருந்துவிட்டால் இது இராமர் போட்டபாலம் அநுமார் கொண்டுவந்துபோட்ட கல்லுகள் என்று முடித்துப் போடுவார்கள். இப்படியேதான் புராணங்களிலுள்ள அண்டப்புளுகு ஆகாசப்புளுகுகளெல்லாம் உண்டாயின. இப்படி நாம் சொலவதைப்பற்றி சைவநண்பர் குறைகூறவேண்டியதில்லை. ஏனெனில், இதை நாமாகச் சொல்லவில்லை. புராணகர்த்தாக்களே இதை ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். கச்சியப்ப சிவாசாரியார் கந்த புராணத்திலே சொலவது: புராணங்கள்

நல்லவைவிதித்திடும் நவைகள்யாற்றிடும்
இல்லதும் மூகமலுல் எடுத்துக்கூறுமே

என்கிறார். புராணங்களெல்லாவற்றுக்குமுள்ள சொந்தக் குணம இது. பெரியபுராணம் திருவிளையாடல் ஆகியவைகளும் இந்த விதிக்கு விலக்காயுள்ளவைகளல்ல. இவைகளெல்லாம் தங்கள் கதாநாயகர்கள் சீவித்து மரித்துப்போனதற்கு வெகுகாலத்தின்பின்னேதான் எழுதப்பட்டவைகள். பெரியபுராணம் எழுதப்பட்ட விதத்தைப்பார்த்தால் அதிலே சொலலப்படுகிறவைகளை யாராவது சரித்திர சம்பவங்களாக எடுத்துக்காளவுங்கூடுமா என்ற சந்தேகம் பிறக்கும். பெரியபுராணம் பாடிய சேக்கிழார் இருந்தகாலம் கி. பி. 12-ம் நூற்றாண்டுவரையில் என்று “செந்தமிழ்” (I: 12) “அபிதானகோசம்” முதலியவைகளால் விளங்குகிறது. சைவருடைய

கொள்கைப்படி நாலவரும் பிறந்தவர் இருந்தகாலமே அதற்கு அநேக நூற்றாண்டுகளுக்கு முற்பட்டது. சேக்கிழார் இப்புரா ணத்தை யாதோர் சககாலத்து நூல்களை சாசனங்களைக்கொண் டல்ல, "சைவசமயிகள் புறசமயக்காப்பியமாகிய சீவகசிந்தாம ணியைச் சொற்சுவை பொருட் சுவைகளைமாத்திரம் விரும்பிக் கற் றுத் தங்கள் வாழ்நாளை வீணுளாகக்கழிப்பதுகண்டு மனநொந்து," அதற்கெதிராக இப்புராணத்தைக் கர்ணபாரம்பரியத்தின்படி பாடி ஞர் என்று சொல்லியிருக்கிறது. சமணர்களுடைய தீர்த்தங்காரர் ஆதியோருடைய தொகையும் சைவ அடியார்களுடைய தொகை யும்சரியாயிருக்கிறதையும், தீர்த்தங்காரர்களது கதைகளைப்போன்ற கதைகளே சைவ அடியார்களைப்பற்றி எழுதியிருக்கிறதையும் கவ னித்தால் சேக்கிழார் தமது புராணத்தை எவ்விதமாய்ப் பாடியி ருப்பாரென்பது ஒருவாறு விளங்கும். இந்தியாவிலே கர்ணபா ரம்பரியம் எம்மட்டிற்போகும் என்பதை நம் யாழ்ப்பாணத்துக் கடைக்குட் சாமி முதலியோருடைய வரலாறுகளில்நின்று நன்ருய அறிந்திருக்கிற நாம, ஆறுபத்துமூவருடைய சரித்திரத்தின்மேலவந்து தோற்றியிருக்கிற "அற்புதங்களை"ப்பற்றி அதிசயப்படத் தே வையில்லை. ஆகையால் இவ் அற்புதங்களை நாம் சரித்திர சம்ப வமாய எடுத்தாளக்கூடாது. அவைகள் நடந்தன என்றதற்காவது அவைகள் மெய்யான அற்புதங்களதாம் என்றதற்காவது புராண கர்த்தாக்களுடைய புனைகைத்தவிர வேறு ஒரு அத்தாட்சியுமில்லை

## VIII கிறீஸ்துவின் சரித்திர நிச்சயம்.

சைவ அடியார்களது அற்புதங்கள் எனப்படுகிறவைகளைச் சரித்திர சம்பவங்களாக எடுத்தாளப் போதிய அத்தாட்சியில் லையென்ருல் கிறீஸ்துநாதருடைய அற்புதங்கள் சரித்திரசம்பவங் களே என்றுசொலல அத்தாட்சியுண்டா? இக்கேள்விக்கு "ஞான சித்தியா"ருடைய 7-ம் நியாயத்தைப் பரிசோதிக்கும்முகத்தால விடைசொலலுவோம்.

எ. மத்தேயு மாற்கு லூக்கா யோவான்முதலியவர்கள் அவரைக்கட வுளென்று எழுதியிருக்கிறபடியால் அவர் கடவுளாவர் என்கிருர்கள். கிறீ ஸ்துவினிடத்துவைத்த அபிமானம் அல்லது தங்கள் மனநம்பிக்கை அதற் குக் காரணமாயிருந்து அவ்வாறு எழுதச்செய்திருக்கலாம். அவர்கள்சொல் லை மற்றவர்கள் நம்புகிறது எப்படி? அது உண்மையானதுதான் எப்படி?

முதல், மத்தேயு ஆதியவர்கள் "அவரைக்கடவுளென்று எழு தியிருக்கிறபடியால் அவர் கடவுளாவா" எனக் கிறீஸ்தவர்கள் சொல்லுகிருர்கள் என்பது தவறு. எவராவது ஒருவரைக் கடவுள் என்று சும்மா எழுதிவிட்டால் அதனுல் அவர் கடவுளாகக்கூடாது. மனுஷனுக்குரிய குணங்குறிகளெல்லாம் உள்ள ஒருவரைக் கட

வுளென்று கூறுவதானது மிகவும் காத்திரமான ஒரு கூற்று. அந்தக்கூற்றுக்கு மிகவும் காத்திரமான நியாயங்களும் வேண்டும். நடபடியான ஒருவிஷயத்தில் நடபடியான அத்தாட்சிகள் போதும். அபூர்வமான ஒருவிஷயத்திலோவெனில் அபூர்வமான அத்தாட்சிகளே வேண்டும். ஆகையால், சில சீஷர்கள் தங்கள் குருவைக் கடவுளென்று சொல்லி எழுதிவைத்ததானது அவருடைய கடவுட்டன்மையை ஸ்தாபிக்கிறதற்குக் கொஞ்சமும் போதாது. தங்கள் குருவிடத்தில் "வைத்த அபிமானம் அல்லது தங்கள் மனநம்பிக்கை"யினால் அவர்கள் அப்படி எழுதியிருக்கலாமென்று "ஞானசித்தி"யார் சொல்லியபடியே நாமும் சொல்லவேண்டும்

மத்தேயு ஆதியவர்கள் கிறீஸ்துநாதரைக் கடவுளென்று எழுதிவைத்ததினால் நாம் அவருடைய தேவத்துவத்தை நம்பவில்லையென்றால் பின்னையெப்படி அதை நம்புகிறோம்? கண்கண்ட சாட்சிகளால் எழுதப்பட்டதாகிய அவருடைய சீவியத்தையும் காதாரக் கேட்டவர்களால் எழுதிவைக்கப்பட்ட அவருடைய திருவாக்குகளையுங்கொண்டே அவரது கடவுட்டன்மையை நம்புகிறோம். இது இக்காலத்தாராகிய நாம் நம்பும் முறை ஆனால் அக்காலத்திலேயிருந்த அவரைக்கண்டு அவருடைய திருவாக்குகளைக்கேட்ட ஆயிரக்கணக்கானோர் நேரே தாங்கள் கண்டவைகளாலும் கேட்டவைகளாலும் கிறீஸ்துநாதர் கடவுளேயென்று உணர்ந்து அவருடைய பக்தர்களானார்கள். அப்பக்தர்களுடைய சந்தானம் அந்நாள் தொட்டு இந்நாள்வரைக்கும் கத்தோலிக்க திருச்சபை என்று சொல்லப்படும் ஒரு மகா சனத்தொகுதியாக விளங்குகிறது. இந்தச்சபையின் உயிருள்ள சாட்சியும் கிறீஸ்துநாதருடைய கடவுட்டன்மைக்கு அத்தாட்சி. இப்படியே கர்த்தருடைய காலத்திலேயே அவரைக்கண்டும் கேட்டுமிருந்தோரானவர்களால் எழுதப்பட்ட வரலாறுகள் ஒருபுறமும், அவருடைய காலந்தொட்டு உலகமெங்கும் பரந்திருக்கிறதாகிய திருச்சபையின் உயிருள்ள சாட்சி ஒருபுறமுமாகநின்று கிறீஸ்துநாதரின் கடவுட்டன்மையை உள்ளங்கையின் நெல்லிக்கனிபோலத் தெளிவித்துக்கொண்டிருக்கின்றன.

அக்காலந்தொட்டிருந்து வருகிறதாகிய திருச்சபையின் சாட்சியை எவரும் ஒத்துக்கொள்ளவேண்டியதாயிருக்கிறது. அது உண்டான சற்காங்கிலே பெற்றிருந்ததுவே அத்திவாரமாயுள்ளதும் கிறீஸ்துநாதரின் கடவுட்டன்மையேயாம். கிறீஸ்துநாதரை நேரிலேகண்டு கடவுளென்று விசுவசித்தவர்களே திருச்சபையின் ஆதி அங்கத்தவர்களானார்கள். ஆனால், அவருடைய சீவிய வரலாறுகளை எழுதிவைத்தவர்கள் உண்மையைத்தான் எழுதினார்களா? "கிறீஸ்துநாதரிடத்தில் வைத்த அபிமானம் அல்லது மன நம்பிக்கை"யினால் இல்லாததை உண்மையாக எழுதிவிட்டார்கள் என்றாலென்ன?

இப்படிச்சொல்ல நியாயமில்லை. ஏனெனில் கிறிஸ்துநாதரை விசுவசித்து அவரிலே அபிமானமுள்ளோராயிருந்தவர்கள்மாத்திரமல்ல, அவரையும் அவருடைய சீஷர்களையும் எதிர்த்துப் போராடிக்கொண்டுவந்தவர்களும் அவரது சீவியவரலாறுகளிற் பலவற்றை அநேகமாதிரியாய் எழுதியிருக்கிறார்கள். பவுல் என்பவர் கிறிஸ்தவர்களை எதிர்த்து அவர்களைச் சிறையிலிடுவித்துக்கொண்டு திரிந்தவர். அவரும் தாம் ஒருகாலம் விரோதித்தவராகிய கிறிஸ்துநாதரைப்பற்றிச் சுவிசேஷகர் சொல்லுகிறபடியே பலவிபரங்களைச்சொல்லுகிறார். (அரச். பவுலின் நிருபங்களைக்காண்க) யோசெபு என்கிற யூத சரித்திர ஆசிரியர் கிறிஸ்துநாதருடைய அற்புதங்கள் மரணம் உயிர்த்தெழுதல் இவைகளைப்பற்றி எழுதியிருக்கிறார். இவர் எருசலேம்நகர அழிவின்காலத்திலே அதாவது கிறிஸ்துநாதருடைய அந்தியநாட்களிலே எழுதியவர். இன்னும் யூதருடைய தால்முட்டும் அவருடைய சீவியத்தின் பல விபரங்களைக் குறித்திருக்கிறது. அஞ்ஞான நூலாசிரியர்களான தசித்து, இளைய பிளினி, பிளேகோ, தேலஸ் ஆதியவர்களும், கிறிஸ்துவேதத்துக்கு எதிராய் அக்காலத்திலே எழுதியவர்களான ஏரோக்கிலெஸ், செல்சு, போர்பிரி ஆதியவர்களும் கிறிஸ்துநாதருடைய சீவியத்தின் வெவ்வேறு சம்பவங்களைக் குறித்திருக்கிறார்கள். * இவைகளையெல்லாம் ஒன்றோடொன்று ஒப்புமைத்து நோக்கும்போது மத்தேயு ஆதியவர்கள் எழுதியவைகளெல்லாம் உண்மையாக நடந்த சம்பவங்களே என்றது விளங்காமற்போகாது.

இவ்விதமாகச் சத்துருக்களும் மித்துருக்களும் காணவுங்கேட்கவும் பிரசித்தமாய் நடந்த சம்பவங்களைச் சுவிசேஷகர்களும் வேறு நாலுபுதிய ஏற்பாட்டு ஆசிரியர்களும் எழுதியிருக்கிறபோது, அவைகள் அபிமானத்தினால் அல்லது மன நம்பிக்கையினால் எழுதப்பட்டன என்று சொல்லுவதே வேறேதோ அபிமானத்தினால் பேசுவதாகும்.

அல்லது, வெவ்வேறு இடங்களிலேயிருந்து வெவ்வேறு தருணங்களிலேயும் காலத்திலேயும் எழுதியவர்களாகிய இந்த எட்டுப் புதிய ஏற்பாட்டு நூல் ஆசிரியர்களும் மன நம்பிக்கையினாலும் அபிமானத்தினாலும் எழுதினார்களென்று சற்றுநேரம் வைத்துக்கொள்ளுவோம். சொண்டால், இவர்கள் எல்லாரும் ஒரேவிதமான சரித்திரத்தை எழுதியதெப்படி? கண்கண்டசாட்சிகளாயிராவிட்டால் அல்லது கண்டோரிடத்திலே கேட்டறிவதிராவிட்டால் சகல சம்பவங்களையும் பிழையில்லாமல் எழுதுவார்களா? மனநம்பிக்கையினால் அவர்கள்மனதிலே தனித்தனியே எழுந்த கற்பனையானது உருக்கி வார்த்துவிட்டதுபோல ஒரேமாதிரியாய் வந்துவிடுமா?

* யேசுநாதசுவாமியின் தேவத்துவவிளக்கம் 168—171-ம் பக்கங்கள்காண்க.

அபிமானத்தினால் எழுதத்தொடங்கியவர்கள் அவ்வளவு நிதார்த்தமாய் ஒன்றையே எழுதிப்போடுவார்களா? இவர்கள்தாம் ஏதோ மாயாசூழ்ச்சத்தினால் எல்லாரும் ஒன்றையேகற்பித்து எழுதிவைத்துவிட்டாலும், கிறீஸ்துவேத விரோதிகளான அக்காலத்துப் பிற நூலாசிரியர்கள் கூறியவைகள் இவர்களுடைய கற்பனைகளோடு ஒத்துவந்தெப்படி?

புதிய ஏற்பாட்டு நூல்களை எழுதியோருடைய பரிசுத்த நடக்கையையும், அவர்கள் தாங்கள் போதித்தும் எழுதியும்வந்த உண்மைகளுக்காகவே இரத்தஞ்சிந்தி உயிரைவிட ஒருப்பட்டதன்மையையும், அவர்கள் கிறீஸ்துநாதரைக்கண்டும் கேட்டும் இருந்தவர்களுக்கே போதித்தபடியால் நடந்தேறியிராத காரியங்களைப் போதித்தால் அல்லது எழுதினால் உலகம் அவர்களை நம்பியிராது என்றதையும் சித்தசமாதானத்தோடு சீர்தூக்கிப்பார்த்தால் நமது "சித்தி"யாரும் பிறரும் புதிய ஏற்பாட்டில் எழுதப்பட்டவைகள் புராணக்கதைகளல்ல உண்மையான சம்பவங்களே என்று கண்டுபிடியாமலிரார்கள். இவைகள் உண்மையான சம்பவங்களென்று காணும்போது கிறீஸ்துநாதர் ஆகிய திருவுருவமானது "என்றும் இறவாதவின்பத்தெளையிருந்த வேண்டி" இவ்வுலகிற்பிறந்துவந்த "பிறவாமுதல்வன்" என்ற உண்மையையுங் கண்டுபிடிப்பார்கள்.

## IX. கிறீஸ்துவின் பிராயச்சித்த மரணம்.

"ஞானசித்தி"ப் பத்திராதிபர் கிறீஸ்தபோதகத்தின் அரிவரியென்று சொல்லத்தக்க மிகவும் மூலாதாரமான கொள்கைகளைத்தானும் அறியாமல் பத்திரிகையிலே கிறீஸ்துமார்க்கத்தைப் பற்றி விஷயமெழுத முற்பட்டது பரிதாபம். அவர்சொல்லிய கடைசி நியாயம் இது:

அ. எல்லாருடைய பாவங்களுக்கும் பலியாக அவர்மரித்தபடியால் அவர்கடவுளேயென்கின்றனர். எல்லாருடைய பாவங்களுக்கும் பலியாக அவர் மரித்தாரென்பதற்கும், அவர்பலியாக மரித்ததினால் எல்லாருடைய பாவங்களும் நீங்கிவிட்டன என்பதற்கும் பிரமாணமென்ன?

மற்றுமுள்ள நியாயங்களும் இவ்வாறே ஆக்ஷேபத்துக்கிடமாயும் நம்பத்தகாதனவாயும் இருக்கின்றன.

"ஞானசித்தி"யார் சொல்லுகிறதுபோல நாம் நியாயம்பேசுவதில்லை. கிறீஸ்துநாதர் கடவுளேன்றபடியால் அவருடைய திருமரணம் மனிதருடைய பாவங்களுக்குப் பிராயச்சித்தமாயிற்று என்று சொல்லுகிறோமேயொழிய, அவர் பாவங்களுக்காக மரித்தபடியால் கடவுளாம் என்று சொல்லுவதில்லை. கிறீஸ்தவர்கள் சொல்லுகிற நியாயத்தின் பேதத்தை அறிந்துகொள்ளாமல் அதைமறுத்து எழுதுவது யோக்கியமா?

அப்பால் "எல்லாருடைய பாவங்களுக்கும் பலியாக மரித்தார்" என்று "சித்தி"யார் சொல்லி, அப்படியானால் "எல்லாரு

டைய பாவங்களும் நீங்கிவிட்டன என்பதற்குப் பிரமாணமென்ன?" என்றுகேட்பதைப் பார்க்கும்போது இதிலே அவர் ஒருபெரிய தப்புவிளக்கத்துக்குள்ளாயிருக்கிறார் என்று தெரிகிறது. மானுடசட்டைசாத்தி எழுந்தருளிய கர்த்தர் மானுடருடைய பாவங்களுக்குப் பிராயசித்தப் பலியாக மரித்தார் எனனும்போது அதின் கருத்தென்னவென்றால், சொல்லுவோம்: மனுக்குலமானது ஆதிப்பிதாவின் பாவத்தினாலும் தன் பாவங்களினாலும் கடவுளுடைய நீதிக்கோபத்துக்குப் பாத்திரமாகியிருந்தது. அதினால கடவுளுடைய பிரத்தியக்ஷ தரிசனமாகிய மோட்ச பேரின்பத்தை அனுபவிக்கும் உரிமையையும் இழந்துபோயிருந்தது. ஆனால், பரங்கருணைத் தடங்கடலாகிய கடவுள மனிதர்மேல்வைத்த ஆச்சரியமான அன்பினால், தாமே மனுக்குலத்தில் ஒரு மனிதனாய் வந்து, தேவநீதிக்கு எதிராக நிகழ்ந்திருந்த பாரப்பழிக்குப் பிராயசித்தம்பண்ணியதினால் அந்த மோட்ச உரிமை மறுபடி மனுக்குலத்துக்கு உண்டாவதாயிற்று மானுடதேவனின் அளவில்லாப் பலனுள்ள பிராயசித்தமில்லாவிட்டால் அளவில்லாததாகிய தேவநீதிக்கு எதிராயிருந்த பழி நீங்க வழியிராது. மனுக்குலத்தாருக்கு மோட்சராசரியமானது (ஒரு உவமையின்படிசொல்லுகில்) பூட்டியபடியேயிருக்கும். கிறீஸ்துநாதர் பாடுபட்டு மரித்ததினாலேயாவெனில், தேவநீதிக்கோபம் சாந்தியாகி மனுக்குலத்தார் மோட்சத்தையடைய வழியுமுண்டாயிற்று.

ஆயினும அவதரித்த கர்த்தருடைய பிராயச்சித்த மரணமானது முதலிடத்திலே மனுக்குலத்தின் பாவ அக்கிரமங்களினால் விளைந்த தேவபழியைப் பொதுவகையாகவே நீக்குகிறது என்றதை மனதிலேவைத்துக்கொள்ளவேண்டும் பரகதிவாசலும மனுக்குலத்துக்குப் பொதுவகையாகவே திறக்கப்பட்டிருக்கிறது. அது எப்படியென்றால் மானுடருக்குப் பதிலாகத் தேவமானுடனானவர் செய்த பிராயசித்தம கடவுளுடைய நீதியை முற்றாகப் பரிகரித்துவிட்டது. அதினால் மனுக்குலத்துக்கு மோட்ச உரிமையும உண்டாகிவிட்டது. ஆயினும மனிதரைச சிறப்புவகையாகத் தனித்தனியே நோக்கும்போது, இவர்கள் சுயாதீன சித்தமுள்ளவர்களாகையால் தங்களுடைய சொந்த உடன்முயற்சியில்லாமல் கிறீஸ்துநாதருடைய பதிற்பிராயசசித்தத்தைத் தங்களுக்குப் பலனுள்ளதாக்கிக்கொள்ளக்கூடாத. அந்தப்பிராயச்சித்தத்திலே பங்கடைவதற்கு அவரவர் என்னசெய்யவேண்டுமென்று மீட்பர் சித்தமானரோ அதை நிறைவேற்றுவோர்மாத்திரம் பாவம் மன்னிக்கப்பட்டவர்களாகி மோட்சத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள். கிறீஸ்துநாதருடைய தெரிவிக்கப்பட்ட சித்தத்தின்படி, அவருடைய பதிற்பிராயச்சித்தத்திலே பங்குபற்ற விரும்புவோரெல்லாம் அவரைத் தங்களுடைய ஞானத்தலையாக ஏற்று அவருடைய திருக்

கற்பனைகளைக் கைக்கொள்ளவேண்டியது. இக்கற்பனைகளுள்ளே முதலானது விசுவசித்து ஞானஸ்நானம் பெறவேண்டுமென்பது. ஆகையால், கிறீஸ்துநாதரைவிசுவசித்து தக்கமனப்பக்குவங்களோடு ஞானஸ்நானம்பெறுவோர்மாத்திரம் பாவம்நீங்கவும் மோட்ச உரிமைகிடைக்கவும் பெறுவார்கள். இதுவே கிறீஸ்துவேதபோதக மொழிய, மானுடதேவன் மரித்ததினால் "எல்லாருடைய பாவங்களும்" உடனே நீங்கிவிட்டன என்பது போதகமல்ல.

## X. முடிவுரை.

நம்முடைய நண்பர் தமது எட்டு "நியாயங்"களையும் எழுதியபின் கடைசியிலே: "மற்றுமுள்ள நியாயங்களும் இவ்வாறே ஆக்ஷேபத்துக்கிடமாயும் சம்பத்தகாதனவாயும் இருக்கின்றன" என்றார். இதுவரைக்கும் நாம் சொல்லியவைகளைக் கவனமாய் வாசித்தோருக்கு கிறீஸ்துவின் கடவுட்டன்மையானது மறுக்கொணா ஸ்திரமான பல நியாயங்களின்மேல் ஊன்றியிருக்கிறது என்பது விளங்கியிருக்கும். "சித்தி"யார் சொல்லத்தெரியாமற்சொல்லிய சில "நியாயங்"கள் ஆக்ஷேபத்துக்கிடமானவைகளே என்பது நிச்சயம் ஆனால், உள்ளபடியே கிறீஸ்துநாதரைப்பற்றி ஆராய்வோர் அவர் மானுடச்சட்டைசாத்திவந்த மெய்க்கடவுளேயாம் என்று காணும்படியாக, ஓராயிரம் கெட்டியான நியாயங்கள் அவர்களை வந்துநெருக்கிநிற்கும்.

நாம் இங்கு பரிசோதித்தவைகள் அந்த நியாயங்களுட் சில. அவைகளைமாத்திரம் இப்போது திரட்டிச்சொல்லி முடிப்போம்.

1. கடவுள் இவ்வுலகத்திலே மனிதகோலமாய் எழுந்தருளி வந்தார் என்றசத்தியம் "மனித அவதாரம்" என்று சொல்லப்படும். இப்படிப்பட்ட அவதாரம் உலகத்திலே நிகழ்ந்திருக்கிறது என்றதற்குக் கிறீஸ்தநூல்களைப்போல சைவநூல்கள் வைஷ்ணவ நூல்களும் எல்லாம் சாட்சியாயிருக்கின்றன. மனித அவதாரஞ் செய்யச்சித்தமான கடவுள் அத்திருச்சித்தத்தை நிறைவேற்றுவதற்குச் சுபாவமானவழி ஓர் ஸ்திரீயிடத்தில் உற்பவித்துப் பிறப்பதேயாம். அப்படிப்பிறந்தபோது கடவுள் தமக்கு நித்தியமாய் உள்ளதாகிய தேவசுபாவத்தோடு மனிதசுபாவத்தை (ஆத்தும சரீரங்களை)யும் எடுத்துக்கொண்டாரேயன்றி, தாம் எவ்விதத்திலேயாவது மாறியவரல்ல. கடவுள் ஓர் ஸ்திரீயின் கருப்பையிலே உற்பவித்துப்பிறக்கத் திருவுளமானதிலே அளவிறந்த தாக்ஷிணியம் விளங்குகிறது. ஆயினும், அது தேவசுபாவத்துக்கு எவ்விதத்திலேயாவது பங்கமானதொன்றல்ல.

2. கடவுள் மனிதனாய்ப்பிறந்துவராமலும் மனிதனுக்காகப் பாடுபடாமலும் வேறுகாருண்யவழிகளாலேயும் உலகத்தை ஈடேற்றியிருக்கக்கூடும் என்பதிற சந்தேகமில்லை. ஆனாலும் நன்றிகெட்

டோராகிய நமக்குத் தமது அன்பின்பரப்பை விசுதிதமாய் வெளிப்படுத்தி, நமது அக்கிரமங்களின் அவலட்சணத்தை நாம் காணச்செய்யும்படியாகவும், நமக்குச் சாங்கோபாங்கமான ஒரு புண்ணிய மாதிரிகையைக் காட்டும்படியாகவும் அவர்பிறந்து இவ்வுலகில்வாழ்ந்து போதகம்பண்ணிப் பாடுபடலானார். இச்சத்தியத்தை நம்முன்னோருள்ளே மேலான ஞானிகளாய் விளங்கிய சைவர் ஆதியவர்களும ஏற்றுப்போற்றியிருக்கிறார்கள்.

3. நம்முன்னோர்கள் கடவுளானவர் உள்ளபடியே மானுடச்சட்டைசாத்தி இவ்வுலகத்தில் எழுந்தருளிப் போதகஞ்செய்தார் என்று சொல்லியிருந்தாலும், இந்தியாவிலே அப்படிப்பட்ட ஒரு மெய்யான அவதாரம் நடந்ததற்குச் சாட்சியில்லை. இந்தியாவிலே நடந்த அப்படிப்பட்ட ஒரு சம்பவத்தைச் சரித்திரங்கள் குறித்துவைக்கவுமில்லை உலகம் விசுவசிக்கவுமில்லை. உலகசரித்திரம் முழுதிலும் ஒரேயொரு திருவுருவே மனிசாவதாரஞ்செய்த கடவுளுக்குரிய லட்சணங்களெல்லாம உள்ளதாக விளங்குகிறது. அது கிறீஸ்துநாதராகிய திருவுரு. கிறீஸ்துநாதரை உலகமுழுதிலும் சீர்திருத்திய புத்தியும் கடவுட்சிந்தனையும் உள்ளவர்களெல்லாம கடவுளென்று விசுவசித்திருக்கிறார்கள்; விசுவசித்துவருகிறார்கள். இந்த விசுவாசமானது உண்மையான நிச்ச உணர்ச்சியின்மேல் ஊன்றியுள்ளது என்றது விளங்கும்படியாக ஆயிரமாயிரம்பேர் பிராணனையுங்கொடுத்திருக்கிறார்கள். கிறீஸ்துவேதம் உலகத்திலே பரம்பின தன்மையானது ஒரு மகா ஆச்சரியமாகக்கிடக்கின்றது.

4. கிறீஸ்துவின் கடவுட்டன்மையானது அவருடைய திருப்போதகத்தினாலே விளங்கிறது. அவர் எந்தமனிதனாவது பேசத்துணியக்கூடாதவிதமாய்ப் பேசினார். தமது சொந்தநாமத்தினாலே பேசினார். அவருடைய போதகமானது உலகத்தை வேற்றுருவாக்கிச் சீர்ப்படுத்திப்போட்டது.

5. கிறீஸ்துநாதர் தாம் சொல்லியவைகள் உண்மையென்றதைக்காட்ட ஆச்சரியமான அற்புதங்களைச் செய்தருளினார். அவர் கடவுளால் பூரணமாய் அங்கீகரிக்கப்பட்ட ஒரு பெரிய சன்மார்க்கராயாவது இருக்கவேண்டுமென்றபக்ஷம் சந்தேகத்துக்கிடமில்லாமலிருந்தது. இப்போதும் அவரை எதிர்க்கிறவர்கள்கூட அவரை ஒரு மகா பரிசுத்தவான் மகான் என்று சொல்லாமலிருக்க முடியாது. இப்படியான குணாதிசயங்களுள்ளவர், தாம் உலகத்திலே எழுந்தருளிவந்த கடவுளாமென்று வசனித்தபோது, அது ஏற்றுக்கொள்ளப்படவேண்டிய வசனமேயாயிற்று.

6. விசேஷமாய் அவர் முன்னேறவே அறிவித்தபடி மரித்து அடக்கஞ்செய்யப்பட்டு மூன்றாம்நாள் உயிர்த்தெழுந்தமையினால் தமது கடவுட்டன்மையைச் சகலரும் அறியப்பிரசித்தப்படுத்தினார். அவருடைய மரணமுமோ நிச்சயம். அவர் சரீரம் பரிமளமூட்டித்

துணியால் வரிந்துகட்டி ஓர் சற்குகைக்குள் வைத்து மூடிவிடப்பட்டதுமோ நிச்சயம். அவர் உயிர்த்தெழுந்தது சம்மைப்பற்றி அவநம்பிக்கைப்பட்டு ஆங்காங்கு சிதறுண்டிருந்த சிஷர்களுக்கும் விசுவாசிகளுக்கும் காணப்பட்டதினாலேயே அவர்கள் இந்த ஆச்சரியத்தைத் தெட்டத்தெளிவாய் உலகத்துக்குப் பிரசங்கித்து இந்தப் பிரசங்கத்தின் நிமித்தம் இரத்தஞ்சிந்தி மரித்தார்களென்பதுமோ நிச்சயம். ஆகையால், கிறீஸ்துநாதருடைய கடவுட்டன்மையும் குன்றாத நிச்சயமேயாம்.

7. கிறீஸ்துநாதருடைய சீவியம் மரணம் உத்தானம் முதலிய வரலாறுகளை எழுதிவைத்தோர் அவைகளைக் கண்டும்கேட்டுமிருந்த சககாலத்தவர்களேயாம். ஆதலால், அவர்களுடைய சாட்சி ஒப்புக்கொள்ளப்படத்தக்கது. ஒருசாட்சிக்கு எட்டுச்சாட்சிகள் எழுதியிருக்கிறார்கள். இவர்கள் கிறீஸ்துநாதரை விசுவசித்தவர்களாயிற்றே என்றால், அவரை விசுவசியாத பிறமத நூலாசிரியர்களும் கிறீஸ்துநாதரைப் பற்றிய பிரதான சம்பவங்களை ஆங்காங்கே எழுதிவைத்துப் போயிருக்கிறார்கள். எழுத்திலேயுள்ள சாட்சிகளை ஒருபுறம் நிற்க, கிறீஸ்துநாதரைக் கண்டும் கேட்டும் விசுவசித்தோரான ஆயிரக்கணக்கான விசுவாசிகளின் சபையானது வழிமுறையாக அந்நாட்டொட்டு இந்நாள்வரைக்குமிருந்து அவருடைய கடவுட்டன்மைக்கு உயிருள்ள சாட்சியாக விளங்குகிறது. இந்தத் திருச்சபையின் உற்பத்திக்கும் நிலைபேற்றுக்கும் கிறீஸ்துநாதரின் கடவுட்டன்மையேயன்றி ஏதுவேறில்லை. ஆகையால், கிறீஸ்துநாதருடைய கடவுட்டன்மை குன்றாத நிச்சயமேயாம்.

8 ஆதிதொட்டே சகசமலமாகிய சென்மபாவத்திலும் நாமே கட்டிக்கொண்ட கன்மபாவங்களிலும் அழுந்திக்கிடக்கின்ற நம்மை ஈடேற்றத் திருமூர்த்தங்கொண்டு எழுந்தருளிவந்த சாக்ஷாத்கடவுள் கிறீஸ்துநாதரேயாகையால், அவரை விசுவாசத்தினால் அடைந்து அவருடைய திருப்போதகத்தைக் கைபேற்று மெய்யான காரணக் குருதீட்சையாகிய ஞானஸ்நானத்தைப் பெற்றுக்கொள்வதுதான் மோட்சமடைவதற்கு ஏகவழி. தமிழ்நாட்டுப் பத்திமான்களுட் சிறந்தவராகிய மாணிக்கவாசகர் சொல்லியபடி

> அருபரத்தொருபரன் அவனியில்வந்து
> குருபரனாகி அருளிய பெருமையைச்
> சிறுமையென்றெண்ணாது

அவர் நீசமனுஷராகிய நம்மேல்வைத்த கருணையேயென்றுகண்டு அவர் சிறீபாதங்களைச் சிரமேற்சூடி அவருடைய தொண்டராகி உய்யக்கடவோம்.

*Imprimatur*,
Jaffna, 11. 6. 10.

✠ H. JOULAIN, O. M. I.
Bishop of Jaffna.

PRINTED BY C. ANDREW AT S. J. C. P. JAFFNA.

CATHOLIC TRACT
NO. 13.

# The True Way of Salvation

# ஈடேற்ற வழி

## வாசித்துப்பார்!

சருவசீவ தயாபர கடவுள் உன்னைப் படைத்து இற்றைவரைக்கும் காத்துவந்திருக்கிறார். உனக்கு ஒரு சரீரத்தையும், ஒரு ஆத்துமத்தையும் தந்தருளினார். சரீரம் ஒருநாள் பொருமி வெடித்து சிதைந்து அழிந்து மண்ணோடு மண்ணையும் தூசியோடு தூசியாயும் போம். சரீரத்துக்கு உரிய சுக, பெல, சௌந்தரியங்களும், தனதானிய சம்பத்துக்களும் ஆகிய எல்லாம் காற்றைப்போல் பறந்து, கனாப்போல் மறைந்துபோம். ஆத்துமமோ ஒருபோதும் அழியாது. ஆத்துமத்துக்கு உரிய புண்ணிய சம்பத்தோ ஒழியாது.

உன்னைப் படைத்த கடவுள் உன் சரீரத்திலே கொண்டிருக்கிற கரிசனையைக் காட்டிலும் ஆத்துமத்திலே கொண்டிருக்கிற கரிசனை மெத்த மெத்த!! உன் அழியா ஆத்துமத்துக்குத் தம்முடைய பிரத்தியட்சதரிசனம் என்கிற பாக்கியத்தை நித்தியமாய்க் கொடுக்கவே உன்னைப் படைத்தார். உன்னை அத்தரிசனமடையுந் தலமாகிய மோட்சலோகத்திற் சேர்த்துவிடுகிறதற்கு அவர் மிகவும் ஆவல் உடையவராய் இருந்தருளுகிறார். நீயோ பாவத்தில் செனமித்துப் பிறந்து பாவத்தில் உழன்று வருகின்றாய். பாவத்தைப் போக்கிவிடவோ உன்னால் முடியாது. பாவத்தோடு நீ இருக்குந்தனையும் உன்னை மோட்சகரையிற் சேர்த்தல் தேவநீதிக்குச் சரிப்படுமோ? சரிப்படாதே.

இப்படியே, நீ பாவத்தில் உழன்று மோட்சமடைய முடியாத பக்குவத்தில் இருப்பாய் என்று அறிந்து தயாபர கடவுளானவர் உனக்காகச் செய்தருளிய ஆச்சரியத்தைச் சொல்லக் கேள். உன் பாவங்களைப்போக்கி நீ மோட்சகரை சேர வழி திறந்துவிடும்படியாக அவர், தம்மோடு ஏக சுபாவம் உள்ள கடவுளாகிய தம்முடைய திருச்சுதனை உலகத்திற்கு அனுப்பியருளினார். அத்தேவசுதன் உன்னைப்போலொத்த ஒரு மனுஷனாய் அவதாரம்பண்ணிப் பிறந்துவந்து உன் பாவப்பழியைத் தாமே சுமந்து, தேவநீதிப்பிரகாரம் நீ படவேண்டிய தண்டனையைத் தாமே பட்டு உனக்காகச் சீவனைவிட்டருளினார். மனுஷனாய் அவதரித்த கடவுளானவர் உனக்காகச் சீவபலியானதைக்

கண்டு நீ மனம் இளகி, உன் பாவங்களை வெறுத்து மனஸ்தாபப்பட்டு, உனக்காகப் பலியான இவருடைய திருவேதத்திற் சேர்ந்து இனி மேல் இவருடைய திருச்சித்தப்படியெல்லாம் செய்ய ஆயத்தப்படு வாயானால் உன் பாவங்கள் நீங்கப்பெற்று ஈடேறிக்கொள்ளுவாய்.

இப்போது நான் சொன்னவைகள் எல்லாம் உனக்கு நன்றாய் விளங்கியிராது. இவைகளைச் சத்தியமாக உடனுக்குடனே ஏற்றுக் கொள்ளவும் பின்னிடுவாய். ஆனால் இச்சிறு புத்தகத்தைப் பொறுமையோடும் சத்தியத்தை அறியவேண்டுமென்ற ஆசையோடும் மெல்ல மெல்ல வாசித்துப்பார். வாசித்த பின்பே உண்மையை அறிந்து கொள்ளுவாய்.

## ஆதிகால சம்பவங்கள்

முதன்முதல் அறியவேண்டிய சத்தியமாவது:— தாமாய், அநாதியாய், அரூபியாய், அளவில்லாத சகல நன்மைச்சுரூபியாய், எங்கும் வியாபியாய், எல்லாத்துக்கும் ஆதிகாரணமாய் விளங்குகிற மெய்யான கடவுள் ஒருவரே அன்றிப் பலரல்ல என்பதாம. அவ் ஏக கடவுள் தமது தேவசுபாவத்திலே ஏகத்துவமாயிருந்தாலும், ஆள்வகையிலே திரித்துவமாய் (அதாவது பிதா, சுதன், ஸ்பிரித்துசாந்து என்னப்படுகிற மூவராய்) இருக்கிறார் என்பது வெளிப்படுத்தப்பட்ட சத்தியமாம். இச்சத்தியம் நமது புத்திக்கெட்டாத பரமரகசியம். இது ஆதிமுதற்கொண்டு உலகத்திலே விசுவசிக்கப்பட்டு வந்ததும் அன்றி, பற்பல பொய்ச்சமயங்கள் தம்மிலேயும் சில அபத்தங்களோடு கலப்புண்டு வந்திருக்கிறதை அறிவோம். இப்படியே இந்தியாவிலிருந்த பூர்வ ஆரியருடைய வைதிக சமயத்திலே அக்கினி, வருணன், சூரியன் என்ற மூன்றும் ஒன்றுமென்று சம்பந்தப்பட்டுள்ள மூன்று கடவுளர்களாகக் கொள்ளப்பட்டனவென்று இருக்குவேதத்திலே விளங்கும். எகிப்திய, கிரேக்க, ரோமைச் சமயங்களிலேயும் கடவுள் ஒருவர் என்றும் மூவர் என்றும் பின்னபேதமாய்க் கொள்ளப்பட்டு வந்தது. இச்சமயங்களிலேபோல நற்கால சைவருடைய சித்தாந்த சமயத்திலேயும் கடவுள் பிரமா, விஷ்ணு, சிவன் என மும்மூர்த்திகளாயுள்ளவர் என்று கொள்ளப்படுகின்றது. ஆயினும் இச்சமயங்கள் யாவும் திரித்துவத்தின் மெய்யான இயல்பைக் குறித்து அபத்தங்களை உபதேசித்தன. திரித்துவத்தின் மெய்யான இயல்பு பின்வருமாறு:—

திரித்துவத்தின் மூன்று ஆட்களுக்கும் ஒரே தேவசுபாவமே பொதுவாயிருக்கிறபடியால், மூவரும் ஒரே கடவுளன்றி மூன்று கடவுளல்லர். பின்னும் மூவரும் ஒரே தேவசுபாவம் உடையவர்கள் ஆனபடியால், பிதாவுக்குள்ள தேவலட்சணங்கள் எல்லாம் குறைவின்றி சுதனுக்கும் உண்டு. சுதனுக்குள்ள தேவலட்சணங்கள் எல்லாம் குறைவின்றி ஸ்பிரித்துசாந்துவுக்குமுண்டு. அன்றியும் அதே நியாயத்தினால், மூவரும் ஒருவர் ஒருவரிடத்தில் இருக்கிறார்களே அன்றி, ஒருவரை ஒருவர் பிரிந்திருக்கக்கூடிய இயல்பு உடையோர் அல்லர்.

இப்படியே ஏகமாகவும், திரித்துவமாகவும், தம்மிலே தாமே அளவில்லாப் பாக்கியம் நிறைந்த ஆனந்த சமுத்திரமாகவும் விளங்குகிற கடவுள், தமது ஆனந்தத்திலே பங்குபற்றி மகிழத்தக்க ஞானமுள்ள சிருட்டிகளைப் படைக்கவேண்டுமென்று தமது மனோவாக்குக்கெட்டா

நன்மைத்தனத்தினால் அநாதியாகவே திருவுளமாகி, அத்திருவுளத்தினாற் குறிக்கப்பட்ட காலத்திலே, முதன் முதல் சம்மனசுகள் எனப்படுகிற சரீரமில்லா அரூபிகளை ஒன்றுமின்மையினின்றும் தோற்றுவித்தார். சம்மனசுகள் தமது பேரின்ப பாக்கியத்தை அனுபவிப்பதற்குக் கட்டாயமாய் நியமிக்கப்படவேண்டுமென்று அவர் திருச்சித்தமாகவில்லை. ஆகையால் அவர்களுக்குச் சுயாதீன சித்தமென்கிற தன்னிஷ்டத்தைக் கொடுத்து, அவர்கள் தங்கள் புத்தி சித்தங்களினுதவியால் புண்ணியபேறுகளைச் சம்பாதித்து, அப்பேறுகளின் பலனாக மோட்சபாக்கியத்தை அடையும்படி வைத்தருளினார். அவர்களிற் சிலர் அகங்காரத்தினால் மோட்ச உரிமையை இழந்து நரகத்துக்காளாக, பெரும் பாங்கானோர் தங்கள் புண்ணியத்தின் பலனாக மோட்ச பேரின்பத்தை அடைந்துகொண்டார்கள். நரககதியை அடைந்த சம்மனசுகளுக்குப் பிசாசுகள் என்று பெயர்வழங்கும்.

பின்பு கடவுள் தம்மாற் குறிக்கப்பட்ட பரிபக்குவ காலத்திலே ஆத்துமமும் சரீரமுமுள்ள சுரூபிகளான மனுஷரைப் படைத்து, அவர்களுக்கும் சுயாதீன சித்தத்தைக் கொடுத்து, அவர்களும் தங்கள் புண்ணிய பலனாக மோட்சசுதந்தரத்தை அடையும்படி வைக்கத் திருவுளமானார். அப்படியே மனுஷர் சிறிதுகாலம் வசித்து புண்ணியபேறுகளைச் சம்பாதிக்கும் தலமாக உலகத்தையும், அவர்களுடைய லௌகீக சீவியத்துக்கு உபயோகமாக அவ்வுலகத்திலே தாவர மிருக வர்க்கங்களையும் படைத்தபின், மனுக்குலத்தின் ஆதிப் பிதாவும் மாதாவுமான ஒரு மனுஷனையும் மனுஷியையும் உண்டாக்கி வைத்தருளினார்.

இப்படியே மனுமக்கள் சகலரும் ஒரே ஆதிப் பிதாமாதாவிடத்தினின்று பிறந்து பலுகிவருவோராகின்றார்கள். இது சில பொய்ச் சமயங்களாலேயும் அங்கீகரிக்கப்பட்ட சத்தியமாம். ஆனால் இப்போது உலகத்திலே காணப்படுகிற குல, வருண, சாதிபேதங்கள் வரலானது எப்படியோ என்றால்:—முன் ஓரிடத்தில் இருந்த மனுக்குலத்தார் பலுகிப்பலுகி வெவ்வேறு தேசங்களிற் போய்க் குடியேறியபின், அவரவர் குடியேறிய தேசத்தின் சீதள, உட்டண வித்தியாசத்தினாலும், நடத்திய தொழில் வித்தியாசத்தினாலும், உலக ஆசார பேதங்களினாலுமே குலபேதம், வருணபேதம், சாதிபேதம் என்றவை உலகத்திலே ஏற்படலாயின. உலகம் நடைபெறுதற்கு உபயோகமான இப்படிப்பட்ட வித்தியாசங்கள் அவரவர் தேவகற்பனைப்படி நடந்து மோட்சகதியை அடைந்துகொள்ளுதற்குத் தடையல்ல என்றறிய வேண்டியது.

கடவுள் ஆதிமனுஷனைப் படைத்தபோது அவனுக்கு "இஷ்டப் பிரசாதம்" என்னும் ஓர் பரமவரத்தைக் கட்டளையிட்டருளினார். அவ்வரத்தைக்கொண்டிருப்போர் மோட்சபாக்கியத்துக்கு உரிமைக்காரராம். அதைப் போக்கடிப்போரோ மோட்ச உரிமையை இழந்து நரகத்திற் தள்ளுண்ணுவோராம். பின்னும் கடவுள் மனிதனை எவ்விதத்திலும் குறைவு உள்ளவனாய் இருக்கவிடாமல், அவனுக்குத் தம்மையும் தன்னையும் அறியத்தக்க புத்தி சாமர்த்தியம் முதலான ஆத்தும சம்பந்தமான வரங்களையும், சாகாமை முதலிய சரீர சம்பந்தமான வரங்களையும் கொடுத்து, அவனை நானாவித சுகந்த புஷ்பச்செடிகள், கொடிகள், மதுரம்பொருந்திய கனிமரங்கள் நிறைந்த சிங்

காரத் தோப்பு ஒன்றில் வைத்து: உன்னை ஓர் பெருஞ்சந்ததிக்குத் தலைவன் ஆக்கினோம். நீ நம்முடைய கற்பனைகளுக்கு அடங்கி நடந்தால் உனக்கும் உன் சந்ததியாருக்கும் இகலோகத்தில் இன்ப சுகபாக்கியமும் பரலோகத்தில் நம்மை என்றென்றும் முகம் முகமாய்த் தரிசிப்பதாகிய பேரின்ப பாக்கியமும் கொடுக்கப்படுமென்று பொருத்தனை செய்தருளினார். பின்னும்; அவன் தமக்குக் கீழ்ப்படிந்து அடங்கவேண்டியவன் என்றதற்கு அடையாளமாக அச்சிங்காரத் தோப்பிலேயுள்ள கனிமரங்களுள் ஓர் மரத்தின் கனியைப் புசியாதிருக்கும்படி கட்டளைபண்ணியருளினார்.

ஆனால் அகங்காரத்தினாலே மோட்சத்தை இழந்துபோயிருந்த பிசாசுகள், ஆதிப் பிதா மாதா நன்றாய் இருந்தால் மனுக்குலத்தார் மோட்சகதிக்குப் பாத்திரராய்ப் போவார்களே என்றும், தாங்கள் இழந்துபோன பேரின்ப பாக்கியத்தை அவர்கள் அடைந்துகொள்வார்களே என்றும் கண்டு காய்மகாரங்கொண்டு, ஆதிப் பிதாமாதாவைக் கடவுளுக்குத் துரோகிகள் ஆக்கிவிட ஓர் சூழ்ச்சிபண்ணின. அச்சூழ்ச்சி ஏதெனில்: ஓர் பிசாசு சர்ப்ப வேஷம் எடுத்துக்கொண்டுவந்து ஆதி மனுஷிக்கு நயவசனம் பேசி, கபடமாய் அவளை அழைப்பித்து விலக்கப்பட்ட கனியை அவள் புசிக்கப்பண்ணிவிட, அவள் தான் புசித்தபின் தன் கணவனுக்குங் கொடுத்தனள். அவன் அக்கனியை உண்பது தேவகட்டளைக்கு விரோதம் என்று நன்றாய் அறிந்திருந்தும், தன் ஸ்திரீயைப் பிரியப்படுத்தும் பொருட்டு கனியை வாங்கிப் புசித்தான். இப்படியே ஆதிமனுஷன் தன்னைப் படைத்து எத்தனையோ ஆத்தும சரீர வரங்களால் அலங்கரித்து, தன்னை மனுக்குலம் முழுதுக்கும் தலைவனாக்கி வைத்த அளவில்லா நன்மைத்தனமுள்ள கடவுளை மறந்து, அவர் சொற்றுறந்து விலக்கப்பட்ட கனியைத் தின்றதினால் கடவுளுக்கு விரோதமாய் அளவில்லாப் பாரதூரமான பெருந்துரோகத்தைக் கட்டிக்கொள்ளலாயினன். அன்றியும், தான் மனுக்குலம் முழுதுக்கும் பிதாவும் தலைவனுமாயிருந்தபடியால் அதின் வாழ்வும் தாழ்வும் தன் கையிலேயே இருந்ததென்று நன்றாய் அறிந்துகொண்டு, தனக்கும் தன் சந்ததிக்கும் கிடைக்கவிருந்த மோட்சபாக்கியம் வேண்டாமென்றவன்போல நடந்துகொண்டபடியால், தன் சந்ததியாருக்கு விரோதமாகவும் பெரும் பாதகத்தைக் கட்டிக்கொள்ளலாயினன்.

ஆதிமனுஷன் தம்முடைய கட்டளையை மீறி நன்றிகெட்ட துரோகியாய்ப் போனதினாலே நீதிபரரான கடவுள் அவனைச் சிங்காரத் தோப்பில் நின்று துரத்திவிட்டதுமன்றி, அவனுக்கும் அவன் சந்ததியாருக்குமாகக் கொடுத்திருந்த பரமவரங்களையும் அவனிடத்தினின்று எடுத்துவிட்டார். குடும்பத்தலைவன் இழந்ததை குடும்பத்தார் சகலரும் இழந்துபோவார்களே அதுபோல, ஆதி மனுஷனுக்கு இல்லாமற்போன வரங்கள் அவன் குடும்பத்தாராகிய மனுக்குலத்துக்கும் இல்லாமற்போயின. இஷ்டப்பிரசாத வரம் எடுத்துவிடப் போகவே, சகல மனுஷரும் மோட்ச உரிமையை இழந்து சாபத்தின் மக்களானார்கள். இச்சாபத்தோடேயே பிள்ளைகள் பிறக்கிறார்கள். இதற்குச் சென்மபாவம் என்ற பெயர் வழங்கும். இஷ்டப்பிரசாதம் எடுத்துவிடப்படவே ஆத்துமத்திற்கு அருளப்பட்டிருந்த மேலான ஞானவெளிச்சம் மங்க

லாகி அஞ்ஞானம் தலைப்பட்டது. சித்தத்தின் பெலனும் குன்றிப்போய், சரீர ஆசாபாசங்கள் ஆத்துமத்துக்கு அடங்காமல் எழுந்து மனுஷரைப் பெரிதும் பாவ இச்சையுள்ளோர் ஆக்கிவிட்டன. பின்னும் நித்திய சீவியத்துக்கு நியமிக்கப்பட்ட காரணத்தினால் சாகாமல் கூட்டோடே பரகதியடையவிருந்த மனுக்குலத்தார் சாவுக்கு உட்பட்டார்கள். சாவு என்னும் நிர்ப்பாக்கிய கேட்டோடு சகலவித நோய்களும் சஞ்சலங்களும், பொருளை நிழல்தொடருவதுபோலத் தொடர்ந்து வந்தன.

ஆதிமனுஷனுடைய துரோகமே இப்போது மனுமக்கள் எத்தனையோ பாடுகளைப் படுகிறதற்கும், தவதாயக் குறைகளை அநுபவிக்கிறதற்கும், அவர்கள் சரீரம் புத்திக்கு விரோதமாய் எழும்புகிறதற்கும், புத்தி அஞ்ஞானத்தினால் இருளடைந்துகிடக்கிறதற்கும் காரணமாம். சத்தியவேதம் படிப்பிக்கிற இவ்விசேஷங்களை புறச்சமயங்களும் ஒருவிதமாய்க் கூறுகின்றன. அதெப்படியெனில், கிரேதாயுகம் என்றும் சத்தியயுகம் என்றும் சொல்லப்படுகிற ஆதிகாலத்திலே, உலகத்தில் பாதகம் என்றது யாதுமில்லாமல் சமாதானமும் பாக்கியமும் தேங்கிக்கொண்டிருந்தன என்றும், மனுஷன் சீரும் சிறப்பும் இன்பமும் இரம்மியமும் உள்ளவனாய்ச் சீவித்தான் என்றும், பிற்காலத்திலேயே தற்போது நாம் பட்டு அனுபவிக்கிற நிர்ப்பந்தங்கள் எல்லாம் உண்டாயின என்றும் சைவம் ஆதிய சிலசமயங்கள் கூறுகின்றன. ஆயினும் முன் இன்பபாக்கியம் தேங்கினதற்கும் பின் துன்ப நிர்ப்பாக்கியம் உண்டானதற்கும் காரணம் என்னவென்று அச்சமயங்கள் சொல்ல முடியாமலிருக்க, சத்தியவேதமே முன்காட்டியபடி, அதின் மெய்யான காரணத்தைத் தெரிவிக்கின்றது.

ஆதிமனுஷன் பாவத்தினால் தன்னையும் தன் சந்ததியார் அனைவரையும் கெடுத்துக்கொண்டபோதிலும், அளவில்லாத் தயவுள்ள கடவுள் தம்மாற் படைக்கப்பட்ட மனுஷர் அனைவரையும் நரகில் தள்ளத் திருச்சித்தம் ஒவ்வாதவராய், அவர்களுக்கிரங்கி, அவர்களுக்கு நீதிப்பிரகாரம் வரவேண்டிய தண்டனையை நீக்கவும், விரும்புவோருக்காவது மோட்ச சுதந்தரத்தை மறுபடியுங் கொடுக்கவும் ஓர் வழியை ஏற்படுத்தலாயினார். இப்படியே மனுஷன் தனக்கு அருளப்பட்ட சுயாதீன சித்தம் என்கிற உத்தம வரத்தைத் தனக்குக் கேடாக உபயோகித்து தன்னைத்தானே கெடுத்துக்கொள்ள, கடவுளோ அவன் வருவித்துக்கொண்ட கேட்டை அழிக்க ஓர் திவ்விய மருந்தைத் தந்தருளினார். கேட்டைச் சகிக்கவல்ல, பாக்கியத்தைச் சுகிக்கவே கடவுள் மனுஷனை உண்டாக்கியருளினார் என்றது இதினால் துலாம்பரமாயிற்று. இன்னும், ஒன்றுமில்லாதிருக்கையிலே மனுஷனை உண்டாக்கி அவனுக்கு மோட்சபாக்கியம் கொடுக்கச் சித்தமானதினாலே கடவுளுடைய நன்மைத்தனம் எவ்வளவாக விளங்கிற்றோ, அவ்வளவாகவும் அதற்கு மேலதிகமாகவும், தன் சுயகுற்றத்தினாற் கெட்டுப்போனவனைக் கைதூக்கி ஈடேற்றச் சித்தமானதினாலே அவருடைய தயாளம் விளங்குவதாயிற்று.

கெட்டுப்போன மனுக்குலத்தைக் கைதூக்கி ஈடேற்றக் கடவுள் ஏற்படுத்தியருளிய திவ்விய வழி ஏதோ என்றால்:-மனுமக்களுடைய பாவப்பழியைச் சுமந்து அவர்களுக்காக உத்தரித்துப் பிராயச்சித்தம்

பண்ணுதற்குத் தேவபிதா தம்முடைய ஏக சுதனாகிய கடவுளை மனுஷ அவதாரஞ்செய்ய அனுப்பினதேயாம். இப்படி அனுப்புவோமென்பதாகக் கடவுள் ஆதியிலேயே மனுக்குலத்தோருக்கு வாக்குக்கொடுத்தருளினார். மனுக்குலத்துக்காக உத்தரிக்கும்படி கடவுள் மனுஷசுபாவம் எடுத்து அவதாரஞ்செய்யவேண்டியதேன், மனுஷர் தாங்களே தங்கள் பாவங்களுக்காக உத்தரிக்கமுடியாதோ? என்று கேட்கில், முடியாது. ஏனெனில், யாதொரு துரோகத்தைச் செய்கிறவனுடைய நீசத்தனத்துக்கும், அத்துரோகம் யாருக்குச் செய்யப்பட்டதோ அவருடைய மகிமை கண்ணியத்துக்கும் அளவாக அத்துரோகத்தின் கனமுமிருக்கும். குடியானவன் தன்னோடொத்த குடியானவனுக்கு ஒரு சிறு குற்றஞ்செய்தால் சிறு துரோகமேயாகும். அச்சிறு குற்றத்தைத் தன் இராசாவுக்குச் செய்தாலோ மகா துரோகமாகுமே. ஆனபடியால், அற்ப புழுவுக்குச் சமானமான மனுஷர் அளவில்லா மகிமைப்பிரதாபம் பொருந்திய பரலோக பூலோக நாயகரான கடவுளுக்குச் செய்த துரோகம் அளவில்லாததாம். அப்படியிருக்க, அவ்வளவில்லாத் துரோகப்பழியை அளவுள்ள மனுஷர் தீர்க்கமுடியுமோ? முடியாது. பூமியிலிருந்த, இருக்கிற, இருக்கப்போகிற சகல மனுஷரும் தங்கள் சீவிய காலமெல்லாம் கொடிய பாடுபட்டு அருந்தவங்களை முடித்தாலும் அது அந்தத் துரோகத்துக்குப் பிராயச்சித்தமாகாது. அதெப்படியெனில், இராசதுரோகம்பண்ணிக் கொலைத் தீர்ப்புப்பெற்றவன் எத்தனைதரம் இரந்து மன்றாடி குத்துக்கரணம்போட்டாலும் இராசதுரோகம் அழியுமோ? கொலைத்தீர்ப்பு ஒழியுமோ? அதுபோல, குற்றவாளிகளே ஆகிய மனுஷர் என்னதவஞ் செய்தாலும் தேவநீதிக்கு உத்தரிப்பாவதுமில்லை. நரகத் தீர்ப்புப் போவதுமில்லை. ஆனால், முன்சொன்ன இராசதுரோகிக்காக இராசாவின் குமாரன் ஏற்பட்டு: நான் கொலைக்கு ஏகிறேன் என்றுபோனால் நீதியுஞ் செலுத்தப்பட்டு துரோகிக்கு விடுதலையும் உண்டாகுமே. அதுபோல, தேவசுதன் மனுஷகுலத்துக்காக ஏற்பட்டு மனுஷனாய்ப் பிறந்துவந்து, தம்முடைய பாடுகளின் அளவில்லாத பலனால் அவர்களுடைய பாவத்துக்கு வேண்டியதும் மேல்மிச்சமுமான பிராயச்சித்தம் பண்ணும்போது பிதாவுக்கு மகிமையும் மனுக்குலத்துக்கு ஈடேற்றமும் உண்டாகத் தப்பமாட்டாவாம். ஆகையினாலே தேவநீதிசெலுத்துதலுக்கும் மனுஷஈடேற்றத்துக்கும் வழியாக சுதனாகிய கடவுள் உலகத்தில் மனுஷசுபாவம் எடுத்து வருவாரென்று வாக்குப் பண்ணப்பட்டதாயிற்று.

## எதிர்நோக்கல்

கரைகாணாக் கருணைசமுத்திரமாகிய கடவுள் அளவில்லாத் தயவோடு பண்ணியருளிய இவ்வாக்குத்தத்தத்தை மனுக்குலத்தார் ஆவலாய் ஏற்று மனதில் இருத்திக்கொண்டு உலோகத்தை ஈடேற்றுகிறவர் எப்போது வருவாரோ வருவாரோ என்று காதலோடு எதிர்பார்த்திருந்தார்கள். ஆதிபிதாக்களுள் அநேகர் தங்கள் பாவத்துக்காக மனஸ்தாபப்பட்டு, வரப்போகிறவரைச் சிந்தித்துப் புண்ணியவழியில் நடந்துவந்தபின் இறந்துபோனார்கள். பிற்காலத்திலேயோ மனுமக்கள் பலுகிப் பெருகி பல தேசாந்தரங்களில் பல பாஷைக்காரராய்ப் பிரிந்து, ஒருதேசத்தாருக்கு மற்றொருதேசத்தார் அன்னியராய்ப்போனதினாலும், சகல பாவதுர்க்குணங்களும் வளரவளர அதனோடு அஞ்

ஞானமும் மேற்பட்டுவந்ததினாலும் அநேகர் மெய்யான கடவுளையும் அவர்அருளிய திருவாக்குத்தத்தத்தையும் திருக்கற்பனைகளையும் படிப்படியாய் மறந்து, அவரவர் தங்களுக்கு இஷ்டமானபடி பற்பல பொய்த்தேவர்களையும் சமய ஆசாரங்களையும உண்டாக்கிப் படைப்புண்ட வஸ்துக்களுக்கு தேவஆராதனை நமஸ்காரம்பண்ணத் தொடங்கினார்கள். அக்கினி, காற்று, மழைமேகம் முதலியனவைகள் உலகத்துக்கு மிகவும் உபயோகம் உள்ளவைகள் ஆனபடியால் அவைகளே சமஸ்த நன்மையுமான கடவுள் என்று எண்ணி சிலர் அவைகளை நமஸ்கரிக்க, வேறுசிலர், சந்திர சூரியர் உலகத்துக்கு ஒளியும் உஷ்ணமும் தந்து உதவுதலினால் அவைகளே தெய்வமென்று கைதொழுதார்கள். பின்னும் பிரமாண்டமானது எதுவோ, பயங்கரம்பொருந்தியது எதுவோ, அதிபிரயோசனமுள்ளது எதுவோ, அதைச் சிலர் ஆராதித்தார்கள். இப்படியே மலைகளும், மரங்களும், ஆறுகளும, சமுத்திரங்களும், பாம்புகளும், பிசாசுகளும், பசுமுதலிய மிருகங்களும் தொழுது கொள்ளப்படலாயின. சில வீரசூர இராசாக்களும் தேச அபிமானிகளும், துஷ்ட இராசாக்கள் இராட்சதர்களைச் செயித்து நாசம்பண்ணி, தங்களைச் சேர்ந்தோரை பயமின்றி வாழப்பண்ணினதினால், அறிவற்ற சனங்கள் அவர்களைத் தேவர்களாகப் பூசித்துவரவே காலகதியில் அவர்களுடைய ஆராதனை நிலைநிறுத்தப்படலாயிற்று. மேலும் புலவர் தங்கள் பாடல்கள் காதுக்கு இனிமையாயிருக்கும்பொருட்டு உயிரில்லாதவைகளை உயிருள்ளவைகள் போலவும், மனுஷரைத் தேவர்கள்போலவும் வருணித்துக் கற்பித அலங்காரமாய்ப் பாடிவைத்தவைகளைப் பிற்காலத்தார் மெய்யென்று நம்பிக்கொண்டதினால், எத்தனையோ தேசங்களில் கணக்கில்லாத கட்டுக்கதைகளும் தேவர்களும் பெருகி அஞ்ஞானம் மேலும்மேலும் தழைத்துக்கொண்டு வரலாயிற்று.

ஆனாலும் இவ்வாறு அஞ்ஞான இருளினால் மயங்கி மெய்ஞ்ஞானத்தில் நின்றும் தவறிப்போய் பொய்த்தெய்வங்களைத் தொழுது கொண்டுவந்த சனங்களுக்குள்ளேயும், மெய்யான கடவுள் மனுக்குலத்துக்குச் செய்தருளிய வாக்குத்தத்தத்தின் நினைவு ஒருவிதத்தில் இருந்துகொண்டே வந்தது. உலகம் முழுதையும் ஓர் குடைக்கீழ் ஆளும் ஓர் பாலகன் வானத்தில் நின்று இறங்கிவந்து பிறப்பார் என்று ரோமையர் முதலிய பலசாதியார் எதிர்பார்த்திருக்க, ஓர் மகா புண்ணிய புருஷர் எழுந்தருளிவந்து திக்குவிஜயம் படைத்து விளங்குவர் என்று சீனர் நம்பியிருக்க, கடவுள்தாமே மனுஷருடைய அஞ்ஞானத்தை நீக்கி மெய்ஞ்ஞானத்தை உபதேசிக்கும் சற்குருவாய் வந்தருளுவார் என்று நம்முடைய இந்துதேசத்தவர்கள் * கூற, இப்படியே அவ்வத்தேசத்தார் தத்தம் மனச்சார்பின்படி ஆதிபாரம்பரியமாய் உள்ள வாக்குத்தத்தத்தை வெவ்வேறு வகையாய் விசுவசித்துவந்தார்கள்.

சகல சாதியாருள்ளும் விசேஷ தேவபத்தியுள்ளவர்களாய் விளங்கின யூதசாதியாரோ ஆதிவாக்குத்தத்தத்தைத் தப்பறைகளின்றிச்

* நம்முடைய இந்துதேசத்துப் புலவர்கள் கடவுள் அவதாரம் பண்ணினாரென்ற சத்தியத்தை மிகவும் பாழாக்கி, அவருடைய தேவத்துவத்துக்குப் பொருந்தாத நீச மிருக அவதாரங்களையும் துஷ்ட மனுஷ அவதாரங்களையும் கற்பித்து வாசிப்போருடைய மனதைப் புண்படச்செய்யும் அசுசியான கதைகளைக் கட்டிப் பாடிவைத்தனர்.

சுத்தமாய் விசுவசித்து வந்ததும் அன்றி, வரப்போகிற மானிடதேவனை சிந்தைசெய்து அவருக்கு ஏற்றபடி நடந்தும் வந்தார்கள். அச்சாதியாருக்குள்ளே காலத்துக்குக் காலம் விசேஷ தேவ அருள்பெற்ற தீர்க்கதரிசிகள் என்னப்படும் மாதவத்தோர் தோன்றி, மனுஷாவதார கடவுளைப்பற்றிய விசேஷங்களை ஐஞ்ஞூறு, அறுநூறு, ஆயிர வருஷங்களின் முன்னும் தேவ ஏவுதலின்படி தெரிவித்திருந்தார்கள். அதெப்படியெனில், கடவுள்தாமே மெய்யான மனுஷ சுபாவம் தாங்கி ஓர் கன்னிகையிடத்தில் நின்று பிறந்துவந்து உலகத்தோரின் பாவங்களைத் தம்தோளிற் சுமந்து பாடுபடுவார் என்றும்; அவர் இன்ன காலத்தில் இன்ன ஊரில் பிறப்பார் என்றும்; பிறக்கும்வேளை இன்ன அடையாளங்கள் காணப்படும் என்றும்; அவர் இன்னவகையாய்ச் சீவித்து இன்ன இன்ன நவங்களைச் செய்து இன்ன இன்ன புண்ணிய மாதிரிகைகளைக் காண்பித்து இன்னவகையாய்த் துரோகிச் சீஷன் ஒருவனால் விற்கப்பட்டு இன்ன இன்ன பாடுகள் சகித்து மரிப்பார் என்றும்; மரித்தபின் உயிர்த்தெழும்புவார் என்றும்; அவரை உலகம் முழுதும் சேவித்துப்போற்றும் என்றும் இன்னவும் பிறவுமான எத்தனையோ நுணுக்கமான விசேஷங்கள் முன்னேறவே வெவ்வேறு காலத்தில வெவ்வேறு தீர்க்கதரிசிகளால் அறிவிக்கப்பட்டன. இத்தீர்க்கதரிசிகளின் தரிசனவார்த்தைகள் பல புத்தகங்களில் எழுதப்பட்டும், பல பாஷைகளிலே திருப்பப்பட்டும், நானாதேசங்களில் பரம்பியுமிருந்தன. வரவென்றிருந்த தேவசுதன் மெய்யாகவே மனுஷனாய் வந்தபோது அவருடைய தேவத்தன்மைக்கு இத்தீர்க்கதரிசனங்கள் உறுதியும் அத்தாட்சியுமாயின. எப்படியெனில், வெகுகாலங்களின்முன் பல தீர்க்கதரிசிகள் சொல்லிவைத்த குறிப்புக்களெல்லாம் இவரிலே நிறைவேறியபோது, இவரே பிதாவினால் அனுப்பப்பட்டவர் என்றதும், இவரைக்குறித்து முன்சொல்லப்பட்டவைகள் எல்லாம் தேவவாக்குகளே என்றதும் துலாம்பரமாயிற்று. இத்தீர்க்கதரிசன வாக்குகள் அடங்கிய புத்தகங்களை உலகமெங்கும் சிதறிப்போயிருக்கிற யூதசாதியார் இந்நாட்களிலும் பத்திரமாய்க் காத்துக்கொண்டு வருகிறார்கள்.

## தேவன் மனுஷனானது

ஈற்றில் நெடுங்காலம் எதிர்நோக்கியிருக்கப்பட்டவர் தோற்றுவாராயினார். கடவுள் மனுஷனாய்ப் பிறந்து வந்தபோது அவருக்கு யேசுக்கிறீஸ்து என்று திருநாமம் சூட்டப்பட்டது. அவர் உலகத்திலே உதித்து இப்போது ஆயிரத்துத் தொள்ளாயிர வருஷத்துக்குமேல் ஆகிறது. அவர் யூதேயா தேசத்திலே யூதவமிசத்திலே வந்து பிறந்தருளினார். அவரைப் புருஷசம்பந்தம் இன்றித் தேவ அருளால் அற்புதமாய்க் கர்ப்பந்தரித்துப் பிள்ளையாகப் பெற்ற பாக்கியவதியான கன்னிகைக்கு மரியம்மாள் என்று பெயர். அவர் பிறந்த கற்குகையைப் பெத்தலேம் என்கிற ஊரிலே இன்றைக்குங் காணலாம். செல்வமும் செருக்கும் சுகப்பிரியமுமே மனுஷர் பாவத்தில்விழ விசேஷ காரணங்களாய் இருத்தலால், இவற்றிற்கு எதிரான வறுமை, தாழ்ச்சி, சரீர ஒறுத்தல் என்னும் புண்ணியங்களைத் தமது முன்மாதிரிகையினாற் கற்பிக்கும்படி அவர் ஓர் கற்குகைக்குள்ளே ஆரும் அற்ற பரதேசிபோல

அர்த்தசாமத்திலே பிறந்து அக் குகைக்குள்ளே கிடந்த ஓர் மாட்டுத் தொட்டிலிலே வளர்த்தப்படத் திருவுளமானபோதிலும், தம்முடைய தேவ மகிமையை நல்ல மனது உள்ளவர்கள் சகலரும் அறிந்துகொள்ளும்படி அவ்வேளை வெளியே பெரும் அதிசயமொன்று நடக்கச் சித்தமானார். அதேதெனில், மேலே வானத்திலே சம்மனசுகளின் சேனையானது கீதங்களைப் பாடி ஆர்ப்பரித்ததை அண்டையிலுள்ள வயல்வெளிகளில் ஆட்டுக்கிடைகளைக் காத்துக்கொண்டிருந்த இடையர் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்துபார்த்து, அவ்விடமெல்லாம் பகல் போலப் பிரகாசிக்கிறதைக் கண்டு மிகவும் அதிசயிக்க, அவர்கள் தலைக்குமேலே சில சம்மனசுகள் மனுவேஷங்கொண்டு தோற்றி அருகாமையிலுள்ள கற்குகைக்குள்ளே கடவுள் பிறந்திருக்கிற விசேஷத்தை அவர்களுக்கு அறிவித்தார்கள். இடையர் இது மெய்தானோ போய்ப் பார்ப்போம் என்று பேசிக்கொண்டு குகையைத் தேடிச் சென்றபோது, அதற்குள்ளே குழந்தையையும் அதின் கன்னித் தாயாரையும் அக்கன்னிக்குத் துணையாயிருந்த சூசைமுனியென்னும் விருத்தாப்பியரையும் கண்டு தேவ குழந்தையைச் சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்கரித்தபின் போய் சகல சங்கதிகளையும் ஊருக்குள்ளே பரப்ப ஊரவர்கள் நம்புகிறவர்களும் நம்பாதவர்களுமாய் இருந்தார்கள்.

தேவகுழந்தை பிறந்தபோது பின்னுமொரு அதிசயம் நடந்தது. அதாவது அநேக நூற்றாண்டுகளுக்கு முன்னே தீர்க்கதரிசிகள் அறிவித்திருந்தபடி கடவுள் மனுஷனாய் அவதரித்துப் பிறந்துவிட்டதற்கு அடையாளமாக கீழ்த்திசையிலே ஒரு நவமானவெள்ளி தோற்றப்பட்டது. அவ்வெள்ளியைக் கண்டவர்களுக்குள்ளே அதின் கருத்தை அறிந்தவர்களான மூன்று சோதிட அரசர்கள் பார்சிய தேசப் புறங்களிலே நின்று தங்கள் பரிவாரங்களோடு பயணப்பட்டு யூதேயா தேசத்தைநோக்கி வந்தார்கள். ஏனென்றால், யூதேயாவிலேதானே உலகத்தை ஆளுகிற ஒருவர் நவமாய்ப் பிறப்பாரென்று தீர்க்கதரிசனவாக்கு இருந்தபடியால். அவ்விசேஷம் எங்கும் அறியப்பட்டிருந்தது. அரசர்கள் வந்தசெய்தியை அறிந்த யூதேயாதேச அரசனான ஏரோது மிகவும் பயந்தான். அப்போதே அத்தேசத்தவர்களும் உலகத்தை ஓர் குடைக்கீழ் ஆளப்போகிற சக்கரவர்த்தி ஒருவர் வந்து பிறந்தார்தானோவென்று யோசிக்கலானார்கள். ஏனெனில் வரவிருந்த தேவசுதனைக்குறித்து யூதருக்குள்ளே பெரும்பங்கானோர் தவறான எண்ணங்களைக்கொண்டிருந்தபடியால் வரப்போகிறவர் கடவுளோ என்று சிலரும் இராசாவோவென்று சிலரும் மலைவுகொண்டு, பிறந்துவிட்டார் என்று சொல்லப்பட்ட அவரைத் தேடாமலிருந்தார்கள. சிலர் வரப்போகிறவர் இவர்தாம் என்றால் மாட்டுக்கொட்டிலுள்ளே பிறப்பாரோ என்று போக்கு நியாயஞ் சொல்லிவிட்டு சும்மாவிருந்தார்கள். இராசாக்கள் மூவருமோ தாங்கள் கண்ட அதிசயமான அடையாளத்தை நம்பி, குழந்தையைத் தேடிப்போய்ப் பெத்தலேம் எனும் ஊரிலே அவரைத் தாயோடும் கைத்தாதையோ

மும் கண்டு, இவரே திரிபுவனங்களையும் ஆண்டு நடத்திவரும் கடவுள் என்று விசுவசித்து குப்புறவிழுந்து தெண்டனிட்டு தொட்சணைகளை வைத்துப் பணிந்துபோனார்கள். இச்சம்பவங்களெல்லாம் உலகறிந்த விஷயமாய்ப்போயின.

## அந்தரங்க சீவியம்

யேசுநாதசுவாமி சிலவருஷங்களாக எகிப்து தேசத்திலும் பின் பல வருஷங்களாக நாசரேத்து என்கிற ஊரிலும் தம்முடைய மாதாவானவருக்கும் கைத்தாதையாருக்கும் அமைந்து அவர்களுக்குப் பணிவிடைசெய்துகொண்டு அந்தரங்கமாய்ச் சீவித்துவரத் திருவுளமானார். அக்காலமெல்லாம தம்முடைய தேவசுபாவத்துக்கு உரிய அதிசய கிரியைகளை உலகத்துக்குக் காட்டாமல்விட்டாலும், தேவசுபாவத்தோடு ஒன்றித்திருந்த தமது மனுஷசுபாவத்திற்குரிய நற்கிரியைகளாகிய தாழ்ச்சி, கீழ்ப்படிதல், சாந்தம், பொறுமை, செபதப முதலிய புண்ணியங்களை ஆச்சரியத்துக்குரியவிதமாய் அனுசரித்துக்கொண்டுவந்தார். இதற்கிடையில் முன் அவருடைய சென்னவேளையிலே நடந்த அதிசயங்களைக்குறித்தும், வரவென்றிருந்த மானிட தேவன் அவராகக்கூடுமே என்று சிலர்கொண்ட நம்பிக்கையைக்குறித்தும் சகலரும் மறந்துபோனார்கள். கன்னிமரிநாயகியும் சூசைமுனி என்கிற கைத்தாதையும் மாத்திரம் கடவுள் மானிடசுபாவம் பூண்டு தங்களுக்குக் கீழ் அமைந்து நடந்துவந்த அற்புதத்தைக் கண்டு ஆச்சரியமும் அன்பும் நிறைந்தவர்களாய் இருந்துவந்தார்கள். யேசுநாதசுவாமி தமக்கு முப்பதுபிராயம் ஆகும்வரையும் நாசரேத் ஊரில் இருக்கத் திருவுளமானார்.

## பிரசித்த சீவியம்

யேசுநாதசுவாமி முப்பது வருஷமாகத் தமது தேவத்துவத்தை வெளிப்படுத்தாமல் மனுஷரோடு மனுஷனாய்க் கலந்து சீவித்திருந்த பின், முப்பதாம் வயதிலே தமது தேவமகிமையை உலகத்தாருக்குக் காட்டத்தொடங்கச் சித்தமானார். அவர் நாசரேத்தூரில் நின்று புறப்பட்டுக் கல்வியில்லாத பன்னிரண்டு மீன்பிடிகாரரைச் சீஷராய்த் தெரிந்துகொண்டு ஊருக்கு ஊராகவும் பட்டணத்துக்குப் பட்டணமாகவும் கலிலேயா யூதேயா என்கிற தேசமெங்குந் திரிந்து முன் ஒருபோதும் உலகத்தார் கண்டுகேட்டு அறியாத மகா ஆச்சரியமான புதுமைகளைப் புரிந்துவந்தார்.

அத்தேசங்களிலும் அவைகளுக்கு அணித்தான பிறதேசங்களிலும் உள்ளவர்கள் அவருடைய அற்புதங்களைப்பற்றிக் கேள்விப்பட்டு அவரைத் தேடிக் கும்பல் கும்பலாய்ச் சேர்வார்கள். அவர் மாயவித்தைக்காரரைப்போல விநோதத்துக்குரிய வீண் அதிசயங்களையல்ல, தம்முடைய இரக்கத்தையும் தேவத்துவத்தையும் காண்பிக்கிற அற்புதங்களையே நடத்துவார். அவைகளைச் செய்வதிலே தம்மு

டைய மகிமையையல்ல, ஆத்துமாக்களின் ஈடேற்றத்தையே தேடுவார். பின்னும் இரகசியமாய்ச் சிலர்முன்னேயும் ஒவ்வோர் குறித்த இடத்திலேயுமல்ல, பிரசித்தமாய் ஆயிரக்கணக்கான சனங்களின் முன்னும் எவ்வெவ்விடத்திலும் அவ்வற்புதங்களை இயற்றுவார். அவர் தெருவழியே போம்போது சிலவேளைகளில் ஐயாயிரம் ஆறாயிரம் சனம் அவரைச் சூழ்ந்துகொண்டுபோகும். வழியில் பலவிதமான நோயாளிகளும் கொண்டுவந்து விடப்படுவார்கள். அவர் நன்மைசெய்துகொண்டுபோவார். செவிடர்களைத் தமது திருக்கரத்தாற் தொட்டமாத்திரத்திலேயே கேள்வியடையப்பண்ணுவார். ஒருபோதும் வாய்பேசியறியாத ஊமைகளைத் தெளிவாய்ப் பேசப்பண்ணுவார். பிறவிக் குருடருக்குக் கண்வெளிச்சம் கொடுப்பார். முடவர் சப்பாணிகளை நோக்கி: எழும்பி நடவுங்கள் என்று கட்டளையிடவே அவர்கள் துள்ளிக்குதித்து நடப்பார்கள். சூம்பின கைகால் உள்ளவர்களுக்குக் கைகால் கூடி வழங்கப்பண்ணுவார். குஷ்டரோகிகள் உடனுக்குடனே சொஸ்தம் அடையப்பண்ணுவார். செத்து நாறிக் கிடந்த சவங்களையும் அதிகாரத்தோடே அவ்வவர் பெயர்சொல்லிக் கூப்பிட்டு உயிருடன் எழுப்புவார். பிசாசு பிடித்தவர்களை நோக்கி ஒரு வார்த்தை சொல்ல, பிசாசு உரத்த சத்தமாய்க் கூவி: தேவசுதனே உமக்கும் எங்களுக்கும் என்ன அலுவல் என்று அலறிக்கொண்டு அவர்களைவிட்டு ஓடும். யேசுநாதசுவாமி கிட்டநின்று மாத்திரமல்ல தூரத்தில் இருந்துகொண்டும் நோயாளிகளைக் குணப்படுத்துவார். புசற்காற்றுகளை அதட்டி. அமர்த்துவார். சத்துருக்கள் மித்துருக்களென்ற பேதமில்லாமல் சகலர் முன்னும் அவர் பண்ணிய இவ்வாச்சரியங்களைப் பற்பல ஊரவர்களும், பற்பல தருணங்களிலேயும் வெவ்வேறு இடங்களிலேயும் கண்ணாரக் கண்டார்கள். அவ்விதங் கண்டவர்களுள் சிலர்தாமே இவைகளைப்பற்றி எழுதி வைத்திருக்கிறார்கள்.*

மனிதர் மனசுக்குள்ளே எண்ணும் அதி அந்தரங்கமான எண்ணங்களையும் யேசுநாதசுவாமி அறிந்து வெளிப்படுத்துவார். பின் வரப்போகிற காரியங்களை முன்னேறிச் சொல்லுவார். இப்படியே தம்முடைய சீஷர்களுள் ஒருவன் தம்மைக் காட்டிக்கொடுப்பான் என்றும்; யூதர் தம்மைப் பிடித்துக் கட்டியடிப்பார்களென்றும்; தாம் சிலுவையில் அறையுண்டு மரிப்பார் என்றும்; மரித்த மூன்றாம் நாள் உயிர்த்து எழும்புவார் என்றும்; தம்மை விசுவசியாமல்

* அர்ச். மத்தேயு, அருளப்பர், சின்னப்பர் என்கிற அப்போஸ்தலரும் மாற்கு, லூக்கா என்கிற சீஷர்களும் வெவ்வேறு கால இடங்களில் எழுதிய சரித்திரங்கள் நிருபங்களிலே யேசுநாதசுவாமியுடைய அற்புத கிரியைகளைப்பற்றி வாசித்து அறியலாம். பின்னும் அக்காலத்திலிருந்த யோசேபஸ் முதலிய யூத சரித்திர ஆசிரியரும்; தசித்து, கல்சியு, தேலுஸ், பிளேகோன் முதலிய அஞ்ஞான உரோம கிரேக்க சரித்திர ஆசிரியர்களும் யேசுநாதசுவாமியைப் பற்றியும் அவருடைய திவ்விய நடக்கை அற்புதங்களைப் பற்றியும் பல விசேஷங்களை எழுதிவைத்தார்கள்.

தேவ் கொலை செய்யப்போகிற யூதருடைய தேவாலயமும் பட்டணமும் உரோமராலே அழிக்கப்படும் என்றும்; அதின்பின் தேவாலயத்திலே கல்லின்மேல் கல்லுத் தங்கவிடப்படுவதில்லை என்றும், யூதர் உலகமெங்கும் சிதறடிக்கப்படுவார்களென்றும் தெளிவாய்ச் சொல்லியருளினார். அவ்வளவு தயாபர மகிமை நிறைந்த குருவை அவர் சீஷரொருவன் காட்டிக்கொடுப்பதும்; சனங்களால பெரிதும் மெய்ச்சப்பட்ட அவர் பிடிபடுவதும்; கட்டி அடிபடுவதும்; மானபங்கமாய்ச் சிலுவைமரத்தில் அறைந்து கொல்லப்படுவதும்: கொலையுண்டவர் உயிர்த்தெழும்புவதும், பிரபலம்பெற்று விளங்கிய யெருசலே நகரத் தேவாலயமும் பட்டணமும் அழிபடுவதும் நெடுங்காலம் சுயாதீன சாதியாராயிருந்துவந்த யூதர் உலகெங்கும் சிதறடிக்கப்படுவதும் ஆகிய இவையெல்லாம் ஒருபோதும் நிகழக்கூடாத சம்பவங்கள்போற் தோற்றின ஆனாலும் யேசுநாதசுவாமி தம்மைப்பற்றி அறிவித்தபடியெல்லாம் சம்பவித்தன என்பது உலகறிந்த விஷயம். யெருசலேம் பட்டணத்தைக் குறித்த தீர்க்கதரிசனமும் சரியாய் நிறைவேறிற்று. அதெப்படியெனில் அப்பட்டணம் யேசுநாதசுவாமி கொல்லப்பட்ட 37-ம் வருஷ காத்திராப்பிரகாரம் உரோமையராலே முற்றுகையிடப்பட்டது. அங்கிருந்த கிறீஸ்தவர்கள் யேசுநாதசுவாமிதிருவுளம்பற்றியிருந்த வாக்கியத்தை நினைவுகூர்ந்து பட்டணத்தைவிட்டோடி பெல்லா என்கிற ஊரில் அடைக்கலம் புகுந்துகொண்டார்கள். உரோமையர் தீத்து என்னும் சேனைபதிக்குக் கீழே யூதரைச் சங்கரித்து வெகுசனத்தைச் சிறையாய்ப் பிடித்துத் தேவாலயத்தையும் பட்டணத்தையும் சுட்டெரித்துவிட்டுப் போனார்கள். அப்படியே தேவகொலைசெய்த யூதருடைய இராச்சியம் அழிந்து யூதர் உலோகமெங்கும் சிதறுண்டுபோனார்கள். இப்போதும் அங்கங்கே அலைந்துதிரிகிற யூதசாதியாரே இச்சம்பவங்கள் எல்லாவற்றுக்கும் உத்தம சாட்சியாம்.

யேசுநாதசுவாமி இவ்வாறு தமது தேவத்துவத்துக்கு அத்தாட்சியான மகத்துவங்களை விளங்கப்பண்ணியருகையில் மனுக்குலத்தோர் உய்வதற்கு அனுசரிக்கவேண்டிய சுகிர்தவழியையும் போதித்துக்கொண்டுவந்தார். தாம் ஓர்போதும் கல்வி சாஸ்திரங்களைப் படியாமலிருந்தும யூதருடைய வேத சாஸ்திரத்திலே தேர்ந்த வேதபாரகர், நியாயசாஸ்திரிகளானோர் பிரமித்து நிற்கும்படி பரலோக சம்பந்தமான ஞான வாக்கியங்களைத் திருவாய்மலர்ந்தருளுவார். துஷ்டரை வல்லமையோடு அதட்டிப்பேசுவார். மனஸ்தாபப்படும் பாவிகளைத் தயவோடு தேற்றியருளுவார். அவருடைய போதனை களங்கமற்ற பரிசுத்தமுள்ளதாயிருந்தது. எவ்வெக் காலத்திலேயிருந்த ஞானிகளும் சன்மார்க்கத்தை ஒருவிதமாய்ப் போதித்துவருகையில் மெய்ஞ்ஞானத்தோடு ஒவ்வாத துர்ப்போதனைகளையும் அதனோடு கலந்தே போதித்து வந்திருக்கிறார்கள். யேசுநாதசுவாமியுடைய போதகமோ உன்னத சன்மார்க்கத்தை முன் எவருங் கற்பியாதவித

மாய்க் கற்பித்தது. அத்திருப் போதகத்தை அன்றுதொட்டு இன்று மட்டும் ஆயிரத்துத் தொளாயிர வருஷங்களாக உலகம் பார்த்து அதி சயப்பட்டுக்கொண்டு வருகின்றது. அதை அனுசரித்த இராச்சியங்க ளிலும தேசங்களிலும் அஞ்ஞான இருள் நீங்கி மெய்ஞ்ஞான ஒளி யின் கனிகளாகிய சகல சாங்கோபாங்க புண்ணியங்களும் விளைந்தி ருக்கின்றன.

யேசுநாதசுவாமியைக் கண்டவர்கள், அவர் உலகம் ஓர்போதும் கண்டிராத மகா புண்ணியவான், பரிசுத்தவான் என்று உணருவார் கள். பாவச் சேற்றிலே புரள விரும்புகிற துஷ்டர்தாமும் காணு விடத்தில் அவரைப்பற்றி என்ன சொன்னாலும் அவர் கண்முன்னே யோ நடுநடுங்குவார்கள் என்றாலும்,அவர் சாந்தம் திருவடிவந்தங்கி வந்தாற்போல அவ்வளவு மதுரமான திருமுகம் உடையவராயிருந்தா ரென்று சரித்திர கிரந்தம் எழுதியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். சாந்தம், தயை, இரக்கம், அருள் முதலிய புண்ணியங்கள் எந்த மனு ஷனிடத்திலும் காணப்படாத அளவாய் அவரிடத்திலே விளங்கிக் கொண்டிருந்தன. எந்த மனுஷனிலும் பாவம் உண்டே. சைவம் முதலிய சமயங்களிலே சொல்லப்படுகிற தெய்வங்கள்தாமும் ஓரோர் சமயத்தில் பாவங்களுக்கு உளளானார்கள் என்று அவ்வச்சமய புரா ண காவியங்களிலே சொல்லப்படுகின்றது. யேசுநாதசுவாமியிலோ ஓர் அற்ப குற்றமும் காணமுடியாமலிருந்தது. அவர் பரிசுத்தராயும் பாவநடத்தையைக் கண்டிக்கிறவராயும் இருந்ததின்பொருட்டு அவ ரைப் பகைத்த சில அககாரிகள் பேச்சிலாவது அவரைக் குற்றப் படுத்தலாம் என்று எத்தனையோ வஞ்சகச் சூழ்ச்சிகளைப் பண்ணிப் பார்த்தார்கள் பண்ணியும் என்ன? யேசுநாதசுவாமியிலே அற்ப பாவமேனும், பாவத்தின் நிழலேனும் காணமுடியாமற் போயிற்று.

இப்படியே மனுஷனாய் அவதரித்த கடவுள் நோய்கள்மேலும் பேய்கள்மேலும், கடல்மேலும் காற்றுமேலும், பாவிகள்மேலும் புண் ணியவாளர்மேலும், காட்டிய அதிகாரத்தையும், அவருடைய மறுக் கொணு வல்லமை நிறைந்த போதகத்தையும், அவர் சீவியத்திலே விளங்கிய பரிசுத்தத்தையும் பார்த்துப் பலர் அவரை மகா தீர்க்கதரி சியென்று கொண்டாடினார்கள். பெரிய இடங்களிலுள்ள சிலரோ பொறாமையினால் அவரைப பகைத்துவந்தார்கள்.

ஆயினும் யேசுநாதசுவாமி எவருக்கும் அஞ்சாமல் தாமே உல கத்தை ஈடேற்றும்படி பரலோகத்திலிருந்து இறங்கிவந்த கடவுள் என்றும், தாம் மனுமக்கள்பேரிற் கொண்ட நேசமிகுதியால் அவர் கள் பாவத்தைப் போக்கத் தமது சீவனை விடப்போகிறோமென்றும், விட்டபின் அதை மீண்டும் கைப்பற்றிக்கொள்ளுவோம் என்றும் பிர சித்தமாய்ப் போதித்துவந்தார். "இத்தனை பரிசுத்தமுள்ள ஒருவர் பிற ரை ஏமாற்றக்கூடுமா? இப்பரிசுத்த மனுஷன் தம்மைத் தேவன். என்று சொல்லுகிறாரே. இப்படிச் சொல்லுகிறது மெய்யாய் இருக் கவேண்டும். இவரே உலகத்தில் அவதார புருடராய் எழுந்தருளி

வந்த தேவன் ஆகவும் வேண்டும். அப்படியல்லவென்றால் இவருக்குப் பைத்தியம் என்று சொல்லவேண்டும் ஏனென்றால் பைத்தியம் இல்லாத ஒரு வெற்று மனுஷன் தன்னைத் தேவன் என்று சாதிக்கக் கூடுமா? கூடாது. பின்னை இவருக்குப் பைத்தியமா? அப்படியுமல்ல. தேவவல்லமையோடு அரிய புண்ணியங்களைச் செய்கிறவரும் உலகத்தின் ஞானிகள் சகலருடையவும் அறிவுக்கு மேற்பட்ட ஞானத்தைச் சிறுபிள்ளையும் விளங்கிக்கொள்ளத் தக்கபடி பேசுகிறவருமாகிய இவருக்குப் பைத்தியம் என்று சொல்லுதலே முதிர்ந்த பைத்தியமாகும். இல்லை! யேசுக்கிறீஸ்துநாதர் தேவனேயாம் இந்த அதிசயமான மனுஷனுடைய அற்புத கிரியைகள் இவர் மனுஷனல்ல, தேவனே என்று காட்டுகின்றன. இந்தப் பரிசுத்தவானுடைய வார்த்தைகளும் இவர் தேவனே என்று வெளிப்படுத்துகின்றன, இவர் தேவன்தாம் ஆகவேண்டும்'' என்று இப்படி மனதில் யோசித்துத் தெய்வபத்தியுள்ள அநேகர் அவரை விசுவசித்தார்கள். தெய்வபத்தி இல்லா உலக மனிதர் கண்ணிருந்தும் குருடர்போலவும் காதிருந்தும் செவிடர்போலவும் நடந்து, மிருகங்களுக்கு ஒப்பத் தங்கள்பாட்டில் இருந்தார்களேயன்றி உலகத்தில் உதித்துவந்த நீதிச் சூரியனான மனுஷாவதார கடவுளைச் சட்டைபண்ணவில்லை.

## தேவ கொலை

யூதசாதியாருக்குள்ளே முதன்மையானவர்களாய் இருந்த ஆசாரியர்கள் என்னப்படுகிற குருமாரோ முன்சொன்னபடி யேசுநாத சுவாமிமேலே காய்மகாரங்கொண்டு அவரைக் கொன்றுபோட வழி தேடினார்கள். இந்த மனிதன் செய்கிற புதுமைகளை அல்ல என்று சொல்ல நம்மால் முடியாது. செத்தவர்கள் தம்மையும் எழுப்புகிறான். அப்படி எழுப்பப்பட்டவர்களோ நமக்கு விரோதமாய்ச் சாட்சிசொல்லுகிறார்கள். நம்முடைய குருத்துவ மேன்மைக்குப் பங்கம் வந்துவிட்டதே இதோ அரைவாசிச் சனம் இவன்பின்னே போய்விட்டது. இப்படி நடந்துவரவிட்டால் நமது மார்க்கத்துக்கும் தேவாலயத்துக்கும் சனத்துக்கும் பழுது ஆகுமே நாம் இவனைக் கொல்லுவதும் தகாது. ஆகையால் இராசசட்டத்தின்படி இவனைக் குற்றவாளியாக்கி மரணத்தீர்ப்பு எழுதுவிப்போமாக என்று அவர்கள் கூட்டங்கூடி ஆலோசித்திருந்தார்கள். ஆனாலும் யேசுநாதசுவாமி தாம் குறித்தநேரம் வருமளவும் தம்மை அவர்கள் கையிலே ஒப்பிக்கவில்லை. இரண்டுதடவை அவர்கள் அவரைக் கொல்ல எத்தனித்தபோது தமது தேவவல்லமையினால் மறைந்துபோனார். வேறு சில தடவைகளில் அவரைப் பிடிக்கும்படி யூதசனத்தின் ஆசாரியர்களால் அனுப்பப்பட்டவர்கள் அவருடைய தேவராச மகிமையைக் கண்டு அஞ்சிக் கலங்கிப் போய்விட்டார்கள். கடைசியாக ஒருநாள் இரவு ஒரு பெருங்கூட்டஞ் சேவகர் தம்மைப் பிடிக்கத் தேடுகிறார்களென்று யேசுநாதசுவாமி ஞானத்திருஷ்டியால் அறிந்து, அப்போ

தே உலகத்தவர்களின் பாவங்களுக்காகப் பாடுபடும்பொருட்டுத் தம்மைச் சத்துருக்கள் கையில் ஒப்பித்துவிடச் சித்தமாகிச் சேவகர் வரவிருக்கும் இடத்துக்கு எழுந்தருளிப் போனார். பிடிக்கவந்தவர்கள் முடுகிவர யேசுநாதசுவாமி அவர்களைப் பார்த்து, ஆரைத் தேடுகிறீர்கள் என, அவர்கள் நாசரேய யேசுவைத் தேடுகிறோம் என்று உத்தரஞ்சொல்ல, அவர் நாசரேய யேசு நாமே என்று திருவாய்மலரவே சேவகர்கள் மின்னலடிபட்டாற்போலத் தரையில் விழுந்தார்கள். ஆயினுந் தம்மைப் பிடிக்க உத்தாரங் கொடுத்தருளி, தம்மை அவர்கள் கையில் ஒப்பிக்கவே அவர்கள் எழுந்து அவரைப் பின்கட்டாய்க் கட்டி யூத ஆசாரியர் சமுகத்தில் கொண்டுபோய்விட்டார்கள். யூத ஆசாரியர் பொய்ச்சாட்சிகளை ஏவி அவர்மேலே குற்றஞ்சாட்ட யேசுநாதசுவாமி மவுனமாய் நின்றருளினார். சாட்சிகளோ பொருந்தவில்லை. ஆனபடியால் "இவன் தன்னைத் தேவன் என்று சொன்னான்" என்பதாக ஒரு குற்றஞ்சாட்டினார்கள். பிரதான ஆசாரியன் யேசுநாதசுவாமியை நோக்கி "நீர் தேவன் என்றால் எங்களுக்கு அப்படிச் சொல்லுமேன்" என்று ஆணையிட்டுக் கேட்க, அவர் ஆம் என்று வசனித்தார். காய்மகாரத்தினால் ஞானக் குருடராய்ப் போயிருந்த ஆசாரியரும் அவர்களுடைய ஊழியரும் அப்போதாவது கண்திறவாமல், அவரை வைது, அவர் திருமுகத்திற் துப்பி திருக்கன்னத்தில் அறைந்து ஆகடியம் பண்ணி "தேவதூஷணம் சொல்லுகிற இவன் மரணத்துக்குப் பாத்திரவான் மரணத்துக்குப் பாத்திரவான்" என்று தீர்ப்பிட்டு, தேசாதிபதியான போஞ்சியுபிலாத்துவின் அரமனைக்கு இழுத்துக்கொண்டுபோய், இவன் தன்னை இராசாவென்று சொன்னான், தன்னோடு சகல சனத்தையும் சேர்த்துக்கொள்ளுகிறான்" என்று முறையிட்டார்கள். யூத ஆசாரியர் சொன்ன குற்றச்சாட்டுக்கு யேசுநாதசுவாமி ஒன்றும் திருவாய் மலர்ந்தருளாமல் மவுனமாய் நின்றார். போஞ்சியுபிலாத்து அவரிலே குற்றமில்லையென்றும், யூதர் காய்மகாரத்தினாலே அவரைக் கொல்லத் தேடுகிறார்களென்றும் உணர்ந்து அவரை நோக்கி "நீர் இராசாதானோ" என்று கேட்க, பரலோக பூலோக இராசாவானவர்: "ஆம் நாம் இராசாவாயிருக்கிறோம். ஆயினும் இவ்வுலகத்தின் இராசாவல்ல. இவ்வுலகத்தின் இராசாவாயிருந்தால் நம்முடைய போர்வீரர்கள் நம்மை இவர்கள் கையில் அகப்படவிட்டிருக்கமாட்டார்களே நாமோ உலகத்துக்கு ஈடேற்றவழியைக் காண்பிக்க வந்தோம்" என்று தமது தேவராச மகிமையைக் காட்டி வசனித்தார். அந்நேரந் தொட்டுப் பிலாத்து யேசுநாதசுவாமியை விடுதலையாக்க வழி தேடினான். ஆயினும் யூதர் இரத்தவெறிகொண்ட கோனாய்களைப் போல் முழங்கி: "தேசாதிபதியே ஊரிலே கலகம் விளைத்துக்கொண்டு வருகிற இவனை நீர் சிலுவையில் அறைந்து கொல்லாவிட்டால் உம்மை சேசார் சக்கரவர்த்தியின்முன் குற்றஞ்சாட்டுவோம்" என்று சபதம் இட்டபடியால் கோழைநெஞ்சனான பிலாத்து யூதருக்குப்

பயந்து தன் மனச்சாட்சிக்கு மாருகத் தீர்வை எழுதத்துணிந்தான். அதெப்படியெனில், "இந்த இரத்தப்பழி என்பேரிலே இல்லை" என்று கைகழுவிவிட்டு யேசுநாதசுவாமியைக் கசைகளால் அடித்தபின் சிலுவையில் அறைந்துகொல்லக் கற்பித்தான்.

யூதர் அவரை ஓர் கற்றூணோடு கட்டி அவர் திருமுதுகு கிழிந்து இரத்தம் புறப்படுமட்டும் கசைகளால் அடிப்பித்தார்கள். கூரிய முட்களுள்ள ஓர் முடியை அவர் திருச்சிரசில் வைத்து அடித்து இறுக்கிஞர்கள். பின்பு ஓர் பாரச்சிலுவை மரத்தை அவர்மேற் சுமத்தி கல்வாரி என்னும் ஓர் மேட்டுக்கு அவரை நடத்திக்கொண்டு போனூர்கள். திவ்வியநாதர் கசையடிகளையும், முள்முடியையும், பாரச் சிலுவையையும் மனுமக்களுடைய பாவத் துரோகங்களுக்காகக் கையேற்கத் திருவுளமானூர்.

யேசுநாதசுவாமியைச் சேவகர்கள் கல்வாரி மேட்டுக்குமேலே கொண்டுபோய் அவர் சுமந்துகொண்டுபோன சிலுவையிலே அவரை மூன்று ஆணிகளால் அறைந்து அதை உயர்த்தி நாட்டிவிட்டார்கள். யேசுநாதசுவாமி குரலெடாமல், அதிசயமான அமரிக்கையோடு, சாந்தமுள்ள செம்மறிப் புருவையைப்போலத் தம்மை வாதைப்படுத்தினவர்களுக்கு அமையமாத்திரமல்ல, அவர்கள் அறியாமற்செய்த துரோகத்தைப் பொறுக்கவேண்டுமென்று தேவபிதாவை மன்ருடவுந் திருவுளமானூர். யூதர் அவரைப் பார்த்துப் பரிகாசம் பண்ணி: "நீ தேவசுதன் என்ருயே சிலுவையில் நின்று கீழே இறங்கிவா பார்ப்போம் நீ செத்தவர்களை உயிர்ப்பித்தாய உன் சீவனைக் காத்துக்கொள்" என்று சொல்லிக் கேலிபண்ணிஞர்கள் யேசுநாதசுவாமியோ மனுஷருக்காகப் படாதபாடுபட்டு, நிந்தை அவமானங்களாற் பூரிக்கப்பட்டுச் சீவபலியாகவேண்டுமென்று திருச்சித்தம் கொண்டிருந்தபடியால், யூதருடைய குருட்டாட்டமான கேள்விப்படி செய்தருளவில்லை. ஆனூலும் அத்தேசமெங்கும் சகலரும் காணத்தக்க அதிசயம் ஒன்றை மனுஷனுன கடவுள் சிலுவையில் இருந்துகொண்டே நடப்பிக்கலானூர். அதேதெனில், அவரைச் சிலுவையில் அறைந்து உயர்த்திவிட்ட நேரம் நடுப்பகலாய் இருந்தபோதிலும், வானம் இருண்டுகொண்டுவரத் தொடங்கலாயிற்று. பின்னேரம் மூன்றுமணியளவில யேசுநாதசுவாமி தம்மைக் குறித்துத் தீர்க்கதரிசிகள் தேவ ஏவுதலின்படி எழுதிவைத்தவைகளெல்லாம் நிறைவேறினவென்று திருவுளம்பற்றியபின் உரத்த சத்தமாய்க் கூப்பிட்டு: "பிதாவே உமது கரங்களில் என் ஆத்துமத்தை ஒப்படைக்கிறேன்" என்றுசொல்லியதைக் கூடநின்ற சேவகர்கள் கேட்டு: "இம்மனுஷன் இவ்வளவு மகத்தான அமரிக்கையோடு சகல பாடுகளையும் சகித்ததும் இப்போது இவ்வளவு பராக்கிரமத்தோடு பேசுவதும் ஆச்சரியமாயிருக்கிறது. சரீரத்திலுள்ள இரத்தமெல்லாம் வடிந்துபோக "மூன்றுமணி நேரம் குறைப் பிராணனோடு கிடக்கும் ஒரு ஆள் இவ்வளவு பெரும்

கலங்கி மதிமயங்கி விழுந்தார்கள். இப்படியே மனுஷர் பாவங்களுக்காகத் தமது சீவனை விட்டவர், மகா பராக்கிரம வல்லமையோடு அதை மீளவும் பற்றிக்கொள்ளலானார். இப்படியே தாம் பலமுறை வசனித்திருந்த தீர்க்கதரிசன வாக்கியத்தை நிறைவேற்றலானார். இப்படியே தாம் தேவனும் மனுஷனும் ஒன்றான மனுஷாவதார கடவுள் என்ற சத்தியத்தைக் குறித்து எவரும் எட்பிளவளவேனும் சந்தேகம் கொள்ளாமல் அத்தாட்சிப்படுத்திவிடலானார்.

மயங்கிவிழுந்த சேவகர்கள் மயக்கந்தெளிந்து எழுந்து ஓடிப்போய் யூத ஆசாரியரிடம் நடந்த அதிசயத்தைக் குறித்துச்சொல்ல, அவர்களோ தங்கள் ஞானக் குருட்டாட்டத்தைக் அப்போதேனும் விட்டுவிடாமல் சேவகரை நோக்கி நாங்கள் நித்திரையாயிருக்கையிலே யேசுக்கிறிஸ்துவுடைய சீஷர்வந்து அவருடைய சரீரத்தைக் கொண்டு போய்விட்டார்களென்று ஊரிலே கதை பரப்பிவிடுங்களென்று சொல்லிக்கைக்கூலியுங்கட்டி அனுப்பிவிட்டார்கள். ஆனால் இப்படிப்பட்ட கதையைப் பிரதான ஆசாரியரைப்போலும் ஞானக்குருடரேயன்றி வேறொருவரும் நம்பமுடியாமலிருந்தது. ஏனெனில், 1-வது; யூதருக்குப் பயந்து ஓடியொளித்துக்கொண்ட சீஷர் ஆயுதபாணிகளான சேவகர்களுக்கு அஞ்சாமல் போய் சரீரத்தை எடுப்பதெப்படி? 2-வது சரீரத்தை எடுக்குமுன் கல்லறை மூடியை வெளியில் உருட்டிவிடவேண்டுமே. உருட்டிய சத்தத்திலே சேவகருள் ஒருவனாகிலும் விழித்துக்கொள்ளவில்லையா? 3-வது, நித்திரைசெய்கையிலே நடந்ததைக் கண்டதெப்படி? கண்டால் சீஷரைப் பிடியாததேது? 4-வது, சீஷர் சரீரத்தை எடுத்தார்களென்று வைத்துக்கொண்டாலும் சகலருமறிய மரித்து அடக்கப்பட்ட ஒரு ஆள் உயிர்விட்டது என்று சொல்வதினாலும், அப்படிச சொல்லுவதற்காக அரசாங்கத்தாராலும் பிறராலும் உபத்திரவப்படுவதினாலும் அச்சீஷர்கள தாம் கண்டடையலாமென்று நம்பியிருக்கக்கூடிய பிரயோசனமென்ன?

யூத ஆசாரியர் சேவகருக்குக் கைக்கூலிகட்டி அதனோடு தங்கள் கண்களையும் கட்டிக்கொண்டு ஒருபுறமிருக்க, மறுபுறத்திலே உயிர்த்தெழுந்த நாதர் தமது கல்லறையண்டைக்குப் போய்க்கொண்டிருந்த சில பத்தியுள்ள ஸ்திரீகளுக்கு முதன்முதல் தரிசனையானார். அந்த ஸதிரீகள் ஓடிப்போய் அவ்விசேஷத்தைச் சீஷருக்கு அறிவிக்க சீஷரோ அதை நம்பவில்லை. ஆனால் அவர்களுக்கும் யேசுநாதசுவாமி ஒரு முறையல்ல; பலமுறையும், ஒரு இடத்திலல்ல, பல இடத்திலும் தரிசனையாகி அவர்களோடு உணவுப் பொருட்களைப் புசித்தருளவும் சித்தமானார். பின்னும் ஒருமுறை ஐஞ்னூறுபேருக் கதிகமானவர்களுக்கும் பிரத்தியட்சமாய்க் காணப்பட்டார். யேசுநாதசுவாமி உயிர்த்தெழுந்த விசேஷம் விரைவாய் ஊரெங்கும் பரந்துபோனபோதிலும், உலக சுக செல்வங்ளின்மேலுள்ள மிதமிஞ்சிய பற்றுதலினால் மயங்கியிருந்த பலர் அதை விசுவசியாமலேயிருந்தார்கள். மனமில்லாதவர்கள் கண்ணாரக் கண்டாலும் விசுவசியார்கள் என்றபடியாலும், காணாமல் விசு

வசிக்கிறதே பலனுள்ள விசுவாசம் என்றபடியாலும் உயிர்த்தெழுந்த நாதர் தம்மைச் சகலருக்கும் காண்பிக்கச் சித்தமாகவில்லை.

உத்தானமான கர்த்தர் நாற்பது நாட்களாய்த் தமது சீஷர்களுக்கு இடையிடையே காணப்பட்டு, அவர்களுக்குத் தம்முடைய திருவேதத்தின் சத்தியங்களை விபரித்துக்காட்டி, அவர்கள் திருச்சபை எனப்படுகிற விசுவாசிகளின் கூட்டத்தை ஏற்படுத்தவேண்டிய விதத்தைப்பற்றிய போதனைகளையும் அருளி, அவர்களுள் ஒருவராகிய சம்பேதுருவைத் திருச்சபை முழுதுக்கும் தலைவராக ஏற்படுத்தியபின், நாற்பதாம்நாள் ஒலிவேத்து எனும் மலையொன்றின்மேல் சீஷர்களோடும் வெகு திரளான வேறு விசுவாசிகளோடும் ஏறிப்போய்ச் சீஷர்களை நோக்கி: இதோ நாம் உங்களுடன் உலகமுடிவுபரியந்தம் சகலநாட்களிலும் இருப்போம். நீங்கள் போய் உலகமெங்கும் சுற்றித் திரிந்து மனித ஈடேற்றத்துக்காக நாம் உண்டுபண்ணிய வழியைப் பிரசங்கியுங்கள். சகல மனிதரையும் சீஷராக்கி பிதாவுடையவும் சுதனுடையவும் இஸ்பிரீத்து சாந்துவுடையவும் நாமத்தினாலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுங்கள் என்று திருவுளம்பற்றி அனைவரையும் ஆசீர்வதித்தபின் மெல்லென ஆகாயத்தில் ஏறி மறைந்து பரலோகத்துக்கு ஆரோகணமானார்

## விசுவசித்தோர்

யேசுநாதசுவாமி பரலோகத்துக்கு ஆரோகணமானபின் பத்து நாட்களாக அவருடைய சீஷர்கள் அவர் கட்டளைப்படி தியானயோகத்திலேயிருந்து மூன்றாம் தேவ ஆளாகிய இஸ்பிரீத்து சாந்துவின் அருளை அடைந்துகொண்டு புறப்பட்டுப்போய் யேசுநாதசுவாமியைச் சிலுவையில் அறைந்து கொல்லுவித்த யூதர்முன்பாக நின்று: நீங்கள் கொலைசெய்த மனுஷாவதார கடவுள் உயிர்த்தெழுந்தார். அவரை விசுவசித்து வழிபட்டு ஈடேறிக்கொள்ளுங்கள் என்று பிரசங்கிக்க, முதல்நாளிலேதானே மூவாயிரம்பேரும் வேறொருநாளில் ஐயாயிரம்பேருமாக இப்படியே திரளான யூதர் விசுவசித்து ஞானஸ்நானம் பெற்றார்கள். விசுவசித்து ஞானஸ்நானம்பெற்றோருக்குக் கிறிஸ்தவர்கள் எனும் நாமம் பிற்காலம் வழங்கிவரலாயிற்று.

சனங்கள் சிலுவையில் அறையுண்டவரை விசுவசித்து சத்தியவேதத்தில் உட்பட்டுவருகிறதைக் கண்ட யூத ஆசாரியர் கோப ஆவேசராய்ச் சீறிப்பாய்ந்து, சீஷர்களைப் பிடிப்பித்து மறியலில் அடைத்து வைத்து, பின்பு கசைகளால் அடிப்பித்து இனி இந்த வேதத்தைப் பிரசங்கியாதிருங்கள் என்று பயமுறுத்தி அனுப்பிவிட்டார்கள். பயமுறுத்தி அனுப்பியுமென்ன! அவர்கள் யாதொரு துணையில்லாதவர்களாயிருந்தும், கல்வி, வாசாலம் முதலிய வல்லபம் அற்றவர்களாயிருந்தும், கண்ணுக்குத் தோற்றாமல் ஞானவிதமாய்த் தங்களோடு இருந்து வரம் உதவிக்கொண்டுவந்த யேசுநாதசுவாமியின் பெலத்தினால், இம்பிரட்டியான தைரியங்கொண்டு ஏக ஈடேற்றவழியாகிய சத்தியவேதத்தைப் போதித்துக்கொண்டே வந்தார்கள்.

யேசுநாதசுவாமியுடைய சீஷர் யூதருக்கு மாத்திரமல்ல, உலகம் அடங்கலும் உள்ள சகல சாதி சனங்களுக்கும் சத்திய வேதத்தைப் போதிக்கும்படி புறப்பட்டு எட்டுத் திசைக்கும் பிரிந்துபோய் அங்கங்கே கணக்கில்லாதோரை மனந்திருப்பினார்கள். சீக்கிரத்திலே சகல தேசங்களிலும் சகல சாதிசனங்களுள்ளும் லட்சாதிலட்சம்பேர் யேசுநாதசுவாமியே ஏகமெய்யான கடவுள், உலகத்துக்குச் சற்குருவாய் எழுந்தருளிவந்த கடவுள், அவர் உபதேசித்தருளிய வழியே ஈடேற்ற வழி என்று விசுவசித்துக் கைக்கொண்டார்கள். சனங்கள் தங்கள் பரம்பரையான தெய்வங்களின் ஆசாரத்தை விட்டு கிறீஸ்தவர்களானதைக் கண்ட பூசாரிகள் இராசாக்கள்முன் போய் முறைப்பட, இராசாக்கள் வேதத்தைப் போதித்துத் திரிந்த யேசுநாதசுவாமியுடைய சீஷரை முதல் அங்கங்கே பிடிப்பித்துக் கொல்லுவித்தார்கள். இப்படியே ரோமையை அடைந்து அங்கு அநேகரைக் கிறீஸ்தவேதத்திலுட்படுத்தியும், அப்பட்டணத்தைத் தமது வாசஸ்தானமாக்கியும் இருந்த திருச்சபைத் தலைவராகிய சம்பேதுருவை, நேரோ எனும் சக்கரவர்த்தி தலைகீழாய்ச் சிலுவையில் அறைந்து வதைத்து உயிர்போக்குவித்தான். சம்பேதுருவுடைய சமாதி இன்றும் ரோமைப் பட்டணத்தில் இருக்கின்றது. அவரைப் பின்தொடர்ந்து அவரது உத்தியோகத்தில் அமர்ந்து அப்பட்டணத்திலிருந்துகொண்டு திருச்சபையை ஆண்டுவரும் பாப்புமார் இதுவரையில் இருநூற்று ஐம்பத்தொன்பதுபேர் ஆகிறார்கள். இப்படியே, நமது இலங்கைத் தீவுக்கு வடக்கேயுள்ள மலையாளத்தில் வேதம்போதிக்க வந்தவரான தொம்மை அப்போஸ்தலரை தென்னிந்தியாவில் ஓர் இராசா ஈட்டிக்கிரையாக்குவித்தான். தொம்மையப்பருடைய சரீரம் மைலாப்பூரிலே அடக்கம்பண்ணப்பட்டது. அவரால் சத்தியவேத வெளிச்சமடைந்தவர்களுடைய வமிசத்தார் தலைமுறை தலைமுறையாய் இன்றைக்கும் மலையாளத்தில் இருக்கிறார்கள்.

யேசுக்கிறீஸ்துநாதருடைய சீஷரைக் கொன்றபின்பு அவருடைய வேதம் முன்னிலும் அதிக வீறாகப் பரம்பினபடியால் இராசாக்கள் அங்கங்கே கிறீஸ்தவர்களைப் பிடித்து: நீங்கள் கிறீஸ்துவேதத்தை மறுதலித்து எங்கள் தேவர்களுக்குமுன் சாம்பிராணி போட்டெரித்துத் தொழுதுகொள்ளாமற்போனால் உங்களைச் சித்திரவதைசெய்து கொல்லுவோமென்று பயமுறுத்தினார்கள். யேசுநாதருடைய சத்தியவேதத்திற் சேர்ந்துகொண்ட கிறீஸ்தவர்களோவென்றால், தாங்கள் மெய்யான ஏக கடவுளை மறுதலிப்பதைக் காட்டிலும் இறந்துவிடுவது நலம் என்று துணிந்து இளம் மாதர்களோடு பாலர்தாமும் சத்தியவேதத்துக்குச் சாட்சிகளாய் உயிர்விட்டார்கள். ரோமைச் சக்கரவர்த்தியுடைய ஆணைக்குக்கீழிருந்த விஸ்தாரமான தேசங்களிலே பத்துத் தடவைகளில் வெவ்வேறு இராசாக்கள் கிறீஸ்தவர்களைத் துன்பப்படுத்திக் கொன்றார்கள். பார்சியம், சீனம் முதலிய தேசங்களிலேயும் இப்படியே இராசாக்கள் இரானான, கிறீஸ்தவர்களை ஆதிநாட்களில் கொல்லு

வித்தார்கள். நம்முடைய யாழ்ப்பாணத்திலும், மன்னார்த்தீவிலும் சங்கிலிராசன்காலத்திலே நூற்றுக்கணக்கானோர் வேதத்துக்காக உயிர்விட்டார்கள். அந்நாட்தொட்டு இந்நாள்மட்டும் சத்தியவேதத்துக்காகச் சீவனைவிட்டவர்களுடைய தொகை ஒருகோடியே என்பது லட்சத்துக்கு மேற்படும். ஒரு மனிதபோதகத்துக்காக யாராவது உயிர்விடத் துணிவார்களா? துணியமாட்டார்கள். ஆகையால் இத்தனை லட்சாதிலட்சம்பேர் சீவனைவிட ஏவிவிட்ட போதகம் மனிதபோதகமல்ல என்றும், இவர்கள் விசுவசித்ததைப் போதித்தவர்வெறும் மனுஷனல்ல, பரலோகத்தில் நின்று இறங்கிவந்த கடவுளே என்றும் கண்டுகொள்ளவேண்டியது.

யேசுநாதசுவாமியுடைய சீஷரை இராசாக்கள்கொன்றபோதிலும் அச்சீஷரால் மனந்திருப்பப் பட்ட கிறிஸ்தவர்களையும் அழித்துக்கொண்டு வந்தபோதிலும், சத்தியவேதம் மேலும் மேலும் சகலசாதிசனங்களையும் தழுவித் தழைத்தோங்கிக்கொண்டு வந்திருக்கிறது. அத்திருவேதத்திலே இதுவரையிற சேர்ந்து, பாக்கிய அடைந்த அரசர், பிரபுக்கள், பட்டவர்த்தனர், மகுடவர்த்தனர்களுடைய தொகையைக் கணிப்பதார்? அத்திருவேதத்திலே மாத்திரம் தங்கள் ஞானத்தியானங்களுக்கு விஷயத்தையும், புத்திக்கு மனோகரத்தையும், சித்தத்துக்கு ஆனந்தத்தையும் அடைந்துகொண்ட ஞானிகள், வித்துவாமிசர், புலவர், கவிராயருடைய கணக்கை அலகிட வல்லவரார்? அத்திருவேதத்தையே தங்கள் சாதிப் பெருமையிலும், குலமகிமையிலும், செல்வச்சிறப்பிலும், வல்லபசெல்வாக்கிலும் மேலாக அவதானித்து அனுசரித்துவந்த மேன்மக்களுடைய எண்ணிக்கையை வரையறுக்கத் தக்கவரார்? புத்துசமயத்திலே பிடிப்பிடியாயிருக்கிற சீனரையும், முகமதுசமயத்திலே மூர்க்கங்கொண்டு நிற்கிற சோனகர் முதலியவர்களையும் ஆதிப்பரம்பரையை விடப்படாது என்று பிடித்துக்கொண்டிருக்கிற சைவர் முதலிய இந்துசமயத்தவர்களையும் தள்ளிவிட்டுப் பார்த்தால் ஏறக்குறைய உலகம் முழுதுமே யேசுநாதசுவாமியை விசுவசித்துவருகிறதாகச் சொல்லலாம். சத்தியவேதம் இத்தனை விஸ்தாரமாயும் விரைவாயும் பரம்பினது அதிசயம் அதிசயமே. ஒரு பெருங்கல் மலையுச்சியில நின்று பிரிந்து உருண்டு பள்ளத்தில் விசையாய் விழுவது எளிது. பள்ளத்திற் கிடக்கும் பெருங்கல்லை மலையுச்சியிற் சேர்ப்பதோ அரிது. அப்படியே சன்மார்க்கத்திலே பழகினவர்கள் சன்மார்க்க நெறியை விட்டுப் பிரிந்து சிற்றின்ப சந்தோஷங்களுக்கு இடங்கொடுக்கிற அக்கியானங்களில் பதிதங்களில் சேருவது எளிது. அக்கியானங்களையும் பதிதங்களையும் விட்டு சத்தியவேதத்தைத் தழுவுவதோ அரிது. ஏனெனில், சத்தியவேதத்திலே ஆசாபாசங்களின் அடக்கமும், பாவவெறுப்பும், சுகிர்த ஒழுக்கமுமே போதிக்கப்படுகிறபடியால் இயல்பாய் அது மனிதருடைய கெட்ட சுபாவத்துக்குப் பிரதியீனமானது. ஆகையால் யாதொரு வலுவந்தமின்றி இத்தனை லட்சாதிலட்சக்கணக்கானோர் எக்காலத்திலும் இவ்வேதத்திற் சேர ஏவப்பட்டதையும், இ

தற்காகக் கொடிய வேதனைகளையும் சகிக்கத் துணிந்துநின்றதையும் யோசித்துப் பார்த்தால், இச்சம்பவம் தேவ அருளினாலேயல்லாமல் மற்றப்படியானதல்லவென்றும், இவ்வேதம் சத்தியவேதம் என்றபடியினாலே இதன் பரம்புதலுக்குக் கடவுள் இப்படிப்பட்ட அருளைப் பண்ணினாரென்றும் துணியவேண்டியிருக்கிறது.

## நீயும் விசுவசிக்க வேண்டாமா?

கடவுள் மனிதருடைய பாவங்களைப் போக்கிக் கரைசேர்க்க உலகத்திலே மனுஷனாகப் பிறந்து, உன் பாவங்களைத் தாம் சுமந்து, உனக்காகத் தமது சீவனைவிட்டார். அவரை உலகம் முழுதும் விசுவசிக்கிறது. நீயும் விசுவசிக்க வேண்டாமா? நீ ஈடேறும் வழியை அவர் காண்பித்திருக்க நீ அதைச் சட்டைபண்ணாமல் இருக்கலாமா?

ஆனால் ஒரு ஊருக்குப் போகப் பலபாதைகள் இருக்கிறதுபோல ஒரு மோட்சம் அடைய பல மார்க்கங்கள் உண்டு என்று சொல்லுவாய். அப்படிச் சொல்லுவது தவறு. ஏனென்றால் ஒரு ஊர் கிழக்கிலோ, மேற்கிலோ, வடக்கிலோ, தெற்கிலோ எந்தத் திசையில் இருக்கிறதென்று அறிந்தவன் அந்தத் திசையை நாடிப்போகிற ஒரு தெருவாலே சென்றால், தான் விரும்புகிற அவ்வூரிற் சேருவான். ஊர் கண்ணாலே காண்கிற காரியம். அதைக் காண்கிறவர்கள் அதற்குப் போகப் பல பாதைகளையும் உண்டாக்கிக்கொள்ளுகிறார்கள். ஆனால் கடவுள் கண்ணாலே காணப்படாதவர். அவர் மனோவாக்குக்கு எட்டாதவர். அவரை மனிதர் தங்களுடைய அற்ப புத்தியினாலே சரியாய் அறியமுடியாது. ஆனபடியால் அவரிடத்தில் போம் வழியையும் மனிதர் நிச்சயமாய்க் கண்டுபிடிக்க முடியாது. ஒரு ஊரை அறிந்தவன்தானும் அந்த ஊருக்குப் போம்வழியைச் சிலவேளைகளில் தப்பவிடக்கூடும். மனிதனோ தன் மங்குளமான புத்தி வெளிச்சத்தினாலே கடவுளைச் சரியாய் அறியக்கூடாமல் இருக்கிறான். ஆனபடியால் அவன் கடவுளிடம் போம்வழியைத் தப்பிப்போவது ஆச்சரியமா? இப்படியே மனிதன் கடவுளிடத்திலே போவதற்குத் தானாக வழிகண்டுபிடிக்கமாட்டாமல் பலபல தப்பான மார்க்கங்களை உண்டுபண்ணிக்கொண்டு வந்ததினாலேயே கடவுள் மனுஷனாகி யேசுக்கிறீஸ்து என்னும் திருநாமந் தரித்து உலகத்தில் சற்குருவாய் எழுந்தருளிவந்து மெய்யான ஈடேற்றவழியைப் போதித்தருளினார்.

யேசுநாதசுவாமி போதித்தருளியதுதான் பரகதிக்குப்போகும் ஏகபாதை. மற்றப் பாதைகள் எல்லாம் ஞானக்குருடராய்ப்போன மனிதரால் உண்டாக்கப்பட்டபடியால், அப்பாதைகளில் நடக்கிறவர்கள் வழிதப்பிப் போகிறவர்களாகிறார்கள். யேசுநாதசுவாமி போதித்ததுதான் சத்தியசமயம். மற்றச் சமயங்களெல்லாம் தள்ளிவைக்கப்படவேண்டும். உன் சமயம் எவ்வளவு ஆதிபரம்பரையான சமயமென்றாலும் அதினாலே பலனில்லை. நீ உன் சமயப்படி எத்தனை தீர்த்தங்களை ஆடினாலும், எத்தனை விரதங்களை அனுட்டித்தாலும், எத்தனை ஆல

யங்களைத் தரிசித்தாலும் ஈடேற்றமில்லை. உன் சமயக் கிரியைகள் எவ்வளவு புண்ணியமுள்ளவைகளாய் இருந்தாலும் இருக்கட்டும். அவைகளை ஈடேற்றவழியாகக் கடவுள் நியமிக்கவில்லை. மேலும் காடெல்லாம் பற்றியெரிகிற நெருப்பானது ஓர் துளி தண்ணீரால் அவியமாட்டாததுபோல, சருவலோக நாதரான கடவுளுக்கு விரோதமாய்ச் செய்யப்பட்ட பாவத்தின் பாரப்பழி மனிதரால் கற்பிக்கப்பட்ட எந்தச் சடங்காசாரத்தினாலும், சாந்தியாகமாட்டாது. ஆகையினாலேயே மட்டில்லாத பாவப்பழியைத் தீர்க்க மட்டில்லாத தேவசுதன் மனுஷனாய் அவதாரம்பண்ணிவந்து, அதற்கான பிராயச்சித்தம் பண்ணி, அந்தப் பிராயச்சித்தப் பலனை அடைய விரும்புவோர் நடக்கவேண்டிய வழியை நியமித்தருளினார். கடவுள் நியமித்த அந்த வழி என்ன? அவர் இற்றைக்கு ஆயிரத்துத் தொளாயிரம் வருஷங்களின்முன் உலகத்திலே மனுஷாவதாரம்பண்ணி வந்தபோது போதித்தருளிய சத்தியவேதமே அந்த வழி. அந்த வழியையே கத்தோலிக்குக் கிறீஸ்தவர்களாகிய நாங்கள் கைக்கொள்ளுகிறோம். நீயும் ஈடேறவேண்டுமானால் கத்தோலிக்குக் கிறீஸ்துவேதத்தைக் கைக்கொள்ளுதல் இன்றியமையா அவசியமாகின்றது.

## "வேறொருத்தரை அப்பு என்கிறதோ"

ஒரு தகப்பனுக்குப் பிறந்து வேறொருத்தரை அப்பு என்று கூப்பிடுகிறது எப்படி? நாங்கள் ஆதிபரம்பரையாய்ச் சைவராய் இருந்துவிட்டு இப்போது கிறீஸ்தவர்களாய் வரலாமோ? என்று சொல்லுவாயாக்கும். அப்படிச் சொல்வது நியாயமல்ல. ஏனென்றால், உன்னுடைய தகப்பன் யார்? மெய்யான கடவுள்தாம் அல்லவா? அவர்தாம் உன்னைப் படைத்தவர். நீ எவ்வெச் சமயத்திலே இருந்தாலும் மெய்யான கடவுள்தாமே உன்னைப் படைத்தவராயிருக்கத் தப்பாது. இத்தனைநாளும் இந்த மெய்யான கடவுளை நீ அறியாமலும் இவரைக் குறித்து நம்பத் தகாத காரியங்களை நம்பியும் வந்திருக்கிறாய். இப்போது நீ செய்யவேண்டியதென்ன? இவரை உண்மையாய் அறிவதேயன்றி வேறல்ல. உள்ளபடி இவர் எப்படிப்பட்டவர், இவர் மனுஷர் கரையேறுதற்கு உண்டாக்கிய வழி என்ன, இவரைத் தொழவேண்டிய விதம் என்ன என்ற இவைகளையே சத்தியவேதம் படிப்பிக்கின்றது. ஆனபடியால் நீ வேறு ஒரு ஆளை அப்பு என்று கூப்பிடுகிறதல்ல. இதுவரைக்கும் அறியாமலிருந்த உன் சொந்தப் பிதாவைத்தான் அறிந்துகொண்டாய். முன்னே நீ சிறுபிள்ளையாயிருந்தாய், இப்போ வளர்ந்திருக்கிறாய். முன்னே நீ அறியாத எத்தனையோ காரியங்களை இப்போது அறிந்திருக்கிறாய். சிறுப்பத்திலே நீ உன் வீடே முழு லோகமும் என்றும் நினைத்திருந்தாய். வளரவளர அந்த எண்ணம் முற்றாய் மாறவில்லையா?

மேலும், ஆதிபரம்பரையாய் உன் முன்னோர் சைவராய் இருந்தாரென்பதும் தவறு. இற்றைக்கு நாலாயிர ஐயாயிர வருஷங்களுக்கு முன்னே மனுக்குலத்தோர் சகலரும் மெய்யான கடவுளையே ஆரா

நித்து வந்தார்கள். ஆகையால் உன் முன்னோர் சைவரல்ல. பிற்காலத்தை நோக்கினால் போர்த்துக்கீசர்காலத்தில் யாழ்ப்பாணம் முழுதும் ஏறக்குறையக் கத்தோலிக்கு நாடாயிருந்தது. இதற்கு அத்தாட்சியாக இப்போதும் அனேக சைவருடைய ஆட்சிக்காணிகளின் தாயுறுதிகளில் சத்தியவேதக்காரருடைய நாமங்களைக் காணலாம். ஆகையால், சத்தியவேதக்காரரே ஓர்வேளை உன் முன்னோராயிருக்கவும் கூடுமே. அப்படியல்லாவிடினும் என்ன? உன் முன்னோர் தவறாய் நம்பிவந்தவைகளை நீயும் நம்பவேண்டுமா? பூமி தட்டையென்று ஆதிபரம்பரையாகச் சகலரும் எண்ணிவந்தார்கள். இப்போது அது உருண்டையென்று சொல்லுகிறவர்களோடு நீயும் ஒத்துக்கொள்ளுகிறதில்லையா? உலகத்திலேயுள்ள உப்புக்கடலைத்தவிர பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தேன்கடல், நல்லநீர்க்கடல் என்று ஏழுகடல்கள், ஒன்றைச் சுற்றி ஒன்றாய் சத்ததீவுகளையும் சூழ்ந்திருக்கிறதென்றும், சூரியன் பூமியைச்சுற்றி ஓடுகிறதென்றும் ஆதிதொட்டு இத்தேசத்தார் நம்பிவந்ததை இப்போது சகலரும் பொய்யென்று தள்ளிவிடவில்லையா? அப்படியே நீயும் இதுவரையும் விசுவசித்துவந்த சமயம் சத்திய சமயமல்ல என்று காணும்போது அதைவிட்டு சத்திய சமயத்தைச் சேர்ந்துகொள்ளலாம்; சேர்ந்துகொள்ளவும் வேண்டும்.

## "இனசனம் பேசுமே"

ஆனால் நான் வேதத்துக்கு வந்தால் என் இனசனத்தார் என்னைப் பேசுவார்கள் பகைப்பார்கள். நான் உலகத்தில் தப்பிக்கொள்ளுவது எப்படி? என்று கேட்கிறாய். உன் இனசனம் எவ்வளவு நியாயமற்ற மாதிரியாய் நடந்துகொள்ளுகிறது என்று பார். நீ மகா துட்டனாய் நடக்கப்போனால் பேசார்கள். நீ நன்றாய் விசாரித்தறிந்து உன் மனச்சாட்சியின்படி சமயத்தை மாற்றுகிறதற்கு அவர்கள் ஒன்றும் சொல்ல நியாயம் இல்லையே. ஏனென்றால் சைவசமயமானது ஒருவன் எந்தெந்த மார்க்கத்திலே இருந்தாலும் அவனுக்கு ஈடேற்றமுண்டு என்று சொல்லுகிறது. அதற்கு அத்தாட்சி:—

யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வமாகி அங்கே
மாதொரு பாகனார் தாம் வருவர்: மற்றத்தெய்வங்கள்
வேதனைப்படுமிறக்கும் பிறக்கும்மேல் வினையுஞ்செய்யும்
ஆதலாலிவையிலாதான் அறிந்தருள் செய்வனன்றே

என்று சிவஞானசித்தியார் எனும் சைவருடைய ஆகமநூலிலேயிருக்கிறது. (2ம் சூத். 25.) ஆகையால் எந்தெந்த மார்க்கத்தில் எந்தெந்த தெய்வத்தைத் தொழுதாலும் ஈடேறலாமென்று (தப்பாய்) விசுவசிக்கிற சைவர், நீ உன் இஷ்டப்படி மெய்யான கடவுளுடைய திருவேதத்தை தழுவப் போகும்போது உன்னை இகழுவானேன்? ஆனால் நியாயமீனமாயும் உன் இனசனத்தார் உன்னை இகழக்கூடுமென்பது மெய்யே. இனி, அவர்கள் சற்றுநேரம் உன்னை இகழுகிறதைத் தவிர்க்

## தைரியம்! தைரியம் !!

வும் எண்ணில்லாத பாடுகளைப் பட்டுச் சிலுவை மரத்தில் தொங்கிச் சீவனைவிட்டதை விசுவசித்து, அவருடைய திருப்பாதங்களை மனதிலே மேலகட்டி அரவணைத்துக்கொண்டு "ஓ! என்னை ஈடேற்றிய கடவுளே, யேசுவே, திவ்விய போதகரே உமது திருச்சித்தத்தை அறிவிக்கிறதாகிய சத்திய கத்தோலிக்கு வேதத்திலே அடியேனும் சேர்ந்து உமது அன்புள்ள தாசர்களுள் ஒருவனாய்ப்போக வரந்தந்தருளும். என்மனதிலே தோற்றுகிற சந்தேகங்கள் கலக்கங்களை எல்லாம் ஓட்டி, நான் நடக்கவேண்டிய வழியில் நடக்கப் பெலன் தந்தருளும்" என்று ஏக மெய்யான கடவுளைப் பார்த்து விண்ணப்பம்பண்ணுவாயாக.

பின்னும் தாமதியாமல் ஓர் குருவானவரிடம்போய் உன் மனதின் நிலையை அவருக்குத் தெரிவித்து அவர் சொல்லுகிறபடி கேட்டுநட. குருமாரும் மேற்றிராணிமாருமே யேசுநாதசுவாமியுடைய சீஷரைத் தொடர்ந்து அவர்களுடைய உத்தியோகத்தை அடைந்திருக்கிறவர்களாம். தாமதியாதே; ஏனெனில் சாவு வருமென்பது நிச்சயம். எப்போது வரும், எவ்விதமாய் வருமென்பதோ சந்தேகம். சாவு வரும்போது உன்மனம் சொல்லிமுடியாத கிலேச கலக்கடிகளுக்கு உட்பட்டிருக்கும். ஆகையால் அவ்வேளை சத்தியசமயத்தைப்பற்றி அறியவும் ஞானஸ்நானம் பெறவும் கூடாமலிருக்கும். அவ்வேளை உன் இனசனரும் உனக்கு இடைஞ்சல்பண்ணுவார்கள். அவ்வேளை பிசாசும் தன் மாயதந்திரங்களை எல்லாங்கொண்டு உன் மனதைக் குழப்பியடிக்கும். தாமதியாதே; ஏனெனில் தாமதித்தால் "இன்னும் சிலநாள் என் சரீர இச்சைகளின்படி நடந்துகொண்டு பின்பு, கடவுளே, உம்மைத் தேடுவேன்" என்று சொல்லுகிறவன்போலிருப்பாய். தாமதித்தால் அவருடைய கோபாக்கினையை உன் சிரசின்மேல் மூட்டுகிறவனாயிருப்பாய்.

ஆகையால் என் அருமைப் பிறவியே! தைரியமாய்ச் சத்தியவேதத்தை உடனே கைக்கொண்டு தழுவி அதில் மரணபரியந்தம் ஒழுகி ஈடேறிக்கொள்ளுவாயாக.

---

Nihil obstat
**J. HIPPOLYTE, O. M. I.**
*Censor deputatus*

RE-IMPRIMATUR.
✠ H JOULAIN O. M. I.
BISHOP OF JAFFNA.

*Jaffna 29th March 1918.*

**PRINTED BY C. ANDREW**

தைத் தள்ளுதல் பலனுள்ள புண்ணிய கிருத்தியம் என்பது சத்தியவேத போதனையாம். நீயும் அப்படிப்பட்ட நோக்கத்தோடு மாமிசத்தை ஒறுப்பது நன்றே. ஆனால் மிருகங்கள் மனுஷனுடைய பிரயோசனத்துக்காக உண்டாக்கப்பட்டபடியால் அவைகளைக் கொன்று தின்பது பாவமல்லவென்பதும் சத்தியவேதபோதனையாம். இப்போதனையை அங்கீகரியாத சைவராகியோர்பாடு சோலியாகின்றது. அவர்கள் மிருகங்களுக்கும் தாவரங்களுக்கும் நரசீவன் உண்டு என்று தப்பாய் நம்பிக்கொண்டு, அதினால் மிருகங்களைக் கொன்று அவைகளைப் புசிப்பது பாவம் என்று சொல்லுகிறார்கள். ஆனாலும் அப்பாவத்தைச் செய்யாது விட ஒருவராலும் முடியாது. நாம் குடிக்கும் ஒருதுளி தண்ணீரிலேதானும் எத்தனையோ சீவசெந்துக்கள் கிடக்கின்றன என்பதைப் பூதக்கண்ணாடியாற் பார்த்து அறியலாம். நாம் கீரைத்தண்டைப் பிடுங்கும்போதும் கொலைசெய்வோர் ஆவோமே.

## "பிழைப்புக் கெடுமே"

என் பிழைப்புக் கெடுமே என்கிறாய். உனக்குப் பிழைப்புத்தருகிறவர்யார்? உன்னை இச்சணத்திலேயும் சீவனோடு காத்துக்கொண்டு வருகிறவர்யார்? ஏக மெய்யான கடவுள் அல்லவா? நாலைந்து மனிதர் கைவிடுகிறதோ அளவில்லாத கடவுள் கைவிடுகிறதோ எது உனக்கு அதிகமோசம்! நீ கடவுளுக்காக உன் இனத்தாருடைய பகைக்கு ஆளானால் அவர் உன்னைப் பராமரியாரோ! படைத்தவர் கைவிட்டுவிடுவாரோ?

> கருப்பைக்குண் முட்டைக்கும் கல்லினுட்டேரைக்கும்
> விருப்புற்றமுதளிக்கும் மெய்யன்—உருப்பெற்றால்
> ஊட்டி வளர்க்கானோ?..

என்று சைவசமய ஞானவாதி தானும்சொல்லியபடி உன்னை உண்டாக்கி, இதுவரைக்கும் காத்துக்கொண்டு வந்திருக்கிற மெய்யான கடவுள் தம்மை நமஸ்கரிக்கத் தொடங்குகிற உன்னை மறந்துவிடுவாரோ? துரோகம்பண்ணிக்கொண்டுவந்த நாளெல்லாம் பொறுமையாய்க் காத்துவந்தவர், ஊழியம்பண்ணத்தொடங்குகிற உன்னை எற்றுவிடுவாரோ!

## தைரியம்! தைரியம்!

என் அருமைப் பிறவியே, பயப்படாதே! தைரியங்கொள்; கொஞ்சநாளைக்கு நிலைத்திருக்கிற சரீரத்துக்காக மனிதர் எத்தனை அபாயங்களைப்படச் சம்மதிக்கிறார்கள். சொற்ப பணம் தேடுகிறதற்காக மனுஷர் எவ்வளவு கஷ்டங்களைப்படுகிறார்கள். அழியாத ஆத்துமாவுக்காகச் சற்றே துன்பதுயரங்கள் வந்தாலும் அவைகளைப் பொறுமையோடு சகிக்கத்துணியவேண்டாமா? மோட்ச சம்பத்தை அடைவதற்காகச் சற்றே வருத்தப்படவேண்டாமா? ஆகையால் ஏக மெய்யான கடவுளை வழிபடத் துணிந்துகொள். அவர் மானிட சுவரூபந் தாங்கி உலோகத்தின் பாவங்களைத் தம்மேற் சுமந்து சகல லோகத்தாருக்காக

கும்படி ஊழியுள்ள காலமும் நரக நெருப்பிலே வேக மனங்கொள்ளு வாயா? உள்ளபடி பார்த்தால் நடக்கிறதென்ன? ஒரு சைவன் மன ந்திரும்பிச் சத்தியவேதத்தைத் தழுவிக்கொண்ட முதல்நாட்களிலே அவன் இனத்தார் அவனை இகழுவார்கள். சிலநாட்கழித்தோ, இகழ் ந்த அவர்களே, அவனுடைய தைரியத்தையும் சீர்திருந்தின நல்லொ ழுக்கத்தையும் கண்டு அவனைப் புகழுவார்கள். இப்படியே இவ்வியா ழ்ப்பாணத்தில் சாதிசனத்திலேயுள்ள எத்தனையோ சைவர் தங்கள் இனத்தாரான கிறிஸ்தவர்களோடு தேனும் பாலும்போற் கொண்டா டிப் புழங்கிவருகிறதை அறிவோம்.

## "சாதிக்கு அவமானமாகுமே"

சத்தியவேதத்திற் சேர்ந்துகொண்டால் சாதிக்கு அவமானம் வரு மென்று அஞ்சுகிறாய். அது பெருந் தவறு. உயர்ந்த சாதியிலுள் ளோர் ஆயிரக்கணக்காய் இவ் யாழ்ப்பாண நாட்டில் கத்தோலிக்கரா யிருக்கிறார்கள். வடதேசத்திலே அநேக பிராமணரும் சத்தியவேதத் திற்சேர்ந்துகொண்டு வருகிறார்கள். கிறீஸ்துவேதம் சாதிப்பிரிவை அழிக்கிறதில்லை. சத்தியதிருச்சபையானது உலக நடபடியை மாத்தி ரம் சார்ந்த அனுசாரமாகிய சாதிக்கட்டுப்பாட்டை அழிக்க எக்காலத் திலாவது தேடியதில்லை. சத்திய திருச்சபை ஆத்தும ஈடேற்றத்துக் குரிய விசுவாசத்தைப் போதிக்கிறதேயன்றி சபை சந்தி சம்பந்தகொ ண்டாட்டங்களிலே தலையிடுகிறதில்லை. ஆகையால் கத்தோலிக்கு கி றீஸ்தவர்கள் சகலரும் ஒரே கடவுளை ஒரேவிதமாய் ஒரே ஆலயத்தில் வழிபட்டு வந்தாலும், உலகவிஷயங்களிலே சாதிக்கட்டுப்பாட்டை அவ் வவ்வூருக்குத் தக்கபடி அனுசரித்துக்கொண்டே வருகிறார்கள்.

சைவசமய உறவின் முறையார் உன்னைச் சபைசந்தியினின்றும் தள்ளிவைத்தாலும் என்ன? ஞானஸ்நானத்தினால் நீ பரலோக பாக்கி யத்தை அனுபவிக்கிற விருந்துப் பந்திக்கு உரித்தாளியாக்கப்படுகிறா யே. நாலுநாளைக்கு மனுஷராற் தள்ளிவைக்கப்படுவதற்கல்ல, நித் தியகாலமாகக் கடவுளால் நரகபாதாளத்தில் தள்ளிவிடப்படுவதற்கே அஞ்சவேண்டுமென்றோ?

## "மாமிசம் அருந்தவேண்டி வருமே"

கிறீஸ்தவனாகிவிட்டால் மாமிசம் சாப்பிடவேண்டும் அல்லோ என்கிறாய். அதுவும் தவறான எண்ணம். கிறீஸ்துவர்கள் மாமிசம் புசிக்கவேண்டுமென்று யாதோர் கட்டுப்பாடில்லை. இங்கு கத்தோலிக் கர் எத்தனையோபேர் ஒருபோதும் மச்சமாமிசம் புசியாத சுத்தபோச னிகளாயிருக்கிறார்கள். ஐரோப்பிய அமெரிக்க கிறிஸ்துவர்களே அத் தேச வழக்கப்படி மாமிசம் அதிகமாய்ப் புசித்துவருகிறார்கள். ஆனால் அங்கும் ஒருபோதும் மாமிசம் சாப்பிடாமலிருக்கும் ஒழுங்கு உடைய சந்நியாச கூட்டங்கள் கன்னியர் கூட்டங்களும் உண்டு. ஏனெ னில் சரீரத்தை ஒறுத்து அடக்கும் நோக்கத்தோடு மாமிசபோசனத்

CATHOLIC TRACT
No. 14.

# Metempsychosis-Part II

# மறுபிறப்பு-சமாதானம்

## முகவுரை

சைவராதியோருடைய மறுபிறப்புக் கொள்கை விஷயமாய் இற்றைக்கு ஆறுவருஷங்களின் முன்

மறுபிறப்பு—ஆட்சேபம்

எனும் துண்டுப்புத்தகம் ஒன்று பிரசுரிக்கப்பட்டது. அதில், முதல் மறுபிறப்புக்கொள்கை எப்படி உண்டாயிருத்தல் வேண்டும் என ஆராயத்தொடங்கி, அக்கொள்கையானது மானுடருடைய ஆதிச்சமயக் கொள்கைகளுளொன்றல்ல எனக்காட்டப்பட்டது. ஆதிமானுடருடைய ஐதிகங்களுக்குச் சாட்சியாயுள்ள பூர்வநூல்களிலே இருக்கு சங்கிதையும் ஒன்றென்பது ஆன்றோர் சம்மதம். இவ் இருக்கு சங்கிதையிலோ மறுபிறப்புக்கொள்கை காணப்படாததோடு அக்கொள்கைக்கு எதிரான நம்பிக்கைகளே வரையப்பட்டிருக்கின்றன. ஆதலால், அக்கால மானுடர் மறுபிறப்புக்கொள்கையுள்ளோராயிருந்தாரில்லையென்பது மலையிலக்கு. மறுபிறப்புக்கொள்கை இந்தியாவில் எழுந்தகாலமோ ஆரண்யகங்கள் உபநிஷத்துக்கள் என்னும் தத்துவ நூல்கள் செய்யப்பட்டகாலமாம். இங்ஙனமே மறுபிறப்புக்கொள்கையை ஐதிகப்பிரமாணத்தால் ஸ்தாபிக்கக் கூடாது. அநுபவப் பிரமாணமும் அதற்கு எதிராக நிற்கின்றது. எவ்வாறெனில், நம்மொவ்வொருவருடையவும் அநுபவத்தை ஆராயுங்கால், நமக்கு முற்பிறப்பு இருந்தது. மறுபிறப்பு இருக்கும் என்றுசொல்ல ஏதுவுண்டா? இல்லையென்பதே தேற்றம். இனி மறுபிறப்புக்கொள்கைக்கு ஆதாரந்தான் யாது? அக்கொள்கை பிரபஞ்சபேதங்களுக்குக் காரணஞ் சொல்லும் பொருட்டு வைத்துக்கோடல் மாத்திரமாக வைத்து நிச்சயிக்கப்பட்டதொன்றேயாம் "பிரபஞ்சத்திற் பலபல பேதங்களிருக்கின்றனவே. சிருட்டிகர்த்தா சிருட்டியைப் பேதமாகச் செய்யக்காரணமாயிருந்தது யாது? அவருடைய சங்கற்பம் காரணமாகக்கூடுமா? கூடாது. கர்த்தாவுடைய சங்கற்பம் நீதிவழுவாதது. ஆதலால், பேதத்துக்குக் காரணம்

சிருட்டிகள் முற்பிறப்பிற்செய்த பாவபுண்ணியங்களின் தாரதம்மியமாகிய கன்மபேதமேயாதல்வேண்டும்" என்று இவ்வாறாகவே நம் முன்னோர் நியாயம்முடித்தனர். மறுபிறப்புக்கொள்கை ஓர் வைத்துக்கோடலே என்றோம். அவ் வைத்துக்கோடலானது, தான் எதற்காக ஏற்படுத்தப்பட்டதோ அதனைப் பூரணமாய்த் தெளிவியாமற்போனால் பிரயோசனமற்றதேயாகும். பிரபஞ்சத்திற்காணப்படும் பேதங்களுக்கு நியாயஞ் சொல்லும்படி கொண்டுவரப்பட்ட மறுபிறப்புக்கொள்கையானது அதற்கு நியாயஞ் சொல்லக்கூடாதவிடத்தும் அங்கீகரிக்கப்படலாகுமா? ஆகாது. இனி, மறுபிறப்புக்கொள்கையோ பிரபஞ்சபேதங்களுக்குக் காரணஞ்சொல்லமாட்டாமற் போகின்றதென்று காட்டப்பட்டது. அது மட்டா! ஒருநோய்க்கு மருந்தாகக் கொண்டுவந்த இக்கொள்கையினால் ஒன்பதுநோய்கள் உண்டாகின்றன; ஒரு மலைவைத் தெளிவிக்க ஏற்படுத்தப்பட்ட இவ் வைத்துக்கோடல் ஒன்பது மலைவுகளைத் தருகின்றது என்றும் தெளிவிக்கப்பட்டது.

## எதிர்பேசிய இருவர்

இவ்வாறான நியாயதோரணியை அடக்கியதாகிய "மறுபிறப்பு—ஆட்சேபம்" பொதுவாகச் சைவராதியோரால் நன்கு ஏற்றுக்கொள்ளப்பட்டதென்பது, அவர்களுட் பெரும்பாலானோர் பத்திரிகைவாயிலாயும் வாக்குமூலமாயுஞ் சம்மதித்துக் கூறியவற்றால் துணியப்படும். அத்துண்டுப் புத்தகத்துக்கு யாழ்ப்பாணத்திலும் இந்தியாவிலும் உள்ளோரிலெல்லாம் இருவரே எதிர்பேசத் தலைப்பட்டார்கள். இருவரும் "இந்துசாதன" பத்திரிகையில் தோன்றியவர்கள். முந்தியவர் "திமிரபாஸ்கரன்" எனும் நாமத்தோடு வேதாந்தக்கொள்கைபேசிவந்தவர். அவரது கொள்கைகள் தவறென்றது "சத்தியவேத பாதுகாவலன்" கடிதரொருவரால் நன்றாக விளக்கப்பட, அவர் அவ்வளவில் அமைந்துவிட்டார். மற்றவர் "A.K" எனும் கைச்சாத்தோடு வெளிப்பட்டவர். அவரும் தமது எதிர்வாதங்கள் "சத்தியவேத பாதுகாவல"னிலே நியாய பூர்வமாய்க் கண்டிக்கப்பட்டது கண்டு அடங்கினர். இக்கண்டனம் "மறுபிறப்பு—ஆட்சேபம்' இரண்டாம்பதிப்பிலே "இந்துசாதனக்கடிதரின் விடைமேற் தடை" எனும் தலைப்பெயரோடு அநுபந்தமாகப் பிரசித்தஞ்செய்யப்பட்டிருக்கிறது. கடிதர்கள் இருவரும் "மறுபிறப்பு—ஆட்சேப" நூலிலே எடுத்தாளப்பட்ட நியாயங்களை மேலும் வலியுறுத்துதற்கே உபகாரணமாயினார்கள்.

அந்த நூலின் ஈற்றிலே "இனி, சத்தியசமயமானது உலகத்திலுள்ள பேதங்களுக்குச்சொல்லும் காரணத்தையும் அதனோடியைந்த சில பிறவிஷயங்களையுஞ் சுட்டிச் சிலகாலம் பொறுத்துப்பேசுவோம்" என வாக்குப்பண்ணியிருந்தது. இவ் வாக்குப்படி "சத்தியவேத பாதுகாவல"னிலே சில விஷயங்கள் தோன்றியும் முற்றுப்பெறவில்லை. அவ்விஷயங்களைத்திரட்டிக் குறைவாய்விடப்பட்டவைகளையும் நிறைத்து "மறுபிறப்பு—சமாதானம்" எனும் இத்துண்டுப் புத்தகத்தை எழுதுகிறோம்.

# 1. சிருட்டியும் பேதமும்

மறுபிறப்புக்கொள்கையாளர் ஒருபிறப்புமாத்திரங்கொள்வோரிடம் கேட்கும் ஆசங்கையைப் பின்வருமாறு விரித்தெழுதலாம்:—“பிரபஞ்சமாகிய சிருட்டியிலே பலபல பேதங்கள் இருக்கின்றமையை மறுக்கமுடியுமா? தேவர் முதல் நரகரீறாக எத்தனை ஐயறிவுயிர்களுண்டு! யானைமுதல் எறும்பீறாக எத்தனைகோடி சங்கமங்கள் காணப்படுகின்றன! மராமரமுதல் ஈரிலைப்பூண்டீறாக எத்தனை தாவரங்களிருக்கின்றன! லோகவகைகளென்ன, திராவகவகைகளென்ன, வாயுவகைகளென்ன, இவைகளையும் அலகிடலாமா? இத்தகைய சாதிசாதியான பொருட்களையுடைய சிருட்டியானது பேதமுடையதே என்பதைச் சொல்லுதலும்வேண்டுமோ? இப்பேதத்துக்கு முற்பிறப்பிற்செய்த வினைகளின் கன்மசேடமே காரணமல்லாவிடில் வேறியாது காரணமாகத்தக்கது? காரணம் கன்மசேடமல்லவெனில் நீவிர் சொல்லுங் காரணந்தான் யாதோ?”

இவ்வாறனதே அவர்களது ஆசங்கை. இனி இதற்கு விடையாவது:—மேலே வெளிப்படுத்திய ஆசங்கையானது பேதம் உண்டாயிருத்தல் ஓர் தீமையேயாம் என்று தப்பாக விளங்கிக்கொள்ளுதலினாற் பிறக்கின்றது. பேதமானது தற்சுபாவமாய்த் தீமையேயாயுள்ளது என்போமானால், சிருட்டி முழுமையையும் ஓர் பிரமாண்ட தீமையென்று சொல்லுதல் ஆவசியமாகும். சிருட்டியோ பேதமின்றி அமையாது. எங்ஙனம்? தனுகரணபுவனபோகங்கள் என்னும் பிரிவுபாடே சிருட்டி எனவழங்கும். இனி, தனுகரணாதிகளோ ஒன்றற்கொன்று பேதமும் தமக்குட்பேதமுமானவைகளாம். அன்றி, சிருட்டியெல்லாம் தனுவேயாய், அல்லது கரணமேயாய் அல்லது மற்றொன்றாய் அமைக்கப்பட்டிருக்கலாம் என்னும் அபத்தத்தைப் புத்தியானது ஓர்போதும் ஒப்புக்கொள்ளமாட்டாது.* ஆதலால் சிருட்டி உண்டு என்றவுடனே பேதமுமுண்டு. ஆயின், பேதம் என்பதெல்லாம் தீமையேயாம் என்றால் சிருட்டியானது எப்போதும் தீமையே எனமுடியும். அப்பால் சிருட்டியெல்லாம் தீமையேயாயின், சிருட்டி செய்தருளுகிறவராகிய கடவுள் தீமையையே செய்கிறார் என்னும் தேவதூஷணமும் ஏற்படும். சிருட்டி தற்சுபாவமாய்த் தீமையேயானால் ஆணவத்தைப்போக்குதற்குத்தானும் கடவுள் சிருட்டியைக் கையாடுதல் தகாது. ஏனெனில், நன்மையாகும் காரியம் வந்தெய்தும்படியாகவேனும் தின்மையாகிய கருவியைக் கையாடல் தகாது என்பது நீதிசாஸ்திர சித்தமாம்.

ஆதலால், பேதமாவதெல்லாம் தீமையாம் என்கின்றமை ஓர்போதும் அமையாது. பேதம் நன்மையாயுமுள்ளது என்பதே அமையும். எங்ஙனம்? ஒன்றின் சாங்கோபாங்கத்திலே ஒற்றுமையையும் இசைவையும் பெறுவிக்கும்பொருட்டு, அதன் அவயவங்களிலே பேதத்தை வகுப்பது நன்மையேயாம். அங்ஙனமே சரீரம் இனிதாய் இயங்கும்பொருட்டு அவ

* இதன்விரிவை “மறுபிறப்பு”. ஆட்சேபபாகம் 4-ம் பக்கத்திற்காண்க.

யவங்கள் பேதமாயிருக்கின்றமை நன்மையாகின்றது; தேசங்களிலே அரசாட்சி செவ்வனே நடைபெறும்பொருட்டு அரசர், அமைச்சர், தலைவர், சேனைவீரர், குடிகள்; ஏவலர் என்னும் பேதங்கள் அமைந்திருக்கின்றமை நன்மையாகின்றது; உலகங்கள் இடையூறின்றி அசைந்து அந்தரத்தில் நிலைபெறும்பொருட்டு சந்திரமண்டலம், சூரியமண்டலம், நட்சத்திரமண்டலம் ஆகிய மண்டலபேதங்களும், ஒவ்வொரு மண்டலத்திலும் சிறிய பெரிய கோளங்களின் வரிசையும் அமைக்கப்பட்டமை நன்மையாகின்றது. உள்ளபடியே ஒற்றுமையிற்பேதமும் பேதத்திலொற்றுமையுமே அழகாகும் என்பர் ஆன்றோர். (Beauty is defined to be Unity in Variety) இங்ஙனமாகையால், சிருட்டியிலுள்ள பேதம் தீமையல்ல, நன்மையேயாம். பேதமின்றிச் சிருட்டி அமையாது. சிருட்டியாகிய சாங்கோபாங்க புருஷனின் நன்மையைநோக்கியே அவன் அவயவங்களாகிய சராசரங்களின்பேதம் அமைக்கப்பட்டிருக்கின்றது. சிருட்டிகளை வெவ்வேறு படியில் உண்டாக்குவதிலே கடவுளை அநீதி பற்றும் எனச்சொல்லுதலும் அமையாது. அவர் சுதந்திரமுள்ள ஓர்கொடையாளியாகவே, தமது இருச சித்தப்படி நன்மைகளைப் பகிர்ந்துகொடுக்க உரித்துள்ளவரேயாம். ஓர் கொடைவள்ளல் தன்சமுகத்திற்செல்லும் பலயாசகர்களுக்கு வெவ்வேறு கொடைகளை வழங்குஞ் சுயாதீனமற்றவனோ? அவ்வாறு வழங்குமிடத்து அவனில் யார் விஷயமாயாதல் அநீதி ஆரோபிக்கப்படக்கூடுமா? யாசகர்களில் ஒருவனும் "இன்னது எனக்கு உரியது" என்று சொல்லத்தக்க உரிமையுள்ளவனாயிராதவிடத்து, கொடைவள்ளல் விரும்பியபடி கொடுப்பதில் ஒருவனுக்கும் அநியாயஞ்செய்யப்பட்டதாகாதன்றோ? இவ்வாறு ஓர்மானுட அதிகாரிக்குண்டென நாம் காணக்கிடக்கும் சுதந்திரம் சர்வ அதிகாரியான கடவுளுக்கு இல்லையென்போமா?

அன்றியும், வெவ்வேறு படிகளிலுள்ள சிருட்டிகளுள் தாழ்ந்தவைகளெல்லாம் நிர்ப்பாக்கியமுள்ளவைகளென்று எண்ணுதலும் தவறும். இத் தவறுபொதிந்த எண்ணம் மறுதலைக்கும் குறைபாட்டுக்கும் இடையிலுள்ள பேதத்தை யோசியாமையினாற் பிறக்கின்றதெனலாம். மரத்துக்குக் கண்ணில்லை, குருடனுக்குக் கண்ணில்லை எனும் இவ் இரண்டு வாக்கியங்களையும் நோக்குவோம். மரத்துக்குக் கண்ணில்லாமை வெறும் மறுதலையாம். (Negation) கண்ணுடைமை அதற்குரியதல்ல; கண்ணின்மையினால் மரத்துக்கு ஒருகுறையுமில்லை. ஆயின் ஒரு மனுடனுக்குக் கண்ணில்லாமை குறைபாடாம். (Privation) மனுடனுடைய சாங்கோபாங்கத்துக்குக் கண் அவசியமாதலால் அதினின்மை குறைபாடாகிறது. இங்ஙனமே ஒரு நாக்குளிப்பூச்சி மரங்களிற் பறந்துபோயிருந்து அவற்றின் கனிகளைப் புசிக்கமாட்டாமை அதற்கு ஓர் குறைபாடன்று, மறுதலை மாத்திரமேயாம். ஒருபைங்கிளி மரங்களிற்பறந்து கனியருந்தமாட்டாமையோ அதற்குக் குறைபாடாம் நாக்குளிப்பூச்சியைப்பிடித்து கனிமரமொன்றில் விட்டால் அதுவாடித் துவண்டு தன் அழுகற் சகதியிருப்பிடத்தையேதேடும். நமக்குச் சகதி வெறுப்பாகையால் நாக்குளிப்பூச்சிக்கும் அதுவெறுப்பல்ல; அதற்கு அச்சகதியே சுவர்க்கலோகம்போன்றது.

இவ்வாறே சிருட்டியிலுள்ள பிற உயர்வு தாழ்வுகளைக்குறித்துஞ்சொல்லிக்கொள்க. ஓர் சிற்றெறும்பு யானையளவு பருமனுள்ளதாகாதிருத்தல் அதற்குக் குறையல்ல. ஓர் புல்லின் தளிர் பனையளவாயிராமை அதற்குக் குறையல்ல. ஓர் சிறுபிள்ளையுடைய கைவிரல் தன் பிதாவின் கைவிரலளவாயிராமை அதற்குக் குறையல்ல. அப்பிள்ளையுடைய இரைப்பையில் அரைப்படி அரிசிச்சோறு செல்லாமையும் ஓர்குறையல்ல.

பிரபஞ்சத்தில் ஒற்றுமையும் வேற்றுமையுமாகிய அழகும் முறைமைப்பும் இருக்கும்படிக்குச் சிருட்டி கர்த்தாவால் அமைக்கப்பட்ட பேதங்கள் அவருடைய வரம்பில்லா ஞானத்தையும் வல்லமையையும் விளக்குகின்றன. அவ்வப்படியிலுள்ள சிருட்டி தன்தன் இயல்புக்கும் நோக்கத்துக்குந் தக்க நிறைவையெல்லாம் அடக்கியதாக விளங்குகிறது மேற்படியிலுள்ள சிருட்டிக்குள்ளவைகள் கீழ்ப்படியிலுள்ளவைகளுக்கில்லாதிருத்தலிலே குறையொன்றுமில்லை. அவ்வில்லாமை வெறும் மறுதலைமாத்திரமேயாம். நாடகமொன்றை நடப்பிப்பானொருவன் சிலவேஷதாரிகளை இராசாக்களாகவும், சிலரை மந்திரிகள் சேவகராகவும், சிலரை பறையர் முதலிய எவலர்களாகவும் நடிக்கப் பணித்து, அவ்வவருக்குரிய வேஷங்களைக்கொடுப்பானாயின், இராசகூத்துக்குக் கொடுக்கப்பட்ட வேஷம் பறைக்கூத்துக்குக் கொடுக்கப்பட்ட வேஷத்திலும் விலையுயர்ந்ததாகும். ஆயினும், பறைக்கூத்துக்கு அதினால் குறைபாடொன்றும் வாராது. பறைக்கூத்துக்குரிய கரித்துணியும் தம்பட்டமும் அதற்குப்போதும். இராச கூத்துக்குக் கிரீடத்தையோ, உத்தரியத்தையோ கொடாதொழியுமிடத்தே அதற்குக் குறைபாடாகும். இவ்வுண்மையை, உலகமெனும் மகாகளரியிலே நடக்கும் பிரபஞ்சசீவியமெனும் பெருங்கூத்திலும் பொருத்தி, உண்மையைக்கண்டுகொள்க.

சிருட்டியிலுள்ள சராசரங்களின் பேதத்துக்குத் துலாம்பரமான இந்த நியாயமிருக்கிறபோது, நாம் கன்மசேடத்தையும் முற்பிறப்பையும்தேடி முட்டுறுதல் புத்தியல்ல சரீரத்தின் அவயவங்களிலுள்ள பேதங்களுக்கு நியாயஞ்சொல்லுதற்குக் கன்மசேடத்தையும் முற்பிறப்பையும் தேடுவோர் யாருமுண்டா? இல்லை அங்ஙனமே பிரபஞ்சத்தின் அவயவங்களிலுள்ள பேதங்களுக்கு நியாயஞ்சொல்லும்படி நாம் முற்பிறவியைத்தேடி உலையாதிருக்கக்கடவோம்.

---

## 2. சிருட்டியும் துக்கமும்

சிருட்டியிலேயுள்ள சராசரங்களின் பேதம் ஒன்றைச்சுட்டியே சைவருடைய ஆசங்கை எழுந்ததாயின், நாம் இதுவரையிற்கொடுத்த வெளிப்படை அவர்களது ஆசங்கையை ஒழிப்பதற்குப் போதியதாகும். ஆயின் சைவருடைய ஆசங்கையோ, சராசரங்களின் வரிசைக்கிரமத்திலேயுள்ள பேதங்களின் நிமித்தமல்ல, அப்பேதங்களுடன்கூடிய சுகதுக்க தாரதம்மியத்தின் நிமித்தமே எழுந்துள்ளதாம். ஆதலால், அவர்கள் பின்வருமாறு

சொல்லக்கூடும்:—'உலகமெல்லாம் ஒருவகைச் சரீரங்களேயாய், அல்லது சரீரமெல்லாம் தலையேயாய், அல்லது தலையெல்லாம் கண்ணேயாய், அல்லது மானுடரெல்லாம் இராசாக்களேயாய் இருத்தல் பிரபஞ்சமாகிய சாங்கோபாங்க பருவஷனுக்கு அழகல்ல, சுகமுமல்ல. சுகத்தைச் செய்வன வாகிய பேதங்கள் எத்துணைக் கோடாகோடிகளை அமைப்பினும் நமக்குச் சம்மதம். பலபலபேதமாய், பலபலவிதமான சுகங்களைச்செய்யும் சிருட்டியே தக்கது. எல்லாம் புளிப்பேயாய் அல்லது இனிப்பேயாய் ஆக்கப்பட்ட கறிவகைகளைக்காட்டிலும், அறுசுவையும் பொருந்திய கறிவகைகளன்றோ இனியவைகள்? ஆதலால், சுகத்தைச்செய்வனவாகிய பேதங்கள் சிருட்டியில் இருத்தல் நன்றே ஆயின், சிருட்டியிலுள்ள பேதமோ பெரும்பான்மை துக்கத்தையே செய்கின்றது மானுடரைமாத்திரமே நோக்கும்போதும், மானுடருள் அரசர் பிரசைகள் என்றிருப்பதினால், சுகமெல்லாம் அரசருக்கும் துக்கமெல்லாம் பிரசைகளுக்கும் என ஆகின்றதே. சிவிகையூர்ந்தவன் சுகத்தைப் புசிக்கும்போது, சிவிகை சுமந்தவர்கள் துக்கத்தை எற்கின்றார்களே. செல்வர்கள் பிறந்தநாட்தொட்டு சுகிகளாகவும், வறிஞர்கள் என்றும் துக்கிகளேயாகவும் காணப்படுகின்றார்களே அப்பால், தாயின் உதரத்தினின்று நொண்டிகளாய்ச் சப்பாணிகளாய்க் குருடராய்ப் பிறக்கும் நிர்ப்பாக்கியர்களுக்கும் கணக்குண்டா? இதற்குக் காரணம் யாது? அரசர்கள் செல்வர்கள் ஆகியோரின் சுகத்திற்காகப் பிரசைகள் வறிஞர்கள் ஆகியோர் துக்கமநுபவிக்கவேண்டும் என நீவிர் ஓர் குதர்க்கத்தைத்தான் சொல்லித் தப்பிக்கொள்ளினும், தாயுதரத்தினின்றே அங்கவீனராய்ப் பிறப்போர் யாருடைய சுகத்துக்காக அங்ஙனம் பிறக்கிறார்கள் என்பீர்? முற்பிறவிகளின கன்மமே சடம் இதற்குக் காரணமல்ல என்பீராயின், பின்னை நீவிர்சொல்லும் காரணந்தான் யாதோ? அப்பால், பிணிமூப்புச் சாக்காடு என்னும் இவையெல்லாம் மானுடருக்குச் சுகந்தானோ? இன்பந்தருவதாகிய இளமையைமட்டும் மானுடர் சகலரும் என்நாளும் சுகிக்கவிடாமல் மூப்பின் துன்பங்களையும் நுகரவிடுவது யாதுக்கோ? உமது ஒரு பிறப்புக்கொள்கையோடு இதற்கு என்ன நியாயம் உத்தரிக்கப்போகின்றீர்?' என்பனவாகச் சைவர் சொல்லக்கூடும்.

சைவருடைய ஆசங்கையை இயன்றமட்டும் அவர்கள் சொல்லுகிறபடியே பாரபட்சமின்றி எடுத்துச்சொன்னோம். மேலெழுந்தபடி நோக்குமிடத்து, மறுபிறப்புக்கொள்கையே இவ்வாசங்கையையெல்லாம் ஒருங்கே நீக்கும்பெற்றியுள்ளதுபோற் காணப்படும். நுண்ணறிவினால் ஆராய்ந்துபார்க்கும் திராணியில்லாதோருக்கு உள்ளபடி மறுபிறப்புக்கொள்கை சகல தடைகளுக்கும் ஓர்விடையாகவே தோன்றும். அன்னோன் அரசனாகவும் இன்னோன் குடியானவனாகவும் இருப்பது எங்ஙனம் என்று கேட்டால், நுண்ணறிவில்லாதவர்கள், அரசன் முற்பிறப்பிற் புண்ணியஞ்செய்தான், குடியானவன் பாவஞ்செய்தான் என்றுசொல்லி முடித்துவிடுவார்கள். அவன் நொண்டியாய், இவன் பூரணதேகியாயிருத்தல் எங்ஙனம் என்று கேட்கும்போது, நொண்டி முற்பிறப்பிற் பாவஞ்செய்

தான், பூரணதேதி புண்ணியஞ்செய்தான் என்று சொல்லுதலும் எளிதே. நாம் சிலநாட்களின்முன்னே பார்வையிட்ட "கன்மவிபாகம்" எனும் ஓர் தமிழ்நூலிலே இந்தச் சித்தாந்தத்தையொட்டி, மானுடருக்கு லபிக்கும் ஒவ்வொரு ரோகத்துக்கும் முற்பிறப்பிற் செய்த ஒவ்வொரு பாபம் காரணமென்றும் அவ்வவ் ரோகத்துக்குப் பிராயச்சித்தம் பெரும்பான்மை பிராமணருக்குச் சில உபகாரங்களைப் பண்ணுதலாம் என்றும் கூறியிருக்கக்கண்டோம். "கன்மவிபாக"த்தைப்போலும் நூல்களிருக்கும்வரையில், நோய்களுக்குச் சரீரத்தின் வாத பித்த சிலேட்டும தாரதம்மியத்திலேயும், வெப்பம் தட்பம் முதலிய பூதிய நிலைகளிலேயும் காரணந்தேடுகின்றதாகிய வைத்திய சாஸ்திரம் நமக்கு வேண்டியிராது. முற்பிறப்பின் ஒவ்வோர் பாபமே ஒவ்வோர் ரோகத்துக்கும் காரணமாயின், வைத்திய நூல்களேன்? பிராயச்சித்தக் கிரியைகளே மருந்தாயின், ஔஷதங்களேன்?

ஆயினும் மறுபிறப்புக்கொள்கையை நுண்ணறிவாற் பரிசோதிக்குமிடத்து அது சிருட்டியிலுள்ள தாரதம்மியங்களைப் பின்போட்டுப் பின்போட்டுவைக்கின்றதேயன்றி அத்தாரதம்மியங்களுக்குக் காரணஞ்சொல்லுகின்றிலது என்பதை முதற்பாகத்திற் பரக்கக்காட்டினோம்.* அதனை மீண்டும் இங்கெடுத்துக்கூறுதல் பிஷ்டபேஷண நியாயமாய் முடியும். ஆதலால், கண்கூடாகக்கண்ட இவ்வொரு பிறப்பையே வைத்துக்கொண்டு நியாயஞ்சொல்லுதல்வேண்டும்.

## மனுஷனுடைய சுயாதீன சித்தம்.

கண்கூடாகக்கண்ட இவ் ஒரு பிறப்பையே ஏற்றுக்கொள்ளுகின்றதாகிய சத்தியவேதம் மானுடருட் காணப்படும் சுகதுக்க தாரதம்மியத்துக்குச் சொல்லுங் காரணத்தைத் தெரிந்துகொள்ளவேண்டுமானால், மனுஷனுடைய சுயாதீனசித்த கோட்பாட்டையும், சிருட்டியிலே இடைக்காரணங்கள் தொழிற்படும் முறைமையையும் முன்னர்த் தெரிந்துகொள்ளவேண்டும். இவை இரண்டையும் சிந்தனை செய்யாமையே சைவருடைய ஆசங்கைக்குக் காரணமென்பதைப் பின்னுற் காண்போம். உண்மையான தத்துவ சாஸ்திரபோதனையின்படி, மனுஷனுடைய சுயாதீனசித்தம் என்பது யாது? நன்மையையும் தின்மையையும் தன் விருப்பப்படி கொள்ளவும் தள்ளவும் தெரிந்தெடுக்கவும் தக்கதாய் மனுஷனிடத்தில் விளங்குகின்ற சத்தியே அவனுடைய சுயாதீனசித்தம் எனப்படும்.

மனுஷனுக்கு இப்படிப்பட்ட சத்தி உண்டென்பது வெளிப்படை. தபசியானவன் பசி உண்டாயிருக்கும்போதும் போசனம் அண்டையிலிருக்கையிலும் தபசின்பொருட்டு போசனங்கொள்ளாமலிருப்பான். தன் சரீரத்தில் இரணமுள்ளவன் அவ்விரணத்தைச் சுடவேண்டி நேரிடும்போது, அச்சூட்டைத் தன் மனமானது எவ்வளவாக வெறுத்துப் பயங்கொள்ளுமிடத்தும், இரணஞ் சுகமாகவேண்டுமென்ற விருப்பினால் அதற்கெதிரா

* மறுபிறப்பு—ஆட்சேபம் 6-ம் பக்கங்காண்க.

ன உணர்ச்சிகளை அடக்கியாண்டு வெறுப்புள்ள அதனையே விரும்புவான். கற்புள்ளவன் மோக இச்சையினாலே எவ்வளவாகக் கவரப்படுங்காலத்திலும், கடவுள் ஆணையைக்கடப்பது தீது என்று உன்னி அவ்விச்சையை அடக்குவான். இவ்வுதாரணங்களினால் மனுஷனுக்குச் சுயாதீனசித்தம் உண்டென்று காணலாம். சுயாதீனசித்தம் நன்மையையும் தின்மையையும் விரும்பியபடி தெரிந்துகொள்ளும் சத்தியுள்ளது. இச்சத்தியை மனுஷன் எழுந்த எழுந்தபடி பிரயோகித்து இடருறாதபடிக்கு அவனுக்குப் புத்தியும் உடன் கொடுக்கப்பட்டிருக்கின்றது. தன்புத்தியின் வெளிச்சத்தைக்கொண்டு கடவுளால் விதிக்கப்பட்டவை விலக்கப்பட்டவைகளை அறிந்து அவைகளின்படி மனோச்சாயமாய் ஒழுகுபவன் மோட்ச மடைவான். மனோச்சாயமாய் விதிவிலக்குகளை அலட்சியஞ்செய்து ஒழுகும் பாபியோ அந்நற்கதியை அடையாதிருப்பான். இதுவரையிற் கூறியது சுயாதீனசித்தத்தைச்சார்ந்த போதனை. சைவசித்தாந்தம் சுயாதீனசித்தத்தை அங்கீகரிக்கின்றிலது என்பதை அறிவோம். அச்சித்தாந்தத்தின்படி சீவன்முத்தர் ஆகாத சகல மானுடரும் பரதந்திரர்களாய் அதாவது, பூர்வசன்மவாசனையினாலேயே (=பிராரத்தம்=கன்மம்) உந்தப்பட்டு நன்மை தின்மைகளைச் சுயாதீனமின்றிச் செய்கிறவர்களாய்ப் பிறவிகள்தோறும் உழலுகிறார்கள் என்பது போதனை. ஆயின் பூர்வசன்ம உண்மையை சைவசித்தாந்தமானது யுத்தியநுபவங்களினால் ஸ்தாபிக்க மாட்டாதிருக்கின்றமையால், அதனைப் பற்றுக்கோடாகக்கொண்ட வாசனையை நாம் அங்கீகரித்தல் கூடாது. இங்ஙனம் சைவசித்தாந்தத்தினால் ஸ்தாபிக்கப்படாததாகிய பூர்வசன்மவாசனையை ஒழித்துநோக்கும்போது, நாம் முன்னர் எடுத்தோதிய ஏதுக்களாற் பெறப்படுகின்றதாகிய சுயாதீனசித்தமே மனுஷனுக்குரியதாய் எஞ்சிநிற்கின்றது. (தற்காலம் யாழ்ப்பாணச சைவருள்ளும் சிலர் சுயாதீனசித்தத்தை அங்கீகரிக்குஞ் சார்பு கொள்ளுகின்றனர்போலும். 'இந்துசாதனத்'' தில் "விதியை மதியால் வெல்லலாமா" என்னும் மகுடத்தோடு தோற்றிய விஷயங்களும், அராலி மெஸ். தாமோதரம்பிள்ளை இங்கிலீஷில் எழுதிய 'விதிவாத மறுப்பு" எனும் நூலும் முதலியவைகள் இதற்கோர் சான்று.)

## இடைக்காரணங்கள் தொழிற்படும்முறை

மானுடருட் காணப்படும் சுகதுக்க தாரதம்மியத்தைச்சுட்டி நாம் சொல்லப்போகும் நியாயத்தை முட்டின்றித் தெளிந்துகொள்ளும்படிக்கு, மானுட சுயாதீன சித்தத்தின் தன்மையை அறிவதோடு, சிருட்டியிலே இடைக்காரணங்கள் தொழிற்படும்முறையையும் கவனித்தல்வேண்டும். உலகத்தைச் சிருட்டித்தவரும் அதனைத் திதித்துக்கொண்டுவருகின்றவரும் ஒரே ஒருதனிமுதலேயாம். ஆயினும், கடவுள் உலகத்தைத் திதிக்கின்றமையிலே, சகலத்தையுந் தொழிற்படுத்தும் ஆதிகாரணராகிய அவருடைய தொழில்வேறு. அவராலே தொழிற்படுத்தப்பட்டுப் பிறகாரியங்களுக்குக் காரணமாய் நிற்கின்ற இடைக்காரணங்களின் (Secondary Causes) தொழில்வேறாகும். ஆதிகாரணராகிய அவர், யாதொன்றினும் காரியமாகா

மல், யாதொன்றாலும் தொழிற்படாமல் தாமே சகலத்தையும் தொழிற்படுத்துகிறவராய் நிற்பர். இடைக்காரணங்களோ, தாமே ஆதிகாரணரால் ஆக்கப்பட்டகாரியமாகி, அவராற் தொழிற்படுகிறவைகளாய் நிற்கும். இதனை ஓர் உதாரணத்தால் விளக்குவோம். ஓர் நூதனமான நாளிகைவட்டத்தைச் செய்தவன் அதற்கு ஆதிகாரணனாவான். ஆயின் நாளிகைவட்டத்திலே மணித்தியாலந்தோறும் மணியடிப்பதற்கு, அதிலே அமைக்கப்பட்டுள்ள சிற்சில சக்கரங்களும் கம்பிகளும் இடைக்காரணமாக நிற்கும். நாளிகைவட்டம் முழுமைக்கும் உள்ளபடியே ஆதியானகாரணம், அதனைச் செய்தவனே என்பதற்கு ஐயப்பாடு ஒரு சிறிதுமில்லை. ஆயின், அவன் ஒவ்வொரு மணித்தியாலமும் அதனைக் கையிலெடுத்து மணியை அடித்துக் கொண்டிராதபடிக்கு, வேளைக்குவேளை கிரமப்படி மணியடிக்குங்கருவிகளை அமைத்துவிட்டிருக்கின்றமையால், மணியடிக்கும் விஷயத்தில் அவனுடைய புதுத்தொழில் இல்லாமலே அக்கருவிகள் காரியத்தைப்பெறுவித்து, மணியடிக்குமளவில் இடைக்காரணங்களாய் நிற்கும். இக்கருவிகளுடைய அமைப்புக்கும், உள்ளபடி மணியடித்தலுக்கும் ஆதிகாரணன் அவனே என்பதில் மயக்கமில்லை. இல்லையாயினும், ஒருமுறை நாளிகைவட்டக்காரகனால் அமைக்கப்பட்டுள்ள கருவிகள இனித்தாமாகவே மணியை அடித்துக்கொண்டிருத்தலால், மணியடித்தலுக்கு அவைகள் உண்மையான இடைக்காரணங்களாய் இருக்கின்றன. ஆகையினாலேயே, நாளிகைவட்டக்காரகன் எவ்வளவு கெட்டிக்காரனாய் இருப்பினும், அவன் அமைத்த கருவிகளுள் ஒன்று பழுதுபட்டுப்போகுங்கால் மணி பிசகாகவே அடிபடும். படும்போது அப்பிசகைத் திருத்தும்படி நாளிகைவட்டக்காரகனையல்ல, நாளிகைவட்டத்தையே எடுத்துப் பரிசோதிப்போம்.

இடைக்காரணங்களை அமைத்து அவைகள் மூலமாய் விவிதமான காரியங்களைப்பெறுவித்தல் ஆதிகாரணனுக்கு அழகேயொழிய இழிவல்ல. இது மேலேசொல்லிப்போந்த உதாரணத்தால் இனிதுவிளங்கும. நாளிகைவட்டஞ் செய்பவன் ஒருவன், அதனைநெடுங்காலம் ஒருவரும் தொடாமல் ஓடிக்கொண்டிருக்கவும், கால், அரை, முழு மணிநேரங்களில் அடிக்கவும் நாள், திகதி, அமாவாசி, பௌர்ணிமி, மாதம், வருஷம் முதலியவைகளைக்காட்டவும் சக்கதாய் இயற்றுவானாயின், அவனே அதிகம் திறமையுள்ளவனென்று மதிக்கப்படுவான். ஓர் கடிகாரத்தை அடிக்கடி முறுக்கிக் கொண்டிருக்கவேண்டியதாய் செய்வது அத்துணைத்திறமையல்ல. இங்ஙனமே, சிருட்டியின் வரம்பில்லாத்திறனுள்ள ஆதிகாரணராகிய கடவுளும், அச்சிருட்டியை, தாமாக இயங்கிக் காரியங்களைத் தோற்றுவிக்கும் கருவிகளையும் சக்திகளையும் உடையதாய் இயற்றியருளினார். சிருட்டியிலே பலநூறாயிரம் இடைக்காரணங்கள் அமைந்து தொழிற்படுகின்றமையை யோசிப்போர் கண்டுமகிழ்வார்கள். ஔவையார் அரசனுக்கு “வரம்புயர வரம்புயர’’ என்று சொல்லிய வாழ்த்திலே உள்ள இடைக்காரணங்களைக்காண்க. வரம்புயர நெல்லுயரும், நெல்லுயரக் குடியுயரும், குடியுயர முடியுயரும் என்றார். இங்கே வரம்பினுயர்வு வெள்ளம் நிற்றலுக்கும்,

வெள்ளம் நெல்விளைவுக்கும், நெல்விளைவு குடிகளின் செல்வத்துக்கும், அச்செல்வம் அரசனின் உயர்வுக்கும் இடைக்காரணங்களாம் என்றபடி.

ஆயின் சருவத்துக்கும் ஆதிகாரணராகிய கடவுள் நாளிகைவட்டக்காரனைப்போல ஒருதரம் சிருட்டியைச்செய்து முடித்தபின் இடைக்காரணங்கள் தமது துணை சற்றுமின்றி இயங்கித் தொழிற்படவிட்டிருக்கின்றனர் என எண்ணுதல்கூடாது. அவரை இன்றி ஓர் அணுவும் அசையாது. ஆதலால், இடைக்காரணங்கள் தாமும் இயங்கும்படியாக அவர் அவைகளின் உள்ளும் புறமும் செறிந்தும் விரவியும் நின்றருளுகிறார்.

அப்பால், சிருட்டியிலே இடைக்காரணங்கள் தொழிற்படும் முறையைப் பொதுவகையால் நோக்கும்போது அதிலே அத்தியந்த இசைவும் அழகுமே காணப்படுமாயினும், சிறப்புவகையால் நோக்கும்போது, லட்சாதிலட்சக்கணக்கான அக்காரணங்கள் ஒருங்கு நடைபெறுவதிலே இன்றியமையாத சிலகுறைவுகள் காணப்படும். அக் குறைவுகளோ சிருட்டியின் பொதுவான நன்மையை ஒருவிதத்திற் பூரணப்படுத்துகின்றவைகளேயாம். இதனை ஓர் உதாரணமுகத்தால் விளக்குவோம் :—சூரியனின் வெப்பத்தால் வாயுவிலுள்ள நீர் அம்சங்கள் மேலெழுந்து கீழே வெளிப்புண்டாகும். இவ் வெளிப்பினால் காற்றெழும்பும். வாயுவில் வெளிப்புத் திடீரென உண்டானாலோ சண்டமாருதமாகும் இனிச் சண்டமாருதத்தால் கடல்மேற் சிலகப்பல்கள் ஆழலாம். கரைமேற் சிலமரங்கள் வீழலாம். ஆயின், சண்டமாருதம் பெருமழையையும் ஆகாயத்தின் சுத்தத்தையும் உண்டாக்கிப் பொதுவானதோர் நன்மையைச்செய்யும். அப்பால், பெருமழையால் வயல்களில் நீர்மலியும். சிலகுடிசைகளுள் வெள்ளம் புகுந்து அங்குள்ளோரைக் குடியெழுப்பும். சில கமக்காரருடைய வேளாண்மையை அழிக்கும். ஈ, எறும்பு முதலியன பல அழிந்துபடும். ஆயின், அவ்வெள்ளத்தாற் பூமி பொதுவாகச் செழித்து, மக்களுக்குப் பொதுவான பல நலன்கள் விளையும். இப்படி இடைக்காரணங்கள் ஒன்றுடனொன்று மருவிச் சிறப்புவகையாற் சில சேதங்களையுண்டுபண்ணும்போதும், பொதுவகையால் நன்மையே விளையுமாதலால், வரம்பில்லா ஞானமுள்ளவராகிய கடவுள் அவைகளை இயற்கைப்படியே தொழிற்படவிட்டிடுகிறார். சிறப்புவகையால் வந்த நஷ்டங்களும் அவ்வச் சீவர்களுக்கு அநியாயமாகாதபடி அவர் தமது மேலான ஞானத்தின்படி ஒழுங்குபடுத்திக் கொள்ளுவார் என நம்பவேண்டியது. எங்ஙனமெனில், சண்டமாருதத்திலகப்பட்டுக் கடலிலாழ்ந்தவர்களுக்கு அக்காலமே சாவதற்கு அதிக தகுதியுள்ளகாலமாக ஒழுங்குபடுத்துதல் கடவுளுக்கு அரிதல்ல. அயர்கள் அங்ஙனம் அகப்பிலிறந்தமையை அறிந்த பிறரும் மரணநேரத்தின் சந்தேகத்தையுணர்ந்து தீவழியைவிட்டு நல்வழியிலொழுகத் தூண்டப்படுதலாகிய நன்மையும் அதினால் விளையலாம். சண்டமாருதத்தில் வீழ்ந்தமரம் வேறோர்காலத்தில் வீழின் ஓர்வேளை மனுஷருக்கு அதிகசேதமுண்டாகியிருக்கலாம். வயல்களில் ஈ எறும்புகள் இறந்தமை, அவைகள் அளவுக்கதிகமாய்ப்பெருகிக் கேடுவிளையாதபடிக்கு ஆகலாம். குடிசைகளை விட்டுக் கிளம்பினோரும் பொறுமை முதலிய புண்ணியங்களை நட்

தெற்கு அதனை ஓர் தருணமாக்கி நன்மையடைந்துகொள்ளலாம். சிறப்பு வகையால் விளையும் இன்னன பிறகேடுகளாலும் ஈற்றில் யாதோர் நன்மையே உண்டாவதை நுண்ணறிவாற் கண்டுகொள்ளுக. இவ்வாறே இடைக்காரணங்கள் தொழிற்படும் முறையிலே பொதுவகையால் அவாந்தர நன்மையும் (Immediate good) சிறப்புவகையால் அந்திம நன்மையும் (Ultimate good) விளைகின்றமையால், இடைக்காரணங்கள் தாமாகவே தொழிற்படவிட்டுக்கொண்டிருத்தல் கடவுளுடைய வரம்பில்லா ஞான லட்சணத்துக்கே இலக்கியமாகின்றது.

ஆகையால் சிருட்டியிலே தம்மால் அமைக்கப்பட்டுத் தொழிற்படும் இடைக்காரணங்களைச் சிருட்டிகராகிய கடவுள் அடிக்கடி தடுத்தும் மாற்றியும் அற்புதஞ்செய்துகொண்டிருத்தல் வேண்டப்படாது. அவர் ஞானமாய் அமைத்த முறைமை அவ்வாற் கருதப்பட்ட அந்திம நன்மையைப் பெறுவிக்கும் பெற்றியோடு நடந்துகொண்டிருக்கும் வரையில் இடையே சிறப்புவகையால், இடைக்காரணங்களின் மாறுபாட்டால் நிகழக்கூடிய குறைகளைப் பொருட்பண்ணுதல் வேண்டப்படாது. அக் குறைகளையுமே கருதிய அந்திம நன்மைக்கு இடைக்காரணங்களாக்கித் தொழிற்படுத்தி முடிக்குந்திறமையே வரம்பில்லாத திறமையன்றோ.

## செல்வமும் வறுமையும்

மனுஷன் சுயாதீன சித்தமுள்ளவன் என்பதையும் பிரபஞ்சத்திலே இடைக்காரணங்கள் தொழிற்படும் முறையையும் மனதில் இருத்திக்கொண்டால், உலகத்தில் செல்வர் வறியர் என்றிருப்பதும் கூன்குருடராய்ப் பிறப்பதும் யாதினால் என்றது தெள்ளிதிற் புலப்படும். முதற்கண், சிலர் செல்வராயும் சிலர் வறிஞராயும் இருத்தற்குக் காரணம் யாதெனப் பார்ப்போம். இதற்குரிய காரணங்களுட் பிரதானமானது முயற்சியேயென்று திருவள்ளுவரும் கூறினார். "முயற்சி திருவினையாக்கும் முயற்றின்மை இன்மை புகுத்திவிடும்" (உத்தரவேதம் 62;6) செல்வத்தை மனுஷன் முயற்சியாற் தேடிக்கொள்ளுகின்றான் என்பதை உணர்த்தியே ஒளவையாரும் "திரைகடலோடியுந் திரவியந் தேடு" என்றார். திரவியந்தேடவும் முக்கியமாய், அதைக் காத்துக்கொள்ளவும் முயற்சியோடு சன்மார்க்கம் யோக்கியதை முதலிய குணங்களும் வேண்டப்படும். இனி, முயற்சி முதலிய சுசீலங்களால் ஒருவன் தேடிவைத்த ஆஸ்திகளை அவன் மகன் முதுசொம்மாகப்பெறுதல் ஆச்சரியமா? மகன் அதற்கு முற்பிறவியொன்று பிறந்தும், கன்மசேடமொன்று வைத்துக்கொண்டும் இருத்தல் வேண்டப்படுமா? அன்றி, தகப்பனுடைய முயற்சியினாலல்ல தன் புண்ணியவசத்தினாலேதான் இவனுக்கு ஆஸ்திகள் வந்ததென்றால், இவன் முயற்சியற்றவனாய்த் துன்மார்க்கனாய் உண்டாட்டுக் களியாட்டுகளில் மாத்திரம் நாட்போக்குகிறவனாய் நடக்க, அவ்வாஸ்திகள் அழிந்துபோகாதிருக்குமா? "முயற்றின்மை இன்மை புகுத்திவிடு" தலைக்கண்கூடாகக் காணாதவர் யார்? இனி, அரசருடைய பதவியும் முயற்சி முதலிய சுசீலங்களினால் வருவதொன்றோ எனில், ஆமாம் என்கிறோம். குறைவற்ற முயற்சியும் சுசீலங்களுமுள்ள அங்கத்தவர்களைக் கொண்ட குடும்பமே எத்தேசத்தி

லேயும் பிரபுக்கள் குடும்பமென்னப்படும். பிரபுத்துவத்தை உரிமையாகக் கொண்டவனொருவன் மேலும் முயற்சிசெய்தே அரசுரிமையைப் பெறுவான். நெப்போலியன் முதலாம் சிலர், தங்கள் முன்னோரின் பிரபுத்துவ கீர்த்தியில்லாமலும் தங்கள் சொந்த முயற்சியால் இராசமகத்துவங்களை அடைந்தமையையும் கவனிக்குக. இனி, இராச மகிமைகள் தாமும் முயற்சியின்மையினால் துன்மார்க்கத்தினால், பறிகொடுக்கப்படும். நம்முடைய யாழ்ப்பாணத்துக் கடைசியரசனான சங்கிலியன் துன்மார்க்கத்தினாலேயே அரசைப்பறிகொடுத்தான். பறங்கிக்காரர் முற்பிறவியின் கன்மங்களினால் உந்தப்பட்டல்ல, தங்கள் சுயாதீன சித்தத்திலேகொண்ட முயற்சியினாலும் காக்கை வன்னியன் சொல்லிக்கொடுத்த சூழ்ச்சியினாலுமே நம்முடைய பூர்வீக இராசாங்கத்தளுக்குகளையெல்லாம் இழுக்குப்படுத்தி வைத்தார்கள்.

வறிஞர்பாடும் இப்படியே. துன்மார்க்கம் சோம்புத்தனம் முதலியவைகளால் ஆதியிலே வறுமை பிறக்கும். இராசீகம் தெய்வீகமாய் அது பிறப்பதுமுண்டு. தெய்வீகமாயானால் அது யாதோர் இடைக்காரணத்தாலேயே உண்டாகியிருக்கும். கடவுளோ அவ்வறுமையைக்கொண்டும் மேலான நன்மையை அடையும்படி வறியோருக்கு உதவியருளுவார். எப்படியும் வறுமை ஓர் குடும்பத்திற் தொடங்கிவிட்டால், ஒரே தலைமுறையிலே அதைத்தீர்த்து மேற்கொள்ளுவது எவ்வித முயற்சிக்கும் இயலாத காரியமாகவுங்கூடும். ஏனெனில் உலகத்திலே பொதுநலத்தைநோக்கி அமைக்கப்பட்டு நடைபெறும் இடைக்காரணங்கள் அதற்குத் தடையாக நிற்கும். கிணற்றுள் வீழ்ந்தவன் எவ்வளவு முயற்சிசெய்யினும் உடனே வெளியேற மாட்டான். அதற்குப் பூமிக்கவர்ச்சி என்னும் இடைக்காரணம் விடாது ஓர் ஏணியை வருவித்து படிப்படியாக ஏறியே வெளிக்கொள்ளலாம். அங்ஙனமே. வறுமைத்தசையையடைந்த ஓர் குடும்பம் உடனே முயற்சியினால் செல்வத்தை அடைதல் கூடாமையாகும். இவையெல்லாம் முற்பிறவிகளின் கன்மங்களிலேயல்ல, மனுஷனுடைய சுயாதீன சித்தத்திலேயும் இடைக்காரணங்கள் தொழிற்படும் முறையிலேயுமே தங்கியுள்ளவைகளாம்.

அப்பால், சில இன்பங்கள் செல்வத்தோடு கூடியிருத்தலும் சில துன்பங்கள் வறுமையோடு கூடியிருத்தலும் இயல்பேயாம். பொருளுண்டானால் உண்ணல் உடுத்தல் செய்யக்கூடும். இல்லையானால இவைகள் இன்றி வருந்தம் உண்டாகும். சிவிகையில் ஏறிப்போம்போது சுகம் தோன்றலாம். அச்சிவிகையைச் சுமப்பவனுக்குத் துன்பம்தோன்றும். இனி, வறுமையையும் செல்வத்தையும் மனுஷன் தன் முயற்சி முதலியவைகளாலும் அவைகளின் இன்மையாலும் தேடிக்கொள்ளுமிடத்து அவ்வறுமை செல்வங்களோடு தொந்தப்பட்டுள்ள சுகதுக்கங்களைக் கடவுள் மாற்றிச் சமன் படுத்திக்கொண்டிருத்தல் வேண்டுமென்போமா? நான் மடைமையினால் தீயுட்குதிக்கும்போது, கடவுள் அத்தீ எனக்குச் சுடாமற்பண்ண வேண்டுமா? நான் சோம்புத்தன்மையாய்க்கிடந்து பசிமுறிக்கும்போது கடவுள் எனக்குப் போசனம் அனுப்பவேண்டுமா? இப்படிச்செய்வாரேல்

தாம் சிருட்டியிலே அமைத்த இடைக்காரணங்களை நியாயமின்றி அடிக்கடி மாற்றிக்கொண்டிருப்பவராவார். அங்ஙனம்செய்தலோ அவரது அளவில்லாத ஞானத்துக்கு ஏற்றதாகாது. ஆயின் தங்கள் குற்றமில்லாமலே வறியோராய்க்கிடந்து வருந்துவோர், அவ்வறுமையை நீக்க முயற்சித்து வருங்காலையில் 'பொறுமை முதலிய புண்ணியங்களையும் ஈட்டிக்கொள்ளத்தக்கவர்களாக்கி வைக்கின்றமையோ கடவுளுடைய வரம்பில்லா ஞானத்துக்குப் புகழ்ச்சியாகின்றது.

பின்னும் செல்வருக்கு எல்லாம் இன்பமேயென்றும், வறிஞருக்கு எல்லாம் துன்பமே என்றும் நினைத்தலும் தவறாகும். உய்த்துணர்ந்துபார்க்கும்போது சகல மானுடருக்கும் ஏக பிதாவும் பெருங்கருணைத் தடங்கடலுமாகிய கடவுள், சுகதுக்கங்களை இம்மையிலும் ஒருவாறு சமனாகவே பகிர்ந்திருக்கின்றார் எனக்காணலாம். நாம் பள்ளிக்கூடத்திற் படிக்கும் நாட்களிற் பாடம்பண்ணிய தமிழ்க் கவியொன்றிற் சொல்லியிருப்பது போல் "பாலுக்குச் சர்க்கரை யில்லையென்பார்க்கும் பருக்கையற்ற—கூழுக்குப்போட உப்பில்லையென்பாருக்குங் குத்தித்தைத்த—காலுக்குத் தோற்செருப்பில்லையென்பார்க்குங் கனகதண்டி—மேலுக்குப் பஞ்சணை யில்லையென்பார்க்கும் விதனமொன்றே" யாம். துன்பம் கூடவோ குறையவோ எல்லா நிலைபரங்களிலும் உண்டு. இவ்வுலகம் மனுஷனைப் பரகதிக்கு ஏற்றவனாகத் திருத்தியெடுக்கும் ஓர் பாடசாலைபோலவே இருக்கின்றமையால் பலவகையான இடைக்காரணங்களினால் மனுஷனுக்கு லபிக்கின்றனவாகிய இத்துன்பங்களைக்கொண்டு அவன் புண்ணியங்களை ஈட்டிக்கொள்ள வேண்டுமென்பது கடவுளுடைய திருச்சித்தமாகலாம். அன்றியும் மரிக்கும்போது செல்வரும் வறிஞரும் அவரவர்களுக்குக்கொடுக்கப்பட்ட வசதிகள் நன்மைகளுக்கு ஏற்கவே நடுக்கேட்கப்பட்டுச் சம்பாவனையையோ தண்டனையையோ அடைவார்களாதலால் வறிஞர் இவ்வுலகத்திற் குறைகூறவேண்டியதில்லை. செல்வனை நான் தண்டிகைமீது வைத்துச் சுமந்துகொண்டுவந்தேனாயின். அவனுக்குக்கிடைத்த சிலாக்கியங்களுக்குத் தக்கபடி அவன் கடவுளை வழிபட்டுத் தன்பிறனைச் சிநேகித்துள்ளவனோ என்று அவனிடம் கண்டிப்பான கணக்குக் கேட்கப்படும். நான் சுமந்துகொண்டு போனபோது பட்ட துன்பமும் கணக்கில்வைத்தே எனக்கு நடுக்கேட்கப்படும். ஆதலால் துன்பந்தான் சகித்தாலும் அதற்குத்தக்க பலன் வருகின்றமையால், நான் கவலைப்படவேண்டியதில்லை என்று சுமப்பவன் தன்னைத் தேற்றிக்கொள்ளலாம். எப்படியும் மறுபிறப்புக்கொள்கையிலும் இக்கொள்கை அதிக ஆறுதலானதென்பதோ நிச்சயம். எங்ஙனமெனில், சிவிகை பொறுத்த சைவன்: "ஐயோ இது என் விதிவசமே. எப்படியும் பட்டுத்தொலையவேண்டும், வினைப்போகம்விடாதாமே. இப்படியே 'இன்னும் எத்தனை எத்தனை சென்மமோ" என்று மனம்வருந்துகையில், அதே துன்பத்துட்பட்ட கிறிஸ்தவன் "என் வறுமையின் நிமித்தம் இத்தொழிலில் உட்படவேண்டியிருக்கிறது. ஆயினும் இதிலே நான்படும் துன்பங்களுக்குத் தக்கபலனை மறுமையில் அடைவேன். இன்னுஞ் சிலநாட்களுள் நான் என்னைப்படைத்தவரைத் தரிசித்

து மகிழ்வேன். காருண்ணிய பிதாவாகிய அவர், நான்படுங் கஷ்டத்தையெல்லாம் திருச்சித்தத்திலிருத்தி எனக்குப் பாக்கியத்தை அருளுவார்" என்று உளந்தேறுவான். குருட்டுவிதியின் மாற்றொணாத்தண்டனை இது என்று நினைந்து மனம் வருந்துவதே துன்பமும், பரிபூரண நீதியுள்ள கடவுள் முதற்கண் தம்மாற் கருதப்படாதவைகளும் இடைக்காரணங்களால் எழுந்தவிடத்து என் நன்மைக்காகவே விடப்பட்டவைகளுமான என் பாடுகளுக்குத் தக்க பட்டத்தை அருளுவார் என்று நம்பிக்கை கூறுவதே இன்பமுமன்றோ.

## கூன் முடம் ஆதிகள்

இங்ஙனமாக மனுஷர்களுள்ளே காணப்படுகின்ற செல்வமும் வறுமையும் அவற்றைப் பரிவாரமாய்ச் சூழ்ந்துவருகின்ற சுகதுக்கங்களும், அவர்களுடைய சுயாதீனசித்தமும் சிருட்டியிலே தொழிற்படுகின்ற இடைக்காரணங்களும் எனும் இவைகளாற் பேதமாகின்றன எனக் காட்டியாயிற்று. "ஆயின், செல்வம் வறுமை என்பவைகளோடு கூடிய சுக துக்கங்களை ஒழிய, தாயுதரத்தினின்றே கூன் முடம் பேடி குருடுகளாய்ப் பிறந்து துயரிலாழ்ந்து கிடப்பாருமுண்டே, இவர்கள் தஞ்சீவியகாலமெல்லாம் துக்கத்தையே புசிக்கின்றார்களன்றோ, இதற்கு முற்பிறப்பிற் செய்த தீவினையே காரணமல்லவெனில் வேறு நீவிர் சொல்லுங் காரணந்தான் யாது? மேலும், பிணி மூப்பு சாக்காடு இவைகளை மானுடர் அனுபவிப்பது யாதுபற்றியோ?" என வரும் ஆசங்கைகளுக்கு இனி விடை கூறுவதாம்

தாயுதரத்தினின்று பூரணதேகிகளாய்ப் பிறந்தோருஞ் சிலர் இடையில் நோயினால் கூன் குருடு முதலிய குறைபாடுகளுக்குள்ளாவதைக் கண்கூடாகக் காண்கின்றோம். இதற்கு முற்பிறவிகளின் வினைப்பயனேயென்பார் யாருமில்லை. சன்னிமுதலிய நோய்களும் வெட்டுதல் குத்துதல் முதலிய பிறகாரணங்களும் பிரத்தியட்சமாய் இதற்குக் காரணமாகின்றன. அப்பால், சன்னி முதலிய நோய்கள் எப்படிவந்தனவென ஆராயின் அதிக குளிர் அசீரணம் ஆதிய இடைக்காரணங்களினாலேயே இவைகள் பிறந்தன எனக் காணலாம். இதுவே ஆயுள்வேதங் கூறுங் காரணமுமாம். அன்றி, தலையெழுத்தினாலே இவை வந்தனவெனக் கூறி முடிப்பதற்கு ஓர் அணுவளவேனும் நியாயமின்று. தலையெழுத்தை ஒப்புவோமானால், தானே தனக்குத் தேடிக்கொள்ளும் நோய்கள்மட்டுமல்ல, பிறரால் விளைகின்ற கொலை களவு நிந்தை ஆதியாம் சகல அக்கிரமங்களும் விதிவலியினால் நடக்கின்றன என முடிந்து, நோய்தீர்க்க முயலுகின்ற ஆயுள்வேத பண்டிதர்கள் எப்படிப் பயனற்றவர்களாவார்களோ, அப்படியே அக்கிரமங்களுக்குத் தண்டனையிடுகின்ற அரசாட்சியும், அவைகளை மானுடர் விலக்குமாறு போதிக்கும் வேதமும் பயனற்றனவாகிப்போய் விடும். ஆகவே, இடையிலே நிகழுகின்ற கூன் குருடு முதலிய குறைபாடுகள் அவனவன் சீவியகாலத்திலே உண்டாகின்ற இடைக்காரணங்களின் காரியமாம் என்பது தேற்றம்.

சீவியகாலத்திலே கூன் குருடு முதலிய குறைபாடுகளை வருவிக்கின்ற இடைக்காரணங்கள், தாயுதரத்திலேயும் தொழிற்படுதல் கூடாதா? கூடும் என்பது மலையிலக்கு. பிள்ளைகளின் சுகமும், நோயும், அங்கப்பழுதும் தாயின் சுகம் நோய், உணவு, மருந்து, கவனம் என்னும் இவைகளிலே முற்றுந் தங்கியிருக்கின்றனவென்பதை வைத்தியசாஸ்திரங் கற்றோரெல்லாம் அறிவர். "சோத்திரத்தொடு தொக்குந்துடராதே துண்டித்துப் போனால், அகம்—வேற்றுமையாயுடல் வேறுகூறாகிடுமாண்டே—மாத்திய சட்சுசிங்குவையாக்கிராணம் மருவாதேபோனால், அந்த—வேற்றிடு நாக்கு மூக்கு விழியுங் குறையுங்காணுண்டே" — "மாதாவுதரமலமிகில்மந்தனும், மாதாவுதாஞ் சலமிகிலூமையாம், மாதா வுதபத்திரண்டொக்கிற் கண்ணில்லை, மாதாவுதாத்தில் வந்த குழவிக்கே" என்பன முதலிய கவிகள் வைத்தியரெல்லாமறிந்தவைகள். 'மக்களுக்குச் சத்துரு மாதா" என்னும் முதுமொழியையும் கவனிக்குக. ஆதலால் தாயுதரத்திலிருந்து சில சிசுக்கள் அங்கப்பழுது உள்ளவைகளாய்ப் பிறத்தற்குத் தாயின் நோய் முதலியவைகளே போதிய காரணங்களாம். இவ் இடைக்காரணங்கள் போதியவைகளாயிருக்குமிடத்து நாம் பழவினையையும், முற்பிறப்புக்களையும் கற்பிப்பதற்குச் சிறிதும் ஆவசியகம் இன்று.

"நன்று கூறினீர், தாயுதரத்திலே நோய் முதலிய இடைக்காரணங்களின் நிமித்தமாய்ச் சில சிசுக்கள் கூன் குருடுகளாய், நொண்டி பேடிகளாய்ப் பிறக்கின்றன என்றீர். இவைகள் அவ்வாறு பிறந்து சீவியகாலமெல்லாந் துயரமனுபவிக்க விடுதல் கடவுளுக்கு எற்குமா? பூரணதேகிகளானோர் சுகமுள்ளோராய் வாழுமிடத்து இப் பேடி நொண்டி கூன் குருடுகளோ துக்கக்கடலில் ஆழ்ந்திருக்கவேண்டுமெனக் கடவுள் விதிப்பதற்கு இவர்கள் தாம் யாது குற்றஞ்செய்தனர்? பேடியாதிய குறைபாடுகளுண்டாவதற்குத் தாயுதரத்திலேயே இடைக்காரணங்களுண்டெனில் அவ் இடைக்காரணங்களை மறித்தடக்குதற்குக் கடவுளாலியலாதா? கடவுள் அவைகளை மறித்தடக்கக்கூடியவராயிருந்தும் மறித்தடக்காது விட்டமையை நாம் காணும்போது, முன்வினைகளுக்கிடாகவே அவ்வாறு விட்டனர் என்பது தெளிவாகின்றதன்றோ" என நம் நண்பர்கள் கடாவுவார்கள்போலும். இக்கடாவுக்கு இனி விடைகூறுவோம்

தாயுதரத்திலே சிசுவுக்கு அங்கப்பழுதுகளை உண்டாக்குகிறவைகளாய் வருகின்ற நோய் முதலிய இடைக்காரணங்களை மறித்தடக்குதல் கடவுளார்க்கூடும். ஆயின் அங்ஙனம் மறித்தடக்குதற்குக் கடவுள் ஒவ்வொரு முறையும் இயற்கைவிதிகளின் காரியப்பாட்டை மாற்றிக்கொண்டிருக்க வேண்டியவராவார். உதாரணமாய், பிள்ளைத்தாய் கிரந்திமிகுந்த உணவுகளை வேண்டுமென்றுகொள்ளும்போது கடவுள் அவ்வுணவுகளின் இயல்பைமாற்றிக் கிரந்தியற்றனவாக்கிக் கொண்டிருக்க வேண்டியவராவார். பிள்ளைத்தாய் விழுந்தாலும் அவ்விழுகைக்கு இயல்பான அதிர்ச்சி நோவு முதலியவைகள் அவளுக்கு உண்டாகாது செய்யவேண்டியவராவார். அவளுக்குச் சூடுள்ளது குளிரவும், குளிருள்ளது சுடவும் செய்ய வேண்டியவராவார். சுருங்கச்சொல்லின், கருப்பவதிகளுக்குமட்டுமல்ல, அவர்

களோடு எப்படியோ சம்பந்தப்படுகின்றவர்களாகிய சகல ஸ்திரீகளுக்கும் சகல பூமான்களுக்குமே ஒரு நோயும்வராதபடி கடவுள், இயற்கையின் விதிகளையெல்லாம் ஓயாமல்மாற்றிப் புதுமைசெய்துகொண்டிருக்க வேண்டியவராவார். உலகத்திலே நாம்காண்கிற ஒழுங்குக்கும் கடவுள் உலகத்தை நடத்துகின்ற சாதாரண விதிக்கும் இது ஒவ்வாது. தாம் இயற்கையிலே அமைத்துள்ள இடைக்காரணங்களின் தொழிற்பாட்டை அடிக்கடி தடுத்து மாற்றிக்கொண்டிருப்பதல்ல, அவைகளைத் தாம் குறித்த பொதுவகையான நன்மையொன்றை நோக்கித் தொழிற்படவிட்டு அக்காரணங்கள் ஒன்றுபட்டுஞென்று சில தடவைகளிற் தாக்குவதனால் சிறப்புவகையால் உண்டாகும் தின்மைகளையும் மேலானதோர் நன்மைக்கு உபகரணமாக்கிப் பரிகரிப்பதே கடவுளுடைய வரம்பில்லா ஞானத்துக்கு ஏற்புடைத்தாகும் என முன்னருங்காட்டியிருக்கிறோம்.

"தாயினுதரத்திலே இன்னுங் கிடக்கின்ற சிசுக்கள் அங்கு நிகழும் இடைக்காரணங்களால் இயற்கைவிதிப்படி கூன் குருடு ஆதிகளாகாமற் தடுத்தல் கடவுளுக்குக்கூடுமேயெனினும், அங்ஙனந் தடுத்துக்கொண்டிருத்தல் அவரது வரம்பில்லா ஞானத்தின் ஏற்பாடுகளோடு பொருந்தாது எனமுடிப்பீராயின் அச்சிசுக்கள், (கிறீஸ்தகொள்கைப்படி) தாங்கள் குற்றமொன்றுஞ்செய்யாதிருக்க, சீவியகாலமெல்லாம் கூனாய்க் குருடாய்க் கிடந்து வருந்தவிடுதல் கடவுளுடைய நீதிக்குப் பொருத்தமாகுமா?"—எனில், சொல்லுவோம். சிசுக்கள் முன்னே பிறந்திராதவைகள், முன்னே குற்றமொன்றுஞ் செய்யாதவைகள் எனப் போதிக்கின்றதாகிய கிறீஸ்துசமயமானது, அங்கப்பழுது, நோய், துயரம் முதலிய குறைபாடுகளைப்பற்றிக் கூறும் உபதேசத்தையும் நம்மைய நண்பர் நன்கு மனதிற் தரித்துக்கொள்வார்களாயின் இக்கேள்விக்குவிடை எளிதிலேபெறப்படும்.

## அங்கப்பழுது நோய் துயரம்

ஆதியவைகள் எப்போதும் பாபத்துக்காக இடப்படும் தண்டனைகள் தாமா? பொதுவாய்ச்சொல்லுமிடத்து ஆதாமின் பாவத்தினால் அவர் பிள்ளைகளுக்கு பிணி முதலியவைகள் வரலாயின என்றாலும், இவைகள் இரக்கமுள்ளவராகிய கடவுளால் நமது நன்மைக்குரியவைகளாக மாற்றப்படுகின்றன என்றும், இவைகள் எப்போதும் நமது சொந்தப் பாவத்தின் தண்டனைகளாக வேண்டியதில்லையென்றும் கிறீஸ்து சமயம் கூறுகின்றது. பொன்னை அக்கினியிலே புடமிடுமாறு கடவுள் தமதடியார்களைத் துன்பதுயரங்களென்னும் அக்கினியிலே புடமிடுகிறார் என்பது அதன்போதனை. இவ்வுலக சீவியமானது, கிறீஸ்துசமயத்தின்படி, நாம் மோட்சமகிமையென்னும் கிரீடத்தைப் பெறும்பொருட்டுப் போராடுகின்ற சமர்க்களமும், நாம் பரலோகமென்னும் நகரத்தின் குடிகளாகும்பொருட்டுப் பயிற்றி எடுக்கப்படுகின்ற பாடசாலையுமாம். ஆதலால் துன்பதுயரங்களினாலேயே இங்கு நமது கடவுட் பத்தி நன்கு அறியப்படும். அவைகளினுள் திடவிசுவாசத்தோடும் நம்பிக்கையோடும் நின்று மறுமைப்பேரின்பத்தைநோக்கிப் போராடுகின்றவனே வெற்றிமுடியை அடையத் தக்கவனாவான். இப்போதகத்தின்படி ஒருவன் அங்கப்

பழுதுள்ளவனுய் நோய்யாய்ப்பட்டவனுய்ச் சீவியகாலமெல்லாம் துயரில் அமிழ்ந்தவேண்டியவனுய்ப் பிறக்கக் கடவுளால் விடப்படுவானுயின், அவனுக்கு இக்குறைபாடுகளிலேயும் யாதோநன்மைக்கு இடமிருக்கின்றது. இக்குறைபாடுகளின் மத்தியிலே அவன் கடவுளிடத்தில் அன்புசெய்வோனுய், தனக்குக்கிடைத்த அங்கங்களால் அவருக்குப் பணிபுரிவோனுய் இருப்பானுயின், மறுமையிலே இவ்வளவு கடவுளிலே பத்திசெய்த பூரண தேகிகள் அடைகின்ற முத்தியின்பத்தைப் பார்க்கிலும் இவன் அதிகமாய் அடைவான் என்பது நிச்சயம். ஏனெனில், கடவுள் இவன் இம்மையில் பொறுமையோடு சகித்த குறைபாடுகளையும் எண்ணியே பலன் அளித்திடுவார். அன்றியும் இங்ஙனம் குறைபாடுள்ளோராய்ப் பிறப்பார் கடவுளைப் பத்திசெய்ய அதிக சார்பு உள்ளவர்களாவதுவும் சகசம். "செல்வம் வந்துற்றகாலை தெய்வமும் சிறிதுபேணுர்" என்றபடி, செல்வம் சுகம் முதலிய இவ்வுலக நன்மைகளைக் குறைவறக்கொண்டவர்கள் கடவுளை மறந்து வீணுட்போக்கி நிரயத்துக்காளாக, வறுமை நோய் முதலியவைகளில் உழல்வோர் அவைகளின் நிமித்தமே கடவுளை நினைந்து பத்திசெய்யத் தூண்டப்படுவோருமாகிறுர்கள். ஆகவே, தாயுதரத்திலே தொழிற்படுகிற நோய் முதலிய இடைக்காரணங்களின் நிமித்தமாய்க் கூன் குருடு பேடி முடமானோரை அப்படியே பிறக்கவிடுவதிலே அநீதி ஒரு சிறிதுங் காணப்படாது. இச்சிசுக்களுக்கு இம்மையிற் கிடையாமற் போகின்ற சில நன்மைகளுக்குப் பதிலாக வேறு நன்மைகள் கிடைக்கின்றமையாலும், இப்போது உள்ள தாரதம்மியம் மறுமையிற் சமமாகும் ஆதலாலும் இதிலே கடவுளின் பூரண நீதியும் வரம்பில்லா ஞானமுமே சொலிக்கின்றன.

இங்ஙனமே, செல்வம் வறுமை ஆதிய தாரதம்மியங்களுக்கு மெய்ச்சமயம்சொல்லும் உண்மையான நியாயங்களையும், தாயுதரத்தினின்றே சிசுக்கள் கூன்முடங்களாய்ப் பேடி குருடுகளாய்ப் பிறபபதற்கு உரிய காரணங்களையும் பரிசோதித்தறிந்துகொண்டோம். செல்வம் வறுமையாதியகுறை நிறைகளுக்குப்போலவே, கூன்முடமாதிய அங்கப்பழுதுகளுக்கும் இவ்வொரு பிறப்பிலேயே போதிய நியாயங்கள கிடக்கின்றன. ஆதலால் முற்பிறப்புக்களைக் கற்பித்து முட்டுறுவது நமக்கு யோக்கியமன்று. "ஆயின்,

பிணி மூப்பு சாக்காடு

எனும் இவைகள் மானுடருக்கு உண்டாயிருப்பது யாதுபற்றியோ? குன்மம், சுரம், வாதம், க்ஷயம், சன்னி, கிரிகிச்சு, மூலரோகம், கரப்பன் பிளவை சூலை, பறங்கி, அரையாப்பு ஆதிய நூற்றுக்கணக்கான நோய்களெல்லாம் மானுடருக்குச் சுகத்தைத்தான் செய்கின்றனவா! இவைகளால் மனுச்சென்மம்படுகின்ற பாடுகளை, எறிகின்ற பெருமூச்சுக்களை, சிந்துகின்ற கண்ணீர்களை அலகிட யாரோ வல்லார்! முதுகு வில்லுப்போல்வளைந்து கூனி, மதிமயங்கி, செவி கிர்ராடி, நெஞ்சுலர்ந்து வரண்டு, மரியாதை மற்று, பாலர்கள் கோரணிகொள்ளும்படியாகத் தள்ளாடி, கண்ணீளை சாறி, விக்கல் குக்கலோடு மலசலம் கழிக்கவுமியலாது புறந்திண்ணையிற

பூமிக்குப் பாரமாய்க்கிடக்கும் முதுவயசின் நிர்ப்பந்தங்களை எழுத எடுகொள்ளாதே. அப்பால் சாவின் பயங்களை எடுத்துச்சாற்றவும் நாம் வல்லேமா! நாடிவீழ, விக்கல்தொடுக்க, வெயர்வைததும்ப, ஆருட்டம்மல்க, சலவாடைதட்ட, இனசனர்கள் கூவிப்புலம்ப, மறுமையின் பயங்கள் [illegible]க்குந்து உறுத்த, இவ்வாறாக ஆவியையிழுத்து எத்துணைத்துயரம்! எத்துணைக்கலவரம்! இவையாவும் முற்பிறப்பின் பாவங்களுக்குரிய தண்டனைகளேயன்றோ? இக்கண்ணராவிகளைக் கடவுள் ஓர்காரணமுமின்றி அமைத்தாரென்பீரா? இதற்குச் சமாதானங்கூறுவதற்கெனினும் முற்பிறப்புக்கள் வேண்டப்படாவா?''—எனச் சைவராதியோர் கூறுவார்களாயின் அதற்கு விடையாவது:

பிணிகளுட் சில அவரவர் சாகசத்தினாலும் துர்நடக்கை முதலியவைகளினாலும் மீதடிக்கொள்ளப்படுமென்பதும், சில, பூதியங்களின்மாற்றம், தாயினிரத்தம் முதலியவைகளால் உண்டாகுமென்பதும் பிரசித்தம். இங்ஙனமாக பிணிகள் அனைத்திற்கும் நாம் முற்கூறிய இடைக்காரணங்களைக்கொண்டே நியாயஞ்சொல்லல் வேண்டுமாதலால், அங்குகூறியவற்றை ஞாபகப்படுத்திக்கொள்க. இடைக்காரணங்களால் உண்டாகின்ற இப்பிணிகள் தாமும் அவரவர் இவ்வொரே பிறப்பிற்செய்த பாவங்களுக்குத் தண்டனையாக, அன்றேல் அவரவர் மோக்ஷத்திற்குரிய புண்ணிய பேறுகளைச் சம்பாதித்துக்கொள்ளுதற்கு ஓர் வாயிலாக முற்றறிவனாகிய கடவுளால் மாற்றி வைக்கப்படும் என சத்தியசமயங் கூறுகின்றது.

அன்றியும் பிணி முதலியவற்றினாலுண்டாகும் இகத்துக்குரிய நன்மைகளையும் நாம் மறந்துபோகவொண்ணாது. உற்றுநோக்கும்போது கேடுபோற் காணப்படுகின்ற பல குறைபாடுகள் நன்மைக்கே வழியாகின்றன. உதாரணமாய், பசித்துன்பம் பெருந்துன்பமே. ஆயின், அப்பசிதோன்றாவிடின் போசனத்தை விரும்போம். போசனத்தை விரும்பாதொழியின் உயிர் பிழைத்திருக்கவறியோம். உயிர்களைக்காக்கும் பெரும் உபகாரி பசியேயாம். நோக்காடு கேடென்றெண்ணுகின்றோம். நோக்காடுதோன்றாதிருப்பின், நினைத்த நினைத்தபடி நமது அவயவங்களைத் தறித்து எறிந்துவிடுவோம். பிறரை அங்கவீனராக்கவும் பின்னிடோம். இவ்வாறே நோக்காடு மனுக்குலத்தைக் காப்பதோர் வலிய அரணாகின்றது. பிணிகள் கொடியனவேயாயினும் அவைகளுக்கு அஞ்சிப் பலர் துன்மார்க்கத்தை விலக்குதலால் அவைகள் நமக்குச் சற்புத்திகூறும் போதகர்களாகின்றன. நோயச்சம் எத்தனை வாலிபரைப் பாவப்படுகுழியினின்றும், அதனால் லபிக்கும் அகாலமரணத்தினின்றும் காத்துவருகின்றது! இவ்வாறே இடைக்காரணங்களின் தொழிற்பாட்டால் வந்துறும் பிணி முதலியன இவ்வுலகத்திலும் நன்மை பயப்பனவாகின்றன. மறுமைப்பாக்கியத்துக்கோ அவைகளே சிறந்த ஏதுக்களாகின்றன. இங்ஙனம் தன்னிற் கேடாயுள்ள ஒன்றை நன்மைக்குச் சாதனமாக்குதல் கடவுளின் [illegible]ரக்கங்களுக்குச் சான்றாகின்றதன்றோ!

ஆதலால் மானுடர்க்கு உண்டாகும் பிணிகளைப்பற்றி நியாயம் உத்தரிப்பதற்கு முற்பிறப்பாதல் மறுபிறப்பாதல் வேண்டப்படாது. "ஆயின்

மூப்பும் ஓர்பிணியேயன்றோ? மூப்பும் சாக்காடும் இடைக்காரணங்களின்றியவழியும் கடவுளால நியதியாக அமைக்கப்பட்டவைகளாய்க் காணப்படுகின்றன அன்றோ! இவைளுரெல்லாம் எவ்வித நோயற்றதிடகாத்திரராயிருப்பினும் முதியோராதல்வேண்டும் என்பதும், பிறந்தோரெல்லாம் எத்துணைக்காலம் சீவித்தும் இறத்தல்வேண்டுமென்பதும் இயற்கை விதியாயிற்றே. இவைகள் மனுடருடைய அவிவேகம், துர்நடக்கை முதலிய இடைக்காரணங்களை நோக்காமலும் முதற்கண்ணேசெய்த நியாயப்புகளே அன்றோ. இனிக்கு ஓர் நியாயஞ்சொல்லினும் மூப்பு சாக்காடுகளுக்கு முற்பிறப்புக் கன்மசேடமின்றி நியாயஞ்சொல்லுதல்கூடுமா?'' எனில், சைவராதியோர் கற்பிக்கின்ற முற்பிறப்புகளும் அவற்றின் கன்மசேடமும் இதற்கு ஒருபோதும் அவசியமில்லை என்பது திண்ணம். ஆயின் மனுமக்களுக்கெல்லாம் ஆதிப்பிதாவான ஆதிமனுடனின் பாபமே மனுடருக்கு மூப்பும் சாக்காடும் அவற்றோடு காரணகாரிய சம்பந்தமாய் வருகின்ற கேடுகளும் உண்டாகக் காரணமாயிற்று என்பது சத்தியவேத போதனை. ஆதிமானுடன் பாபியாய்ப்போய்த் தனக்கும் தன் சந்ததியாருக்கும் சாபத்தை வருவித்துக்கொள்ளாதிருப்பனேல் "உற்றிடுமூலகமாந்தர்க்குறுபிணிமிடியுமில்லை—யிற்றிடும் பருவமல்லாலிடையிலோர் மரணமில்லை—சொறறிடு நரகமில்லை சொல்லிலோர் துன்பமில்லை—யுற்றிடுமாசர்வாதை யந்தகன் பயமுமில்லை'' எனக் "கன்மவிபாக'' நூல்சொல்லியது உண்மையே ஆதிமானுடனின் பாபமொன்றைச் சுட்டி நம் சைவராதியோர் முற்சென்மத்தின் கன்மசேடமே பிணி மூப்பு சாக்காடுகளுக்குக்காரணம் என்பார்களாயின் அது ஒக்கும். அங்ஙனம் ஆதிமானுடனைச் சுட்டுமிடத்து, முன்சென்மமென்பது ஆதாம் ஆகிய எமது பொதுப்பிதாவும், கன்மசேடமென்பது, அவர் தேவகட்டளையை மீறிய பாபத்தினாற் பலித்த சென்மபாபமும் ஆகும். ஆகவே சென்மபாபத்தினால் உலகத்திற் பிணி மூப்பு சாக்காடுகள் உண்டாயின என்னும் உண்மை கூறப்படும்.

இச்சென்ம பாபத்தையே "நெல்லிற்குமியும் நிகழ்செம்பினிற் களிம்பும்'' போலத் தொன்றுதொட்டு (அதாவது: ஆதாம் பாபஞ்செய்தநாட்தொட்டு) ஆன்மாக்களைப்பற்றியிருக்கின்ற மலபந்தம் என ஆகம சித்தாந்திகள் கூறிப்போயினர் எனச் சொல்லலாம் அன்றோ! அப்பால் ஆதாம், பாபஞ்செய்யுமுன் பிணிமூப்பு சாக்காடுடைமை என்னும் விதிக்குட்படாதவராய், பரிசுத்தமும் பாக்கியமுமான நிலையிலிருந்தகாலத்தையே சத்திய யுகம் என்றும் கிரேதயுகமென்றும் நம்தேசத்துப் புராணங்கள் எழுதிவைத்தன என்று கூறுவது சரியாகுமே! கிரேதயுகமே புண்ணியயுகமென்றும்; இந்த யுகத்திலே தேவர் கந்தருவர் தானவர் யக்ஷர் கிந்நரர் நரகர் என்போர் (அதாவது சாதிப்பிரிவு, பாஷைப்பிரிவுகள் இல்லையென்பதா?) யாருமில்லை என்றும்; ஒருவகைப் பிணிமூப்புந் துன்பமும் இல்லையென்றும், மரங்களும் பயிர்வர்க்கங்களும் மனுஷர் கையால் நீரும் எருவும் உழவுஞ் சாய்லுங்கொள்ளாது தாமே பயன்தந்தன (இதனோடு ஏதேனின் விபரங்களை ஒட்டிநோக்குக) என்றும்; பிணியும், மெலிவும், பகையும், பெருமையும், வஞ்சமும், அச்சமும், கொடுமையும், நலிவும், பொறுமையும்

இந்த யுகத்திற்கிடையாதன என்றும்; பரப்பிரமம் யாவர்க்கும சாந்நித்தியமாயிருந்தது என்றும்; எல்லா மாந்தர்க்கும் நெறியும், செயலும், மனமும், கடவுளும், மந்திரமும், வேதமும் ஒன்றேயிருந்ததென்றும் விஷ்ணு புராணங்கூறுகின்றது. சைவாகமக் கொள்கைகளிலேயாதல் வேதாந்தக்கொள்கைகளிலேயாதல் ஆதியில் இப்படிப்பட்டவோர் பரிசுத்தநிலை இருந்திருத்தற்கு இடமுண்டா? இக்கொள்கைகள் ஆன்மாக்களை அநாதியாகவே அஞ்ஞானத்திலும் பிறவிப்பிணியிலும் உழலுகின்றவைகளாய்க் காட்டுகின்றமையால், அவ்வான்மாக்கள் எப்போதாவது கிரேதயுகமென ஒன்றைக்கண்டிருத்தல் கூடாது. ஆகவே ஆதிபிதாவின் பரிசுத்த நிலையையே கிரேதயுகமென நம்தேசத்துப் பழைய நூல்களெல்லாம் கூறுவனவாயின என்பது மலையிலக்கு. அப்பால், கிரேதயுகத்தின் இன்பங்கள் போய்க் கலியுகத்தின் பிணி மூப்பு சாக்காடு ஆதிய துன்பங்கள் உண்டானதற்கு நம்தேசத்து நூல்கள் காரணமொன்றும் சொல்லாதிருக்கையில், சத்தியவேதமே அதற்கு ஆதாமின் பாபந்தான் காரணமாமெனக்காட்டி மெய்யான வரன்முறையை வெளிப்படுத்துகின்றது.

---

## 3. சென்மபாபம்

"மூப்பு சாக்காடு ஆதிய கேடுகள் ஆதாமின் பாபத்தினால் விளைந்தவை என்பீராயின், மேல் ஒரு கேள்வி எழும்புகின்றது. ஆதாம் ஒருவரேசெய்தபாபம் மனுக்குலத்தார் அனைவரையும் எவ்வாறு பற்றுதல்கூடும்? ஒரு ஆன்மா செய்த பாபம் உலகத்திலுள்ள ஆன்மா எல்லாவற்றையும் வந்து மாட்டிக்கொண்டதா? 'தன்வினை தன்னைச்சுடும்' என்ற விதியன்றோ நீதிநூலுக்கொப்ப முடிந்தவிதி? பிறன்வினை தன்னைச்சுடும் என்றிருத்தலுங்கூடுமோ?" என நம்சைவ நண்பர்கள் கேட்போராகலாம் இக்கேள்விக்கும் விடையிறுப்போம்.

### மானுடர் யாவரையும் சென்மபாபம் பற்றுவது நீதியா?

ஆதாம் ஒருவராலேயே உண்டானதாகிய சென்மபாபம் மனுக்குல முழுவதையும் பற்றுவது எப்படி என அறியவேண்டுமாயின், முன்புசென்மபாபமாவதியாது என அறிவது அவசியம். இந்த அறியாமையினாலேயே சைவராதியோர் கிறிஸ்துசமயக்கொள்கையிற் குற்றம் ஆரோபித்துப் பேசுவர். ஆதிப்பிதாவானவர்செய்த பாபந்தானே சைவருடைய கன்மத்தைப்போல அவர் சந்ததியார் அனைவரையும் பற்றுவதா சென்மபாபம் எனப்படுவது? ஒருபோதுமில்லை. ஒருவர்செய்த கன்மம் வேறொருவரைப்பற்றுமென்ற கொள்கை கிறிஸ்துசமயத்திலேயில்லை. "தன்வினை தன்னைச்சுடும்" என்ற தமிழ் வாக்கியத்துக்கொப்பவே சத்தியவேதத்திலும் ஒவ்வொருவனும் தன் சுமையைத்தானே சுமப்பான் எனவும் (கலாத். 6;5) குமாரன் தன் பிதாவின் அக்கிரமத்தைச் சுமப்பவனல்லான் எனவும் (எசேக். 18;20) கூறியிருக்கின்றது. ஆதாமாகிய ஆதிப்பிதாவின்

சன்மபாபம் அவருடையதேயன்றி அவர் சந்ததியாருக்கும் பங்காயுள்ள தொன்றல்ல ஆயின் ஆதாம் ஓர் தனிமனுஷன் மாத்திரமாயல்ல, மனுக்குலத்தின் தலைவராயும் இருந்தமையால், அவர் தமது பாபத்தினால் தேவ துரோகியானபோது இழந்துவிட்ட வரங்கள், அவரது சந்ததியாராலும் இழந்துவிடப்பட்டவைகளாயின என்பதை நம் நண்பர்கள் கவனித்துக் கொள்ளுதல்வேண்டும். இனி, சென்மபாபமென்பது ஆதாம் தனி மனுஷனொன்றளவிலே செய்த பாபமல்ல. அவ் ஆதாம் மனுக்குலத்தின் தலைவரென்றளவிலே இழந்துவிட்ட சில வரங்கள் அவரது சந்ததியாருக்கும் கிடையாமற்போவதேயாம் என அறிக. ஆகையால் அன்றோ சத்தியவேதப்பாலர்கள் படிக்கும் "சின்னக்குறிப்பிடத்"திலே "ஆதித்தாய் தகப்பன் கட்டிக்கொண்ட பாவத்தினாலே சென்மத்தின்வழியாய்ச் சகல மனிதருக்கும் உண்டாகிற தோஷமே சென்மபாவமாம்" என்று சொல்லப்படுகிறது இத்தோஷம் மனுக்குலமானது தனக்கருளப்பட்டிருந்த ஞான வரங்களையிழந்து கடவுளுக்குத் துரோகியானதிலே அடங்கும். இதை மேலும் நன்றாக விளங்கிக்கொள்வதற்கு ஆதாம் ஆதியிலே சிருட்டிக்கப்பட்ட நிலைமை யாது என்பதையும், அவரடைந்த வரங்கள் யாவை என்பதையும், அவ்வரங்களைப்பற்றிக் கடவுள் ஆதாமோடு செய்தருளியிருந்த சங்கேதம் யாது என்பதையும் விபரிப்போம்.

## இஷ்டப்பிரசாதமும் சென்மநீதியும்

கடவுள் மனுஷரைப்படைக்கத் திருவுளத்திற்கொண்டபோது அவர்களை வெவ்வேறு தனிச்சிருட்டிகளாயல்ல ஒரேகுலமாகவும், ஒருவரிலிருந்தொருவராய்ப் பிறந்துவருகிறவர்களாகவும் சிருட்டிக்கச் சங்கற்பித்தருளினரென்பது மெய்ச்சமயபோதனை. இனி, தம்மாற் படைக்கப்பட்ட புத்தியுள்ள சிருட்டிக்குலமானது எவ்வளவு மேன்மையுள்ளதாயிருப்பினும், தனது சுபாவநிலையிலே தம்மை "முகமுகமாய்த்" தரிசித்து மகிழுதலாகிய பேரின்பத்தையடையப் பாத்திரமுள்ளதல்ல என்றபடியினால், அந்தப் பேரின்ப தரிசனத்தை அடைய அம்மனுக்குலத்தாரைத் தக்கவர்களாக்கும்பொருட்டு "இஷ்டப்பிரசாதம்" எனும் ஓர் பரம வரத்தையும் அருளச்சித்தமானார். இங்ஙனமே ஆதாமைச் சிருட்டித்த க்ஷணத்திலேயே அவரது ஆத்துமத்தில் இஷ்டப்பிரசாதம் எனும் இவ்வரம் அருளப்பட்டிருந்தமையால் ஆதாம் பரிசுத்தராய், அதாவது தேவ பிரத்தியக்ஷதரிசனத்துக்கு உரிமையுள்ளவராய் உண்டாக்கப்பட்டவரானார். ஆயின் இவ்வரமோ உம்பிளிக்கைமேரையாய் உடன்கூட்டிக்கொடுக்கப்பட்டதொன்றேயன்றி, மனுஷசுபாவத்துக்கு எவ்விதத்திலேனும் உரிமையாயுள்ளதுமல்ல, அச்சுபாவத்தின்மேல் சேர்ந்ததுமல்ல. ஆதிமனுஷனின் ஆன்மா உண்டாக்கப்பட்ட க்ஷணத்திலேயே இந்த வரமும் அருளப்பட்டிருந்தமையால், ஆன்மாவுக்கு இது சகசமானது என ஒருவிதத்தில் சொல்லப்படலாமெனினும், உள்ளபடி இது ஆன்மாவின் சுரூபத்தினுள்ளடங்கிய ஒரு குணமல்ல. ஆகந்துகமாய் ஆதியிலே அருளப்பட்ட ஒருவரமேயாம் எனக்கொள்க. மனுக்குலத்துக்கென ஆதாமுக்கு அருளப்பட்ட இஷ்டப்பிரசாத வரத்தோடு "சென்மநீதி" எனும் வேறோர் வரமும் அருளப்

பட்டது. இச்சென்மநீதியினால், ஆதாமின் சரீரமும் அதன் சகல தத்து வங்களும் அவரது ஆன்மாவின் சங்கற்பத்திற்கு முழுதும் கீழ்ப்படிவன வாயும், புத்திதெளிவுள்ளதாயும் மனம் துரிச்சைகளற்றதாயும் இருந்தது. சென்மநீதியானது சாகாவரத்தையும் தன்னுள் அடக்கியதாய் விளங்கி யது. ஆகவே, சாவின்முன்னோடிகளாகிய பிணி ஆதியவைகளும் இல்லா திருந்தன. கடவுள் தமது உலக சிருட்டிகளுட் தலைமைபெற்ற சிருட் டியாகிய ஆதாமுக்கு இவ்வரங்களை அருளியபோது ஆதாமைத்தலையாகக் கொண்ட மனுக்குல முழுவதற்குமே இவைகளை உம்பிளிக்கையாக்கி, தலையாகிய ஆதாம் தமது கற்பனையைக் கடவாது ஒழுகுவாராயின், அவ ரது சநததி தலைமுறை தலைமுறையாக இவ்வரங்களைச் சுகித்து அனுப விப்பதாகும் என்ற சங்கேதத்தையும் செய்தருளினார். இவ்வாறாக மனுக் குலம் பரிசுத்தமும் பாக்கியமுமான ஒருநிலைமையிலே பரீட்சைக்குவிடப் பட்டதாயிற்று. ஆதாம் எனும் எமது பிதா பிரபுத்துவ மகிமைக்கு உயர்த் திவைக்கப்பட்ட ஒரு குடியானவனைப்போலானார். அவர் அரசசேவை யிலே பிரமாணிக்கராய் இருந்திருப்பாரேல், நாமெல்லாம் பிரபுக்களாய் பரிசுத்தமும் பாக்கியமுமுள்ளோராய் வாழ்ந்து நம்மனோர் நடபடியாய்ச் சொல்லுகின்றபடி "பச்சைக்கூட்டோடே" பரலோக பிராப்தர்களாகித் தேவபிரத்தியட்ச தரிசனத்தை அடைவோராவோம். ஆதாமோ தேவ கட்டளையைமீறிச் சங்கேதந் தவறியவரானார். ஆகவே, அவர் தமக்கும் எமக்குமென அளிக்கப்பட்டிருந்த இஷ்டப்பிரசாதம் சென்மநீதி எனும் வரங்களைத் தமக்கும் எமக்குமே இழந்தவரானார். ஆதாமுடைய பாபம் அவருடையதே. ஆயின், அவர் சங்கேதத்தின்படி இழந்துபோன பிரபுத் துவத்துக்கான நிலைமை அவர் பிள்ளைகளுக்கும் இனி இல்லாததாயிற்று. அரசதுரோகியாய்ப்போன பிரபு ஒருவன் அரண்மனையினின்றுந் துரத் தப்பட்டபோது அவன் சந்ததியாரும் அரண்மனைக்குப் புறம்பானவர்க ளாகி இராசதுரோகிகள் எனும் வகைக்குள்ளாகின்ற பான்மையாய், கட வுட் துரோகியாகிய ஆதாம் தமது உன்னத பதவியினின்றும் தாழ்த்தப்ப டவே, அவர் சந்ததியார் அனைவருமே அவ்வண்ணம் தாழ்த்தப்பட்டோ ராகி, தேவமுனிவின் புத்திரர் (எபே 2;3) ஆனார்கள். இவ்விதந் தாழ்த் தப்பட்டதாகிய நிலைமையே சென்மபாபமாதலால், மனுக்குலம் அதற் குள்ளாயிருத்தலில் இழுக்கு யாதும் இல்லை என்க.

அப்பால், பரிசுத்தமும் பாக்கியமுமானதோர் நிலைமையில் பரீட்சைக்கு விடப்பட்டவர்களாகிய மனுக்குலத்தார் தங்கள் தலைபானது கட்டிக் கொண்ட சுவாமித் துரோகத்தின் நிமித்தம் இனி இஷ்டப்பிரசாதத்தை மீட்பரின் பிராயச்சித்தத்தின்பேரால் தனித்தனியே அடையவேண்டிய வர்களும், ஆசாபாசங்களோடு யுத்தஞ்செய்து நோய் முதலியவைகளுக் குள்ளாகி துன்பதுரிதங்களின் நடுவே பரீட்சைகொடுக்க வேண்டியவர் களுமானார்கள். ஆதியில் அருளப்பட்ட சென்மநீதி மாமிச உத்தானத்தின் கண்ணே மீட்டும் மனுக்குலத்துக்கு அருளப்படுவதையும் கவனிக்குக. ஆதாமின் பாபமாகிய இடைக்காரணத்தினால் மனுக்குலத்தின் நிலைமை மாறிற்றேயன்றிக் கடவுளது திருச்சங்கற்பம் மாறிற்றன்று. பரீட்சையின்

தன்மைவேறுயிற்றேயன்றிப் பரீட்சைதான் மாறியதில்லை. அப்போது பாக்கியமான நிலைமையிற் செய்யப்பட்ட பரீட்சை இப்போது துன்ப துரிதங்கள் பொருந்திய நிலைமையிற் செய்யப்படும். ஒருமனுஷனின் பிரமாணிக்கத்தைத் துன்பத்தினுல் சோதித்தறிவது எப்படியோ இன்பத்தினுலும் சோதித்தறியலாமென்பது நாமெல்லாம் அனுபவத்திற்கண்ட விஷயமல்லவா? ஆதாமின் பாபத்தின் நிமித்தம் கடவுளின் நீதி தயை இரக்கம் முதலிய அநந்த இலட்சணங்கள் அதிகமாய்ப் பிரகாசித்தனவே யன்றி அவருக்கு எவ்விதபங்கமும் உண்டாகவில்லையென்பதை நுண்ணுணர்வாற் கண்டுகொள்க.

---

## 4. பதிற் பிராயச்சித்தம்

"ஒவ்வொருவனும் தன் சுமையைத்தானே சுமப்பன்" என்ற வாக்கியத்துக்கொப்ப, அவரவர்செய்த பாபத்துக்கு அவரவரேயன்றே பாடுபட்டுத்தீரவேண்டும்! அப்படியாயின், கிறீஸ்துநாதர்பட்ட பாடுகளினுல் மனுக்குலத்தாரின் பாபத்துக்குப் பிராயச்சித்தம் உண்டுபடுவதெப்படி? மறுபிறப்புக்கொள்கையின்படி உயிர்கள் அச்சுமாறிப் பிறக்கும்போது ஆட்தன்மை வேறுபடுவதினுல் ஒருவனுடைய கன்மத்தை வேறொருவன் சுமத்தலாகிய அநியாயம் சம்பவிக்கின்றது என நியாயங்காட்டிய * நீர்தாமே, இப்போது மனுக்குலத்தாருடைய பாபத்தைக் கிறீஸ்துநாதர் சுமந்துதீர்த்தார் எனச் சொல்லுதல் பொருந்துமா? தனக்கொரு நியாயம் பிறர்க்கொரு நியாயமா?" என சைவர் அப்பாலுஞ் சொல்லுவர்.

ஆதாமின் பாபத்தினுல் மனுஷர் அனைவரும் தேவதுரோகிகளானது எப்படியென நாம் முன் விபரித்ததை விளங்கிக்கொண்டால், சேகமீட்பரின் பிராயச்சித்தப்பலியினுல் மனுக்குலம் தேவதயவுக்குப் பாத்திரமானமை எவ்வாறெனவும் தெளிவாய் விளங்கும். ஆதாம் மனுக்குலத்துக்குத் தலையாயிருந்தபடியால், அவர் தமது சந்ததிமுழுதுக்கும் பொறுப்பாளியாய் நின்றுகொண்டு இயற்றிய வினை மனுக்குலம் முழுவதையும் சார்ந்து சகலரையும் பரகதியடையும் உரிமையைப் போக்கடிக்கச்செய்தது. இப்படியே கிறீஸ்துநாதரும் ஓர் புதுச்சந்ததிக்குத் தலையான புதிய ஆதாமாக எழுந்தருளி முந்திய ஆதாமினுல் கடவுளுக்குச்செய்யப்பட்ட பழியைப் பரிகரித்துத் தமது சந்ததியார் மோட்ச உரிமையைமீண்டு அடையப்பண்ணினுர். புதிய ஆதாமாகிய கிறீஸ்துநாதரின் சந்ததி மாமிசத்துக்குரிய பிறப்பினுல் உண்டாவதல்ல, அவரை விசுவசித்து அவர் திருக்கற்பனைகளை ஏற்று நடப்பதினுல் உண்டாவது. ஆதலால் ஈடேற விரும்பும் மனுஷரெல்லாம் கிறீஸ்துநாதரே தேவசுபாவத்துக்கு அப்பாபத்தினுற் செய்யப்பட்ட பழியை நீக்க எழுந்தருளிய மீட்பரென்றும் சற்குருவென்றும் ஏற்றுக்கொண்டு அவருடைய கட்டளைப்படி ஞானஸ்

* மறுபிறப்பு ஆட்சேபம் 17-ம் பக்கங்காண்க.

ஞானம்பெறுதல் அவசியம். இந்தத் திருத்தீட்சையைப் பெறுதலும் கிறிஸ்துநாதருடைய வேதப்பிரமாணத்தை ஏற்றுக்கொள்ளுதலும் அவரவர் தாம் தாம் செய்யும் முயற்சியேயாக இருத்தலையும், அம்முயற்சிக்குப் பயனாகவே அவரவர் ஈடேறுவாரன்றித் தாமொன்றுஞ்செய்யாதிருந்து பிறரொருவர்செய்த வினைப்பயனால் ஈடேறுவாரல்லவென்பதையும் கண்டுகொள்க. மானுடச்சட்டைசாத்திவந்த நரதேவனாகிய கிறிஸ்துநாதர் நாம் கடவுளோடு உறவாகி மோட்ச உரிமையை அடையும் வழியைத் திறந்துவிட்டார். அவ்வழியில் நாமே நடந்து நம்முடைய முயற்சியையும் அவருடைய அன்பின்முயற்சியோடுசேர்த்துத்தான் ஈடேறலாமன்றி அவருடைய திருமுயற்சிகளால்மாத்திரம் நாமீடேறமாட்டோம். நமக்காக அவரடைந்த சுதந்தரங்களை நாம்பெற்றுக்கொள்வதற்கு நமது உடன்முயற்சி இன்றியமையாதது. ஆதலால் கிறிஸ்துநாதருடைய பதிற்பிராயச்சித்தம் மறுபிறப்பாளர் கூறும் அநீதியும் கொடுமையுமான முறைபோலாகாது முழுதும் நீதியும் இரக்கமும் நிறைந்த ஓர்முறையாகின்றது. மறுபிறப்பிலே ஒருவன் நல்வினைசெய்துவிட்டு இறந்துபோக, அவனோடு அறிவளவிலே எட்டுணையும் தொடர்பில்லாத வேறொரு ஆள் வந்து அவன்செய்த நல்வினையின் பயனைத் தன்முயற்சியொன்றுமில்லாமலே நுகருவதாகின்றது. கிறிஸ்துநாதருடைய பதிற்பிராயச்சித்தத்திலோ, நாமெல்லாம் மோட்ச உரிமையையிழந்து தேவதுரோகிகளாய்ப் போய் நாமாகத் தேவசமுகத்துக்குப் பிராயச்சித்தஞ்செய்ய ஆற்றாதோராயிருக்க, கடவுள்தாமே மானுடவேடம் தாங்கிவந்து நம்மால் தேவமகத்துவத்துக்கு இகழ்த்தப்பட்ட அவமானத்தைப்பரிகரித்து, நாம் இனித் தமது கற்பனைகளின்படி நடந்து ஈடேறி உய்யும் வழியைத்திறந்துவிட்டனர் என்றாகின்றது. இதிலே கடவுளுடைய கோணுநீதிக்குச் சிறந்த பிராயச்சித்தஞ்செலுத்துதலும், மனுஷனுடைய இயலாமைக்கிரங்கித் தயைபண்ணுதலும் பிரகாசிக்கின்றனவன்றி அநீதி கொடுமை என்னும் முறைகேடுகளின் நிழலேனும் காணப்படாது. மறுபிறப்புக்கொள்கைபோல் இது வைத்துக்கோடல் மாத்திரமான ஓர்கொள்கையுமன்று. கடவுள் மானுடச்சட்டை சாத்திவந்தாரென்பதும் அவர் மனுஷருக்காகப் பிராயச்சித்தப்பலியாக மரித்துயிர்த்தெழுந்தருளி ஈடேற விரும்பும் அனைவருக்கும் தமது கற்பனைகளின் சேர்க்கையாகிய ஓர் திருவேதத்தைக் கொடுத்தருளினரென்பதும் சரித்திரசம்பந்தமான உண்மை நிகழ்ச்சிகளாம். மறுபிறப்பு சிலகல்விமான்களால் கற்பிக்கப்பட்ட ஓர் பொய்க்கொள்கையாகக்கிடக்கின்றது என மறுபிறப்பு ஆட்சேபநூலிற் தெளிவித்தோம். கிறிஸ்துநாதரின் பதிற்பிராயச்சித்தமோ உலகம் முழுதும் விசுவசித்தேற்றுக்கொள்ளும் ஓர்மெய்ச்சம்பவமாய் விளங்குகின்றது.

---

## 5. மரணபயம் முதலியன

"மறுபிறப்பை முற்றாய் அழித்துப்பேசி அது சில கல்விமான்களாற் கற்பிக்கப்பட்ட பொய்க்கொள்கையாமென முடித்துவிடில், பிள்ளைகள் சுபாவமாகவே மரண பயத்துடன் பிறக்கின்றார்களே. அவர்கள் மரணத்தின் வேதனையை முன்னறியாதவர்களாயிருந்தால் அவர்களில் இப்பயம் உண்டுபடுவதெப்படி? இதனால் அவர்கள் முன்னும் பல பிறவிகளிற் சீவித்திருந்தார்களென்பது புலப்படுகின்றதன்றோ" என "புனர் ஜெனன உண்மை" எனும் நூலாக்கியோனோடு சிலர்கேட்பதுண்டு இதற்கு விடைசொல்வது மிக எளிது. சிசுக்கள் மரணத்தின் வேதனையை முன்னறியாதவர்களாயிருந்தால் அவர்களில் பயம் உண்டுபடமாட்டாது என்கின்றார்கள். முன் அறிந்திராத மரணபயம் பின் ஒருபோதும் பிள்ளைகளில் உண்டுபட்டிருக்கக்கூடாது என்றால், முதற்பிறவியில் மரண பயம் இருந்ததா? அன்றா? முதற்பிறவியில் மரணபயமிருந்ததென்றால் அது எப்படிவந்தது? முதற்பிறவிக்கு முன்னேயும் ஒருபிறவியுண்டா? முதற்பிறவியென்றால் முதற்பிறவிதானன்றோ? அதற்குமுன்னும் வேறு பிறவியிருந்தால் அது முதற்பிறவியாகுமா? ஆகாது. ஆதலால், மரண வேதனையை முன்னறியாமற்றான் ஆக முதற்பிறவியிலே மரணபயம் வந்திருத்தல் வேண்டும். அப்படியல்ல, ஆதிப்பிறவியில் மரணபயமிருந்ததில்லையெனில் அது பின்பு வந்ததெப்படி? பிந்தின பிறவியில் அது தானாக வரக்கூடுமாயின் முந்தின பிறவியிலும் தானாகவரக்கூடுமே. ஆகையால் பிள்ளைகளில் மரணபயம் இருக்கின்றமையைக்கொண்டு அவைகள் முன்பிறந்திருத்தல்வேண்டும் என்பது அறியாதார் கூற்று என ஒதுக்குக.

அப்பால், ஜீவசெந்துக்களில் இயற்கையாயமைந்து காணப்படும் சில விநோத செய்திகளைநோக்கி "புனர் ஜெனன உண்மை" நூற்காரர் பின்வருமாறு நியாயம் பேசினர்: "குரங்கு, காண்டாமிருகம் முதலியவற்றின் குட்டிகளின் ஆச்சரியப்படத்தக்க இயற்கையறிவு, அவை முன்னிருந்தனவென ஒத்துக்கொள்வதால் மாத்திரம் நிரூபிக்கப்படக்கூடியதாக இருக்கின்றது. உதாரணமாக: ஒரு குரங்குக்குட்டியை எடுத்துக்கொள்வோம். அக்குட்டி கர்ப்பத்திலிருந்து முழுதும் வெளிவரமுன்னே முதல் தனது கைகளைநீட்டி உறுதியாய் மரத்தின் கிளையைப்பற்றுகின்றது. அப்பொழுது தாய்க்குரங்கு புதிதாய் வெளிப்பட்ட குட்டியைக் கொம்பில் தொங்கவிட்டு எதிர்ப்பக்கத்திலுள்ள கிளைக்குப் பாய்கின்றது. காண்டாமிருககுட்டி பிறந்தவுடனே தாயின் கூரிய மூளையால் தான் கிழித்தெறியப்படாது தப்பித்துக்கொள்ளற்பொருட்டு தாயைவிட்டு ஓடிப் போகின்றது. அதன் தாய் அந்தவேளையில் தெய்வச்செயலால் கண்கள் மறைக்கப்பட்டதாய் குட்டியின் பின்னோடவியலாது நிற்கின்றது. தாயின் சீராட்டைக் தாங்கக்கூடியதாய் தோலுரமுள்ளதாய் ஐந்து அல்லது எழுநாட்களில்வந்து பின் தாயும் குட்டியும் ஒன்றாய்ச்சேர்கின்றன" ஆதலால், இவை முன்பிறவிகளில் இவ்வாறுசெய்து பழகியிருத்தலுக்கு இதுவோர் அத்தாட்சியாமென்கின்றார். குரங்குக்குட்டி முன்பிறந்

தறியாவிடில் இப்போது சூழ்ச்சமாய் வெளிப்படாதெனில், முந்திய பிறவியிற் பிறப்பதற்கு அதன்முன்னர் பிறந்தறிந்திருத்தல் வேண்டும். இவ்வாறே சொல்லிக்கொண்டு போவோமாயின், ஆதிப்பிறவியிலே குரங்குக்குட்டி முன்பிறந்துபழகாமலே பிறந்திருந்தது எனத்துணிதல் அவசியமாகும். ஆதிப்பிறவியிலே பழகாமல் இயற்கையாகவே சூழ்ச்சமாய்ப் பிறந்த குரங்கு இப்போதும் இயற்கையாகவே பிறக்கக்கூடுமாதலால் முற்பிறவி வேண்டப்படாது. காண்டாமிருகத்தைப்பற்றியும் இப்படியே சொல்லிக்கொள்ளுக. மிருகங்களில் இதிலும் விநோதமான செய்திகள் இயற்கையறிவாயமைந்திருக்கின்றன. அவைகளை மிருகங்கள முன்பிறவிகளிலே பழகியிருந்தன என்பதல்ல, இயற்கையாய் அக்குணம் ஈசுவரனால் அவைகளில் அமைக்கப்பட்டுள்ளதென்பதே யுத்திக்கொத்த துணிபு.

## ஆச்சரிய புத்திவிவேகம்

"“புனர் ஜெனன உண்மை” ஆக்கியோனுடைய வேறொரு நியாயத்தைப் பின்வருமாறு சுருக்கி எழுதலாம். “புனர்ஜெனனக் கோட்பாடு மாத்திரம் குழந்தைப்பருவத்தில் செய்யப்பட்ட அளவுக்குமிஞ்சிய வல்லமைகளையும் விவேகங்களையும் குறித்து அநேக சம்பவங்களைத் திருப்தியாயும் நியாயமாயும் விளக்கப்படுத்தக்கூடியதாக விருக்கின்றது...... பஸ்கால் என்பவர் தமது பன்னிரண்டாவது வயதிலே க்ஷேத்திரகணிதத்தில் அதிகப்பற்றுனவையைத் தானே கண்டுபிடித்தலில் சித்தியடைதற்கு நியாயமென்ன? மாங்கிய மலோ என்னும் நாமத்தையுடைய ஆட்டிடையர் எப்படி ஐந்தாம் வயதிலே கணிதயந்திரம்போலக் கணக்குகளைச் செய்தார்? ஸெராக்கோல் போர்ண என்பவர் எட்டுவயதாகமுன்னர் மிகப்பெரிய கணக்குகளை ஒருவிரல்தானும் மடியாது எப்படி உடனேயே கணக்கிட்டுச் சொல்லக்கூடியவராகவிருந்தார்? இப்பொழுது இருக்கும் ஆறுமுகம் என்னும் பையன் அவ்விதமேசெய்துவருகிறான். பெரிய சங்கீதவித்துவானாகும் மொசார்ட் என்பவர் தமது நான்காம் வயதிலே சொனெத்தா என்னும் பாடும் கருவியைச்செய்தார். தமது எட்டாம் வயதிலே நாடகமொன்றை எழுதினர். கிரேசியா மினெனெல்லா என்னும் பெண் சிறுபிராயத்தில் பியன்னே வாத்தியத்தை மிகச் சாதுரிய சாமர்த்தியமாய் வாசித்தபொழுது கேட்டிருந்த அநேகர் அப்பெண் பிறக்கமுன் அந்த வாத்தியத்தில் பழகியவளாயிருக்கவேண்டுமென்று சொன்னர்கள். திருநெல்வேலி ஜில்லாவில் பிறந்த 16 வயதுள்ள இந்து ஒருவன்...கணிதசாஸ்திரிகள் எத்தகைய கணக்குகளைக் கேட்டாலும்... 2-3 நிமிஷத்திற் சொல்லிவிடுகிறான்...இவனது இத்தகைய கணிதசாஸ்திரத்திறமைக்கேது இவனுக்கு இப்பிறப்பில் காணப்படாமையால் இவன் முன்ஜென்மங்களில் கணிதசாஸ்திரங்களில் திறமையுள்ளவனாகவிருக்கவேணுமென்பது துணியப்படும்...அமெரிக்காவில் பன்னிரண்டு வயதுடைய ஒருசிறுமி சுதந்திரமாயோர் பத்திரிகை நடத்துகின்றனள்...

கான் ஸ்டோனர் என்பவரினது எட்டுவயதுள்ள புத்திரியாகும் மிஸ்.
வினிபர்ட் சர்வல் ஸ்டோனர் என்பவள் இங்கிலீஷ், பிரான்ஸ், ஸ்பா
னிஷ் லத்தீன், ஜப்பான், ருஷியன், ஜர்மன், பாலிஷ் எஸ்பரன்ட்ஸ்,
இத்தாலியன் என்னும் பத்துப்பாஷைகளை மிகத் தீர்க்கமாய்ப் பேசுகின்
றாள். இச்சொற்ப வயதுள்ள இவளுக்கு இப்பாஷைகளைப்பேசும் வல்
லமை எவ்விதமுண்டாயது? முற்பிறப்பில் இப்பாஷைகளில் பழகியவ
ளாயிருந்தமையாலல்லவா இப்பிறப்பில் இவ்வளவு சீக்கிரத்தில் அவளுக்
கு இப்பாஷைகளைப்பேச வல்லமையுண்டாயது.'' என்கின்றனர்.

ஆக்கியோன் எடுத்துச்சொல்லிய இவர்கள் பாலப்பிராயத்திலே அதி
சயமான புத்தி விவேகத்தைக்காட்டியுள்ளோராகையால் இவர்களுக்கு
முற்பிறப்புக்கள் இருந்தன என்னவேண்டுமா? வேண்டுமாயின், பாலப்
பிராயத்தில் அப்படிப்பட்ட அதிசயவிவேகத்தைக் காண்பியாது படிப்
படியாய்ப் படித்தறிந்துகொண்டுவருகின்ற இலட்சக்கணக்கான மனுஷ
ருக்கு முற்பிறப்பிருந்ததில்லை என்றும் சொல்லல் வேண்டுமன்றோ? முற்
பிறப்பு உண்டெனில், சகல மனுஷரும் பிறக்கும்போதே அதிசயமான
விவேகமுள்ளோராயிருத்தல்வேண்டும். சில மனுஷர்மாத்திரம் அப்படிப்
பட்ட விவேகத்தைக்காண்பிக்கவாராது ஏனெனில், சகல ஆன்மாக்க
ளுமே நித்தியமாகப் பிறந்துவருகின்றன என்பது மறுபிறப்பாளரது
கொள்கை. பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் நித்தியகாலமாய்ச் சேக
ரித்த அறிவுகளோடே பிறக்குமெனில், ஒவ்வொரு குழந்தையும் ஆக்கி
யோன் எடுத்துக்காட்டிய அதிசய கெட்டித்தனங்களைப்போல இலட்
சாதிலட்சமடங்கு கெட்டித்தனமுள்ளதாக வேண்டும். எழுட்டுவயதில்
மாத்திரம் கணக்குச்செய்தல்போதாது, சங்கீத வித்துவானாதல்போதா
து. பிறக்கும்போதே கணக்குகளுஞ்செய்துகொண்டு, நாடகங்களும்
இயற்றிக்கொண்டு, வரிவில்லாத பாஷைகளும் பேசிக்கொண்டு பிறத்
தல்வேண்டும் இப்படி ஒருகுழந்தை இருகுழந்தையல்ல, எல்லாக்குழந்
தைகளும் செய்தல்வேண்டும். ஏனெனில், எல்லாக் குழந்தைகளும் நித்
தியமாய்ப் பிறந்திறந்துகொண்டுவந்தவைகள் என்பது சித்தாந்தம். அவை
கள் சீவித்த சீவியங்களுக்கும் படித்த படிப்புக்களுக்கும் ஒருகணக்கில்
லை, ஒரு தொடக்கமில்லை. ஆகையால் இவ்வாறான விபரீத முடிபுகளைப்
பிறப்பிக்கின்றதாகிய இந்நியாயம் ஒருபோலி நியாயமாமென்பது வெளி
ப்படை.

அப்பால், நமக்கு இப்போது கிடைத்திருக்கின்ற இந்திரியங்களின்
தன்மையானது பூர்வஜெனனங்களில் நடந்தவைகளைமட்டுமல்ல, நம்
மைப்பற்றிய அறிவையும் மறைத்துப்போடுகின்றது (7-ம் பக்.) எனவும்,
கெற்பத்திலிருந்து சிசு வெளிப்பட்டு இவ்வுலகத்துக்குவரும்பொழுது
அடைந்த கஷ்டம்மாத்திரம் அதற்கு முற்பிறவியில் நடந்த சம்பவங்கள்
யாவையும் மறக்கச்செய்யப்போதியதாயிருக்கும் (30-ம் பக்.) எனவும்,
நாம் நமது முற்பிறவியையும் முற்பிறவியிற்செய்த செய்கைகளையும் நினை
வுகூராதிருப்பது பெரியஆசீர்வாதமென நினைத்தல்வேண்டும் (31-ம்பக்)

என்வும் இவ்வாக்கியோனே எழுதுகின்றார் இப்படியாயின், முற்பிற வியில் அடைந்த ஒரு அறிவும் பிற்பிறவியில் காணப்படாமலிருப்பதன் றோ இயல்பாகும்? முந்தியிருந்த தான்தானே இப்போதிருக்கிற தான் என்ற அறிவுதானும் இல்லாத ஒருவனுக்கு, தான் படித்திருந்த கணக்கு, சங்கீதவித்தை, க்ஷேத்திரகணிதம் ஆதியவைகள் நினைப்பாயிருப்பதெப் படி? கடிதடநெருக்கத்தினால் தன்னைத் தானென்றும் மறந்துபோன வன் கணக்குச்செய்வதைமாத்திரம் நினைத்துக்கொள்ளுவானா? இது பதா நியாயம் என்பது வெளிப்படை. மறுபிறப்பாளர் ஒன்றில் பிற விகளினூடாய் அறிவுமறையாமல் அதிகரித்து அதிகரித்துக்கொண்டு வருகின்றது எனச் சொல்லல்வேண்டும். அல்லது முந்தியபிறவியின் அறிவு பிந்திய பிறவிக்குச் செல்லாமல் ஒவ்வொரு பிறவியும் ஒன்றோ டொன்று தொடர்பில்லாததாய், ஒவ்வொரு பிறவியின் புத்திதத்துவமும் வெறுமனேயிருப்பதாய் உள்ளதென்று சொல்லல்வேண்டும். பிறவிகளி னூடு அறிவுமறையாமல் அதிகரித்துவருகின்றதாயின், முன்சொல்லிய துபோல ஒவ்வொரு மனுஷனும் பிறக்கும்போதே இனிமேலில்லையென் ற புத்திதீட்சணியமெல்லாம் நிறையக்கொண்ட மகா மகா மகா வித்து வானாயிருப்பான். அப்படியல்ல அறிவு ஒரு பிறவியினின்று பிறிதொன் றுக்குச் செல்லாமல் அந்தப் பிறவியில் அப்படியே அஸ்தமனமாகிவிடு கின்றதெனில், ஆச்சரிய விவேகமுள்ளபிள்ளைகள் முன்பிறவியின் வி சேஷத்தைக்கொண்டல்ல வேறேதோ காரணத்தினாலேதான் முதிராப் பருவ அறிவைக்காட்டுகின்றார்களெனத் துணிதல்வேண்டும். இருபுறத் தாலும் மறுபிறப்புக்குக் கொழுகொம்பில்லாமற்போகிறது.

## முதிராப் பிராய அறிவு

அப்படியாயின், சிலபிள்ளைகள் சிறு வயதில் ஆச்சரியமான புத்திவி வேகங் காண்பித்தற்குக் காரணம் யாது? இதற்குக் காரணம் ஆன்மா வாகிய சித்துப்பொருளில் அடங்கியுள்ள அபாரமான வல்லமைகளே யாம். ஆன்மாவின் வல்லமைகள் சரியாய் விளக்கம்பெறும்போது நாம் கண்டிருக்கிற முதிராப்பிராய அதிசயங்களைப்போல இன்னும் எத்தனை யோ அதிசய தீட்சணியங்களைக்காணலாம். சிலபிள்ளைகளுக்கு ஆறுவிரல், வரிசைநிரம்பின பல் முதலிய அபூருவமான அங்கங்கள் உண்டுபடுகின்ற மை எப்படியோ, அப்படியே வேறுசில பிள்ளைகளுக்கு அபூர்வமான அறி வும் காணப்படுவதாம். சரீரத்தைப்பொறுத்த அதிசயங்கள் மனுஷருள் மட்டுமல்ல, மிருகங்கள் தாவரங்களுள்ளுமுண்டு. சிலதென்னைகள் கவர் விடுகின்றன. சில வாழைப்பூக்கள் நாலு ஐந்து சிறுச்சிறுப் பொத்தியுள்ள வைகளாகின்றன. சில பாமபுகள் இரண்டு தலையுள்ளனவாகின்றன. விப ரீதமான தோற்றமுள்ள சில மிருகங்கள் ஈனப்படுகின்றன. இவற்றிற் குக்காரணம முற்பிறவிகளிலே ஒருவிரலை, தலையை, கொப்பை, பொத் தியைக் கூடக்கூடப் பெற்றுக்கொண்டுவந்தமையன்று, இயற்கையிலே யுண்டாகும் அபூருவதாறுமாறேயாம் இத்தாறுமாறு முழுவதும் இயற் கைக்காரணங்களாலேயே உண்டாகின்றது. இவ்வாறே, சிலபிள்ளைக

ளுடைய சரீரநிலைக்குத்தக்கபடி, ஆன்மாவில் மறைவாய் அடங்கியுள்ள ஒவ்வோர் வல்லமை திடீரென்று விளக்கம்பெறுவதுமுண்டு. சிலவிடங்களில் நொய்மையாய் மேலேகிடந்த தரை ஒருசிறு அதிர்ச்சியினாற் பின்டு வீழ்ந்து, கீழே தடாகமாய்க்கிடந்த ஒரு நீர்நிலையத்தை வெளியாக்கிவிடுவதுபோல, சில சந்தர்ப்பங்களில் ஒரு விசேஷ தூண்டுகோலினால் சில பிள்ளைகளின் புத்திதத்துவம் அருண்டு விசேஷ வல்லமைகளைக்காட்டும.

அபூர்வமான அறிவுள்ள இப்பிள்ளைகளிற் கவனிக்கத்தக்கதொன்றுண்டு. இவர்களுக்கு ஒருவிஷயத்திலே விசேஷ தீட்சணியமிருக்கின்றமைக்குச்சரியாய் மறுவிஷயங்களிலே அயர்வும் மூடத்தன்மையுமிருக்கும். இதை ஆறுமுகம் எனும் "கணித ஆச்சரிய" ப் பையனில் காணலாம். இவனை 1912-ம் ஆண்டு கொளும்பிலேயுள்ள "இராசாங்க ஆசியசங்கத்தார்" பரிசோதித்தனர். இவன் நெடுக ஒரு மூடப்பையனாயிருந்தவன். ஒருநாள் சிலகடைக்காரர் கடையில் கணக்குக்கூட்டிக்கொண்டிருக்கும்போது பிழைவிட்டும் நெடுநேரம் செலவிட்டும் கூட்டுவதைக்கண்ட ஆறுமுகம் என்பவன் திடீரெனச் சரியான கூட்டற்தொகையை அவர்களுக்குச் சொல்லுவானாயினன். அன்றுதொடங்கி மிக அருமையான கணிதங்களை ஒருநொடியில்செய்யும் சக்தி அவனுக்குண்டாகிவிட்டது. ஆயின் அவனை வெகுநேரம் பரிசோதித்தவரான சேர் அருணைசலந்துரை சொல்லியபடி அவன் கணிதத்தையொழிந்த பிறவிஷயங்களிலே பேயன்போலக்காணப்படுகின்றான். தன்னைப்பார்த்துக்கொள்ளவாவது தானுழைக்கும் காசைப்பேணிக்கொள்ளவாவது ஆடவனைப்போல நடமாடவாவது அவனுக்குத்தெரியாது. அவன் தாய், அவனை ஒரு பாலனைப்போற் கூட்டிக்கொண்டு திரிகின்றாள் 16 வயதுள்ளவனாயிருந்தும் சிறுவயதுப்பிள்ளைகளோடு 'மார்பிள்" விளையாடுவதே அவனுக்கானந்தம். உனக்கு இந்தவல்லமை எப்படிக்கிடைத்தது எனக் கேட்குந்தோறும் ஆறுமுகசாமி தனக்குக்காணப்பட்டு இந்தவரத்தைக்கொடுத்தாரென்கின்றான். (முற்பிறவியலுவல் இதிலே சற்றேனும் வராமையைக்காண்க) இவ்விபரங்களை மேற்சொல்லிய சங்கத்தாரின் 1912-ம் ஆண்டுப் பத்திரிகையிற் காணலாம். நாம் இதை அச்சேற்றும்போது ஆறுமுகம் இறந்துவிட்டான். முதிராப்பிராய அறிவுவாய்ந்தோருட்பெரும்பாலானோர் இளவயதிலேயே இறப்பது வழக்கம்.

முதிராப்பிராய ஆச்சரிய விவேகிகளிடத்திற் கவனிக்கத்தக்க வேறொரு விசேஷம் என்னவெனில், அவர்கள் திடீரென்று ஒருவயதிலே பெற்றுக்கொண்ட அபூருவதீட்சணியம் வயதுபோகப்போக மாறிப்போகின்றமையாம். இதை ஏறக்குறைய எல்லா ஆச்சரியப்பிள்ளைகளிடத்திலும் காணலாம். இதுவும் மறுபிறப்புக்கொள்கைக்காரருக்குமாறாய் நிற்கின்றது. ஏனெனில், இவ்வபூருவ அறிவு சரீரத்தின் நிலைமைகளைப் பொறுத்ததாயிராமல், முற்பிறவிகளில் அடைந்துகொண்ட புத்திவிருத்தியையே பொறுத்ததாயிருப்பின் ஆடவப்பிராயமும் நடுவயசும்வரும்போது அது மறைந்துபோக நியாயமில்லை. ஆதலால், முதிராப்பிராய அறிவினால் மறுபிறப்புண்டெனக்காட்டுதல் சாலாமைகாண்க.

## பூர்வ ஜனன ஞாபகம்

"புனர் ஜெனன உண்மை" ஆக்கியோன் நமக்கு முற்பிறவிகளின் ஞாபகம் இருக்கக்கூடாதென்பதற்கு நியாயங்காட்டினார். அது மேலே எடுத்துச்சொல்லப்பட்டது. மேலும் முற்பிறவியின் ஞாபகம் உலகத்திலே யாருக்குமில்லையென்பது யாவருமறிந்தகாரியம். அப்படியிருக்க, நம் ஆக்கியோன் இந்துஸ்தானிலுள்ள பிதுறுஜில்லாவில் ஒருபெண் தன் நாலாம்வயதிலே தான் முன்ஜெனனத்தில் யாரென்பதையும் அக்காலத்தின் விர்த்தாந்தங்களைப்பற்றியும் சொன்னாள் என்றும், அவள்சொல்லிய சம்பவங்களெல்லாம் மெய்யென்று சாட்சிபூருவமாய்க் காணப்பட்டனவென்றும் சொல்வாராயினார். இது மெய்யென்றால் ஆக்கியோன் முன்சொல்லியது பொய். முன்சொல்லியதே மெய்யென்றால் இது பொய். மேலும், ஆக்கியோன் நம்பி எடுத்துச்சொல்லிய சரித்திரம் மெய்யென்றால் இதுவரையில் உலகத்திலுள்ள பத்திரிகைகளெலலாம் அதைப்பறையறைந்து சொல்லியிருக்குமே. மற்றவைகள் தாம் பேசாவிட்டாலும் "இந்துசாதனம்" சும்மாவிடுமா? மறுபிறப்புண்டெனஸ்தாபித்துப்போடமாய்ச்சற்பட்டுவரும் சைவர்விடுவார்களா? வேறுசாட்சியேன், துண்டுப்புத்தகங்களேன், பிரசங்கங்களேன்! இதொன்றுமே சைவம் மெய்யென்றுகாட்டிக் கிறீஸ்துமார்க்கத்தையும் ஐரோப்பியர் அமரிக்கர் ஆதியோருடைய சகல நம்பிக்கைகளையும் பறக்கடிக்கப்போதுமே. உள்ளபடி, இக்கதை ஒருகிழவிகதையேயன்றி வேறல்ல. இது உண்மைச் சம்பவமெனில், நம் சைவ நண்பர்கள் உடனே, சொல்லப்பட்ட இடத்துக் கவண்மேந்து உத்தியோகஸ்தருக்கு எழுதி இச்சம்பவங்கள் நடந்ததற்குச்சாட்சியாக அவர்கள் கையால் ஒருசாட்சிப்பத்திரம்வாங்கி உலகறிய அச்சிட்டுப்பரப்பல்வேண்டும். பரோபகார சிந்தையுள்ளவர்களாயின் அவர்களிற் சிலர் இதற்காக இந்துஸ்தானுக்குப்போய்வந்தாலும் பொறுக்கும் நம் நண்பர்கள் போய் அல்லது எழுதி எடுப்பிக்கும் கவண்மேந்துச்சாட்சிப் பத்திரத்தை அல்லது வேண்டுமானால் வேறு தக்க மனுஷர்கொடுக்கும் பத்திரத்தைப் பிரசித்தம்பண்ணுவதேமுறை. அப்படிச்செய்தபின்னே இதைப்போலும் தலைகீழான நியாயமொன்றை நாம் "வெற்றிக்கு"ப் பரிசோதித்தல் தகும்.

இவ்வாக்கியோனே தாங்கள் முற்பிறவிகளைக்கண்டோம் என்று யோகிகள் சொல்லுகிறார்களென்றும் கூறினார். இந்தப்பழம் பொய்யைப் பற்றியும் முன்சொன்னதையே சொல்லிக்கொள்ளுக. யோக்கியமாய் நியாயம்பேச விரும்புவோர் இனி இந்தப் பொய்யைச்சொல்லுமுன் ஒரு யோகியைப்பற்றியாவது ஒருசாட்சிப்பத்திரம் பிரசுரிக்கவேண்டியது. அன்னிபெசன்று அம்மாள் என்கிறவளைப்பற்றி இதைவாசிப்போர் கேள்விப்பட்டிருக்கலாம். இந்தமாது தென் இலங்கையிலே புத்தமதத்தவள். வட இலங்கையிலே சைவமாது. வட இந்தியாவிலே வேதாந்தஸ்திரீ இங்கிலாந்திலே கிறீஸ்தவள். "யாழ்ப்பாணச் சமயநிலை" எனும நூலிலே ஆறுமுகநாவலர் எடுத்துக்கூறிய அங்கவஸ்திரச் சைவருக்கு இவள் ஒரு நல்ல இலக்கியம். இந்தமாது ஒருநாள் வட இந்தியாவில் பிரசங்

கஞ்செய்துகொண்டு நிற்கும்போது தான்முற்பிறவியில் காசியிலே ஓர் பிராமணத்தியாயிருந்ததாகத் தமாஷாய்ச் சொன்னாள். உடனே சபையிலிருந்த ஒரு வயோதிகநாட்டவன் எழுந்து: ஆம் அம்மா, நான் அக்காலம் உன் புருஷனாயிருந்தேன் என்றான். சபையெல்லாம் குலுங்கநகைத்தது. இதுவே மறுபிறப்புக்காரருடைய பதர் நியாயங்களால் விளையும் வேடிக்கை.

இதுவரையும் கூறியவற்றால் சைவராதியோர் மறுபிறப்புண்டெனக் காட்டிக்கொண்டுவரும் மரணபயம் முதலிய நியாயங்கள் மறுபிறப்புண்மைக்கு ஒரு நியாயமுமாகாமற்போகின்றமை காண்க.

## 6. உபாதானமில்லாச் சிருட்டி

அப்பால். கடவுள் ஒன்றுமில்லாதிருக்கையில் உலகைச் சிருட்டித்தாரென்னும் உண்மையை ஒப்பாதோராகிய சைவராதியோர் இன்னுமொரு ஆசங்கையை நிகழ்த்துவார்கள் "மறுபிறப்பில்லையாயின், உயிர்களும் சடப்பொருளும் நித்தியமாயிருக்கவில்லையென்றுவரும். நித்தியமாயிருக்கவில்லையென்றால் அவைகள் இடைக்காலத்திலே கடவுளால் உண்டாக்கப்பட்டவைகளென்றுவரும். அப்படியும் நடந்திருத்தல்கூடுமா? முழுதும் இல்லாதிருந்ததொன்றைக் கடவுள்தாமும் உண்டாக்குவதெப்படி? குசவன் மண்ணைக்கொண்டு பானைசட்டி வனையக் காண்கின்றோம். எவனாவது மண்ணின்றிப் பானைசட்டி வனைதல்கூடுமா! அப்படியே கடவுளும் மண்ணாகிய ஒரு முதற்காரணத்தைக்கொண்டு உலகத்தை உண்டாக்குகிறாரென்பதே பொருந்தும். ஒன்றுமில்லாமலிருக்க அவர் சகலத்தையும் உண்டாக்கினாரென்றால் பொருந்துமா" என்பார்கள்.

ஆயின் சைவருடைய நியாயத்தை ஒப்புவோமானால் கடவுள் ஒரு பெருங்குசவனைப்போலாவாரன்றி சிருட்டி கர்த்தாவாகமாட்டார். மண்ணில்லாமல் குடம்வனையமாட்டாத குசவனைப்போல அவரும் முதற்காரணம் என்றபொருளில்லாமல் உலகத்தை உண்டாக்கமாட்டாதவரென்றால், அவர் குசவனைப்போல ஒருகுறைவுள்ள வஸ்துவேயாகிவிடுவார். அதெப்படியெனில், தானாய் இருக்கிறபொருள் என்று சொல்லும்போது தனக்குள்ளே சகல நிறைவையுங்கொண்டிருக்கிற ஒரு பொருளென்பது அமையும். சகல நிறைவையுந் தனக்குள்ளேகொண்டிருக்கிற பொருளிடத்திலே ஒரு குறைவும் இருத்தல்கூடாது. ஆகையால் இப்படிப்பட்ட ஒருபொருள் ஒரு கருமத்தை நிறைவேற்றுதற்கு வேறொரு பொருளின் துணையைத் தேடவேண்டி வருதலுங்கூடாது. அப்பொருள் வேறொரு பொருளின் துணையைத்தேடவேண்டிவந்தால் அது தனக்குள்ளே சகல நிறைவையும் கொண்டிருந்தது என்றசொல்லு பிழையாய்ப்போய்விடும். ஆகையால், முதற்காரணமில்லாமல் தமது சங்கற்பமொன்றினாலேயே உலகத்தைச் சிருட்டிப்பதுதான் கடவுளுடைய சுபாவத்துக்கு அவசியமாகிறது.

வேறொருவகையாயும் சொல்லுவோம். கடவுள் இவ் உலகத்தை மண் போன்ற ஒரு முதற்காரணத்தைக்கொண்டு படைத்தார் என வைத்துக் கொள்வோம். அப்படியாயின், அந்த முதற்காரணம் எங்கிருந்துவந்தது; அதுவும் கடவுளாலேயே படைக்கப்பட்டதா, அன்றி, தானாய் உள்ளதா? கடவுளாலேயே படைக்கப்பட்டதெனில், அதை வேறொரு முதற்காரணத்தைக்கொண்டு படைத்தனரா, அன்றி முதற்காரணமில்லாமற் படைத்தனரா? முதற்காரணமில்லாமல் படைத்தாரெனில், அப்பால் கேள்வி வராது, இதுவே நாம்சொல்லுவது. அப்படியல்ல, ஒரு முதற்காரணத்தைக்கொண்டு படைத்தாரெனில், அந்த முதற்காரணத்துக்கு முதற்காரணமெது? அதற்கு முதற்காரணமெது? என்று கேட்டுக்கொண்டே போகவேண்டிவரும். இப்படியே கேட்டுக்கொண்டுபோய்க் கடைசியிலே ஏதோ ஒரு முதற்காரணம் எவராலும் படைக்கப்படாமற் தானாய் இருந்ததெனச் சொல்லுதல் வேண்டப்படும்.

இனி, மண்போன்ற ஒரு முதற்காரணம் தானாய் இருந்ததென்று சொன்னால் இதிலே பல அபத்தங்கள்தோன்றும். அதெப்படியெனில், தானாயிருக்கிறபொருள் சகல நிறைவையுங்கொண்டிருத்தல்வேண்டுமெனச் சொன்னோமே, அதினால் இந்த மண்போன்றபொருளும் தானாயிருக்கிறதானால், சகல நிறைவையும் குறைவறக்கொண்டதாதல்வேண்டும். மண் போன்ற பொருட்களோ அப்படிப்பட்டவைகளல்ல என்பது கண்கூடாய்க்கண்டகாரியம். இதைத்தான் குதர்க்கம்பேசி யாராவது மறுக்கவரினும், மண்போன்ற பொருளாகிய முதற்காரணமானது உலகமாக மாறி வந்தது என்றதையாவது ஒப்புக்கொள்ளாதிருத்தல்கூடாது. மாறினபோதே முன்னில்லாத ஒரு நிலைபரம் பின்வந்தது என்றதாயிற்று. இல்லாத என்ற சொல்லுக்கு எங்கே இடமுண்டோ அங்கே குறைவுமுண்டு. ஆகையால் முதற்காரணம் குறைவுள்ளது என்பது பிரசித்தம். குறைவுள்ளதானபோதே தானாயிருக்கக்கூடியதன்று என்றாயிற்று.

## ஒன்றே தானாயுள்ளது

ஆயின், தானாயுள்ள பொருளெல்லாம் குறைவில்லாமல் நிறைவுள்ளதாய் இருந்துவிடுதல்வேண்டுமா என்று அறியாதோர் வினவக்கூடும். அவர்களுக்கும் விடை இறுப்போம். தானாயிருக்கிறதென்பதன் கருத்தென்ன? தன்னுடைய இருப்பை வேறொன்றினிடத்திலிருந்தும் அடையாமல் இருப்பே தன் சுபாவமாய்க்கொண்டிருப்பதுதான் தானாயிருக்கிறதென்பதன் கருத்து. "இருப்பு"த்தான் தானாயிருக்கின்றபொருளுடைய சுபாவம். இருப்பு அதின் சுபாவம் என்றால் 'இன்மை" அங்கே கிஞ்சித்தும் இடம்பெறுதல்கூடாது. இதற்கு ஒரு உதாரணமும் காட்டுவோம். அக்கினி என்று நாம் மனதிலே தரிக்கும் பொருளை எடுப்போம். அக்கினி என்று சொல்லும்போது இனிமேலில்லையென்ற சூடுதான் அதின் சுபாவம். குளிர்த்தன்மை அதிலே கிஞ்சித்தும் காணப்படாது. அக்கினியாற் சூடடைந்திருக்கும் பொருட்களிலே குறைந்தசூடு கூடிய சூடு எனும் தாரதம்மியம் இருந்தாலும் அக்கினியென்கிற அந்த மனத்த

ரிப்பு ரூபமான வஸ்துவிலோ ஒருதாரதம்மியமுமில்லை. சூடாக்கப்பட்ட பொருட்களிலே குளிர்த்தன்மை ஏற்றத்தாழ்ச்சியாயிருப்பினும், நினைக்கக் கருதக்கூடிய சகல சூட்டினும் சமுதாயமான அக்கினியிலே குளிர்த்தன்மை கிஞ்சித்துமிராது. சூட்டின் மறுதலையாகிய இன்மை அங்கே இடம்பெறாது. இப்படியே வேறொன்றினால் தன் இருப்பை அடைந்திருக்கின்ற ஒரு பொருளில் இன்மை என்று சொல்லப்படுகிற குறைவுகள் இருக்கலாமொழிய இருப்பே தன் சுபாவமாகக்கொண்ட ஒரு பொருளில், அதாவது தானாயிருக்கிற பொருளில் இன்மையாகிய குறைவுகள் காணப்படலாகாது. இந்த நியாயத்தை நுண்ணறிவாற் பரிசோதித்து ஆழமாய் யோசித்துப்பார்த்தால் தானாயிருக்கிறபொருள் ஒன்றுமாத்திர முண்டெனவரும். அக்கினியின் சுபாவத்தில் கூடவோ குறையவோ பங்குபற்றியுள்ள பொருட்கள்பலவானாலும், அவைகளெல்லாம் எதினின்று சூட்டுத்தன்மை அடைந்திருக்கின்றனவோ அந்த அக்கினியென்னும் மனோகற்பிதவஸ்து ஒன்றுமாத்திரமிருக்கிறதுபோல, ஏற்றமும் தாழ்ச்சியுமான நன்மைகளைக்கொண்டிருக்கிற பொருட்கள் பலவாயிருக்க, அவைகளுக்கெல்லாம் இருப்பைக்கொடுத்துத் தான் இருப்பே சுபாவமாய் விளங்குகின்ற வஸ்து ஒன்றுமாத்திரமுண்டு. நாம் எடுத்துச்சொல்லிய உவமானமாகிய அக்கினியிலேயுள்ள குறைவோ உவமேயமாகிய கடவுள் எனும் தானாயிருக்கிற வஸ்துவிலேயில்லை. அதாவது உவமானமாகிய அக்கினி மனதிலேமாத்திரமுள்ளது. இதை உவமைக்காகக் கற்பித்துச் சொன்னோம். தானாயிருக்கிறதும் இருப்பே தன் சுபாவமாயுள்ளதுமான பொருளோ உண்மையில் உள்ளது. இந்த ஒரு வித்தியாசத்தைக் குறித்துக் கொண்டால், நாம் காட்டிய உவமையினால் தானாயிருக்கிறபொருள் ஒன்றுமாத்திரமுண்டு என்பது மற்றப் பொருட்களெல்லாம் அதினால் இருப்பை அடைந்துகொண்டவைகளென்பதும் விகசிதமாகும்.

ஆகவே உலகத்திற்கு முதற்காரணமாய் ஒருபொருளிருந்ததெனில் அதையும் கடவுளே ஆதியில் சிருட்டித்திருப்பது அவசியம். இருப்பே தமது சுரூபமாயுள்ள அவராலல்லாமல் ஒன்றும் இருத்தல்கூடாது. எல்லாம் அவராலேயே உண்டாக்கப்பட்டிருத்தல்வேண்டும். ஆதலால் முதற்காரணமில்லாமல் உண்டாக்கும் சக்தி அவருக்குண்டு என்பது மலையிலக்கு. உலகத்தில் நாம் முதற்காரணமில்லாமல் ஒன்றும் உண்டாகக் காணோமே என்றால் அதுமெய். நாம் சுட்டிப்பேசும் உலகம் என்பது உண்டாக்கப்பட்டுள்ள ஒருகாரியம். அதிலுள்ள பொருட்களெல்லாம் குறைவுள்ளவைகள். ஆகையால் ஒருபொருள் (உதாரணமாய் ஒருமனுஷன்) வேறொருபொருளை (உதாரணமாய் ஒருபானையை) உண்டாக்குவதற்கு வேறொருபொருளின் (உதாரணமாய் மண்ணின்) உதவி வேண்டப்படுகின்றது. கடவுளோ குறைவில்லாதவர். அவருக்குப் புறம்பே தானாயுள்ள வேறொருபொருளுமோவில்லை. ஆகையால் அவர் சிருட்டிக்கும்போது யாதொரு பொருளினுதவியுமில்லாமல் சிருட்டிக்கத்தக்கவரேயாம்,

## ஒரு ஆட்சேபம்

இந்த நியாயம் ஒத்துக்கொள்ளத்தக்கதேயானாலும், "இல்லாதது வராது" என ஒரு சித்தாந்தம் உண்டே, அப்படியிருக்க, ஒன்றுமில்லாமையிலிருந்து உலகம் உண்டாவதெப்படி எனச் சிலர் கேட்கலாம். ஒன்றுமில்லாமையிலிருந்து உலகம் தானாக உண்டாகக்கூடாது என்பது எமக்கும் சம்மதம். இல்லாதது வராது என்பதின் கருத்தும் இதுவே. ஆயின் இல்லாததை வரப்பண்ண எவராலுங்கூடாது என்பதோ பொய்யான சித்தாந்தம். நான் இப்போது எழுதிக்கொண்டிருக்கும் இவ்வியாசம் முன் ஒருபோதும் இல்லை, ஆயின், இல்லாதிருந்த ஒருவியாசத்தை நான் இப்போது எழுதி அச்சுக்கனுப்புகிறேன். இது கூடாதகாரியமா! கூடாதகாரியமென்றால் செய்துமுடிந்ததெப்படி? ஆயின் நான் குறைவுள்ள ஒருபொருளாகையால் இவ்வியாசத்தை உண்டாக்குதற்கு பல கருவிகளைக் கையாடவேண்டியவனாகிறேன். குறைவில்லாத ஒரு பொருளோ யாதொரு துணைக்கருவியுமில்லாமல் இதைச்செய்யும். இப்படியே குறைவில்லாத அந்தப் பொருள் ஒன்றுமில்லாதிருக்கையில் உலகத்தை உண்டாகப்பண்ணிற்று. இல்லாததாயிருந்த உலகம் தானாக வரவில்லை. இன்மையே பொருளாகவுமில்லை. ஆயின், இல்லாதிருந்ததை கடவுள் தமது திருச்சங்கற்பத்தினால் உண்டாக்கியருளினார். 'உலகினைப் படைத்தான் ஒருவன் மற்று அவனே உயிரையும் படைத்தான்." உலகமும் ஆன்மாக்களும் முன்னில்லாதிருந்து பின் அவராற் படைக்கப்பட்டன. ஆன்மாக்கள் அநாதிநித்தியமானவைகளல்ல, நித்தியகாலம் பிறந்திறந்து வருகின்றவைகளுமல்ல. அவைகள் கடவுளாற் படைக்கப்பட்டு இவ்வுடலோடு பரிசோதனைக்கு விடப்பட்டிருக்கின்றன: "அம்புவியில் மனுப்பிறவியானது ஒன்றே" அன்றிப் பலவன்று. அவைகள் சரீரத்தைவிட்டுப் பிரிந்தபின் தத்தம் கணக்கை ஒப்பிக்கக் கடவுளண்டையிற்போய் "என்றும் இறவாத இன்பத்"தையோ "மீளாநரகத்"தையோ தத்தம் புண்ணிய பாவங்களுக்கேற்ப அடைந்துகொள்ளும். "இறந்துபோன மானிடர் இனிப்பிறப்பதில்லையே."

---

## 7 நித்திய நரகம்

"மறுபிறப்பில்லையெனில் கனமான பாபத்தோடு மரிக்கும் ஆன்மாக்களெல்லாம் நித்தியநரகத்தை அடையுமென்பது கிறீஸ்தவர்கள் கொள்கையன்றோ. நரகம் நித்தியமென்றால் அப்படுகுழியில்வீழ்ந்தோர் இனி ஒருபோதும் மீட்சியடையார்கள் என்றாகும். இனி, இவ்வுலக சீவியமோ நாலுநாட்சீவியம். இத்தனை சுருங்கிய காலத்துள் ஓர் ஆன்மா செய்த பாபத்துக்குத் தண்டனையாக அதனை நித்திய காலம் நரகில் அமிழ்த்தி வருத்துதல் நீதியாகுமா? அளவுள்ள காலத்திற் செய்த அக்கிரமத்துக்கு அளவில்லாதகாலத் தண்டனை விதிப்பது அநியாயமாகாதா? ஆகவே, ஒரேசீவியத்தின் பரிசோதனையோடு நரகமோட்சங்க

## சுகதி துர்க்கதி இரண்டும் நித்தியம்

லைக் கொடுத்துத் தீர்த்துவிடாமல் மேல் பலசீவியங்களிலே பாபியான வன் தன் பாபச்சுபாவத்தைமாற்றிப் புனிதமாகும்படி புதுப்புதுத் தருணங்களையளித்து ஈற்றில் அவனை ஈடேற்றுவதே கடவுளின் பூரணநீதிக்கும் நன்மைத்தனத்துக்கும் ஏற்புடைத்தாகும் அன்றோ" எனச் சைவர் வாதாடுவர். இதற்கு விடையாவது :

இவ்வுலகசீவியம் ஒரு பரிசோதனைக்காலம். இப்பரிசோதனையை அனந்த ஞானமுள்ளவரான கடவுள் நாலுவருஷத்திலும் நடத்தலாம், நாலுநாளிலும் நடத்தலாம், நாலு நிமிஷத்திலும் நடத்தலாம். நாட் கணக்கிலல்ல, மனுஷனுடைய மனச்சார்பிலேயே பரிசோதனையடங்கியிருக்கிறது. மோட்சமாவது நரகமாவது நாட்கணக்குக்குத் தக்கபடியல்ல, அவரவர் ஓர் கணப்பொழுதிலேயோ பலநாளிலேயோ உறுதியாகத் தெரிந்தெடுத்துக்கொண்ட மனச்சார்புக்குத்தக்கபடியே அருளப்படுகிறது. ஒருவன் உலகசுகபோகங்களிலும் மனுஷருடைய முகத்தாட்சிணியத்திலும்பார்க்க கடவுளுடைய கட்டளைக்குப் பயந்தடங்குவதே பெரிதென்று துணிந்த மனச்சார்புடையவனாயிருப்பானாகில், அவனுடைய இம்மனச்சார்பைப் பரிசோதித்தறிதற்கு ஒரேயொரு நற்றருணம் போதும். உண்மையான சிநேகிதனையும் போலிச்சிநேகிதனையும் நாம் ஒரேயொரு ஆபத்துவேளையிற் கண்டுகொள்ளுகிறதுபோல, கடவுளும் தம்மில் அன்புள்ளவர்களை ஒரேகணப்பொழுதின் பரிசோதனையாலும் கண்டுகொள்ளக்கூடும். ஒவ்வொருவனுக்கும் கொடுக்கப்படும் காலவெல்லைக்குட் கடவுளின் திருச்சித்தத்துக்கு அமைந்தடங்குவதாகிய திட மனச்சார்பொன்றே மனுஷனுடைய கதியை நிர்ணயிக்கும் பரிசோதனையாகின்றது. இத்தூய மனச்சார்பை ஒவ்வொருவனும் தன்னிடத்தில் உண்டாக்கிக்கொள்ளற்கு ஓர்சீவியகாலம் போதாதென்போமா? மனுஷன் அழிந்துபோம்பொருட்களைத் தேடுதற்குப் படும் பிரயாசத்தில் ஆயிரத்தொருமடங்கு பிரயாசம்மட்டும் படுவானாயின் கடவுளுக்கேற்றவனாய் மோட்சசம்பாவனையடையப் பாத்திரனுமாய்ப் போய்விடுவான் என்பதிற் சந்தேகமில்லை.

### பலசீவியப் பரிசோதனை

"ஒரேசீவியத்தோடு பரிசோதனையைமுடித்து அவ்வவனுடைய மனச்சார்புக்குத் தக்கவாறு மோட்சத்தையோ நரகத்தையோ கொடுப்பதிற் பரிபூரணநீதிக்குப் பங்கமில்லையென்றுதான் வைத்துக்கொள்வோம். யாதொரு சம்பாவனையை அருளுபவர் அச்சம்பாவனையை அடைவதற்கு இத்துணைக்காலத்துள் இன்ன இன்ன சங்கேதத்தை நிறைவேற்றவேண்டுமென விதிப்பதிலும், அல்லது இத்துணைக்காலத்துள் இன்ன கட்டளையை மீறின் இன்ன தண்டனைகிடைக்குமென நியமித்து அவ்வாறு நடத்துவதிலும் நியாயவிரோதந்தானில்லையாயினும் ஒரு தருணத்துக்குமேற் பலதருணங்களைக் கொடுத்து பாபியானவனையும் திருத்தி ஆட்கொண்டு மோட்சகதியிற் சேர்ப்பதன்றோ கடவுளுடைய அருட்டிறத்துக்குப் பொருந்தியதாகும்! ஒரு சீவியத்தினுட் பாபச்சார்போடிருந்த பாபி மற்றொரு சீவியத்தில் தன்மூடத்தனத்துக்காக வருந்திப் பச்சாத்

தாபப்பட்டு திருத்தமடையக்கூமென்றே? ஆதலால், இச்சீவியத்தின் பின்னும் பாபிக்குப் பல பிற்சீவியங்களுண்டெனச் சாற்றும் மறுபிறப் புக்கொள்கைதான் கடவுளின் சர்வகாருண்ணியத்தன்மைக்கு அதிக பொருத்தமாகுமே" எனச் சைவராதியோர் கடாவுவரேல் அதற்குவிடை யாவது :

ஒரு சீவியகாலத்தில் தன்னைப் படைத்தவருக்கு மாறுன ஓர் வைராக் கிய மனதை உண்டுபண்ணிக்கொண்ட பாபியானவன் மறுசீவியத்திற் றிருந்துவதானுல், அவன், நானே முன்பிறவியிலிருந்தேன் இப்போது பிறந்திருக்கிறேன் என்ற தாதான்மிய உணர்வுள்ளவனுயிருப்பது அவசி யம். ஆயின், மறுபிறப்புமுறையிலோ பிறவிகளுக்கூடாகத் தொடர்ச் சியறிவுசெல்லாமையினுல்(மறுபிறப்.ஆட்சேபம் 23-ம்பக் காண்க) மனந் திரும்புதலுக்கிடமில்லை. உதாரணமாய், கொலைபாதகன் ஒருவன் மறு மைச்சீவியத்திலே ஓர் புலியாய்ப் பிறந்திருந்தால், குணப்படுதலுக்கு இடமெங்கே? அப்பால் புலி ஓர் எலியாகவோ, புல்லாகவோ கல்லா கவோ, ஆடாகவோ மாடாகவோ பிறந்துபிறந்துகொண்டு வந்தாலும் இவையெல்லாம் ஆட்தன்மையில் வெவ்வேறுகையால் ஆதியில் நாம் வைத்துக்கொண்ட பாபி திருந்துவதற்கு உதவுமா?

மறுபிறப்போடு ஆள்வேறுபட்டுப்போகின்றமையால் பாபியானவன் திருத்தமடைய இடமில்லையென்றது ஒன்று. ஆயின், ஏதோ ஓர்காலம் தன்னுணர்ச்சி தனக்குவருமென்றுதான் (மறுபிறப்புக்கொள்கைக்குமா ருக) வைத்துக்கொள்ளினும் அதினுற் பாபிக்குத் திருத்தமுண்டாக ஏது வில்லை. எவ்வாறெனில், எனக்கு இன்னுங் பலசீவியங்கள் கிடைக்கும்; எவ்வாறுதான் நான் எத்தனைபிறவிகளில் அக்கிரமஞ்செய்யினும் எனக்கு மேலும்மேலும் பிறவிகளும் நற்றருணங்களும் கிடைப்பது நிச்சயம், எவ்விதமும் ஈற்றில் நான் ஈடேறுவது நிச்சயமென்று ஒருவன் உணரு வானெனில், இடையிலேவரக்கூடியசிறுச்சிறுத்தண்டனைகளுக்கும் அஞ் சாமற் பாபத்திலேயே மேலும்மேலும் அமிழ்ந்திக்கிடப்பான். இதனுல் கடவுளின் நன்மைத்தனம் பாபியினுற் பரிகாசம்பண்ணப்படுவதுபோ லாகும் இவன் அவரை ஊழியுள்ள காலமுமே எய்த்து எய்த்துக்கொ ண்டுவந்து கடைசியில் அவர்மேற் செயமும் பெறுபவனைப்போலாவான். இவ்வாருக, பாபச்சார்புள்ளவனுக்குப் பலசீவியங்களைக் கொடுப்பதி னுல் அவனுக்கும் பயனில்லை; கடவுளுடைய மேற்கொள்ளப்படக் கூ டாத மகத்துவத்துக்கும் பங்கமாகிறது. ஆகவே ஒரே ஒருசீவியத்திற் பரிசோதனை முடிக்கப்படுவதே யுத்திக்கு இசைந்ததாகுமென அறிக.

## குரூரத்தன்மை

"புண்ணியம் எவ்வளவுகுறுகியகாலத்துட் செய்யப்பட்டதாயினும் அத ற்குச் சம்பாவனையாக நித்தியமோட்சத்தைக் கொடுப்பதில் கடவுளுடை ய அநந்ததயாளமே விளங்கக் காண்கிறோம். ஆயின் எவ்வளவு நெடுஞ் சீவியமாயினும் அதிற்செய்த பாபங்களின்பொருட்டுக் கடவுள் ஒருசிரு ட்டியை நித்தியமாய் நரகில் விட்டுவருத்துவது அரோசிகத்தைத் தரு

கின்ற ஓர்குரூரச்செயல்போல் தோற்றுகின்றது" என ஆட்சேபிப்போர் சிந்திக்கவேண்டுவது பின்வருவது :

நீதிபராரகிய கடவுள் எவரையாதல் அநியாயமாய்த் தள்ளிவிடுவதில்லை. எவரையாதல் பொறியில் அகப்படுத்துவார்போல் வேண்டிய நற்றருணங்களைக் கொடாமல் பெலவீனமான ஓர் சந்தர்ப்பத்திலே திடீரெனவழைத்து நரகத்தீர்ப்பிடுவதுமில்லை. இதற்குமாறாய், ஆயிரந் தருணங்களில் தமது அருட் றூண்டுதல்களினாற் றம்மைத் தேடும்படி அழைத்தபோதிலும் அவ்வழைத்தல்களைப் புறக்கணித்து, பூரணசித்தத்தோடும் நிறைந்த அறிவோடும் தம்மையும் தமதன்பையும் வேண்டாம் என்று தள்ளிவிட்டுக் கடைசிபரியந்தம் பாபத்தில் மூர்க்கனாய் நிலைத்தவனையே நித்திய தண்டனைக்குப் பிராத்தனாக்குவார் என்பது நிச்சயம். நரகதண்டனையை நாம் நோக்கும்போதும், கடவுள் பாபியை ஒரு கையாற் பிடித்துக்கொண்டு மறுகையால் அடித்துவதைப்பதுபோல் விளங்கிக்கொள்ளலாகாது. கடவுள் தண்டிக்கும்போது சிருட்டிகளாகிய நம்மைப்போற் கோபங்கொள்பவரல்லர், பழிவாங்கும் மனத்தராவரல்லர். அவர் நீதிசுரூபியாகையால், பாபி அடையவேண்டிய தண்டனை அவனுக்கு அளிக்கப்படுகிறதொழிய அவனைத் தண்டித்தலிலே பரிபூரண வஸ்துவாகிய அவரிடத்தில் கோபக்குரோதமாதிய எவ்விதமாற்றமும் நிகழ்வதில்லை. அக்கினி தனக்கிரையாகப் போடப்படும் பொருட்களைச்சுடுவதுபோல கடவுளின் நீதியும் தளப்பமற்றிருந்து பாபியைத் தண்டிக்கின்றது. உள்ளபடி சொல்லுகில், பாபியே தண்டனையைத் தனக்குவருவித்துக்கொள்ளுகின்றான். கூருக்கெதிராய் உதைப்பவன் தன்காலுக்கே மோசத்தைத் தேடுவதுபோல, கடவுளை எதிர்த்தவன் நீதிப்படி அவருடைய திருச்சமுகத்தினின்றும் தூரத்தப்பட்டு என்றுமொழியாத வேதனைகளை அனுபவிப்பான்.

தம்முடைய அன்பை வேண்டாமென்று கடைசிபரியந்தம் மறுத்தோனைக் கடவுள் தமக்கப்புறப்படுத்தி அவன் தானே தேடிக்கொண்ட தண்டனையை அடையவிடுவது நீதியல்ல குரூரத்தனமென்றால், உலக இராசாங்கத்திலே குற்றங்களுட் பெரிதாகிய இராசதுரோகத்தைச் செய்தவனுக்கு இராசா கடைசித்தண்டனையாகிய சிரசாக்கினை விதிப்பதும் குரூரச்செயலாகுமா? கடவுள் நீதியையும் பாராமல் இளகிக்கொண்டிருப்பாரென்றெண்ணுவோர் அவரை ஓர் கோழைநெஞ்சராக்கப்பார்க்கின்றனர். திரிபுவனங்களையும் ஆக்கியளித்தழிப்பவரும், இடிமுழக்கங்களிலும் சண்டமாருதங்களிலும் தமது வல்லமையைப் புலப்படக்காட்டுகிறவருமாகிய அளவில்லா வல்லமையும் கோணாநீதியுமுள்ள கடவுள் என்னும் பயங்கரத்துக்குரிய வஸ்து, நாம் எண்ணிய எண்ணியபடியெல்லாம் நடக்க இடங்கொடுத்து, தம்மை ஆட்டுகிறவிதமாயெல்லாம் ஆட்டித் தமக்குச் செய்யாத அவமானமெல்லாம் செய்தபின்னும், ஓர்சுனைகெட்ட பேதைத்தாயைப்போலத் திட்டிவைதுபோட்டுப் பின்னும் எடுக்கிக் கொஞ்சிக்கொண்டிருப்பாரென்றெண்ணுவது மதியீனம். அவர் தம்மை நேசிப்போர்க்கு அன்புமயமாய்நின்று அருள்செய்வார். தம்மை

மூர்க்கமாய்ப் பகைப்போரையோ எதிர்த்துப் புறம்பே தள்ளிவிடுவார்.
அவருடைய அன்பு அளவில்லாததுபோலவே நீதியும் அளவில்லாத
தாம். அவர் பாபியை நரகத்திற் தள்ளும்போது ஓர் நீதிவான் தனது
சிநேகிதனை ஓர் குற்றவாளிக்குத் தீர்ப்புச்சொல்லும்போது எப்படி ஆ
ளைப்பாராமல் நீதியையே செலுத்துவானோ அப்படியே தமது அநந்த
கருணையைவிடாமல் நீதியைச் செலுத்துகிறவராகிறார். உள்ளவாறு
கூறும்போது, தன்சிருட்டிகராகிய கடவுளை எதிர்க்கத் துணிந்த பாபிக்
கு நரகத்திலும் ஏற்ற தண்டனை கிடையாதாதலால், அங்கும் கடவுளு
டைய இரக்கமே பிரகாசிக்கின்றது. எத்தனை பாபஞ்செய்யினும் பாபி
ஓர்நாள் ஈடேறுவான் என்போர் இதையுணராமல் மோசம்போகிறார்
கள். இம்மையையும் மறுமையையும் நன்றாய்ச் சீர்தூக்கியறிந்தவரான
ஓர் ஞானி சொல்லியவண்ணம் "கடவுளைப் பரிகாசம்பண்ணமுடியாது.
ஒவ்வொருவனும் தான்விதைத்ததையே அறுப்பான்" என்பது நிச்சயம்.



# அநுபந்தம்

## மறுபடியும் மறுஜனனம்

[சத்தியவேத பாதுகாவலனில் தோற்றிய கடிதம்]

"இந்துசாதனப்" பத்திரிகையில் எழுதுவோருக்கு எவ்விதத்திலும் மறுபிறப்பை விட்டுவிடவோ மனமில்லை. மறுபிறப்புக்கொள்கையானது பாபத்துக்கு வழிதிறந்துவிடுகிற ஒருகொள்கையென்றும், மறுபிறப்புச் சுழிக்குள் அகப்பட்டால் மேலேறி மீட்சியடைய வழியில்லையென்றும், மறுபிறப்புக்கொள்கை கடவுளிலே பெரும் அநீதியை ஆரோபிக்கிறதென்றும், அதைப்போல யுத்திக்கு விரோதமான தவறு வேறில்லையென்றும் எவ்வளவு வெளிப்படையாய்க் காட்டினாலும் சைவர் உணருகிறார்களில்லை. பொருத்த நியாயங்களைக் காட்டும்போது பேசாமல் ஒளித்துவிடுகிறார்கள். ஒளித்திருந்து, முந்நிடந்த தர்க்கத்தைச் சகலரும் மறந்துவிட்டபின்பு மறுபடி தலைகாட்டுகிறார்கள். இது மனச்சான்றுக்கு ஒக்குமா?

சைவர் சொல்லக்கூடிய நியாயங்களெல்லாவற்றுக்கும் போதிய மறுப்புக்கள் ஏலவே வெளிப்பட்டிருக்கின்றன. மறுபிறப்பு ஆட்சேபம் எனும் நூல் காண்க. இதிலே இரண்டாம் அநுபந்தத்திலே சைவருடைய கடைசியான மறுமொழிகளுக்குத் தடைசொல்லும் முகத்தாலே முடித்துக்காட்டிய முடிபுகளுக்கு ஏராவது மாறுகூற வெளிப்படவில்லை. ஆயினும் சைவருடைய கண்பொத்திவிளையாடும் விளையாட்டு பலியாதபடிக்கு இம்முறையும் "இந்துசாதனக்" கடிதருக்கு ஒருவிடை சொல்லுகிறேன். இம்முறை "இந்துசாதன"த்தில் எழுதியிருக்கிறவர் பிரம்ம ஸ்ரீ கு. சுப்பிரமணியசர்மா அவர்கள். இவர் பிராமணராதலால், அம்முதற்குலத்துக்குரிய சாந்தம் முதலிய சுகுணங்களுடையவராயிருப்பாரென்று ஊகித்துக்கொள்ளுகிறேன். இவராதல் முறைப்படி நியாயம்பேசி உண்மை கடைப்பிடிக்கத் துணிவாரென்றது என் நம்பிக்கை. சர்மா அவர்கள் மறுபிறப்பு ஆட்சேப நூலைக் காணாதவர்போல எழுதுகிறபடியால் அந்நூலின் ஒரு பிரதி அவருக்குத் தபாலால் அனுப்பப்படுகிறது.

### மறுபிறப்பும் யூதரும்

சர்மா அவர்கள் "கலிலேயாவிலுள்ள யூதமார்க்கத்தார்சென்மங்களுண்டென்பதை அங்கீகரித்துளார்" என்கிறார். இப்படிச் சொல்வதினால் கலிலேயாவிலே இன்றைக்கும் யூதர் உண்டென்றும் இவ் யூதர் இந்துக்களுடைய மறுபிறப்பை அங்கீகரிக்கிறார்களென்றும் சர்மா அவர்கள் விளங்கிக்கொண்டதாகத் தோற்றுகிறது யூதர் கலிலேயாவிலே தற்காலம் இல்லை இவர்கள் உலகமீட்பரை விசுவசியாமல் அவரைக் கொன்றதற்காகத் தேவதண்டனையினால் உலகெங்கும் சிதறடிக்கப்பட்டிருக்கிறார்

கள். பின்னும் யூதமார்க்கத்தாருடைய பழையதேசம் கலிலேயாமாத்திரமல்ல. கலிலேயா அவர்களுடைய தேசத்தின் ஒரு சிறுப்பிரிவுமாத்திரமே. சர்மா அவர்கள் இதையறியாமற்போனது துக்ககரம். இதையறியாமற்போனதுபோலவே "உலகந்தோன்றி 6010 வருஷத்திலே அழிந்துபோமென்று" கிறீஸ்தவர்கள் சொல்லுகிறார்களெனவும் அறியாமையினால் எழுதுகிறார். மனுஷன் உண்டாக்கப்பட்ட 6000 வருஷம் வரையில் கிறீஸ்துநாதர் பிறந்தாரென்ற ஒருகொள்கை சில சாஸ்திரிகளுக்குள்ளே இருந்ததையே இவர் இப்படித் தடுமாறிச் சொல்லுகிறார். உலகமுண்டாகிக் கோடாகோடிவருஷஞ் சென்றிருக்கவேண்டுமென்றது கிறீஸ்தவர்களுடைய கொள்கை என்பதைப்பற்றி சத்தியவேதபாதுகாவலனிலே இற்றைக்குச்சிலவாரங்களின்முன்னேயும் எழுதப்பட்டது.

அதுநிற்க, சர்மா அவர்கள் சொல்லவந்த நியாயமெது என்று எனக்குத் தெரியும். சொல்லத்தெரியாமல் அவர் பிழையாயும் நகைப்புக்குரியவிதமாயும் சொல்லிப்போட்டார். அந்த நியாயமென்னவென்றால் அர்ச். அருளப்பர் (யோவான்) சுவிசேஷத்திலே 9-ம் அதிகாரம் 2-ம் வசனத்திலே ஆண்டவருடைய சீஷர்கள் ஒரு குருடனை ஆண்டவருக்குக் காட்டி குருவே இவன் குருடனாய்ப் பிறந்திருப்பதற்குக்காரணம் இவன்தானே செய்த பாவமா அல்லது இவன் பெற்றோர்செய்த பாவமா என்று கேட்டார்கள். இந்தக் கேள்வியைக்கொண்டு சில அறியாதோர் யூதருக்குள்ளே சைவருடைய மறுபிறப்புக்கொள்கை இருந்ததென்று நியாயம்முடிக்கப்பார்ப்பார்கள். இதைத்தான் சர்மா அவர்கள் சொல்லத் தெரியாமல் எடுத்துச்சொன்னார். ஆனால் சீஷர்கள் கேட்ட கேள்விக்குக் கருத்தென்ன? குருடனுடைய ஆத்துமா முதற்பிறவியொன்றிலே பாபஞ்செய்து அந்தப் பாபத்திற்குத் தண்டனையாகக் குருடனாய்ப் பிறந்திருந்ததென்று சீஷர்கள் நினைத்தார்களா? அப்படி நினைத்திருந்தால் அது அவர்கள்காலத்து யூதருள்ளே மறுபிறப்புக்கொள்கை இருந்ததென்றதற்கு அத்தாட்சியாகாதா? என்று கேட்கில், யூதருள்ளே தவறான ஒரு எண்ணமிருந்ததுதான். ஆனால் அது மறுபிறப்புக்குக் கொஞ்சமும் சனுவாகாத ஒரு தவறு. அதெப்படியென்றால், பிள்ளை தாயுதரத்திலிருக்கும்போதும் பாபஞ்செய்யத்தக்கது என்று அக்காலத்தார் எண்ணினார்கள். முன்பிறந்திருந்த ஒருவன் மறுபடி பிறப்பானென்ற தப்பிதத்தை அவர்கள் கனவிலும் அங்கீகரிக்கவில்லை. பிள்ளை பிறக்குமுன் தாயுதரத்திலே பாபஞ்செய்யக்கூடுமென்ற தவறானகொள்கையையே அவர்கள் அங்கீகரித்தார்கள். அதனோடு தாய் தகப்பனுடைய பாபத்தினால் பிள்ளைக்கு அங்கப்பழுது வரக்கூடுமென்று உண்மையாகவும் நினைத்தார்கள். ஆதலால் "யூதமார்க்கத்தார் சென்மங்களுண்டென்பதை அங்கீகரித்துளார்" என்று சர்மா அவர்கள் சொல்லியது முழுதும்தவறாய்ப்போகிறது.

பின்னும் சர்மா அவர்கள் சொல்வது: "யூதர்கள் கிறீஸ்துவைக் குறித்து இவர் எலியாவோ அல்லது இறந்துபோன தீர்க்கதரிசிகளிலொருவனோ என்றுசொன்னார்கள். மறுபிறவிகளுண்டென்னுமெண்ணமிருந்தபடியால் யூதர் பழைய தீர்க்கதரிசிகளிலொருவன் வல்லமையோடு வந்

ததாய்க்கொண்டார்கள்" என்கிறார். இறந்துபோன தீர்க்கதரிசி மறுபடி பிறந்துவருவாரென்றது சர்மா அவர்கள் யூதசரித்திரத்தை அறியாமையினால் சொல்லிய தவறேயொழிய யூதர் அப்படி எண்ணவில்லை. எலியா இறவாமலே அக்கினி இரதத்திலேறிப்போனாரென்றும் மறுபடி அத்தப்படியே வருவாரென்றும் யூதர் நம்பியிருந்தார்கள். பிற தீர்க்கதரிசிகளும் சிலர் பிறந்தல்ல, இருந்தபடியே காட்சிதந்துவருவார்களென்ற எண்ணம் யூதருக்குள்ளிருந்தது. ஆதலால் சர்மா அவர்கள் பேச்செல்லாம் வீணாகி யூதர் மறுபிறப்புக்கொள்கையுள்ளோரா யிருந்தார்களென்றது பொய்யாய் முடிகிறது.

யூதருள் மறுபிறப்புக்கொள்கை இருந்ததில்லை. அம்மட்டுமோ? முற்கால இந்தியருள்ளும் மறுபிறப்புக்கொள்கை இருந்ததில்லை. உதாரணமாய் முற்கால இந்தியருடைய நூலாகிய இருக்குவேதத்திலே மறுபிறப்புக்கொள்கைக்கு மாறான எண்ணங்களே இருக்கின்றன. இதை மறுபிறப்பு ஆட்சேபநூலிலே 2, 37, 38-ம் பக்கங்களிலே குதர்க்கத்துக்கிடமில்லாமல் விளக்கியிருக்கிறதைக் காண்க. இப்படியிருக்கும்போது சர்மா அவர்கள் மறுபிறப்புக்கொள்கை "பூர்வகாலந்தொட்டுள்ளது" என்றதும் பொய்யாய் முடிகிறது.

## மறுபிறப்பும் கிறீஸ்துமார்க்கமும்

சர்மா அவர்கள் மேலும் "மறுஜனனம் கிறிஸ்துமார்க்கநூலுக்கு மாறுபடுவதன்று" என்று காட்டவிரும்பிப் பின்வருமாறு சொல்லுகிறார்.— "கிறீஸ்து பரமண்டலமென்கிற உலகத்தினாலும் தேவனுடைய வலதுபாரிசமென்கிற இடத்தினாலும் குமாரன் எனகிற முறையினாலும் உலகமும் இடமும் சென்மமுமாறிப் பூமண்டலத்தில் மரியாள் மகனாய் மானிடனானார். ஆகவே உலகமும் சென்மமுமாறினார். அன்றியும் கிறீஸ்து தாமே மறுபடி சென்மமெடுத்துப் பூலோகம் வருவதாய் சொல்லியிருக்கிறார். புண்ணியவானாயிருந்து நன்மைகள் செய்தவராகையால் இம்முறை இராசாவாய் வருவாராம். இதுவரையில் வந்துவிட்டாரோ தெரியவில்லை" என்றொரு கஞ்சற்பேச்சும் பேசிச சர்மா அவர்கள் நியாயம் முடிக்கிறார். ஆனால் இந்த நியாயம்முழுதும் பிழை. எனெனில், சர்மா அவர்கள் கிறீஸ்துமார்க்க நூலிலுள்ளதென்றெடுத்துச் சொல்லுவதெல்லாம் அதிலில்லாத பொய்யாகிறது. குமாரன் அல்லது சுதனாகியகடவுள் மனுஷனாய் அவதாரஞ்செய்யுமுன் ஓர் உலகத்திலே ஓரிடத்திலே இருந்தாரென்று கிறீஸ்துமார்க்க நூல் சொல்வதற்குமாறாக, சுதனாகிய அவர் கடவுளுடைய வார்த்தையென்றும், அவர் கடவுளோடொன்றாயிருந்தாரென்றும் அவர் கடவுளே என்றும் வெளிப்படையாய்ச் சொல்லுகிறது. (அருளப்பர் சுவிசேஷம் 1-1-2) சுதனாகியவர் மாறி மானிடனானார் என்று சர்மா அவர்கள் சொல்லியதற்குமாறாக அவர் மாறாமலிருந்தே மானிடசுபாவத்தைப் பரிக்கிரகம்பண்ணினாரென்று கிறீஸ்துமார்க்கநூல் காட்டுகிறது. (இதின் விபரத்தைக் "கிறீஸ்துவின் கடவுட்டன்மை" 5-ம் 7-ம் பக்கங்களிற் காண்க. இந்த நூலிலே சொன்னவைகளுக்கு ஞான

சித்திப் பத்திராதிபர் மா ா ா ஸ்ரீ தாமோதரம்பிள்ளை வகைசொல்லமாட்டாமல் மடங்கிவிட்டார். ஞானசித்தியும் இருந்தவிடமுந் தெரியாமல் மறைந்துவிட்டது!) மேலும் கிறீஸ்துநாதர் மறுபடியும் ஜென்மமெடுத்துப் பூலோகத்தில் வருவாரென்று சொன்னார் எனச் சர்மா அவர்கள் சொல்லியது முழுத்தவறு. கடவுளாகிய அவர் மனுச்சுபாவத்தோடே பரமண்டலங்களில் வீற்றிருந்து அந்தப்படியே நடுத்தீர்க்கவருவாரென்றதுதான் கிறீஸ்துமார்க்கப்போதகமொழிய சர்மா அவர்கள் அறியாமற் சொல்லியது அதன்போதகமல்ல.

அப்பால் கிறீஸ்துநாதர் மோசேசுக்குமுன் தாமிருப்பதாய்ச் சொன்னாரென்றும் அப்படிச்சொன்னது "தனது பலபிறவிகளைக் குறித்துச்சொன்னார்" என்றும் சர்மா அவர்கள் சொல்லுகிறார். மோசேசுக்கு முன்னல்ல, ஆபிரகாமுக்கும் முன்னே தாமிருப்பதாக ஆண்டவர்சொன்னார். இதையறியாமல்மாறிச்சொல்லியது சர்மா அவர்களுக்கு ஒருநற்குறிப்பு! "தனது பலபிறவிகளைக்குறித்து" என்று சொல்லியது ஆக அறியாத்தன்மை. பலபிறவிகள் பிறந்துழன்றவர்கள் விஷ்ணு முதலிய சர்மாவுடைய பொய்த் தெய்வங்களேயொழிய மெய்யான கடவுள் அப்படி உழலவில்லை. அவர் மானிடரை ஈடேற்றும்பொருட்டு ஒருமுறைமட்டுமே மானிடச்சட்டை சாத்தியருளினார். ஆகவே சர்மா அவர்கள் கிறீஸ்துமார்க்கநூல் மறுபிறப்புக்குச் சார்பாயிருக்கிறதென்றது முழுதும் தவறுகிறது.

இப்படியே இன்னும் தேவதூதர்கள் சாத்தான்களாய்ப்பிறந்தார்கள் என்றும் "மோட்ச நரகங்கள் வெறுமையாய்க் கிடக்க புண்ணியபாவங்கள் செய்திறந்த ஆன்மாக்கள் இலட்சக்கணக்கானவருஷங்களுக்கு நியாயத்தீர்ப்பை எதிர்நோக்கி விளக்கமறியலிலிருக்கும்" என்றும் சர்மா அவர்கள் சொல்லித் தமது அறியாமையை "இந்துசாதனம்" வாசிக்கும் அறியாச் சைவருக்குமுன் பெருஞ்சாஸ்திர அறிவுபோற்காட்டுகிறார். தேவதூதர்கள் ஒருபோதும் பிறக்கவில்லை. அவர்கள் கர்வங்கொண்டபோதே சாத்தான்களாக அதாவது துட்டர்களாகக் குணம்மாறினின்றார்கள். மோட்சநரகங்கள் வெறுமையாய்க் கிடக்கிறதில்லை. மெய்யான கடவுளை அறிந்து நேசித்து வழிபட்ட புண்ணியாத்துமாக்கள் இன்றைக்கும் மோட்சபாக்கியத்தை அனுபவிக்கிறார்கள். கடவுளை முழுதும் எதிர்த்து மூர்க்கராயிருந்தபாபிகள் இன்றைக்கும் நரகத்திற்கிடந்து வருந்துகிறார்கள். சிறுபிள்ளைகளும் அறிந்த இவ்வுண்மைகளைச் சர்மா அவர்கள் அறியாமற்போனது மறுபிறப்புக்கொள்கைக்கு வாய்ப்புத்தான்!

## மறுபிறப்புக்கு ஆதாரம்

பூர்வீகமும் மறுபிறப்புக்கு மாறு. பூதமார்க்கமும் மாறு. கிறீஸ்துமார்க்கமும் மாறு. ஆதி இந்துமார்க்கமும் மாறு. பின்னை அதற்கு ஆதாரமென்ன? சர்மா அவர்கள் சைவருடைய பழைய நொண்டிநியாயத்தையேகொண்டுவருகிறார். உலகத்திலே மனுஷருக்குள்ளே குருடு செவிடு மந்தபுத்தி தீவிரபுத்தி முதலிய வித்தியாசங்கள் காணப்படுகிறது. "எடு

த்த சென்மத்தில் வரும்போது இவ்வித்தியாசங் காணப்படுவதால் முன் செய்த புண்ணிய பாவங்களுக்கேற்றதாயிருக்கவேண்டும். அப்புண்ணிய பாவஞ் சடங்களோடே நின்று செய்யப்பட்டனவாகும்'' என்கிறார். குருடு செவிடு முதலிய வித்தியாசங்களுக்கு "முன்செய்த பாவபுண்ணியம்'' அல்லாமல் வேறு காரணஞ் சொல்லக்கூடாதா?* வைத்தியநூல் சொல்லுகிற காரணங்கள் போதாதா? அதொருபுறங்கிடக்க "புண்ணிய பாவஞ் சடங்களோடே நின்று செய்யப்பட்டனவாகும்'' என்கிறார் சர்மா. அப்படியானால் ஆன்மாக்களுக்கு முதன்முதற் கிடைத்த சடங்களிலே ஒருவேற்றுமையுமிருக்கப்படாது. பிரபஞ்சத்திலே முதன்முதல் வந்த உயிருள்ள பொருளெல்லாம் ஒருமாதிரி இருக்கவேண்டியது. ஒன்றில் எல்லாம் ஒருவகையான புல்லு (புல்லு மூளைக்க நிலமுமிருக்கப்படாது. ஏனெனில் நிலம் நிலமாய்வருவதற்குச் செய்த குற்றமென்ன?) அல்லது எல்லாம் ஒருவகை ஒரு உயரம் ஒரு பருமனுள்ள மரம் (மரம் நிற்க பூமியுமாகாது), அல்லது எல்லாம் ஒருவயது ஒரு பருமனுள்ள ஆண்புலி. (பெண்புலியுமாகாது. ஏனெனில் இன்னுமொரு கன்மமும் செய்யாதிருக்கையில் சில உயிர்கள் பெண்ணாய்ப் பிறக்க நியாயமென்ன?) அல்லது எல்லாரும் இராசா. இராசாத்தியிருக்கப்படாது! இராசாக்களுக்குத் தீனுணும் இருக்கப்படாது. தொடக்கத்திலே இப்படியிருந்தால் பிறகு உலகத்திலே வித்தியாசங்கள் வந்ததெப்படி? வேறுவகையாயுஞ் சொல்லுகிறேன். கன்மஞ்செய்ய உடல்வேணும். உயிர்கள் ஒரு கன்மமுஞ் செயயுமுன் அவைகளுக்கு வெவ்வேறுமாதிரியான உடலைக்கொடுப்பது அநீதியாகும். ஆகையால் சகல உயிர்களுக்கும் ஒருமாதிரியான உடலையே சைவருடைய கடவுள் கொடுப்பார். முதற்கொடுக்கப்பட்ட உடல் சகல உயிர்களுக்கும் ஒருமாதிரியென்றால், பிறகு அந்த உடல்களிலே பேதம்வரக்காரணமென்ன? இந்தக் கேள்விக்குச சர்மா அவர்களாவது வேறெந்தச் சைவராவது மறுமொழி சொல்லக்கூடுமானாற் சொல்லட்டும். சொல்லமுடியாவிட்டால் இனி மறுபிறப்பு மறுபிறப்பு என்று குரலையிடாமற் சும்மா கிடந்துவிடட்டும்.

மெய்கண்டதேவர் சுந்தரமூர்த்தி ஆதியவர்களுக்குப் பால பிராயத்தில் ஞானம் உற்பத்தியாகிவிட்டபடியால் அது "இவர்கள் முன்ஜனனத்து எட்டிய நிலையைத்தொட்டு'' இவர்களுக்கு வந்திருக்கவேணுமென்கிறார் சர்மா அவர்கள். மெத்தச்சரி. சகல ஆன்மாக்களும் முதன்முதல் உடல் பெறுமுன்பு ஒருவகையாயிருந்ததென்றால்—எல்லா ஆன்மாக்களுக்கும் முதன்முதல் ஒருவகை உடல் கிடைத்ததென்றால்—மெய்கண்டதேவர் ஆதியோர்க்கு இந்த அறிவுவித்தியாசம் எப்போது வரத்தொடங்கியது? இதை நினையாமற்போனார் நமது சர்மா. அல்லது ஒருவேளை நியாயத்துக்கு ஆற்றாமல் சகல ஆன்மாக்களும் கன்மஞ்செய்யத் தொடங்குமுன் ஆணவமலத்தோடிருந்தன, அந்த ஆணவமலத்திலே வித்தியாசமிருந்தது எனச் சில சைவர் கூறுவார்களானால், ஆணவமலம் சட

* இது இந்த நூலில் 14-ம் பக்கமுதல் நன்றாக விளக்கப்பட்டிருக்கிறது.

மல்லவா? அது ஆன்மாக்களிலே தானாகவே வித்தியாசமாய் வேலைசெய்யமுடியுமா? இப்படிப்பட்ட வித்தியாசமான வேலையை நடத்தினது யார்? இந்தக் கேள்விக்குச் சர்மாவாவது வேறெந்தச் சைவராவது விடைசொல்லக்கூடுமானால் சொல்லட்டும். அல்லது மறுபிறப்புக்கொள்கையை விட்டுவிடட்டும்.

ஈற்றிலே சர்மா அவர்கள் மாணிக்கவாசகர் புல்லு, பூடு, கல்லுமுதலியவைகளாய்ப் பிறந்திருந்தேனென்று சொல்லியதாகவும், புத்தராதிய வேறுசிலர் தாங்கள் முன் நெடுங்காலம் பிறந்து பிறந்துவந்ததாகச் சொல்லியதாகவும் எழுதுகிறார். முந்தின நியாயமெல்லாம் பற்றுமற்போனபோதே இது எதுக்கும் பற்றுமா? நல்லறிவோடிருக்கிற நமக்குள் ஒருவராவது முன்பிறந்துவந்ததாக உணரவில்லை. உணர்ந்தாலும் முற்பிறவி என்றது மேலேகாட்டிய பெலத்த தப்பறைகளுக்கு இடமாகிறபடியால் அந்த உணர்வு ஏதோ தப்பான விளக்கத்தினால் வந்த உணர்வு என்றுதான் தீர்மானிக்க வேண்டியிருக்கிறது மேலும் மாணிக்கவாசகர் தாம் புல்லாயும் கல்லாயும் பிறந்திருந்ததாகச் சொன்ன கதையை நமது சர்மா அவர்கள் நம்பினால், இனி அவர் மாட்டுக்குப் புல்லுப்பிடுங்கவும்படாது. கீரை கிழங்கு காய் கனி சோறு தின்னவும்படாது. ஏனெனில் இவைகளெல்லாம் சைவருடைய ஆன்மாக்கள். இவைகளை உயிர்போக்கித் தின்பது கொலைகொலை! புலைபுலை!

இங்ஙனம், சத்தியநேசன்.

[இந்தக்கடிதம் 1915 ம் ஷு மாசிமீ 6-ந் திகதி வெளிவந்தது. சர்மாவாவது வேறேயாராவது இதுவரையில், அதாவது ஒருவருஷத்துக்குமேற்சென்றும் இதற்கு மறுமொழி கொடுத்தேயில்லை. தங்கள் வழக்கப்படி மறைந்துகொண்டார்கள். இவ்வித ஒழுக்கத்தைப்பற்றி "சமய ஆராய்ச்சியும் நேர்மையும்" என்னும் 17-வது இலக்கத்துண்டுப் புத்தகத்திலே காண்க.]

*Imprimatur*

✠ H. JOULAIN, O. M. I.,
Bp. of Jaffna.

Jaffna, 29th October, 1916.



PRINTED BY C. ANDREW.

CATHOLIC TRACT
No. 15

# NEO-SAIVAISM

# புதுச்சைவம்

---

## முகவுரை

"ஞானசித்தி" எனும் சைவப்பத்திரிகை உலாவிவந்த நாளிலே அதன் பத்திராதிபர் செகமீட்பராகிய யேசுநாதசுவாமியுடைய தேவத்துவத்துக்கு எதிராகச் சிலதடைகளைச் சொல்லியிருந்தார். தடைகாரன் அப்பால் வாயெடாதபடி அவைகளுக்கெல்லாம் "சத்தியவேத பாதுகாவல"னிலே விரிவான துலக்கமான விடைகள் கொடுக்கப்பட்டன. அவ்விடைகள் "கிறீஸ்துவின் கடவுட்டன்மை" எனும் பெயரோடு சிறு புத்தக ரூபமாகவும் வெளிப்பட்டன

"ஞானசித்தி"யாருடைய தடைகளுளொன்று, கிறீஸ்துநாதருடைய போதகம் அருமையான போதகமல்ல, ஞானிகளும் அதைப்போன்ற அதிலும் அருமையான போதகங்களைச் செய்யவில்லையோ என்பது. இத்தடைக்கு "கிறீஸ்துவின் கடவுட்டன்மை"யிலே பின்வரும்விடை கிடைத்தது:—

உள்ளபடி உலகத்திலே மகான்களாய் விளங்கிய அநேகர் அரியவைகளும் சிறந்தவைகளுமான பிரசங்கங்களைச் செய்திருக்கிறார்கள். கிரேக்கருள்ளே கிறீஸ்துவுக்குமுன் பிளேற்றோ, அரிஸ்தோத்தல் ஆதியவர்கள் பெருய்புகழ்படைத்த ஞானிகளாகத் துலங்கியிருந்தார்கள். நம் இந்தியாவிலே கபிலர், வாதராயணர், மகாவீரர், புத்தர் ஆதியவர்கள் செய்த தர்க்கங்களும் எழுதிவைத்த வாக்கியங்களும் எவ்வளவோ அரியவைகள்; பெரும்பாலும் மிகச் சிறந்தவைகள். கிறீஸ்துவுக்குப்பின் சங்கராசாரியர், சைவசமயக்குரவர்கள் ஆதியோர் அரிய பெரிய விஷயங்களை எழுதிவைத்துப்போனார்கள். கிறீஸ்துநாதருடைய திருவாக்குகளிலே துலங்குவது இப்படியான அருமையுமல்ல, சிறப்புமல்ல. ஆனால், இவருடைய வாக்குகளுக்கும் முன்சொல்லிய ஞானிகளுடைய வாக்குகளுக்குமிடையிலே அளவில்லாத பேதமுண்டு. அதைச் சுருக்கமாகக் காட்டுவோம்

முன்சொல்லிய ஞானிகளுடைய அரியசிறந்த வாக்குகள் மனிதரால் புகழப்பட்டன. ஆனால், அவைகள் மனிதரைச் சீர்ப்படுத்தமாட்டாமற் போயின; உலகத்திலே நிலையான நன்மையொன்றையும் நாட்டமாட்டாமற்போயின; உலகம் முழுதிலும் பரவமாட்டாமற்போயின. அவ்

வாக்குகள் ஒருசனத்துள்ளே, ஒரு தேசத்துள்ளே நின்றுகொண்டு, கால கதியிலே கூட்டியுங்குறைத்தும் திரித்தும் உருமாற்றப்பட்டுக்கிடக்கின் றன. அவ்வாக்குகள் சனங்களைச் சீர்ப்படுத்துவதற்குமாறாய்ச் சனங்க ளே அவைகளை வேற்றுருப்படுத்திவிட்டார்கள்; அல்லது அவைகளை முற் றாக ஒதுக்கிவைத்துவிட்டார்கள். கிறீஸ்துநாதருடைய வாக்குகள் அலங் காரம்பொருந்தியவைகளல்ல. புத்தியை மகிழச்செய்யும்படியான நுட் பங்கள் செறிந்தவைகளல்ல. ஆனால், அவைகளே உலகத்தைச் சீர்ப்படுத் திய வாக்குகள்; சன்மார்க்கத்தை நிலைநிறுத்திய வாக்குகள். அத்திரு வாக்குகளாலேதான் முற்கால ஐரோப்பாவின் காட்டுமிருண்டிகளான மகா சனங்களெல்லாம் சாதுக்களாகி, சீர்திருந்தியவர்களாகி இன்றைக் கும் நம்மை ஆண்டுநடத்துகிறவர்களாகிறார்கள். அவர்களுடைய சன் மார்க்கக் கோட்பாடுகளையும் சீர்திருத்தங்களையும் பின்பற்றிய அளவிலே தான் உலகத்திலேயுள்ள பிறசாதிகளும் உயர்ச்சியை அடைகிறவைகளா யிருக்கின்றன. கிறீஸ்துநாதருடைய போதகந்தான் நமது இந்தியாவி லேயும் உடன்கட்டையேறுதல், சிசுக்களை முதலை ஆதியவைகளுக்குப் போடுதல், நரபலிசெலுத்துதல், அடிமையாட்சி, சத்திபூசையோடுசேர்ந்த சில கொடூரங்கள், ஆலயங்களில் நடத்தும் சில துன்மார்க்க கிரியைகள் ஆதிய எத்தனையோ தீங்குகளை வேரோடறுத்து நம்மை இக்காலம் சுக மாய் வாழப்பண்ணிற்று. கிறீஸ்துநாதருடைய போதகந்தான் இந்தியா விலே ராம்மோகன ராய், கேசுப் சண்டர் சென், சுவாமி விவேகானந் தர் ஆதியோரையும், யாழ்ப்பாணத்திலே ஆறுமுகநாவலர் மெஸ். இராம நாதன் ஆதியோரையும் பரோபகாரிகளும் மார்க்க சீர்திருத்தக்காரருமாக் கிவிட்டது. கிறீஸ்துநாதருடைய போதகந்தான் நம் யாழ்ப்பாணச் சைவ ஆலயங்களிலே நாமறிய ஒருகாலம் நடந்துவந்த சதுர் ஆட்டங் கள், சன்னதங்கள், ஆடுகோழிவெட்டிப் பலியிடும் வேள்விகள் இல்லா தொழியவும், நம் சைவ நண்பர்கள் தம்முள் 'ஐக்கியமாகிச் சபைகூட் டல், பிரசங்கஞ்செய்தல், பெண்களைப் பயிற்றல், சூத்திரருக்கு உபதே சஞ்செய்தல், சமயநூல்களைப் பிரசித்தப்படுத்தல் பத்திரிகைநடத்தல்முத லிய பல புது ஒழுக்கங்களை அனுசரிக்கத்தொடங்கவும்பண்ணிவிட்டது. அதுமட்டா! கிறீஸ்துநாதருடைய போதகந்தான் நம்பத்திராதிபர் நியா யத்துடனேயே சிரமேற்கொள்ளுகின்ற சைவ சித்தாந்தத்துக்கு அதின் மிக அருமையான சில போதகங்களைக் கொடுத்ததென்றால், அத்திருப் போதகத்தின் செல்வாக்கை அப்பால் எடுத்துக் கூறவேண்டியதென்ன?

சத்தியவேதத்தினாலேதான் சைவசமயம் திருத்தப்பட்டு மாற்றமடைந்து இன்றைக்கு வேற்றுருவாகி நிற்கின்றது. "பழையசைவ"த்தின் கொள்கைகளையும் இப் "புதிய சைவத்" தின் கொள்கைகளையும் நம்மவர்கள் சீர்தூக்கிப்பார்த்துக்கொள் வது நன்று. இதற்காகவே "சத்தியவேத பாதுகாவல"னிலே புலாலுண்ணுமையையும் சூத்திரப்பிரசங்கத்தையும்பற்றி நடந் த பின்வரும்தர்க்கத்தை இப்போது சிறு புத்தகரூபமாய் வெ ளிப்படுத்துகிறோம்.

# புதுச்சைவமும் புலாலுண்ணாமையும்

---

## I

“ சத்தியவேத பாதுகாவல ”னிலே

ஓர் பழைய சைவன் கேட்ட கேள்விகள்.

1. உலகத்திலே உயிருள்ளதெல்லாம் உயிருள்ளதாலேதான் ஜீவிக்கிறதைக் காண்கிறோம். ஆக, மண்ணுங் கல்லுமே உயிரில்லாதது எனச் சொல்லுகிற் சொல்லலாம். தண்ணீருக்குள்ளும் எண்ணில்லாத சிறுச் சிறு உயிர்களுண்டு. மண்ணையுங் கல்லையும்மாத்திரம் தின்று பிழைக்கிற உயிர் ஒன்றுமில்லை உயிரெல்லாம் உயிருள்ள பொருட்களாலேதான் பிழைக்கிறது. மேலான ஜீவபிராணிகளுக்குக் கீழான ஜீவபிராணிகள் ஆகாரம் எறும்புகள்தானும் தானியவகைகளையோ வேறு எதும் பிராணிகளின் சடலத்தையோதான் தின்னுகிறது. கிழங்கு, பழம் இவைகளெல்லாம் உயிருள்ளவைகள் பெரியமீன்கள் சிறுமீன்களைத் தின்னுகின்றன. சிங்கம் புலிமுதலியவைகள் வேறுமிருகங்களையும், பசு முதலியவைகள் புல முதலிய பிராணிகளையும் புசிக்கின்றன. இந்த ஒழுங்கைப் பூமியிலே வைத்தது யார்?

2. மனிதனும் உயிருள்ள பொருட்களாலேயல்லாமல் தன் உயிரைக் காத்துக்கொள்ளக்கூடுமா? (உயிருள்ள பொருள் என்று சொல்லும்போது அவ்வேளைதானே உயிரோடிருக்கிறதென்ற கருத்து வராது. தின்னுமுன் எல்லாம் உயிர்போக்கவேபடுகிறது.) நெல்லு புல்லு என்கிற எல்லாம் உயிருள்ளவையாயிருக்கும்போது எதைத் தின்னும்போதும் உயிர்போக்குவதாகாதா?

3 மேலான ஜீவர்களெல்லாம் கீழான ஜீவர்களாலே பிழைக்கிறதாகிய இந்த ஒழுங்கு உலகம் முழுதிலும் காணப்படுகிறபோதே, மனிதன் தனக்குக் கீழான ஜீவர்களாகிய நெல்லு கீரை முதலியவைகளைப் புசிக்கிறதுபோல மிருகங்களையும் மனம்போலப் புசிக்கலாமென்று காணப்படவில்லையா?

4. மிருகங்களை உணவுக்காகக் கொல்லும்போது அவைகள் அலறுகிறது என்றால், அலறாமல், வதையாமல் கொன்றுவிடலாமே. அல்லது ஒருதரம் கொல்லப்பட்டதைப் பின்பு தின்னும்போதெல்லாம் அலறுதல் கேட்கப்படுமா? அல்லாமலும் காட்டிலேயுள்ள பிராணிகள் வேறுபிராணிகளைத் தின்னும்போது கேட்கிற அலறுதலுக்கு என்னசெய்கிறது? இந்த ஒழுங்கு உலகநடையிலேசேர்ந்த ஒரு ஒழுங்கல்லவா?

5 மனிதன் இரத்தம் உள்ளதொன்றையும் தின்னப்படாதென்றால் பால் குடிக்கலாமா? மிருகத்தின் இரத்தத்துக்கும் காய்கனிகளின் சாரத்துக்குமிடையிலேயுள்ள பேதமென்ன?

6. மீன்முதலியவைகள் நாறுமென்றால் காய்கனிகள் நாறாவா? பால் புழுக்காதா? பெருங்காயம் நாறாதா? மேலும், வயிற்றிலே உட்படுகிற என்னபதார்த்தம் நாறாதது?

7. கிழங்கு கீரைகளைத் தின்னலாம், மச்சம் மாமிசம் தின்னப்படாது என்றால், கிழங்கு கீரைகளின் சீவனுக்கும் மிருகங்களின் சீவனுக்குமிடையிலுள்ள வித்தியாசமென்ன? இருவகுப்பான பொருட்களிலும் மனித ஆத்துமந்தான் இருக்கிறதென்பதல்லவா சைவருடைய கொள்கை? அப்படியிருக்க கீரையை ஒடிப்பதிலேயும், கோழியை வெட்டுவதிலேயும் உள்ள பேதமென்ன?

8 கீரைமுதலியவைகள் குறைந்த அறிவுள்ளவைகளானபடியாற் பாவமில்லையென்றால், குறைந்த அறிவுள்ளதாகிய ஒரு மனிதகுழந்தையைக் கொல்லுவதிலே பாவமிராதா?

9. கீரைமுதலியவைகளை உயிர்போக்குவதற்குப் பிராயச்சித்தமுண்டென்றால், கோழிமுதலியவைகளை உயிர்போக்குவதற்கு என் பிராயச்சித்தமில்லை? அன்றியும் பிராயச்சித்தஞ்செய்கிற கடமையோடேயல்லாமல் ஒன்றுந்தின்ன முடியாவிட்டால் ஒரு பிராயச்சித்தமுமில்லாமற் சுகமாயிருக்க விரும்பும் மனிதர் ஒன்றும் தின்னுமற்கிடந்து செத்துவிடவேண்டுமா?

10. கீரைமுதலியவைகளின் உயிரைப் போக்குவதா கோழிமுதலியவைகளை அடிப்பதா பெரிய பாவம்? பிராமணன் பெரியவனென்றும் அவனைக் கொல்லுவது பெரிய பாவமென்றும் சொல்லப்படுகிறது. பிராமணனிலும்கீரை பெரிய மனிதன்! பிராமணன் நாள்தோறும் தண்ணீர் குடிக்கும்போதும் பதினாயிரங் கொலைசெய்யாமலிருக்க முடியாது. கீரையோ கொலைசெய்கிறதை அறியோம். கொல்லாமைதான் பெரிய அறமென்று சொல்லப்படுகிறது. ஆனபடியால், கீரையைக் கொல்லுவதே பிராமணனைக் கொல்லுவதிலும் பெரிய பாவமல்லவா?

11. மச்சம் மாமிசம் தின்பது பாவமென்றால் இந்தியாவிலே புத்தமதம் எழும்புமுன் அதை ஒருவரும் அறியாதிருந்ததெப்படி?

12 மிருகங்களைக் கொல்லுவது பாவமென்றால் ஆதிதொட்டுச் சகல தெய்வங்களுக்குமி மிருகபலிதான் உவப்பாய்வந்ததெப்படி? மனிதர் கொலைபாதகத்தைச் செய்வதைக் காண்பதுதான் தெய்வத்துக்கு உவப்போ?

13. இன்றைக்கு முப்பதுவருஷத்துக்குள்ளே யாழ்ப்பாணத்திலே இறக்குறைய எல்லாச் சைவக்கோயில்களிலேயும் ஆடு கோழி அறுத்துப் பலியிடப்பட்டுவந்ததெப்படி?

14 இருக்கு முதலிய வேதங்களிலே கொலைசெய்து படைப்பதைத் தவிர வேறேதாவது முக்கியமான தெய்வவழிபாடு சொல்லியிருக்கிறதா? கொலைசெய்வது பாவமென்றால் வேதம் அதைக் கற்பிக்கலாமா?

15. முன்னோர்கள் யாகத்திலே கொன்ற மிருகங்களைப் பின்பு எழுப்பிப்போட்டார்களென்று ஒரு படுபொய் சொன்னாலும்,பின் எழுப்புகிறதினால் முன்செய்த கொலைபாதகம் பாதகமல்ல என்றுவந்துவிடுமா?

16. சாக்தர்கள் எல்லாரும், வட இந்தியாவின் பிராமணர்களும் இன்றைக்கும் சமயவழிபாடுகளிலேகூட இறைச்சிதின்கிறது எப்படி?

17. கிட்டிணர் இறைச்சிதின்று மதுபானமுங் குடித்துவந்ததும், சிவன்தானே கண்ணப்பர் படைத்த இறைச்சியை உவந்துகொண்டதும், சிறுத்தொண்டரிடத்திலே மிருக இறைச்சியல்ல பிள்ளைக்கறியைக் கேட்டதும், மீன்பிடித்து இழிஞரான பரவத்தலைவனொருவனுடைய மகளைச் சடங்குபண்ணக் கடலுக்குப்போய் வலைவீசி மீன்பிடித்துக்கொண்டதும் எப்படி?

18. சைவன் என்றால் ஆர்? என்னத்தைக் கைக்கொண்டாலும், என்ன துராகிருதமாய் நடந்துவந்தாலும் மச்சம் மாமிசத்தைமாத்திரம் விட்டுவிட்டால் சைவனாய் விடுவானா?

19. முன் மச்சம் மாமிசம் தின்றுவந்தவன் பின் தின்னாமல்விட்டால் சைவனாவானா? தின்னாமலிருந்தவன் தின்றால் அவன் ஆர்? தின்றுவந்தவன் தின்னாமல் விட்டவுடனே முன்தின்ற பாவமெல்லாம் போய்விடுமா? முந்தின பாவத்துக்காகப் பிறந்து உழலாமல் இந்தப்பிறவியிலேதானே அந்தப் பாவத்தைத் தவிர்த்துச் சைவனாகிவிடலாமா? அதற்குப் பிரமாணமென்ன?

20. ஒருபோதும் மச்சம் மாமிசம் தின்னாதவனே சைவனென்றால் உலகம்முழுவதிலேயும் ஒருமிக்க எத்தனை சைவருண்டு?

இங்ஙனம்,

16-3-12. பழையசைவன்.

## II

### "இந்துசாதனக்" பத்திருக்கு பழைய சைவன் சொல்லிய விடை

புலாலுண்ணாமையைப்பற்றி நான் 2 மாசத்தின்முன் கேட்ட கேள்விகளுக்கு இப்போது ஒரு சைவர் விடைசொல்ல எழுந்திருப்பது சந்தோஷம். ஏனெனில், அவருடைய விடையிலே சைவரெல்லாரும் படித்துக்கொள்ளவேண்டிய சில புதுப்பாடங்கள் இருக்கின்றன. இவைகளைச் சைவர் படித்துக் கைக்கொள்ளுவார்களானால் அவர்களுக்கும் நமது நாட்டுக்கும் சீக்கிரத்திலே எவ்வளவோ நன்மையுண்டாகும் என்பதிற் சந்தேகமில்லை

1. "கீரையில் அதன் ஆன்மாவும் மச்ச மாமிசங்களில் அவ்வவற்றின் ஆன்மாவும் உள்ளனவன்றி மனித ஆன்மா அவற்றிலிருப்பதில்லை. அப்படிச் சைவருடைய கொள்கையுமில்லை" என்று சொல்லுகிறார். சைவருடைய சமய குரவர்களுள் ஒருவராகிய மாணிக்கவாசகர் திருவாசகம் பாடியது மனிதராயிருந்துகொண்டல்லவா? அவர் சொல்வதாவது :

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகி
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா அ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்

என்கிறார். (சிவபுராணம் 25) மாணிக்கவாசகர் என்கிற மனிதர், தாம் புல்லு, பூடு, புழு, மரம், மிருகம், பறவை, பாம்பு, கல்லு, மனிதர், பேய், கணம், அசுரர், முனிவர், தேவர் என்கிற எல்லாப்பிறப்பும் பிறந்துவந்தபோது தம் அந்த ஒரு ஆன்மாவே அத்தனை பிறவியிலும்பிறந்து உழன்றுகொண்டு வந்தது என்று சொல்லுகிறாரல்லவா? மாணிக்கவாசகரையும் நம்பாவிட்டால் "சிவஞானசித்தி" என்கிற சைவருடைய சமயநூலிலே

இருவினையின் பத்துன்பத்தில்லுயிர் பிறந்திறந்து
வருவதுபோவதாகும் — என்றும்,
அண்டசம் சுவேதசங்கள் உற்பிச்சம் சராயுசத்தோ
டெண்டரு நாலெண்பத்து நான்குநூ றாயிரத்தில்
உண்டபெல்யோனி; எல்லாம் ஒழித்து மானிடத்துதித்தல்
கண்டிடிற் கடலைக்கையால் நீந்தினன் காரியங்காண

என்றும் ஒரு உயிரே எண்பத்துநான்கு நூறாயிரங்கோடி பேதமான பிறவிகளையும் அடையுமெனச் சொல்லியிருக்கிறது மனுஸ்மிருதியிலேயும் "நரனானவன் சரீரத்தினாற்செய்த தோஷங்களுக்காகத் தாவரமாகவும் வாயினாற் செய்தவைகளுக்காக மிருகபக்ஷிகளாகவும் மனசார்செய்த பாவங்களுக்காகக் கீழ்சாதியாகவும் பிறக்கிறான்" என்று சொல்லியிருக்கிறது (12-ம் அத். 9) "பசு" என்றுசொல்லப்பட்டு, விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்று மூன்றாக வகுக்கப்படுகிற ஆன்மாக்களுள்ளே சகலராகிய இந்த ஒருவகை ஆன்மாவே நால்வகைத் தோற்றமும் எழுவகையுமான சகலபிறவிகளாயும் நிற்குமென்றது சைவநூற் கொள்கையாயிருக்க, நமது நண்பர் ஒரு புதுச்சைவத்தை உண்டுபண்ணி: "மனித ஆன்மா மற்றவையாய்ப் பிறக்குமென்பதுமில்லை" என்றுசொல்லியது நன்றுதான். இந்தப் புதுச்சைவந் தலையெடுக்குமானால் நமதுநாடும் இனித் தலையெடுக்கும்!

2. "மிருகபலி சிவாலய விநாயகராலய சுப்பிரமணியாலயங்களிலே நடக்கின்றதா? மாடன், வீரன், கறுப்பன், காத்தவாராயன்முதலிய பேய்களுக்கு அறிவில்லாத சனங்கள் பலியிட்டுவருகிறார்கள். 'அதற்கும் சைவசமயத்திற்கும் சம்பந்தமென்னை'' — "மேற்சொல்லிய பேய்களுக்

கனறி எந்தச் சைவக்கோவிலிலே பலிநடக்கின்றது?"—இவைகள் நமது சைவநண்பருடைய வார்த்தைகள். இவைகளைப் பார்க்கும்போது சைவர்களாலே மிருகபலி கொடுக்கப்பெறுகிற தெய்வங்களெல்லாம் பேய்களே என்றுமுடிகிறது அப்படியானால், வைரவர், காளி, மூருகவேள் ஆகிய இவர்களார்? இவர்கள் யாருடைய கலை? காட்டுவைரவர் கோவிலில் இன்றைக்கும் நடக்கிற வேள்விகளை அறியாதவர்களார்? இந்தியாவிலே காளிகோவில்களெல்லாம் இன்றைக்கும் இரத்தக்களரிகளல்லவா? முருகவேளுக்குப் பண்டுதொட்டே கடாக்களைப் பலியிட்டுவந்ததை மெஸ். கனகசபைப்பிள்ளை எனும் சைவர் எழுதிய "1800 வருஷங்களுக்கு முற்பட்ட தமிழர்சரிதம்" எனும் நூலிலே காண்க.

3. "சாக்தமதம் சைவமதமல்ல. அஃதொரு பேய்வழிபாட்டுமதம்" என்கிறார். இதையும் சைவர் நன்றாய்க் கவனித்துக்கொள்ளவேண்டியது. சக்தியை வழிபடுகிறவர்கள் சாக்தர். சாக்தருடைய வழிபாடு பேய்வழிபாடென்கிறார் நமது நண்பர். அப்படியானால் சக்தியாகிறது யார்? சக்தியோடுகூடிய ஆண்பாகம் யார்?

4. நண்பர் சொல்லுகிற வேறொரு விசேஷமாவது: "கிருஷ்ணர் யாதவகுலத்தவர். அவர் தங் குலமுறைப்படி மதுமாமிசமுண்டார் கண்ணப்பர்வேடர் மாமிசமுண்ணுங்குலத்தவர். பத்திவழிசென்று தங்குல முறைப்படி நேர்ந்ததைச்செய்தார்...விதிவழிநிற்கக் கடமைப்பட்டோரே அதற்கு அமைந்து நடத்தல்வேண்டும்" என்கிறார். இதுகாரியம் மெய்தான்! பகவற்கீதையிலேயும் சொல்லியிருக்கிறபடி, அவரவர் தங்குல ஆசாரம் தவறாமல் நடப்பதே முத்திக்குவழி. அப்படியிருக்க, மச்சமாமிசமுண்ணுங் குலங்கள் எவை? உண்ணாத குலங்களெவை? இதுதான் இப்போது முடிவுகட்டவேண்டியது. யாதவர் என்கிறவர்கள் இடையரல்லவா? இவர்கள்போக, காட்டையடுத்த குலங்களெல்லாம் ஆதிதொட்டு மாமிசம் உண்ணுங் குலம். நாட்டிலுள்ள உயர்குலம் அதாவது வேளாளர்மாத்திரம் நெடுங்காலமாய் "மாக்கறி தள்ளுபடியாக" ஆரதங்காத்தகுலம். ஆனால், இப்போது ஒருகேள்விபிறக்கிறது. தற்காலம் காட்டுப் பக்கத்தாரோடும் குடிமை அடிமைகளோடும் கலந்துகொள்ளாத வேளாளக்குலம் எங்கிருக்கிறது? இவர்கள்மட்டும் புலாலுண்ணமலிருந்தால் இருக்கட்டும்!!!

அல்லாமலும் வேளாளர் எங்கிருந்து தென்னிந்தியாவுக்கு வந்தவர்கள்? அவர்கள் பயிர்ச்செய்கை செய்யுமுன் எப்படிப் பிழைத்தவர்கள்? சைவருடைய "செந்தமிழ்ப்" பத்திரிகையின்படி, அவர்கள் முன்னே யாதவர்களுடைய துவாரகாபுரியிலிருந்துவந்தவர்கள். ஆகையால், வேளாளரும் ஆதியிலே கிருஷ்ணரைப்போல மதுமாமிசமுண்ணும் குலத்தவர்களல்லரோ என்றதை நண்பர் காட்டட்டும். புத்தர் தென்னிந்தியாவில் வருமுன் எழுதப்பட்ட ஒரு சைவநூல் இருந்தால் அதைக் காட்டட்டும். அப்போது புத்தமதம் எழும்புமுன் "புலாலுண்ணுமை" ஒரு புண்ணியமாகப் போற்றப்பட்டதுதானோ என்று அறிந்துகொள்

னலாம். ஆரியர் யாகத்திலே கொல்லவில்லை என்று நண்பர் சொல்லுவ தைப் பார்க்கும்போது அவர் அதகடிகியாயமேபேசப் புறப்பட்டவர் போலிருக்கிறது. இருக்குவேதத்திலே குதிரையை வெட்டுகிறவிதம் மாட்டிறைச்சியைப் பொரிக்கிறவிதமெல்லாம் சொல்லியிருக்கிறதை யாராவது சமஸ்கிருதம் அறிந்தவர்களிடத்திற் கேட்டறியாராக. இங்கே நான் எடுத்துக்காட்டினுல் பாஷையறியாதவர் அதெல்லாம் பொய்யென்று விடுவார்.

5 கொலைவாயிலாகவருவதை உண்ணப்படாது என்று நண்பர்சொல்லியபின் "முளைக்கீரையை வேரோடு பிடுங்குவது பாவமேயாம்" ஆனல் கீரையை "அரிந்தெடுப்பதிலே கொலையில்லை" யென்றும், "காய்கனிகள் மரஞ்செடிகளின் பயன்கள். அவற்றைக் களைதலினுல் மரஞ்செடிகளுக்கு நோவுண்டாகமாட்டாது" "செடிகள் கொடிகளில்வரும் பயனுகிய கனி கிழங்குகளைக்கொண்டு உடம்பை வளர்க்கலாம். முதல் முதலாயிருக்க இவற்றின் பயனுலேயே சீவிக்க வழியிருக்கின்றது" என்றும் எழுதினுர். மரஞ்செடிகளுக்கு நோவுண்டோ இல்லையோ என்பதல்ல, உயிர் போக்கி கொலைசெய்யப்படுகிறதோ என்பதே கேள்வி. செடிகொடிகள் முதலாயிருக்க அவற்றின் பயனுகிய கனி கிழங்குகளைத் தின்பதிற் பாவமில்லை என்கிருர். ஆனுல் இந்தக் கனி கிழங்குகளே வேறுசெடி கொடிகளுக்கு முதலாய்வருவதையும் இவற்றைத் தின்போர் இவற்றின் உயிரைப் போக்குவதையும் மறந்துபோகிருர். கனிகளைப்போலவே ஒவ்வொரு நெல்லும் ஒவ்வொரு உயிருள்ளது. நெற்பயிரொன்றை அறுப்பது ஒரு பாவமானுல், அதின் கதிரிலுள்ள நெல்லைத் தின்னும்போது நூற்றுக்கணக்கான பாவமாகின்றது முதலுக்கு நோவாமல்வருகிற பயனைத் தின்னலாமென்றல் கோழிமுட்டையும் தின்னலாமே. சற்றே எட்டிமிதித்துக் கோழிக்குஞ்சையும் பாரணம்பண்ணிவிட்டால் என்ன?

6. "இரத்தமுள்ளதைத் தின்னவேண்டில் கொலைசெய்தே தின்னவேண்டும்...பால் அதுபோல்வதல்ல, கொலைசெய்துவருவதன்று. ஆதலினுலே பால்குடிக்கலாம்" என்கிருர். ஆனுல், என்னுடைய கேள்வி இதல்ல. இரத்தமுள்ளதைத் தின்னப்படாதென்கிறவர்கள் இரத்தத்தையொத்த சீவதாதாகிய பாலைக் குடிக்கலாமா என்றதல்லவோ கேள்வி. பாலிலே இரததத்திலுள்ளவைபோன்ற கணக்கில்லாத கிருமிகளுண்டு. பால்குடிக்கிறவர்கள் மாட்டின் உயிரைப்போக்காவிட்டாலும் பால் எவைகள்சேர்ந்து பாலாயிருக்கிறதோ அந்தக் கோடிக்கணக்கான கிருமிச்சாலங்களைக் கொல்லுகிருர்கள் என்றதை நினையாமற்போனுர். மனுஷனுடைய உணவெல்லாம் இப்படியே தனக்குக் கீழான உயிர்தானென்றதும் உலகத்திலே "உயிருள்ளதெல்லாம் உயிருள்ளதாலேதானே சீவிக்கிறது" என்றதின் உண்மையும் இதனுலே விளங்கும்.

7. நாறுகிறபடியால் மச்சமாமிசம் தின்னப்படாதா என்ற கேள்விக்கு "நாறுவனவும் புழுத்தனவும் எவையாயிருந்தாலும் விலக்கப்படு

வனவேயாம்" என்கிறார். அதுசரி. காறல்மீனை வாங்கச்சொன்னதார்? கனிகிழங்கும் உயிர். மீனும் உயிர். இரண்டிலேயும் நாறுததாய்ப்பார்த்து வாங்கிக்கொள்ளட்டும். இயல்பிலே மீனுக்குள்ள மணத்தைப்பற்றிப்பேசவில், அது சிலருக்கு உவப்பு சிலருக்கு வெறுப்பு அப்படியே பலாப்பழத்தின் மணத்தைச் சகிக்கமாட்டாத ஐரோப்பியரையும் அறிவேன். பெருங்காயத்தையோ பிராமணர் உவக்கிறார்கள். வேறுவேறு பொருட்களும் அப்படியே.

8. சைவம் சைவம் என்று பிரசங்கம்பண்ணித்திரிகிறவர்கள் சாந்தம், கற்பு, தாழ்ச்சி முதலிய புண்ணியங்களைப்பற்றி ஒன்றுஞ்சொல்லாமல் புலாலுண்ணாமையைமாத்திரம் திரும்பித்திரும்பிப் போதித்துக்கொண்டுவருவதையும், ஊரிலே சன்மார்க்கரல்ல என்ற பேருள்ளோர் தாம் அதிகமாய்ப் புலாலை விட்டிட்டோம் என்று பறையடித்துத்திரிவதையுங்கண்டே எனது 18-ம் 19-ம் 20-ம் கேள்விகளை வரைந்தேன். இக்கேள்விகளின் நோக்கத்தை அறிந்துகொண்டு நம் நண்பர்கள் திருத்தமடைவதே நன்று.

இதுவரையில் நமது நண்பர் "S. T." சொல்லிய நியாயங்களையெல்லாம் எடுத்தாராய்ந்துபோட்டேன் என்று நம்புகிறேன். இந்த ஆராய்ச்சியினால் முடிந்த முடிபாவது:

(1) புலாலுண்பதிலே உயிர்போக்குதலாகிய கொலையிருக்கிறபடியால் அது பெரியபாவம் என்று தற்காலச்சைவர் போதிக்கிறதைக்கண்டு, அது பாவமென்றால் கீரை காய் கிழங்கு அரிசி பால் என்கிறவைகளிலும் உயிர் உண்டே; அந்த உயிரைப் போக்குவதும் கொலையாயிற்றே; உயிரென்றால், சைவசமயநூலின்படி எல்லாம் ஒரு ஆன்மாதானே; கடவுள் ஆன்மா, மாயை, (பதி, பசு, பாசம்) என்ற இவைமூன்றையுந்தவிர வேறுவகைப்பொருள் (பதார்த்தம்) இல்லையே; அந்தந்தச் சராசரங்களிலே அறிவு வேறுபட்டிருந்துமென்ன; எறும்புமுதல் யானையீறாகவும் ஈரிலைப் பூண்டுமுதல் மராமரமீறாகவும் எல்லாவற்றிலுமிருந்து எல்லாவற்றையும் உயிர்ப்பிக்கிறது சுபாவத்திலே ஒருவகையான ஆன்மாதானே என்று காட்ட சில சாமானிய கேள்விகளைக் கேட்டிருந்தேன். யாழ்ப்பாணச் சைவருடைய பிரதான பத்திரிகையாகிய "இந்துசாதனத்"திலே வெளிப்பட்ட நண்பர் இந்த நியாயத்தின் மறுக்கக்கூடாத பெலத்தைக் கண்டுகொண்டு சைவத்தின் அத்திவாரமான கொள்கைகளையேமாற்றிக் காட்டுகிறவரானார். மனிதனுடைய ஆன்மா கீரைமுதலியவைகளிலே போயிருப்பதில்லையென்கிறார். அப்படியானால் மனிதனுக்கு மறுபிறப்பில்லையென்றாயிற்று. மறுபிறப்பில்லையாகவே அதிலே ஊன்றிநிற்கிற சைவமும் பொய்யாயிற்று. அதினாலேதானே வந்த சைவருடைய புலாலுண்ணாமைக் கோட்பாடுந் தவறாயிற்று.

(2) ஆதிதொட்டு இந்நாள்வரையிலும் சைவத் தெய்வங்களுக்கு மச்சமாமிசங்கள் பலியிடப்பட்டுவருவதை எடுத்துச்சொல்லி, முன் சாப்பட்டுவந்ததை இப்போது சாப்பட்டாலென்ன? என்றுகேட்க, நமது நண்பர்

சைவத்தெய்வங்கள் கடவுளல்ல என்று வெளிப்படுத்துகிறார். ஆகவே சைவமும் பொய்யாயிற்று. புலாலுண்ணுமைக்கொள்கையுந் தவருயிற்று

3. மேலும் மச்சமாமிசம் உண்ணுங் குலத்தவர்கள் அவைகளைச் சாப்படலாம் என்று சொல்லியதினுல் இப்போது யாழ்ப்பாணத்திலுள்ள சகலரும் மச்சமாமிசம் சாப்படத்தக்கவர்களேயென்றதைக் காட்டிவிட்டார். அல்லாமலும் 'புலாலுண்ணுமை''க்கொள்கை இடையிலேவந்ததென்றும், ஆகவே சைவ ஆசாரங்கள் முற்கால பூர்வோத்தரம் அறியாத சிலரால் ஏற்படுத்தப்பட்டனவென்றும் ஒத்துக்கொண்டதாயிற்று. கொள்ளவே சைவமும் பொய்யாயிற்று. புலாலுண்ணுமைக்கொள்கையுந் தவருயிற்று.

4. மச்சமாமிசம் கொலைவாயிலாய் வருவதென்ருல் காய்கிழங்குகளும் அரிசியும் அவ்வவற்றின் கொலைவாயிலாகவே வருகிறது. இரத்தமுள்ளதிலே கொலையுண்டென்ருல், பால்முதலியவைகளிலேயும் கணக்கில்லாக் கொலையுண்டு. மச்சமாமிசமணஞ் சிலருக்குப் பொருந்தாதென்ருல், சிலகிழங்கு பழவகைகளின் மணமும் சிலருக்குப் பொருந்தாது. உள்ளபடியே உயிருள்ளது உயிருள்ளவைகளினுலல்லாமல் ஜீவிக்கமுடியாது. ஆகையால், மனுஷன் தனக்குக் கீழான வரிசையிலுள்ள எதையும் உண்ணலாம் என்பதுதான் கடவுள்வைத்த நியமிப்பாகமுடிகிறது. முடியவே இந்த நியமிப்பை அழித்துப்பேசுகிற சைவமும் பொய்யாயிற்று. புலாலுண்ணுமைக்கொள்கையுந் தவருயிற்று. "பிரமா சில ஜீவர்களை உண்ணப்படவும் வேறுசீவர்களை அவற்றை உண்ணவும் சிருட்டித்தார்" என்று மனுஸ்மிருதி(5-ம் அத். 30) வாய்தடுமாறிச்சொல்லிய வாய்மையே உண்மையாகிறது.

இங்ஙனம்,

[illegible]-6 12. பழைய சைவன்.

# புதுச்சைவமும் சூத்திரப் பிரசங்கமும்

---

## I

"சத்தியவேத பாதுகாவல"னிலே
பழையசைவன் கேட்ட கேள்விகள்.

### நவீன பிரசங்கிகளுக்கு

1. சைவசமயக் கொள்கைகளின்படி ஆன்மாக்களுடைய பக்குவ அபக்குவம் அறியாமல் பொதுவிலே பலருக்குச் சமய உண்மைகளைப் போதித்தல் தகுமா? படிப்படியாய் மேற்பிறவிகளிலே பிறந்து "தவஞ் செய்சாதியினில்வந்து" (சிவ. சித் 2; 99) இருவினையொப்பும் மலபரிபாகமும் அடைந்திருக்கும ஆன்மாக்களுக்கு சிவன்தாமே ஒரு ஞானாசிரியரை அதிட்டித்துநின்று தீட்சைசெய்து ஞானத்தைப் போதிப்பார் என்றிருக்கையில் (சி.சி 8;10) பருவமடையாதவர்களுக்குச் சைவப்பிரசங்கஞ் செய்வது சரியா? இவ்வாறு பக்குவமில்லாதோர்க்கு ஞானத்தையோதுவோர் நிரயத்துக்காளாவர் எனச் சைவநூல்கள் கூறவில்லையா?

2. பிரசங்கிக்கும் உரிமை யாருடையது? பகவத்கீதையிலே கிருஷ்ணர் சொல்லுகிறபடி. ஈசுவரன்தாமே பிரம, சத்திரிய, வைசிய, சூத்திரர் என்னும் நான்குவருணங்களையும் அவரவருடைய குணங்களுக்கிசையச் சிருட்டித்தார் (4; 13) இவர்களுள் பிராமணருக்கே வேதங்களை வாசித்தலும் பிறர்க்குக் கற்பித்தலும் உரியதொழில். சூத்திரருடைய தொழில் யாதெனில்:

பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம்

"இந்த முக்குலத்துளோர்க்கும் ஏவல்பூண்டொழுகுகின்ற"தேயொழிய வேறல்ல. சூத்திரர் வேதத்தைக் கேட்கத்தானும் அருகரல்லர்.

அத ஹாஸ்ய வேதமுபச்ருண்வதஸ் த்ரபுஜதுப்யாம்
ச்ரோத்ர ப்ரதிபூரணம்
உதாஹரணே ஜிஹ்வாச்சேதோ தாரணே சரீரபேத:

"வேதத்தைச் சூத்திரன் கேட்குங்கால் அவன் காதுகளை உருக்கிய ஈயத்தினும் மெழுகினும் நிறைக்கவேண்டும் வேதங்களை உச்சரிக்குங்கால் நாவை இரண்டாக வெட்டவேண்டும். மனதிலே வைத்திருந்தால் சரீரத்தை இரண்டாய்ப் பிளக்கவேண்டும்" (கௌதமர் 12; 46) இப்படிச் சொல்லியிருக்கையில் பிராமணரல்லாதவர்கள் வேதவாக்கியங்களை எடுத்துப் பிரசங்கம்பண்ணலாமா?

3 அவரவர் தம்தம் வர்ணத்துக்குரிய தொழில்களைச் செய்வதே முத்திக்கு வழியெனச் சைவவேத ஆகமங்கள் கூறுகின்றன.

வர்ண கர்மாணி யே கேசித் தேஷாம் இஹ ந குர்வதே
க்ருத கர்ம க்ஷிதி: ப்ராஹு: ஆச்ரமஸ்தான வாசிந:

அதாவது: தத்தம் சாதிக்குரிய தொழில்களைச் செய்யாதொழிவோருக்கு முனிவர்கள் "புண்ணியங்கொன்றவர்கள்" எனும் பெயரைச்சொல்லுகிறார்கள். (மார்க். 8; 177) இந்தச் சுலோகத்துக்கொப்ப 'தன்தொழில் விட்டவன் சாதியிற் கெட்டவன்" எனும் ஓர் உலகமொழியும் வழங்குகிறது. எவ்விதத்திலும் தன் சாதித்தொழிலையேசெய்து ஈடேறவேண்டுமென கிருஷ்ணரும் பகவத்கீதையிலே சொல்லுகிறார்.

ச்ரேயாந் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத்ஸ்வநுஷ்டிதாத்

அதாவது: தன்சாதிக்குரிய ஒரு கெட்ட தொழிலைத்தானும் கைக்கொள்ளுதல் பிறசாதித்தொழிலை நன்றாய் அனுசரிப்பதைக்காட்டிலும் உத்தமமாம். (18; 47) இப்படியிருக்கும்போது சூத்திரர்கள் தங்கள் சுயசாதித் தொழில்களை விட்டிட்டு முதற்சாதியாருடையதாகிய வேதம் ஓதுந்தொழிலை மேற்கொள்ளலாமா? அவ்வாறு சாதித்தருமம் தவறி ஒழுகுவோர் அடையும் பதவி எது?

4. "நாங்கள் ஞானநூல்களைப் பிரசங்கிக்க வந்தோமல்லோம், அதற்குப் பக்குவம்வந்து வாய்க்கும்பொருட்டு புலாலுண்ணாமையைமாத்திரமே போதிக்கின்றோம்" என்பீராயின், புலாலுண்ணாமையைத்தானும் போதிக்க உமக்கு உரிமையாது? அவரவர் கன்மத்தின்படி

புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலும் ஆச்சிரம
அறத்துறைகளவை அடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும்
அருங்கலைகள் பலதெரிந்தும் ஆரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும்வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்து சென்றாற் சைவத்
திறத்தடைவர்; இதிற் சரியை கிரியாயோகம்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்.

நீர் உமது சாதித்தொழிலோடு அடங்கியிரும் ஆன்மாக்கள் படிப்படியாய்ப் பிறந்து பிறந்து புலாலை விடுகிற சாதியிலே குலத்திலே பிறக்கும்போது புலாலையும் மறந்து, ஈடேறுகிறகாலம் எப்போதாவது வருமானால் ஈடேறிக்கொள்ளும். நீர் எரிவாய் நரகுக்காளாகும் வகையாக உமது தொழிலைவிட்டுப் பிறருடைய தொழிலிலே தலைப்பட்டு உழலாதிருத்தலே தகுதி. உம்மை இத்தீச்செயலிற் கையிடச்செய்வது உமது பிராரத்தகன்மமே என்பீராயின் அதற்காக நாம் மிகத் துன்புறுகிறோம்.

5. அப்பால் நீர் சைவர் ஆயின், புலாலுண்ணாமையை ஏன் போதிக்கிறீர்? கொல்லாவேதம் என்பது எது? சைவமா? சமணமா? சமண சமயத்துக்கன்றோ.

அவ்சொரிந்தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று?

சைவசமயத்திற்கு "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட்டேரியோம்பும் சிறப்பர் வாழ்தில்லை"யே உரியது. சிவன்தாமே மீன்பிடித்தார்; (திருவிளையாடல்) இறைச்சிதின்றார் (பெரியபுராணம்) சிவனடியாரும் மச்சமாமிசம் புசியாமையை ஓர் பெரிய அறமாகப் போற்றிஞரில்லை.

அங்கமெலாங் குறைந்தழுகித் தொழுநோயாராய்
ஆவுரித்துத்தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரத்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் யாம் வணங்குங் கடவுளாரே

எனவும்

கானநாடு கலந்து திரியில் என்?
ஈனமின்றி இருந்தவஞ்செய்யில் என்?
ஊனை உண்டலொழிந்து வானநோக்கில் என்?
ஞானன் என்பவர்க்கன்றி நன்கில்லையே

எனவும் நாவுக்கரசர் சொல்லவில்லையா? ஆதலால், நீர்செய்யும் பிரசங்கமெல்லாம் அர்த்ததோஷத்தாலும் ஆசிரியதோஷத்தாலும் அதிகாரிதோஷத்தாலும் சைவசமயத்துக்கடாத பெரும் பாதகங்களாகி உம்மையும் உமக்குச் செவிகொடுப்போரையும் நிரயவேதனைக்குரியோராக்குகின்றமையைக் காண்க.

இங்ஙனம்,

24-5-13. பழைய சைவன்.

## II

### "இந்துசாதனக்"கடிதருக்கு
### பழைய சைவன் சொல்லிய விடை

வைகாசிமாதம் 24-ந்திகதி பிரசுரமான "சத்தியவேத பாதுகாவல்"னிலே "நவீனபிரசங்கிகளுக்கு" எனும் தலைப்பெயரோடு சில கேள்விகள் கேட்கப்பட்டன. அக்கேள்விகளுக்கு இப்போதே "சதாசைவன்" என்பவர் விடைசொல்ல வெளிப்பட்டிருக்கிறார். இவர் "இந்துசாதன"த்திலே மூன்றுபத்தி நிறைய எழுதியிருக்கிறதிலே அரைப்பத்தியளவுதான் ஏதாவது கேள்விக்கு மறுமொழிசொல்லுகிற பாகமாயிருக்கிறது மற்றதெல்லாம் ஆளிற் சருவிப் பேசியிருக்கிற வீணபேச்சுக்களும் "மற்றொன்று விரித்தலு"மாயிருக்கிறபடியால், கேள்விக்கு மறுமொழியாய் இவர் சொல்லியவைகளைமாத்திரம் இங்கே கவனிப்பேன். முதல பழையசைவன் கேட்டகேள்வி ஒவ்வொன்றையும் சுருக்கிச்சொல்லி, பின் "சதாசைவன்" அவைகளுக்குக் கொடுத்த மறுமொழியை முழுதாக அவர் வார்த்தைகளிலேயேதந்து, அப்பால் எனது குறிப்புக்களைக் கீழே வரைவேன். இப்படிச் செய்வதினுற் குதர்க்கத்திற்கு இடமில்லாமற் போவதோடு வாசிப்போருக்கும் பிரீதியோடு நல்விளக்கம் உண்டாகுமென்று எண்ணுகிறேன்.

# I

**பழையசைவன்**—முத்திக்குரிய போதகத்தைக் கேட்கப் பக்குவம் அடையாதவர்களுக்குச் சைவப்பிரசங்கஞ்செய்வது சரியா? பக்குவ ஆன்மாக்களுக்குச் சிவன் அல்லவோ குருவினிடமாய் வெளிப்பட்டுப் போதகஞ்செய்வார்?

**சுதாசைவன்**—"சிவமே குருவை அதிட்டித்துநின்று அதீதநிலையை வெளிப்படுத்துவர் என்பது நீவிர் ஏற்றுக்கொண்ட விடயமாயிற்றே. ஆகவே அந்நிலையையுணர அபக்குவிகளாயிருப்போர்க்கு ஞானிகளின் உபந்நியாசங்கள் இன்றியமையாதனவன்றோ? ...சி.சி. 8. 10 இல் கூறிய படி இருவினையொப்பும் மலபரிபாகமும் வருதற்குத்தக்க நெறியிற்சேறல், சைவப்பிரசங்கவாயிலாகத் தாம் கேட்டுணர்ந்த அறிவைச் சாதனமாகக்கொண்டன்றோ?"

**குறிப்பு**—சிவன் வெளிப்பட்டு ஞானத்தைப் போதிக்குமுன் அபக்குவிகளைப் பக்குவிகளாக்குவதற்குச் சிவன்தாமே ஏற்படுத்திய வழி என்ன? போதகமா? அல்ல. படிப்படியாய்ப் பிறந்துபிறந்து மேலுக்கு ஏறி ஏறி வருவதே வழியென்று சித்தாந்த நூலெல்லாம் சொல்லுகிறது. * மலபரிபாகம் வருவது எப்படி? அதுவும் பிறவிகளாலேயொழிய போதகத்தினாலல்ல. போதகத்தினால் மலபரிபாகம் வருமென்றால், மறுபிறப்பில்லையென்றுபோய்விடும் அப்போது சைவத்தின்பாடும் தட்டுக்கேடாய் முடியும். இருவினையொப்பு வருவதெப்படி? அதுவும் வினைக்கீடாகப் பிறவிகளை எடுத்தெடுத்தே வருமென்றது சித்தாந்தம். ஆகையால். பக்குவமில்லாதவர்களுக்குப் பிரசங்கத்தினால் பக்குவம் வருமென்றதும், இருவினையொப்பும் மலபரிபாகமும் உண்டாகுமென்றதும் சைவத்துக்கடாத புதுக்கொள்கைகள். சைவசமயத்தின் பழைய, அதாவது, சொந்தக் கொள்கையின்படி, பக்குவமுள்ளவர்கள் அவ்வப்பருவத்துக்குரிய தீட்சைகளைப்பெற்றுக் குருமுகமாகச் சமயநூல்களை ஓதியுணரவேண்டுமென்றிருந்தது. அதினாலே சனங்களுக்குப் பிரசங்கிக்கும் ஏற்பாடொன்றுமிருக்கவில்லை. பிரசங்கிக்கும் தொழிலுள்ளவர்கள் நியமிக்கப்படவுமில்லை. சமய உண்மைகளைப் பிரசங்கிப்பதற்கு மாறாக மறைத்து மறைத்துவைத்து வந்ததினால், சமயத்துக்குத் தமிழிலே "மறை" என்றபெயரும் ஏற்பட்டுவிட்டது இப்போதுதான் புதுச்சைவர்கள் பிறசமயிகளைக்கண்டு தாங்களும் பிரசங்கம்பண்ணத் தலைப்பட்டுக் கண்டபாவனையிலே கொண்டை முடித்துக்கொள்ளுகிறார்கள்.

**பழையசைவன்**—உங்கள் சமயத்தின்படி ஆசாரிய தீட்சைபெற்ற குருவன்றிப் பிறர் சமய உண்மைகளைத் தெரிவிக்கக்கூடாதிருக்கையில், பக்குவம் அபக்குவந்தெரியாமற் பொதுவிலே பலருக்கும் பிரசங்கிப்பது தகுமா?

**சுதாசைவன்**—"உபந்நியாசங்களை உணர்ந்துகொள்ளச் சக்தியற்ற அபக்குவர்க்கு மெய்ந்நெறியைக் கூறுவது அவசியமேயாயினும் ஓர் உபந்

* "இந்துசாதன"த்திலே சுகாசர் சபாரத்தினமுதலியார் இந்நாட்களிலே எழுதிவரும் "வினைப்பயன்" எனும்விஷயங்களிலேயும் இதைக்காண்க

நியாசகர் நடத்தும உபந்நியாசத்தின் சமூகத்துள்ள பல வேறுவகைப்பட்ட சனங்களுள் எவன் பக்குவன் எவன் அபக்குவன் என்பதை அவ் உபந்நியாசகர் அறிந்துகொள்ளுதல் எத்துணை கஷ்டமென்பது சகலரும் அறிந்தவிடயமே. ஆனதன்மையினாலே உபந்நியாசத்தை நடத்தவேண்டியது அவ்வுபந்நியாசகர் கடமையேயன்றிச் சகலரும் அதனை யுணர்ந்து கொள்ளும்படிசெய்துவைத்தல் அவரால் இயலாததோர் கருமமேயாம்.''

**குறிப்பு**—உபந்நியாசத்தைப்பற்றியல்ல சமயப்பிரசங்கத்தைப்பற்றிப் பேசுகிறோம். சமயப்பிரசங்கஞ்செய்யச் சூத்திரருக்கு மாத்திரமல்ல பிராமணருக்கும் ஒரு கடமையுமில்லை. அம்மட்டா? சமயப்பிரசங்கஞ்செய்வது பாவமுமாகும். ஏனெனில், சிவன் ஆன்மாக்களைப் பக்குவிகளாக்கும்பொருட்டுப் பிறவிகளைக்கொடுத்துச் செலுத்திக்கொண்டுவர, இவர்கள் அவருடைய ஆணைக்குமாறாக அவர் விதியாத வேறோர்வழியால் அவைகளைப் பக்குவிகளாக்கப் பார்க்கிறார்கள். இது ஒன்று. அப்பால் அபக்குவிகளை யாரென்றறியும்வலி தமக்கில்லையென்று தெரிந்துகொண்டும் பொதுவிலே ''பல வேறுவகைப்பட்ட சனங்களுக்கு'' ''மெய்நெறியைக்''கூறுவதினால் சைவநூல்கள் அபக்குவிகளுக்கு உபதேசிப்போருக்கு இடும் தண்டனைக்கும் உள்ளாகிறார்கள்.

## II

**பழையசைவன்**—சைவசமயத்தின்படி பிரசங்கிக்க இடமுண்டு என்றுதான் வைத்துக்கொள்ளுவோம் அப்படியானால் பிரசங்கிக்கத்தக்கவர்களார்? அந்த உரிமை யாருடையது?

**சதாசைவன்**—''பிரசங்கிக்கும் உரிமையும் ஆற்றலும் பிராமணருக்கேயன்றி வேறெந்த வருணத்தாருக்கும் உடையதன்று. ஆனால், பிராமணத்துவம் அறிவின்பாலதேயன்றி தேகத்தின்பாலதன்று. சகலதேகங்களும் பூதங்களின் பஞ்சீகரணகாரியங்களின் கலப்புற்ற பொய்த்தோற்றங்களாதலின் தாரதம்மியமுடையனவாகா. தத்தம் வருணாச்சிரம தருமங்களை ஒவ்வொருவரும் விதிப்பிரகாரம் செய்துவருவாரேயாயின் படிப்படியாய் மேற்படிகளாகிய மேல்வருணங்களையடைந்து ஈற்றிற் பிராமணத்துவத்தையடைவர். எனவே ஞானமார்க்கத்தை உபந்நியாசிக்க எவன் ஆற்றலுடையவனோ அவனே பிராமணன் என்பதில் யாதொரு சந்தேகமும் வேண்டுவதில்லை.''

**குறிப்பு**—முன், பிரசங்கிக்கும் ஆற்றல் பிராமணருக்கே உரியது என்றுசொல்லி, பின் எவன் பிரசங்கிக்க ஆற்றலுடையவனோ அவனே பிராமணன் என்று சொல்லுவது தலைதடுமாற்றமாகிறது பிரசங்கிக்கும் ஆற்றல் பிராமணனுக்கே உரியதானால், வேறொருவனுக்கு அந்த ஆற்றல் வந்து அதினால் பிராமணனாவானோ? இதுநிற்க, தத்தம் வருணாச்சிரம தருமங்களை விதிப்பிரகாரம் செய்துவந்து படிப்படியாய் மேல்வருணங்களை அடைந்து ஈற்றில் பிராமணனாகவேண்டும் எனச் சதாசைவன் சொல்லுகின்றமையால், இப்போது தம் வருணாச்சிரம தருமத்தைக் கைவிட்டு பிராமணருக்கே உரியதாகிய பிரசங்கிக்கும் தருமத்தை மேற்கொண்ட

வர்கள் ஒருபோதும் பிராமணராகார்கள் என்றதாயிற்று. ஏனெனில், தத்தம் வருணாச்சிரம தருமத்தைக் கைவிட்டது கீழ்ப்பிறவிக்குக் கொண்டுபோகும் ஓர் பாவமாயிற்று. அன்றியும், கீழ்வருணத்தைச்சேர்ந்த ஒருவன் மறுபிறப்படையாமல் இப்பிறப்பிலேயே மேல்வருணத்தவனாகலாமா? ஒரு சூத்திரன் தன் வருணாச்சிரம தர்மமாகிய ஏவற்தொழிலைக் கைவிட்டிட்டு மறுபிறப்பில்லாமல் இப்பிறப்பிலேயே பிராமணனாகிவிடலாமா? சூத்திரன் போகட்டும், தமிழருள் வேளாளர் தங்களை ஓர்வேளை வைசியர் என்று சொல்லிக்கொள்ளக்கூடும் அதற்கும் சம்மதம். வைசியர் தந்தொழிலை விட்டிட்டு இப்பிறப்பிலேயே பிராமணராகிவிடலாமா? ஆகிவிடக் கூடாவிட்டால் (வண்ணார் முதலியோரைப்பற்றிப் பேசவேண்டாம்) வேளாளர்தாமும் பிரசங்கிக்கக்கூடாது. ஏனெனில், "பிரசங்கிக்கும் உரிமையும் ஆற்றலும் பிராமணருக்கே"யுரியது. அன்றி, கீழ் வருணத்தாரும் இப்பிறப்பிலேயே பிராமணர் ஆகிவிடக்கூடுமானால், இவர்களை அரைப்பிராமணர் காற்பிராமணரென்று வைத்துப்பார்க்க வேண்டியதில்லை. பிராமணரென்றால் முழுப்படியே பிராமணராகவேண்டும் ஆகையால். பிராமணத்துவமடைந்து பிரசங்கிக்கத் தொடங்கியிருக்கிற சூத்திரர்கள் அந்தியேஷ்டி செய்யலாம்! சைவ ஆலயங்களிலே பூசைமுதலியவைகளையும் நடத்தலாம்! இதற்குச் சம்மதமா?

## III

பழையசைவன்—தந்தொழில்விட்டு மேல்வருணத்தாருக்குரிய தொழிலைச் செய்வோர் அடையும் பதவியென்ன?

சதுசைவன்—[இதற்கு ஒருமறுமொழியுஞ் சொல்லவில்லை.]

குறிப்பு—சைவசமயத்தின்படி மானுடப்பிறவியே அநாதியான ஆணவமலத்தினாலுண்டான அலமரலை நீக்குவதற்கு வாயில் அதிலும் 'உத்தமசமயத்துக்குரியதாய் உத்தமநாட்டிற்பிறக்கும் உத்தமசாதியே அதற்கு வாயில்" (சி.சி 2; 89, 90 சிவஞானசுவாமிகளுரை) அந்த உத்தமசாதியில்வந்து பிறக்குமளவும் சூத்திரரென்ன மற்றோரென்ன பிறந்து பிறந்து காற்றாடியைப் பம்பரத்தைப்போற் சுழன்றுகொண்டுவரவேண்டும். சிவன் வெளிப்பட்டு ஞானத்தைப் போதித்துச் சீவன்முத்தராக்குமட்டும் சகல சைவரும் "அஞ்ஞானிகள்." இது என்னுடைய பேச்சல்ல சைவநூல்களின் பேச்சு. ஞானியென்றபெயர் சீவன்முத்தருக்கேயொழிய வேறொருவருக்குஞ் செல்லாது. இப்படியிருக்கையில் "அஞ்ஞானி" என்று சைவநூல்கள் காட்டும் சூத்திரர் ஆதியோர் ஞானநெறியைப் பிறருக்குப் போதிப்பதெப்படி? தான்போக வழியறியாதவர் பிறருக்குக் காட்டுவதெப்படி? ஆகவே, சைவநூல்களின்படி (என்கருத்தின்படியல்ல) தற்கால நவீன பிரசங்கிகளெல்லாம் குருடனுக்கு வழிகாட்டும் குருடரேயாகையால் இருபாலாரும் கிடங்கில் விழவேண்டியதே நியாயமாகிறது.

## IV

பழையசைவன்— ஞானநெறிவேண்டாம், புலாலுண்ணாமையைத் தானும் போதிக்க உங்களுக்கு அதிகாரமென்ன? ஆன்மாக்கள் பிறந்து

பிறந்து புலாலை மறுக்கிறசாதியிலேவந்து ஈடேறிக்கொள்ளட்டும். அதற்காகத்தான் மறுபிறப்பு என்ற ஒரு வாய்ப்பான வழிபாடு இருக்கிறதே. நீர் ஏன் குல ஆசாரந்தப்பிநடந்து கெடுகிறீர்?

சதாசைவன் - [இதற்கும் நேரே மறுமொழிசொல்லாமல் பின்வருமாறு எழுதுகிறார்] "புறச்சமய நெறிநின்றும்" என்றற்றொடக்கயாயுள்ள செய்யுளின் றாற்பரியம் என்னையெனின், மானுடப்பிறவிகள் வாய்க்குந்தோறும் பிரசங்கவாயிலாகவும அப்பிரசங்கங்களை அனுஷ்டிக்குந்தோறும் வரும் அனுபவ வாயிலாசவும் சிறிதுசிறிதாக மேனோக்கிச்சென்று சிவனடியைச் சேர்வர் என்பதேயாம் ஆதலாற் சைவப்பிரசங்கங்கள் சிவஞானத்தைக் கொடுப்பதற்கு இன்றியமையாதனவேயென்க."

குறிப்பு—சைவப்பிரசங்கங்களல்ல, மறுபிறவியே சிவன்வந்து சிவஞானத்தைக் கொடுப்பதற்கு இன்றியமையாததென்பது பழைய சைவபோதனை. பிரசங்கவாயிலாக சிறிதுசிறிதாக மேனோக்கிச்செல்லலாம் எனவைத்தது தற்காலப் புதிய சைவபோதனை. அன்றியும், பிரசங்கிக்கிற் பிராமணரே பிரசங்கிக்கவேண்டும். இதை மேலே நன்றாய் விளக்கினேனாகையால் மீண்டும் சொல்லவேண்டியதில்லை.

## V

பழையசைவன்—புலாலுண்ணாமை உள்ளபடியே சைவபோதனையா?

சதாசைவன்— "கொல்லாமையைச் சைவசமயம் பரிபாலிக்கவில்லை. 'சிவன் மீன்பிடித்தார்' 'இறைச்சிதின்றார்' சிவனடியார் மாமிசம் புசியாமையைப் போற்றவில்லை' 'திருவள்ளுவநாயனார் சமணசமயி' என்றற்றொடக்கமாயுள்ள மலடிமைந்தனைப்போன்ற சில வசனங்களைக் கற்பித்துசகூறத் தலைப்பட்ட நீவிர் வேறு எவ்வித பொய்மார்க்கங்களைத்தானும் ஸ்தாபிப்பதற்குச் சற்றேனும் பின்னிற்கமாட்டீர் என்பதனைக் கண்டுகொள்க."

குறிப்பு—சதாசைவன் எனது கேள்விகளுக்கு மறுமொழிசொல்லாமல் ஆளிற் சருவுகிறபடியால் அவர் அவைகளை ஒத்துக்கொண்டாரெனத் தோற்றுகிறது.

பழையசைவன்—சிவனடியாரும் மச்சமாமிசம் புசியாமையை ஓர் பெரிய அறமாகப் போற்றினாரில்லை. சிவனுக் கன்பராயிருத்தலும் ஞானத்தைத் தேடுதலும் உண்டானால் புலாலுண்பதிற் காரியமில்லை என நாவுக்கரசர் சொல்லவில்லையா?

சதாசைவன்— "திருநாவுக்கரசுநாயனார் 'ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்' எனத்திருவாய்மலர்ந்தருளியவிடத்து, 'ஏனும்' என்னும் பதத்திலுள்ள உம்மை இழிவு சிறப்பும்மையாகலின் ஆவுரித்துத்தின்றுழலுதல் வைசயசமயத்திலுள்ள ஒருவன் இயற்றக்கூடிய சகல இழிந்த செய்கைகளைப்பார்க்கினும் இழிந்தசெய்கையென்றது விளங்கக்கிடக்கிறதன்றோ...ஊனையுண்டொழித்து வான்நோக்கிலேன்? ஞானமென்ப

வர்க்கன்றி நன்கில்லையே' என்றகினல் நாயனர் ஞானமின்றி முத்தி கிட்டாதென்பதை வற்புறுத்துகிறரேயன்றி ஊனை உண்ணலாமென்று கூறினரல்லர். இங்கே 'ஊனை உண்டலொழித்து வான்னோக்கிலென்' என்பது பிறவித்துன்பத்தை நிர்மூலமாக்கும் விரதத்தை ஒழித்து முத்தியின்பத்தை நாடுதல் விருதாவாக முடியுமென்பதேயன்றோ.''

**குறிப்பு**—சதாசைவன்சொல்லும் பொருளும் எனக்குச் சம்மதம். அப்படிப்பார்க்குமிடத்திலும் புலாலுண்ணமை பெரிய அறமல்ல, முத்தியைத் தரத்தக்கதல்ல, கடவுளுக்கு அன்பனுதலும் ஞானத்தை அடைதலுமே அவசியமென்பதுதான் தொனிக்கிறது ஆவுரித்துத் தின்றுழலும் புலையன்தானும் கடவுளுக்கன்பனுனல் அவனைக் கும்பிடலாம் என்கிறர் திருநாவுக்கரசர். ஆகையால், சனங்கள் வெறுக்கிறதாகிய மாடுதின்னுதல் தானும் அன்பனிடத்திலே குற்றமல்ல. ஆனல், அன்பனல்லாதவன் (ஞானமில்லாதவன்) புலாலுண்ணமையை அநுசரித்தும் பிரயோசனமில்லை என்பதுதான் நாவுக்கரசருடைய போதகம். இப்போதகத்தின் முன்னே புலாலுண்ணமை மிகச்சிறிய ஒரு விரதமாய்ப்போகிறது. சைவசமயம் முன்னே இது இல்லாமல் நின்றது. இன்னும் நிற்கக்கூடும். ஆகையால், கடலிலேநின்று கரைக்குக்கொணரப்படும் மீன்களெல்லாவற்றையும் பாரணம்பண்ணிக்கொண்டும், ஆலயங்களில் வெட்டப்படும் ஆடுகோழிகளெல்லாவற்றையும் உதராக்கினியிற்போட்டுத் தகனித்துக்கொண்டும், அதேமூச்சில் புலாலுண்ணமை புலாலுண்ணமை என்று வெறும்வாயை மென்றுதிரியாமல், நீதியையும் பரிசுத்தத்தையும் தாழ்மையையும் கடவுட்பத்தியையும அனுசரிப்பதே நமக்கெல்லாம் தகுதி.

## முடிவுரை

(1) ஆகவே, பழைய சைவசமயத்திலே உத்தமசாதியிலேபிறந்து ஏற்றபக்குவமுள்ளோருக்குமாத்திரம் நியமமான குருவினல் உபதேசஞ் செய்யப்படலாம் என்றிருந்தது. இப்பக்குவம் வரும்படியாகவே சிவன் ஆன்மாக்களுக்கு வினைக்கீடாகப் பிறவிகளைக் கொடுக்கிறரென்று சொல்லியிருக்கிறது. புதியசைவமோ பக்குவம் வருவதற்குப் பிறவியல்ல பிரசங்கமே அவசியமென்கிறது. இதினல் மறுபிறப்பும்போய்ச் சைவமும் பொய்யாகிறது.

(2) பழையசைவத்திலே ஞானநெறியைப் போதிக்கும் குரு ''குணங்களுக்கிசைய'' சிருட்டிக்கப்பட்டவனுகிய பிராமணனுகவேண்டுமென்றிருந்தது. சூத்திரன் ஓதமுடியாதபோதே ஓதுவிப்பதைப்பற்றி என் பேசுவான்? புதியசைவமோ கண்டவர் நின்றவரெல்லாம் உயர்ந்து பிறவாமல் இப்பிறவியிலேதானே பிராமணனுகிவிடலாம் பிரசங்கிக்கலாமென்கிறது. இதினல் வருணச்சிரம தர்மமும்போய்ச் சைவமும் பொய்யாகிறது.

(3) பழையசைவத்திலே சீவன்முத்தர் என்றநிரையில் வருமட்டும் ஆன்மாக்களெல்லாம் அஞ்ஞானிகள். அவைகள் மெய் அறிவின்றி கன்

மத்தை விரும்பி விரும்பிப் புசித்துப் பிறவிகளூடாய் இழுபட்டு மலபாகம் அடைந்துகொண்டகாலத்திலே சிவன்தாமே அருட்குருவாகவந்து ஞானோபதேசஞ்செய்து எஞ்சியகன்மங்கள் ஆகாமியமாய் ஏறாமல் மறித்தடக்கி ஆண்டுகொள்வார் என்றிருந்தது. புதியசைவமோ நாம் போம் வழி அறியாத இவ் "அஞ்ஞானிகள்" பிறருக்கு உபதேசிக்கலாம் சிவன் நேரேவந்து உபதேசிக்கவேண்டிய ஞானமொன்றில்லை என்றபடி நடைபெறுகின்றது. இதினால் சிவனின் அருட்குருத்தன்மையும்போய்ச் சைவமும் பொய்யாகிறது.

(4) பழைய சைவத்திலே புலாலுண்ணாமையைப்பற்றி வற்புறுத்தியிருக்கவில்லை. கடவுள்பேரில் அன்பே வேண்டும், அவரை அறியும் அறிவே பெரிது எனப் பாராட்டியிருந்தது. புதியசைவமோ எத்தெய்வத்தையும் தொழலாம், எப்படியும் நடக்கலாம் புலாலுண்ணாமல் விட்டாலே போதும் என்று விளங்கவைக்கும் பெற்றியாக நடைபெறுகிறது. இதினால் சன்மார்க்கமும்போய்ச் சைவமும் பொய்யாகிறது.*

(5) உள்ளபடி பழையசைவமும் தவறு புதியசைவமும் தவறு. மாறுகிற ஒருசமயம் ஒருபோதும் மெய்யாயிருக்கக்கூடாது. தற்காலசைவர் இதிகாச புராணங்களில் சொல்லப்படுகிற தெய்வவணக்கத்தையும் விட்டு ஆகமசாஸ்திரங்களிலுள்ள வழிபாடுகளையும் ஒதுக்கிக்கொண்டு ஒருவகைக் "கிறீஸ்தசைவம்" ஒன்றை உண்டாக்கிக்கொண்டுவருகிறார்கள். மனிதரால் உண்டாக்கப்படும் இப்புதுச்சமயம் ஒருபோதும் ஈடேற்றத்துக்குரியதாகாது. கடவுள்தாமே இவ்வுலகில் எழுந்தருளிவந்து போதித்தருளிய சத்தியவேதம்மாத்திரம் நம்மவருக்கு ஈடேற்றவழியாகும்.

30-8.13. இங்ஙனம்,

பழையசைவன்.

*Imprimatur*: C. B., V. G.

Jaffna 9-9-13.

PRINTED BY C. ANDREW, AT ST. JOSEPH'S CATHOLIC PRESS, JAFFNA

# Catholic Tracts

## வேத தர்க்கத் துண்டுப் புத்தகங்கள்.

இவை சா. ஞானப்பிரகாசசுவாமியால் சத்தியவேத அநுசாரிகளுக்கும் சைவர், வைஷ்ணவர் ஆதிய இந்துசமயிகளுக்கும் பயன்படுமாறு இனிய தமிழிலே நட்பிலக்கணந் தவறாதநடையிலே, வேத, புராண, இதிகாச மேற்கோள்களோடும், ஆன்றோருடைய ஆராய்ச்சிகள் துணிபுகளைத் தழுவியும் இயற்றிப் பிரசுரிக்கப்படுகின்றன. இவைகளை இந்தியாவிலும் இலங்கையிலுமுள்ள கல்விமான்கள் பலர் பெரிதும் பாராட்டிப் பேசியிருக்கிறார்கள். ஒருவருஷத்திலுள்ளே பலதுண்டுப்பத்திரங்கள் இரண்டாம் பதிப்பாகிவிட்டனவெனில் இவை அடைந்துகொண்ட பிரசித்தியை அப்பாலும் எடுத்துக்கூறல்வேண்டுமோ? இதுவரையில் வெளியிடப்பட்ட இலக்கங்களாவன:

| | | விலை அணா |
|---|---|---|
| 1. | Two Capital Lies—இரண்டு படுபொய்கள் | $\frac{1}{4}$ |
| 2. | An Important Duty—ஒரு பெருங்கடமை | $\frac{1}{4}$ |
| 3. | The Royal Road—இராச பாதை | $\frac{1}{4}$ |
| 4. | The Soul—ஆத்துமம் | $\frac{1}{4}$ |
| 5. | The Divine Teacher—சற்குரு | $\frac{1}{4}$ |
| 6. | The Nature of God—கடவுளிலட்சணம் | $\frac{1}{4}$ |
| 7. | Idolatry and Image-worship—விக்கிரக ஆராதனையும் சுரூபவணக்கமும் | 1 |
| 8. | Metempsychosis—மறுபிறப்பு I | $2\frac{1}{2}$ |
| 9. | Answers to Saivites—சைவராட்சேப சமாதானம் | $2\frac{1}{2}$ |
| 10 | The Perfect Being—பரிபூரணவஸ்து | $1\frac{1}{2}$ |
| 11. | The Origin of Things—உலக உற்பத்தி | $1\frac{1}{2}$ |
| 12. | Christ the God-Man—கிறீஸ்துவின் கடவுட்டன்மை | 1 |
| 13 | The True Way of Salvation—ஈடேற்றவழி | 2 |
| 14 | Metempsychosis Part II—மறுபிறப்பு சமாதானம் | |
| 15. | Neo-Saivaism—புதுச் சைவம் | $1\frac{1}{2}$ |

☞ மேலே காட்டிய துண்டுப்பத்திரங்களை யாழ்ப்பாணம் அர்ச். சூசைமாமுனிவர் அச்சியந்திரசாலைத் தலைவருக்கு எழுதிப்பெற்றுக்கொள்ளலாம்.

CATHOLIC TRACT
No. 16.

# HISTORY OF HINDU VEGETARIANISM

# சைவரும் மச்சமாமிசரும்.*

---

தாத்ரைவ ஸ்றுஷ்டா ஹ்யாத்யாச்ச
ப்றணினோ அத்தார ஏவ ச.

அதாவது:

*தின்னுகிற பிராணிகளையும் அவற்றினால் தின்னப்படும் பிராணிகளையும் சிருட்டி கர்த்தாவே படைத்தருளினார். (மனுஸ்மிருதி)*

சிநேகிதர்களே, உலகம் உயிருள்ள பொருட்களினால் நிறைந்து தேங்கி இருக்கிறது. காட்டிலும் மேட்டிலும், கடலிலும் கரையிலும், அந்தரத்திலும் ஆகாயத்திலும் எமது கண்காணத்தக்கவைகளாய் நடக்கிற நீந்துகிற ஊருகிற பறக்கிற லட்சாதி லட்சமான பிராணிகளைத்தவிர வெறுங்கண்ணாற் காணக்கூடாதவைகளும் பூதக்கண்ணாடியினாற் பார்க்க வேண்டியவைகளுமான கோடானுகோடி அணுவாகாரமான சிறுச்சிறுச் செந்துக்கள் நீரிலும், நிலத்திலும், காற்றிலும் மொய்த்துப் பிடித்துக் கொண்டிருக்கின்றன. நமது தேகத்திலேயே கிடந்து ஒன்றோடொன்று போர்பொருதிக்கொண்டிருக்கிற கண்ணுக்குத்தெரியாத கிருமிவகைகள், கீடவகைகள், உண்ணிவகைகள், தெள்ளுவகைகளுக்கு ஒரு கணக்கில்லை, நமது இரத்தமும் கிருமிகள் துள்ளிவிளையாடிக் கும்மாளங்கொட்டுகிற ஒரு நிலைக்களம். காய்ச்சல் சிரங்கு முதலிய வியாதிகள் உண்டாகிறது எப்படி? சிற்சிலவகை மாற்றான் கிருமிகள் நம் இரத்தத்திலிருக்கும் தன்னிலக்கிருமிகளோடு போராடி வென்று, அவைகளின் இடத்தைக் கூடவோ குறையவோ கொள்ளுகிறதினாலேயே இவைகள் உண்

* 1912-ம் ஆண்டு சித்திரைமாசம் யாழ்ப்பாணப்பட்டினத்தில் செய்யப்பட்ட ஓர் உபந்நியாசம், குறிப்புக்களோடு பிரசுரிக்கப்படுகிறது.

டாகின்றனவென்று வைத்தியசாஸ்திர விற்பன்னர்கள் சொல்லுவார்கள். எமது தேகத்தின்பாடே இப்படியென்றால், எமக்கு வெளியே பொலிந்திருக்கிற கிருமிச் சனலோகத்தைப்பற்றி அதிகம் பேசவேண்டுமா? நாம் சுவாசிக்கும் காற்று நிறையப் பலபலவகைக் கிருமிகீடங்கள் செறிந்திருக்கின்றன. எத்தனையோ வியாதிகள் இக்கிருமிகளை நாம் சுவாசத்தோடு வாங்கிக்கொள்ளுவதினாலே தோற்றுகின்றன. நமது சுவர்களின்மேல் பிடிக்கும் பாசியென்பதென்ன? பாசியைப் பெலமான ஓர் பூதக்கண்ணாடியினால் பரிசோதித்தால், அதைப் பல சிறுச்சிறு விருட்சங்கள் அடர்ந்து ஓங்கிய வனம் என்றே சொல்லவேண்டும். பாசி என்பது மிக நுண்ணிய செடிகளின் சேர்க்கை. இச்செடிகள் காற்றோடு என்றைக்கும் பறந்துதிரிந்துகொண்டேயிருக்கும் அணுவாகாரமான விதைகளினால் உண்டாகின்றன. இவ்வாறு தாவர சீவவிதைகளைப்போலவே மிருக சீவவிதைகள் அல்லது கிருமிகளும் காற்றில் ஏராளமாயுண்டு. இவைகளாலேயே காற்றுப்படவைக்கும் நீர்ப்பொருட்களின்மேல் பெரும்பாலும் பலவேறுவகைப்பட்ட புழுக்கள் உண்டாகின்றன. கள்ளு புளிப்பதும், பால் தயிராவதும், கள்ளின்மேலும் பாலின்மேலும் மிகத் தீவிரமாய் உண்டாகிப் பெருகிக்கொண்டிருக்கும் மிக நுண்ணிய கிருமிகளால் நிகழும் மாற்றமேயொழிய வேறல்ல. நாம் சுத்தமான நீரென்று எண்ணும் தண்ணீரிலும் பூதக்கண்ணாடிக்கு மாத்திரம் தெரியக்கூடிய கணக்கில்லாத பூச்சி புழுக்கள் வாழ்ந்துகொண்டிருக்கின்றன. ஆயிரமாயிரம் வகையாய் இப்பூவுலகின்மேல் கணந்தோறும் பெருகியும் அருகியும் கொண்டுவருகிற கிருமிகீடாதிகளுக்குள்ளே இரண்டொரு உதாரணத்தையே இப்போது எடுத்துக்காட்டினேன். உயிர் நூலோர் என்று சொல்லப்படுகிற சாஸ்திரிகள் இவ்வற்பமான உயிர்களைப்பற்றிச் சொல்லுகிற விநோதங்களை எல்லாம் எடுத்துச் சொன்னால், அநேகநாட்களாய்ப் பிரசங்கம்பண்ண வேண்டிவரும். வெறுங்கண்ணுக்குத் தெரியா இவ் அற்ப உயிர்கள்முதல் மனிதன் ஈறாகவுள்ள நிற்கிற நீந்துகிற ஊருகிற பறக்கிற நடக்கிற சகல பிராணிகளையும் ஒருங்கே வைத்துப் பார்க்கும்போது கீழானபொருட்களெல்லாம் மேலான உயிர்களுக்கு உணவாக உண்டாக்கப்பட்டிருக்கின்றன என்ற உண்மையைக் காணலாம்.

உள்ளபடி, சீவப்பொருட்களின் சடங்களே சீவப்பொருட்களுக்கு உணவாகி வருகிறதை எங்கும் காண்கிறோம். ஓர்வேளை, பாசிமுதலிய அற்பபிராணிகள் மட்டும், காற்றிலேயோ தண்ணீரிலேயோ உள்ள ஏதோ சத்துக்களால் வளருகின்றனவாகலாம். அதிகப்பற்றான தாவரங்களுக்கும் பிராணிகளுடைய சடங்களாகிய பசளையில்லாமல் வளர்ச்சியும் மதாளிப்புமில்லை இவைகளுக்கு மேற்பட்ட செந்துக்களுக்கு புல் இருமி முதலியவைகளே உணவாகின்றன. சிறிய மீன்கள் பெரிய மீன்களுக்கு இரை. தானியம், புழு முதலியவைகள் பட்சிகளுக்கு இரை. சிறிய இனத்து மிருகங்கள் பெரிய இனத்து மிருகங்களுக்கு இரை. மனுஸ்மிருதி வேறொருவிதமாகச் சொல்லியிருக்கிறதுபோல "பிரமா இவ்

வுலகமுழுவதையும் சீவனுக்கு ஆதாரமாக உண்டுபண்ணினார். ஆகையால் செல்லுமுதலான தாபரமும் மிருகம் முதலான சங்கமமும் சீவனுக்கு ஆதாரமாகவேயிருக்கின்றன எப்படியென்றால் மான் முதலிய சரங்களுக்குப் புல் முதலிய அசரங்களும். புலிமுதலிய கோரப்பல்லுள்ளவைகளுக்கு மான் முதலிய கோரப்பல்லில்லாதவைகளும் மானுடர் முதலான கையுள்ளவர்களுக்கு மீன் முதலிய கையில்லாதவைகளும், சிங்கம் முதலிய வீரமுள்ளவைகளுக்கு யானை முதலிய பயமுள்ளவைகளும் ஆகாரமாயிருக்கின்றன." (மனு 5) ஒன்றுக்கொன்று உணவாகிறதற்கு மனுஸ்மிருதி சொல்லியிருக்கிற நியாயங்கள் எப்படியிருந்தாலும், கடவுள் கீழான சீவர்களை மேலான சீவர்களுக்கு இரையாக ஏற்படுத்தியிருக்கிற தன்மையையோ சற்றே யோசித்துப் பார்க்கிறவர்களெல்லாரும் கண்டு கொள்வார்கள்.

இந்த ஒழுங்கு பிராணிகளுக்குள்ளே சமநிலையை ஏற்படுத்துவதற்கும் அவசியமாயிருக்கிறது இதற்கு இரண்டொரு உதாரணஞ் சொல்லுவேன்: நமது வயல்களிலே உண்டாகிற பூச்சிபுழுக்களை நாசம்பண்ணிப்போட தவளை கொக்கு குருவி முதலியவைகளில்லாவிட்டால், அப்பூச்சி புழுக்கள் பலுகிப் பெருகும் விதத்தை அறியோமே—அவைகள் வயல்களை முற்றும் அழித்துப்போடும். தவளை முதலியவைகளைத் தின்னப் பாம்பு முதலியவைகளும், இவைகளுடைய பெருக்கத்தை மட்டுப்படுத்தக் கீரி முதலியவைகளும் இல்லாவிட்டால், வீடுவாசலெல்லாம் தவளைகளாயும் பாம்புகளாயும் போய்விடும். (கரகோஷம்) கடலிலே சிறிய மீன்கள் சினைக்கும் விதத்தை நோக்கினால், அவைகளின் தொகையை மட்டுப்படுத்திக்கொண்டு வருவதற்குப் பெரிய மீன்களில்லாவிட்டால் கடலெல்லாம் மீன்களால் எள்ளிடவிடமின்றி நிறைந்து பலமோசங்களுக்குக் காரணமாகும். வனங்களிலே முசல் முதலியவைகள் சினைக்குந் தன்மையைப் பார்த்தால், அவைகளைத் தங்கள் குகைகளுள் அடக்கம்பண்ணுவதற்குப் பெரிய மிருகங்கள் ஏற்பட்டிராவிட்டால் காடெல்லாம் ஒருபக்கத்திலே துர்நாற்றமெடுத்துச் சனலோகத்துக்குக் கெடுதிவிளைக்க, மறுபக்கத்திலே காட்டுவாசிகள் நாட்டகங்களில் புகுந்து சொல்லிமுடியாத மோசநாசங்களை செய்துகொண்டிருக்கும். இவ்விதமான தாறுமாறுகளால் உலகம் அல்லோலகல்லோலப்படாதபடிக்கு வரம்பில்லா ஞானமுடையவராகிய கடவுள் தமது படைப்புக்களையெல்லாம் படிக்கிரமமாக அமைத்து, கீழானவைகள் மேலானவைகளுக்கு உதவியாகித் தங்கள் கதியைச் செலுத்திக்கொண்டிருக்கும்படி செய்திருக்கிறார்.

## மனுஷனும் கீழ்ப்பட்ட சீவர்களும்

இப்பூமியிலுள்ள சமஸ்த படைப்புகளுக்குள்ளும், சிநேகிதர்களே, மனுஷன்தான் மேற்பட்டவன் என்றதிற் சிறிதும் ஐயம் இல்லை. மனுஷன்தான் சிருட்டிப்பின் இராசா. அவனுக்கு ஒவ்வோர் விதத்திலே உதவியாகவே மற்றச் சகல படைப்புக்களும் இவ்வுலகத்திலே அமைத்

து வைக்கப்பட்டிருக்கின்றன. * ஆகையால் அவன் தனக்குக் கீழ்ப்பட்டவைகளாயும் தனது உபயோகத்திற்காகத் தரப்பட்டவைகளாயும் இருக்கிற சகல சீவ அசீவ பொருட்களையும் தன் மனம்போல உபயோகித்துக்கொள்ளலாம் என்றது வெளிப்படை. அவனுடைய உயிரைக் காப்பதற்கு அவனுக்குக் கீழ்ப்பட்ட சீவர்களே உணவாக நியமிக்கப்பட்டிருக்கின்றன. இதை விளக்கி நமது சனிப்பாகமத்திலே கடவுள் சொல்லியதாக வரையப்பட்டிருக்கிற வாக்கியமாவது: "நடமாடுகிற சீவசெந்துக்கள் யாவும் உங்களுக்கு உணவாயிருப்பன. பசும்பூண்டுகளை உங்களுக்குத் தந்ததுபோலவே அவைகளையும் உங்களுக்குத் தந்தோம்". சரங்களும் அசரங்களும் மனுஷனுக்கு உணவாகக் கொடுக்கப்பட்டிருந்தாலும் அவரவர் தத்தம் விருப்பம்போலத் தாவரவர்க்கங்களையோ சங்கமவர்க்கங்களையோ புசிக்கலாம். எவருக்காவது இவ்விஷயத்திலே கட்டுப்பாடில்லை. அர்ச்சியசிஷ்ட சின்னப்பர் மொழிந்தபடி "ஒருவன் எந்தப் பதார்த்தத்தையும் புசிக்கலாமென்றிருக்கிறான். பலவீனனோ மரக்கறிகளைமாத்திரம் புசிக்கிறான். புசிக்கிறவன் புசியாதிருக்கிறவனை அற்பமாக எண்ணாதிருப்பானாக. புசியாதிருக்கிறவனும் புசிக்கிறவனைக் குற்றவாளியாகத் தீர்க்காதிருப்பானாக." இது ஞானம்நிறைந்த ஓர்வாக்கியம். ஏனெனில் சின்னப்பர்தாமே வேறோரிடத்திற்சொல்லியிருக்கிறபடி "கடவுளுடைய இராச்சியம் புசிப்பிலேயும் குடிப்பிலேயும் இல்லை; அது நீதியும் சமாதானமும் திவ்விய ஆவியானவராலுண்டாகும் ஆனந்தமுமாயிருக்கிறது".

ஞானமே உருவாகிய சாக்ஷாத்கடவுளும் திருவுளம் பற்றியபடி 'மனுஷனுக்குப் புறம்பேயிருந்து உள்ளே போகிறதொன்றும் அவனை அசுத்தப்படுத்தாது. அது அவன் இருதயத்திலே போகாமல் வயிற்றிலே போய்க் கழிந்துபோகிறது. மனுஷனுடைய அகத்திலிருந்து புறப்படுகிறதே அவனை அசுத்தமாக்கும். அவன் இருதயத்திலிருந்து பொல்லாத சிந்தனைகளும் விபசாரங்களும் துர்நடைகளும் கொலைபாதகங்களும்

* சிங்கம், புலி, பாம்பு முதலியவைகளும் மனுஷனுக்கு உதவியாக அமைக்கப்பட்டனவோ என அறியாதோர் சிலர் வினவுவர். இவைகளிலும் ஓரோர் பிரயோசனம் உண்டு என்பதில் மயக்கமில்லை. எல்லாப்பிரயோசனமும் மனுஷனுக்கு நேரே வரவேண்டியதில்லை. இப்படியே, சிங்கம் புலி முதலியவைகள் காட்டையாளுகிற அரசர்கள்போலவும், காவற்காரர்போலவும் இருந்து மனுஷனுக்குப் பாரம்பரியத்தில் உதவியாகின்றன. பாம்பின் விஷமும் விலையுயர்ந்த ஒரு மருந்தாகின்றது. இவைகளால் வேறு பிரயோசனமில்லாவிடில், இவைகள் நிமித்தம் நாம் மரணத்துக்கும் கடவுளுக்கும் பயப்படுகிறதாகிய நன்மையாவது உண்டாகிறது. கடவுள் துஷ்ட மிருகங்களைப் படைத்ததைப் பற்றி சைவர் கிறீஸ்தவர்களிடத்திலே கேட்கிற கேள்வியைக் கிறீஸ்தவர்களும் சைவரிடத்திலே கேட்கலாம். கிறீஸ்த கொள்கையின்படி உலகத்திலே துஷ்டமிருகங்களிருக்க நியாயமில்லாவிட்டால், சைவகொள்கையின்படியும் அவைகள் இருக்க நியாயமில்லாமற் போகும்.

களவுகளும் பொருளாசைகளும் துஷ்டத்தனங்களும் கபடும் காமவிகாரமும் வன்கண்ணும் தூஷணமும் பெருமையும் மதிகேடும் புறப்பட்டு அவனை அசுசியாக்கும்".

இந்த உண்மையை பொதுவிலே உலகமானது உணர்ந்திருக்கிறது. உலகத்தின் சகல சாதிச் சனங்களையும் ஒருங்கே எடுத்துப்பார்த்தால், சரமும் அசரமுமாய்க் கடவுள் மனிதருக்காகப் படைத்துக்கொடுத்த பொருட்களிலே அங்கங்கே தின்னப்படாத பொருளில்லையென்று காணலாம். தமிழ்ச்சாதியாராகிய நாம் தவளை நத்தை இவைகளை அருவருக்கிறோம். ஆனால் தவளை தின்கிற சனங்களுமுண்டு. நத்தையை மெத்த உருசியான பதார்த்தமாகப் பச்சைப்படியே பாரணம்பண்ணுகிறவர்களுமுண்டு. பூனை, நாய், குதிரை, குரங்கு ஆகிய இவையெல்லாம் ஒவ்வோர் சாதியாரால் உவந்துகொள்ளப்படுகின்றன. பாம்பு தின்கிற சாதி நமக்குள்ளேதானுண்டே. "சாரைதின்கிற ஊருக்குப்போனால் நடுமுறி நமக்கென்று நிற்கவேணடும்" என்ற பழமொழி பிழைமொழியல்ல. (கரகோஷம்)

உலகத்தின் சாதிகள் சகலத்தையும் ஒருங்கே பார்க்கும்போது, பழம் கீரை கிழங்கு முதலிய தாவரங்களைப்போலவே சகல மிருகவகைகள் மீன்வகைகள் பறவைவகைகளும் உண்ணப்படுதல் மெய்யானாலும், ஒவ்வொரு சாதியையும் வெவ்வேறே பார்த்தால் அவ்வச்சாதிக்குள்ளே சிற்சில பொருட்கள் உணவுக்கு ஆகாதென்று விலக்கிவைத்திருக்கிறதைக் காணலாம். சிலருக்கு வெள்ளெலி விலக்கு. சிலருக்கு வீட்டெலி விலக்கு. சிலருக்கு வெள்ளாடு விலக்கு. சிலருக்கு செம்மறியாடு விலக்கு. சிலருக்கு உடும்பு விலக்கு. சிலருக்கு உடும்பு விலக்கு. சிலருக்கு பன்றி விலக்கு. சிலருக்கு பசு விலக்கு. இப்படியே தாவரங்களிலேயும் ஒவ்வோர் பொருள் விலக்கப்பட்டதுண்டு. நம் சைவருக்குள்ளே இன்றைக்கும் உள்ளி முதலிய பலபொருட்கள் விலக்கு. "சைவசமயநெறி" யிலே சொல்லியிருக்கிறதாவது:

> உள்ளி வெள்ளுள்ளி உதும்பரஞ் செம்முருங்கை
> வள்ளி பசளை மதுக்கோவை
> வெண்கத்தரிக்காய் தேற்றாங்காய் வில்வக்காயும்
> உண்பதல கொம்மடிக்காயும்
> எண்ணெய்ப்பிண்ணாக்குப் பெரும்பீர்க்கெனுமிவையும்
> உண்ணேல் உருண்ட சுரையும்

இப்படியே அவ்வச்சனங்கள் ஒவ்வோர் நியாயம்பற்றியும், தங்கள் பழக்கவழக்கங்களை ஒட்டியும், சரங்களிலேயும் அசரங்களிலேயும் வெவ்வேறு பொருட்களைப் போசன பதார்த்தங்களாக ஏற்படுத்தியிருந்தாலும், உலகத்திலே கடவுள் உண்டாக்கி வைத்திருக்கிற சகல பொருட்களும் மனிதனுக்காகவே என்ற உண்மையைப் பொதுவிலே மனுக்குலமானது உணர்ந்து அவ்வுணர்ச்சியின்படி நடந்திருக்கிறதென்பதற்கோ சந்தேகமில்லை.

இனி, நம் தாய்த்தேசமாகிய இந்தியாவிலே இருந்த பூர்வகுலங்கள் தாவரபோசனிகளா சங்கமபோசனிகளா, அதாவது அவர்கள் கீரை கிழங்குகளை மாத்திரம் தின்றுகொண்டிருந்தார்களா அல்லது மச்சமாமிசங்களும் புசித்துவந்தார்களா என ஆராய்வோம். பழையநூல்களைப் பார்த்தால் இந்தியாவின் பூர்வ குலங்களெல்லாம் இரண்டுவகையான உணவுகளையும் பின்னபேதமில்லாமல் புசித்துவந்ததைக் காணலாம். புலாலுண்ணாமை அல்லது ஆரதம் என்ற ஒழுக்கம் மிகவும் பிந்திவந்த ஒரு புது ஒழுக்கம். நம் முன்னோர்களுக்குப் புலால் ஆரதம் என்ற இந்தப்பகுப்பும் வேற்றுமையும் தெரியவே தெரியாது. இதை நான் சும்மா சாதிக்கிறேனென்று எண்ணவேண்டாம். சிநேகிதர்களே, இப்போது நான் சொல்லியதற்குப் போதியசாட்சி இருக்கிறதென்று பின்னூற் காண்பீர்கள்.

## தமிழருள் மச்சமாமிசம்

நம் முன்னோரைத் தென்மொழியாளரும் வடமொழியாளரும், அதாவது தமிழரும் ஆரியரும் என்று இருபெரும்பகுப்பாகப் பகுக்கலாம். தமிழர் என்று சொல்லும்போது பாணர், பறையர், மறவர் முதலாம் பழங்குடிகளையும், வேளாளர் முதலாம் பந்தேற குடிகளையும் சேர்த்துப் பேசுகிறேன். இனி இத்தமிழரைப் பார்த்தால், இவர்கள் தாராளமாய் மச்சமாமிசந் தின்றுவந்தவர்களாகவே காணப்படுகிறார்கள். பாணருடைய தொழில் பெரும்பாலும் மீன்பிடித்தொழில். மறவர் பெரும்பாலும் வேட்டையாடுவோர். பறையருடைய ஒழுக்கத்தைப்பற்றிப் பேசத்தேவையில்லை. இனி வேளாளரும் காடுகளைத் திருத்தி நட்டு நாடாக்கிக் கீரை கிழங்குகளைப் பயிரிடத் தொடங்குமுன் வேட்டையினாலேயே சீவித்தவர்கள். உள்ளபடியே, பழஞ்சரித்திரம் ஆராய்ந்தோர் எல்லாரும் சொல்லுகிறபடி, உள்நாட்டுப் பழங்குடிகள் மிருகவேட்டையினாலும், கரைநாட்டுப் பழங்குடிகள் (சிலர் தமாஷாய்ச சொல்லுகிறபடி,) மீன்வேட்டையினாலுமே பெரும்பாலும் சீவித்தவர்கள். பழஞ்சனங்களெல்லாம் ஆதியிலே ஓரிடத்தில் வீடுகட்டிக் குடியிராமல், வேட்டைக்குரிய வனங்களையும் மாடாடு மேய்த்தற்குரிய வெளிகளையும் தேடித்தேடி அலைந்து திரிந்துகொண்டுவந்தன. ஒவ்வோரிடத்திற் குடியேறி நாடுகளையும் பட்டணங்களையும் உண்டாக்கிக்கொள்ளும் பருவம் இடைக்காலத்திலேயே ஏற்பட்டது. ஆனபடியால் தமிழரெல்லாம் ஆதியிலே மீனும் இறைசியும் தின்றவர்களே என்பது மறுக்கக்கூடாத ஒரு உண்மை.

ஆதிகாலம் வேண்டாம், நமது காலவரையில் எட்டியிருக்கிற பழைய தமிழ் நூல்கள் உண்டே, இத்தமிழ் நூல்கள் எழுதப்பட்ட இடைக்காலத்திலேதானும் தமிழர் எல்லாம் மசசமாமிசபோசனிகளாகவேயிருந்தார்கள். உதாரணமாய் "பெரும்பாணாற்றுப்படை" என்ற நூலிலே அந்நாட்களின் மேல்சாதிச் சனங்கள் "வாடூன் புழுக்கல்" அதாவது கருவாடும் சோறும்; "நறும்பிழி தண்மீன்சூட்டொடு" அதாவது சுட்ட மீனோடு கள்ளும்; "வெண்ணெல் வல்சி மனைவாழளகின் வாட்டொடு"

பொரித்த கோழிக்கறிசோறும்; "ஞமலிதந்த மனவுச்சூல்உடும்பின்வறை" அதாவது நாய்பிடித்துவந்த உடும்பிறைச்சியும்; "பன்றுட்குழிநிறுத்தோம்பிய குறுந்தாளேற்றைக் கொழுநிணத்தடியொடு" அதாவது குழியிலேவிட்டு வளர்த்த பன்றியின் கொழுப்போடு கூடிய இறைச்சியும் (கரகோஷம்) பின்னும் பலவித மாமிசங்களும் உண்டுவந்தார்களெனக் காண்கிறோம். இதிலேயும் "புறநானூறு" எனும் பழைய நூலிலேயும் பெரிய பெரிய இடங்களிலெல்லாம் மச்சமாமிச உணவு நடந்துவந்தசெய்தி காணப்படுகிறது. சேரசோழபாண்டியர்களுடைய அரண்மனைகளிலே உண்ணப்பட்டதெல்லாம் மச்சமாமிசம். அந்த அரசர்களாலே ஆதரிக்கப்பட்ட புலவர்கள் இதை வெளியாக எழுதிவைத்திருக்கிறார்கள் தொண்டைமான் இளந்திரையன் மாளிகையிலே "கொடுவாள் கதுவிய வடு ஆழ்நோன்கை வல்லோன் அட்ட பல்லூன் கொழுங்குறை' அதாவது சமர்த்தனை சுயம்பாகி சமைத்த பலவகையான இறைச்சித்தசைகளோடு சோறு வழங்கப்பட்டது (சிரிப்பு) என்று உருத்திரங்கண்ணனார் எனும் புலவர் "பெரும்பாணாற்றுப்படை"யிலே பாடியிருக்கிறார். சேரமான் செல்வக்கடுங்கோ எனும் அரசன் கபிலர் எனும்புலவருடைய கையைப் பிடித்துக்கொண்டு உமது கைகள் மெல்லியவைகளாயிருக்கின்றனவே என்று சொல்ல, கபிலர் அதற்கு மறுமொழியாக "புலவுநாற்றத்த பைந்தடி பூநாற்றத்தபுகைகொளீஇ யூன்றுவைகறிசோறுண்டுவருந் தொழிலல்லது பிறிதுதொழிலறியாவாகலினன்று மெல்லிய பெரும" அதாவது அரசனே புலால் நாற்றமுள்ள செவ்வித்தடியைப் பூநாற்றமுள்ள புகைகொளுத்தி ஆக்கின இறைச்சி துவையல் கறிசோறு இவைகளை அள்ளித் தின்கிற வேலையல்லாது வேறுவேலையில்லாதபடியால் என்கைகள் மெல்லியவைகளாயிருக்கின்றன என்றாராம். (கரகோஷம்) அதியமான் நெடுமானஞ்சி எனும் தலைவனிறந்தபோது ஔவையார் பாடிய புலம்பலிலே "என்பொடுதடிபடுவழியெல்லாம் எமக்கீயுமன்னே" அதாவது எலும்போடு இறைச்சியுள்ள தினையெல்லாம் எமக்குத் தருவானே என்று பாடியிருக்கிறது. இவ்விதமான பலபல மேற்கோள்களை எடுத்துக்காட்டலாம்.

தமிழ்ச்சனங்களுடைய முற்காலச் சமயவழிபாடுகளை நோக்கினால், அவ்வழிபாடுகளும் மச்சமாமிச உணவோடு கூடினவைகளாகவே இருந்ததைக் காண்போம். பழந்தமிழருடைய முக்கியமான தெய்வங்கள் ஐயை அல்லது கொற்றவையும், அக்கொற்றவையுடைய சேய் அல்லது மகனாகிய முருகன் அல்லது வேளுமே என்று பழைய நூல்களாற் தெரிகிறது. ஐயையை வழிபடும் முறையை "சிலப்பதிகாரம்" "புறப்பொருள் வெண்பாமாலை" முதலிய நூல்களிலே காண்கிறோம். அவளுடைய உருவம் அச்சம் வருவிப்பதாகச் செய்திருக்கும். அவ்வுருவின்முன்னே தமிழ்ச்சனங்கள் எருமைகளை வெட்டிப் பலியிட்டு அவைகளின் இரத்தத்திற் குழைத்த சோற்றையும் கள்ளுண்டை, நிணம், குடர், கள், ளு முதலியவைகளையும் அவளுக்குப் படைப்பார்கள். முருகனுக்கு அதிகமாக கடாக்களைவெட்டி இரத்தத்தைத்தினைச்சோற்றிற் குழைத்தும்

படைத்து வெறிக்கூத்தாடுவார்கள். இதை, "திருமுருகாற்றுப்படை" என்ற நூலிலே காணலாம். தெய்வங்களுக்குப் படைக்கும் பொருட்களைச் சனங்கள் பிரசாதமாகத் தின்னுமல் விடார்கள் என்பதைச் சொல்லவேண்டியதில்லை. சனங்கள் தாங்கள் தாங்கள் தின்னும் பொருட்களையே தெய்வங்களுக்கும் படைத்தார்கள் என்றதும் உலகசரித்திரத்தினுல் நன்ருய் அறியப்பட்ட விஷயம்.

## ஆரியருள் மச்ச மாமிசபோசனம்

குளுந்த சீமைகளிலிருந்து வட இந்தியாவில் வந்திறங்கின வெள்ளை மனுஷராகிய ஆரியர் (தேவர்கள்) இன்னுமதிகமாய் மச்சமாமிச பட்சணிகளாயிருந்தார்கள். இன்றைக்கும் சீதளதேசங்களிலெல்லாம் மச்சமாமிச உணவே பெருவழக்காயிருக்கக் காண்கிருேம். ஆகக் குளிர்பிடித்த பாகங்களாகிய கிறீன்லந்து அயிஸ்லந்து முதலிய பிரதேசங்களிலே மச்சமாமிச உணவல்லாமல் வேறு உணவே கிடையாது. இந்த இடங்களிலே கீரை கிழங்கு முதலியவைகள் உண்டாவதுமில்லை. இதைப் பார்க்கும்போது, ஒருதேசம் எவ்வளவு சீதளமுள்ளதாயிருக்குமோ அவ்வளவாக அங்கே மச்சமாமிச உணவும் அதிகப்பட்டிருக்கும் என்று ஒரு பொதுப்பிரமாணம்போலச் சொல்லலாம். இப்படியே, இந்தியாவைக்காட்டிலும் அதிக குளிருள்ளதேசமாகிய ஸ்காந்திநேவியப் பகுதியிலிருந்து வந்தோராகிய ஆரியர், இந்தியாவாரைக் காட்டிலும் அதிகம் மச்சமாமிச உணவுள்ளோராயிருந்த தன்மையையும் நீங்கள் எளிதாய் விளங்கிக்கொள்ளுவீர்கள்.

ஆரியருடைய சமயவழிபாட்டோடு கூடிய உணவை முதற் பார்ப்போம். நான் சற்று முன்னே சொல்லியபடி பழஞ்சனங்கள் தாங்கள் தாங்கள் விரும்பிப் புசித்துவந்த பொருட்களையே தங்கள் தெய்வங்களுக்குப் பெரும்பாலும் படைத்தார்களல்லவா? படைத்த பொருளைப் பிரசாதமாகவுண்பது எங்கும் காணப்பட்ட வழக்கமல்லவா? புராணகாவியங்களிலே சொல்லப்படும் தேவர்களாகிய ஆரியர் தங்கள் தெய்வங்களுக்குப்படைத்த பொருள் என்ன? ஆடு, மாடு, குதிரை முதலியவைகளின் இறைச்சியும் சோமபானம் முதலிய மதுவகைகளுமே. இதற்கு அத்தாட்சி உண்டோவென்றல், போதிய, மறுக்கமுடியாத அத்தாட்சியுண்டு. அதெப்படியெனில், ஆரியருடைய ஆகப்பழைய நூலென்று அறியப்பட்டது அவர்களுடைய பாரம்பரியமான பாடல்களின் சேர்க்கையாகிய இருக்குவேதம். இந்த இருக்குவேதப் பாடல்களிலே அவர்கள் மாடுகளைத் தங்கள் தெய்வங்களாகிய அக்கினி, (நெருப்பு) இந்திரன் (மழைத்தெய்வம்) வருணன் (வானத்தெய்வம்) முதலிய இயற்கைத் தோற்றங்களுக்கு வெட்டிப் படைத்துத் தாங்களும் தின்றுவந்ததை விபரமாய்க் காட்டியிருக்கிறது. இரண்டொரு உதாரணங்களை மொழிபெயர்த்துக் காட்டுகிறேன்.

"ஓர் சிநேகிதன் சிநேகிதனுக்குதவுவதுபோல அக்கினியானவன் முந்நூறு எருமைக்கடாக்களைப் பொரித்துத் தந்தான். இந்திரன் உடனே

மூன்றுகுளம்நிறைந்த சோமபானத்தைக் குடித்துவிட்டான்." (5-ம் மண்டலம் 29; 7)

"இந்திரனே உனக்கென்று ஆட்கள் நல்ல உற்சாகந் தருகிற சோமமதுவைக் கல்லால் ஊற்றிச்தர நீ அதைக் குடிக்கிறாய். கடாக்களை அவர்கள் உனக்கு வெட்டிப்படைக்க நீ வந்து புசிக்கிறாய்." (10-ம்மண்டலம் 28; 3)

"குதிரைகள், மாடுகள், எருதுகள், மலட்டுப்பசுக்கள், ஆட்டுக்கிடாய்கள் எல்லாம் படைத்து எதிலே ஒப்புக்கொடுக்கப்படுகின்றனவோ அந்த அக்கினிக்கு நான் ஒருபாடலைச் சொல்லுகிறேன். (10-ம் மண்டலம் 91; 14)

ஆரியர் பலிவெட்டுகிற இடத்துக்கு யாகசாலை என்று பெயர். இந்த யாகசாலைகளிலே யூபஸ்தம்பம் என்று சொல்லப்படும் கட்டைகளை நட்டு அவைகளிலே பலிக்கான மிருகங்களைக் கட்டிவைத்து, அடையாளம்போட்டு, அடையாளம் போட்டவைகளையெல்லாம் அநேக சடங்காசாரங்களோடு வெட்டிச் சிலதுண்டுகளைப் பொரிப்பார்கள். சில துண்டுகளை அவிப்பார்கள். வெட்டுவதற்குரிய ஆயுதங்கள், இறைச்சியைப் பொரிப்பதற்கும் அவிப்பதற்கும் வேண்டிய கிடாரங்களின்வகை, அகப்பைகளின்வகை, சோமபானம் வடிக்கவேண்டிய முறையெல்லாம் விபரமாய்க் காட்டியிருக்கிறது. தெய்வங்களுக்குப் படைத்தபின் அதிக மென்மையான துண்டுகள் பிராமணருக்கும் மிஞ்சிய பாகங்கள் மற்றவர்களுக்கும் கொடுக்கப்படும். கோபத பிராம்மணம் சொல்லுகிறதாவது: நாக்கு, கழுத்து, தோல், துடை, கால் எனும் இவைகளைப் பிராமணனுக்குக் கொடுக்கவேணடும். பின்பக்கங்களைக் கிரகஸ்தன் வாங்குவானாக. கிரகஸ்தன் பெண்சாதிக்குக் குண்டியைக்கொடுத்தாற்போதும்! (சிரிப்பு) குதிரையைப் பலிகொடுத்து வெட்டிப்பொரித்தும் அவித்தும் தின்னவேண்டியவிதம் இருக்குவேதம் 1-ம்மணடலம் 162-ம் பாடலிலே விரிவாய்ச் சொல்லியிருக்கிறது. அதை முழுதாய் மொழிபெயர்த்து வாசித்தால் இந்த உபந்நியாசம் மெத்த நெடுத்துப்போகுமென்று விடுகிறேன்.*

* இருக்குவேதம் முதலிய சமஸ்கிருத நூல்களிலே வெளிப்படையாய்க் காண்கிற வேள்வி வெட்டுதலை இல்லையென்று சொல்லவும் தற்காலம் சிலசைவர்கள் தலைப்பட்டிருக்கிறார்கள். இந்துசாதனப் பத்திரிகையிலே (22-5-1912) எழுதிய ஒருவர் யாகங்களிலே மிருகங்களின் உயிர் கொலையினால் போக்கப்படாமல் மந்திர வலியினாலே தானாய்ப்போய்விடுமென்றும், பிறகு செத்துப்போன அம்மிருகங்கள் மந்திரவலியினால் எழுப்பிவிடப்படுமென்றும் சொல்லலானார். இது இடைக்காலத்தார் புதிதாய்க் கற்பித்த ஒரு சம்பவமென்றதைக்காட்ட அதிக நியாயம் சொல்லவேண்டி வராது. இருக்குவேதத்திலும் மற்றும் பூர்வநூல்களிலும் மிருகங்களை வெட்டுகிறதும், துண்டாடுகிறதும், அவிக்கிறதும், பொரிக்கிறதும், தின்னுகிறதும், தின்றது நன்றாய் வயிற்றுக்குட் கழிவுண்டுபோக அதின்மேற் சோமபானங் குடிக்கிறதுமே சொல்லப்பட்டிருக்கிறதொழிய மந்திரவலியினாற் கொல்லுவதைப்பற்றிக் கனாக்

## மாமிசம் வழக்கமான போசனம்

செய்வங்களுக்குப் படைக்கமாத்திரமல்ல, வீடுகளிலேயும் ஆரியர் மாடாடுகளைக் கொன்று சாப்பிட்டுவந்தார்கள். அவர்களுக்குள்ளே மாடு கொல்லும் இடங்களுமிருந்ததை இருக்குவேதத்திலேதானே காணலாம். (10-ம் மண்டலம் 89) ஒருவீட்டுக்கு அரசனாவது வேறொரு பெரிய மனுஷனாவது வரும்போது எருதை அல்லது பசுவைக்கொன்று விருந்து கொடுக்க வேண்டுமென்று "ஐதரேயபிராம்மணம்" எனும் நூல் சொல்லுகிறது. (1·15) கலியாணகாலத்திலே மதுபர்ககம எனும ஒரு சடங்கு உண்டு. முற்காலம் இச்சடங்கிலே மாட்டிறைச்சியை மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் ஊட்டுவார்கள். இது இக்காலத்தில் நீக்கப்பட்டு இதற்குப்பதிலாக வெண்கலப் பாத்திரத்திலே தயிரும் நெய்யும் தேனும் கலந்து அதையே கோமாமிசமாகப் பாவித்து ஊட்டுகிறார்கள். (கரகோஷம்) மதுபர்க்கம் பஞ்சாமிர்தமென்னும் நூலிலே கூறப்பட்டிருக்கிறது. சிராத்தகாலத்திலும் இப்படியே. தற்காலம் இறைச்சிவகைகளுக்குப் பதிலாக கலியாணப் பூசணிக்காய்க் கறியும் உழுந்துவடையும் பாயசமுஞ் செய்து படைக்கிறார்கள். கலியாணப் பூசணிக்காய் பெரிய மாமிசத்துக்கும் உழுந்துவடை ஆட்டிறைச்சிக்கும் பாயசம் சுராபானத்துக்கும் ஒப்பாகப் பாவிக்கிறார்கள். (வருணசிந்தாமணி 135-ம் பக்கம்) நல்ல சந்தானவிருத்தியை விரும்புவோரும் மசசமாமிசம் தின்னவேண்

---

காணப்படவுமில்லை. வெட்டுகிற, கொத்துகிற ஆயுதங்கள், அவிக்கிற துளாவுகிற அகப்பைகள் சொல்லப்பட்டிருக்கிறதேயொழிய, இவைகளுக்குரிய மந்திரங்களைக் காணோம். கொன்றவைகள் எழுப்பப்பட்டனவென்றதும் அந்த நூல்களிலேயில்லை. தின்றவர்களே சந்துஷ்டியாய்த் துள்ளியெழும்பினார்களென்று காண்கிறோம். அல்லதுதான், மந்திரத்தினாற் கொன்றென்ன பிறகு எழுப்பிவிட்டென்ன, கொலை கொலையாயும், புலை புலையாயுமிருக்கத் தப்புமா?

இப்போது சொல்லிய இந்துசாதனக்கடிதரிலும் அதிக துணிவுள்ள வேறொருவர், இருக்கு வேதத்திலே சொல்லப்பட்ட பிரதான யாகங்களிலே ஒரு பிராணியாவது மந்திரத்தினாலென்ன ஆயுதத்தினாலென்ன கொல்லப்படவுமில்லை, மாமிசம் தின்னப்படவுமில்லையென்றும்: கொல்லப்பட்டது, தின்னப்பட்டது என்றதற்கு கருத்து வேறிருக்கிறதென்றும், கொலையோடு கூடிய யாகங்களும இருக்குவேதத்திலே சொல்லப்பட்டிருந்தால் அந்தப் பாகங்களை மாமிசபோசனிகளான பிறர்வேதத்திலே சொருகியிருக்கவேணடுமென்றும் ஒரு பிரசித்த சைவசபையிலே போதிக்கலானார். (இந்துசாதனம் 22-1-14) இப்பிரசாரகர் பிறகு எழுதிய ஒரு கடிதத்திலே (25-6-14) நாம் காண்கிறபடி, இவர் இருக்குவேதத்திலே பலர் பலவற்றையும் சொருகிவிட்டதை ஒத்துக்கொள்ள மனமில்லாதவராக வெளிப்படுகிறார். ஆகையால் மொத்தத்திலே இருக்குவேதத்திலே சொல்லப்பட்ட யாகமெல்லாம் எவ்விதத்திலாவது கொலையில்லாத, ஒருவரும் மாமிசம் தின்னாத யாகங்களென்றுதான் இவர் காட்டப் பார்க்கிறாரென்று தோன்றுகிறது. இது பட்டப்பகலை இரவென்று கூறுவதுபோலிருக்கும். சைவநூலெல்லாம் இதற்கு மாறு. சிலபிரமாணம் வருமாறு:

டுமென்றிருக்கிறது. "புதிதாய் மணம்முடித்த நாயகனும் நாயகியும் தங்களுக்கு ஒரு நல்ல சிரஞ்சீவியான குமாரத்தி பிறக்கவேண்டுமென்று ஆசைப்பட்டால், எள்ளும் பசுநெய்யும் சேர்த்து சோறு ஆக்கி இருவரும் சாப்பிடுவார்களாக. ஆனால் தங்களுக்கு ஒரு பெயர்பெற்ற கல்விமானும் சனத்தலைவனும் சாதுரியவசனியும் வேதங்களையெல்லாம் அறிபவனுமான குமாரன் பிறக்கவேண்டுமென்று விரும்பினால், இருவரும் நெய்யோடும் இறைச்சியோடும் சோறு ஆக்கிச் சாப்பிடுவார்களாக. இறைச்சியானது நாம்பனிறைச்சியாய் அல்லது எருத்திறைச்சியாயிருக்கவேண்டும்" என்று பிருகதாரணியக உபநிஷத்திலே எழுதியிருக்கிறது (VI 4; 17) குழந்தைகளுக்கு முதன்முதல் சோறு தீற்றுகிற சடங்குக்கு ஆரியருள்ளே அன்னப்பிராசனம் என்ற பெயர் வழங்கும். இந்த அன்னப்பிராசனத்துக்கும் இறைச்சித்தீன் சொல்லப்பட்டிருக்கிறது. "பிள்ளை கொழுக்க விரும்பினால் ஆட்டிறைச்சியும், பரிசுத்தகாந்தியை அடையவி

---

மருந்தில்திதியின் உயிருய்யும் வாயின் மகயதனின்
அருந்தப்பியல்பதென்னும் கிருதுவின் அன்றி உளம்
பொருந்திப் புலாலுண்பரே சலியூடறம் பூண்டிமையோர்
விருந்திற்சிறந்தமுதூட்டப் பொன்னுடுற வேண்டினரோ
(அருட்பிரகாசம்)

குழைமுகந்தூங்குஞ் செம்மணிப் பசும்பொற் குண்டலவேதியர் நாளும்
அழன்முகத்தாற்றும் அருமகத்தன்றிச் சேர்தசை அருந்துநரில்லை
(காசிகாண்டம்)

பூசுருக்கிழிவிலே யாகத்துயிர் கொன்றருந்தலின்விண்புகுதாநிற்பார்
கோசமெடுத்துரை நவிற்றாசிரியர் சிருர்க்கிதமது முன்கொடுப்பான்
[முன்னர்
ஆசுரிகுது பார்விளைத்தும் இதம் அதுவாப்பொருள்பெறலின் அரியவேத
ஓசைமிகும் அமருலகை அவர்வதைத்த சீவனும் பெற்றுய்தலாலே
(கொலைமறுத்தல்)

"கொலைமறுத்தல்" என்னும் நூலிலே கொல்லப்பட்ட மிருகங்களின் ஆன்மா சுவர்க்கத்தையடையுமென்று சொல்லியிருக்கிறதேயொழிய மிருகம் மறுபடி உயிர்க்குமென்றில்லை. இதுவும் கவனிக்கப்படத்தக்கது. யாகத்திலே உருத்திரர் முதலியவர்களுக்குக் கொடுக்கும் மாமிசம் சுத்தியடைந்த மாமிசமாய்ப் போகிறதென்று சொல்லியிருக்கிறது. (37-ம்பக்கம்) எப்படியோ யாகத்திலே மாமிசம் வெட்டிப் படைக்கப்பட்டதற்கு இது சாட்சி. பின்னும், வேத முறைப்படி செய்த அசுவமேதயாகத்தின் விபரம் மகாபாரதத்திலும் இராமாயணத்திலுமிருக்கிறது. யாகத்தின்போது குதிரையைவெட்டிப் பலியிட்டதையும் அவித்துத்தின்றதையும் அவைகளிலேயும் காணலாம். இந்துசாதனக் கடிதர்கள் ஒருவருக்கொருவர் மாறாக இப்படி நிதார்த்தங்கெட்ட நியாயம்பேசினாலும் இந்தியாவிலே மெஸ. நல்லசாமிப்பிள்ளையையும், யாழ்ப்பாணத்திலே மெஸ். சபாரத்தின முதலியாரையும்போன்ற சைவர்கள் முற்காலத்திலே பலிவெட்டி யாகஞ்செய்த உண்மையை இந்நாட்களிலேயும் கூசாமல் வெளியிட்டிருக்கிறார்கள். Studies in Saiva Siddhanta pp 274,295. Essentials of Hinduism pp. 150. 151

ரும்பினால் கவுதாரியிறைச்சியும் கொடுக்கவேண்டும்" என்று அசுவலாயன சாங்கியாயன சூத்திரங்களிற் கண்டிருக்கிறது. "பிள்ளை கசடறப் பேசவேண்டுமானால் பாரத்துவாசி எனும் பறவையின் இறைச்சியும் சுறுசுறுப்புள்ளதாகவேண்டுமானால் மீனும் கொடுக்கத்தகும்" என்று பாரஸ்கரம் சொல்லுகிறது.

ஆதிகாலங்களிலே மாமிசபோசனம் ஆரியருள்ளே ஒரு தடையுமில்லாமல் நடந்துவந்தது என்றதற்கு இருக்கிற சாட்சிகளுக்கோ முடிவில்லை. ஆதிகாலம்வேண்டாம் மகாபாரதயுத்தகாலத்திலேயும் மாமிச உணவு தடையில்லாமல் நடந்துவந்தது. பாரதத்திலே கிருட்டிணர் அரிச்சுனன் துரோபதை எல்லாருங்கூடி இறைச்சி தின்று மதுவுங் குடித்ததை வாசிக்கிறோம். கிருட்டிணருடைய குலத்தவர்களாகிய யாதவர்களுக்கு இறைச்சிப்போசனம் நடைபடியான ஒரு போசனமென்று காணுகிறோம். கவுசிகன் எனும் முனிவருடைய கதையிலே காண்கிறபடி, அந்நாட்களிலே மிதிலை நகரிலே எருமை இறைச்சியும் வேட்டையிறைச்சிகளும் விற்கும் கடையொன்றிருந்ததாகத் தெரிகிறது. (வனபர்வம்) ரந்திதேவ எனும் ஒரு அரசன் தன் விருந்தினருக்காக நாள்தோறும் இருநூறு மிருகங்களை கொன்றுவந்ததாக கர்ணபர்வம் சொல்லுகிறது. தருமபுத்திரர் சபாமண்டபத்திலே பிரவேசித்த நாளில் "நெய்யும் பாலும் தேனும் சேர்ந்த அன்னத்தையும், பணியாரங்களையும், கிழங்குகளையும், கனிகளையும், எள்ளன்னத்தையும், ஜீவந்தியையெனும் உணவையும், ஹவிஷபத்தையும், பன்றிகள், மான்கள் முதலியவற்றின் பலவகை மாமிசங்களையும், கடித்து மெல்லத்தக்கவற்றையும், உறிஞ்சத்தக்கவற்றையும், குடிக்கத்தக்கவற்றையும் திருப்தியாகக் கொடுத்துப் பலதேசங்களிலிருந்தும்வந்த பிராமணோத்தமர்கள் பதினாயிரவரைப் புசிப்பித்து அநேகவிதங்களான புதியவஸ்திரங்களையும் புஷ்பமாலைகளையும் அளித்து அவர்களைத் திருப்திசெய்தார்" என்று சபாபர்வத்தில் வரைந்திருக்கிறது (4-ம் அத்.)

மனுதர்மசாஸ்திரத்திலேயிருந்து சில சுலோகங்களை வாசிக்கிறேன் கேளுங்கள்: "புசிக்கும்படி சொல்லியிருக்கிற மிருகம் பட்சி இவைகளை பிராமணர் எக்ஞயத்துக்காகவும் அல்லது தன் பிதாமாதா முதலிய போஷிக்கவேண்டியவர்களைக் காப்பாற்றுவதற்காகவும் கொல்லலாம். முற்காலத்தில் அகஸ்தியரும் போஷியவர்க்கங்களுக்காக உயிர்க்கொலைசெய் செய்திருக்கிறார். (5-ம் அத். 22) தவத்தில் உயர்ந்த பாரத்துவாசர் தம் புத்திரனோடு காட்டில் வசிக்கையில் விருதுவென்னுந் தச்சனிடத்தில் அநேக பசுக்களைவாங்கிக் கொன்றுதின்றார் என்று கூறப்பட்டிருக்கிறது. (10-ம் அத். 107) ஒரு பிராமணன் தன்னை மாமிசம் புசிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளும்போதும் விதிப்படி சிராத்தத்திலே வரிக்கப்படும்போதும் வேறே ஆதாரமில்லாமல் மாமிசம் புசியாவிட்டால் உயிர்போகும்படி நேரிட்ட சமயத்திலும் மிருகாதிகளின் மாமிசம் புசிக்கலாம். ஏனென்றால் பிரமன் இவ்வுலக முழுதும் சீவனுக்காதாரமாக உண்டுபண்ணினார். ஆகையால் நெல்லு முதலான தாபரமும் மிருக முதலான சங்க

மமும் சிவனுக்காதாரமாகவே இருக்கின்றன. ஆதலால் பிராணன்போகி றகாலத்தில் "புசிக்கத்தக்க செந்துக்களைத் தினந்தோறும் புசித்தபோதி லும் தோஷத்தை அடையமாட்டான். (5-ம் அத். 27, 28, 30) பிதிர்களு க்கு எவ்விதமாகச் சிராத்தஞ்செய்தால் நெடுநாள்வரையில் திருப்தியுண் டாகுமோ அதுமுழுமையுஞ் சொல்லுகிறேன். எள்ளு செந்நெல்லரிசி உழுந்து சலம் கிழங்கு பழம் இவைகளினாற் சிராத்தஞ்செய்தால் மனிதர் களின் பிதிர்கள் ஒருமாதம்வரையும் திருப்தியடைகிறார்கள். பாடீநசம் முதலிய மாமிசத்தால் இரண்டுமாதமும், அரிணமென்கிற மான்மாமிசத் தால் மூன்றுமாதமும், செம்மறியாட்டு மாமிசத்தால் நான்குமாதமும், பட்சிகளின் மாமிசத்தால் ஐந்துமாதமும், வெள்ளாட்டு மாமிசத்தால் ஆறு மாதமும், புள்ளிமான் மாமிசத்தால் எழுமாதமும், கறுப்புமான் மாமிசத் தால் எட்டுமாதமும், கலைமான் மாமிசத்தால் ஒன்பதுமாதமும், முள்ளுப் பன்றி காட்டெருமைக்கடா இவைகளின் மாமிசத்தால் பத்துமாதமும், முயல் ஆமை இவைகளின் மாமிசத்தால் பதினொருமாதமும், (சிரிப்பு) பால் தயிர் நெய் இவைகளால் ஒருவருஷமும் வார்த்திநசமென்னும் கிழவெள்ளாட்டுக்கடா மாமிசத்தால பன்னிரண்டுவருஷமும், அந்தந்தக் காலத்திலுண்டான கறியமுது முள்ளுள்ள வாளைமீன் கடகமிருகம் சிவந் த ஆடு இவைகளின் மாமிசத்தாலும் காட்டில் முளைக்கும் செந்நெல் அரி சியினாலும் அளவற்ற நாள்வரையும் பிதிர்கள் திருப்தியடைகிறார்கள். (3-ம் அத். 266—72) இவ்வளவும் மனுதர்ம சாஸ்திரத்திலேயிருந்து சுருக்கியெ டுத்தது அதன் வேறிடங்களிலே சிற்சில இறைச்சிவகை மீன்வகை தின் னப்படாது என்றுவிலக்கியிருக்கிறது. ஆகவே மற்ற இறைச்சி மீன்வ கைகள் தின்னலாம் என்றாகிறது.

## சமயகோள்கைகளிலே ஓர்பெரும்மாற்றம்.

ஆனாலும் மனுதர்ம சாஸ்திரத்திலேதானே வேறு சுலோகங்களிலே மச் சமாமிசபோசனம் ஆகாதென்றும் சொல்லியிருக்கிறது. உதாரணமாக : சில சுலோகங்களின் மொழிபெயர்ப்பைத்தருகிறேன். "சீவர்களைக்கொல் லச்சொன்னவன், கொன்றவன், இறைச்சியை வெட்டுகிறவன், விற்கிற வன், வாங்குகிறவன், சமைக்கிறவன், பரிமாறுகிறவன், புசிக்கிறவன் இவ ர்களனைவரும் காதகர்களென்று சொல்லப்படுகிறார்கள். உயிருள்ளளவும் எவன் மாமிசத்தைப் புசியாதிருக்கிறானோ அவன் நூறு அசுவமேத யாகஞ் செய்தவனுக்கொப்பாவான். கலியுகத்திலே மாமிசத்தினால் சிராத்தஞ் செய்தல் நிந்திக்கப்படுகிறது". (5-ம் அத். 51, 53; 4-ம் அத். 176) மகா பாரதத்திலே மச்சமாமிசபோசனம் சனங்களுக்குள்ளே மட்டுமா அரசர் இருஷிகள் முதலாம் பெரியோருக்குள்ளேயும் வழக்கமாயிருந்ததைக் கண்டோமே. அதிலேயும் இடையிடையே இவ்வித போசனத்தை மறுத் தும் இகழ்ந்தும் எழுதியிருக்கிறது. இந்த மாறுபாடான பேச்சக்குக் காரணமென்ன! விசேஷமாய் மச்சமாமிச உணவு பாவமல்லவென்றும் சிருட்டிகர்த்தர் சகலத்தையும் மனுஷனுக்கு ஆதாரமாகப் படைத்தா ரென்றும் சிலபாகங்களிலே சொல்லுகிற மனுதர்ம சாஸ்திரம், வேறு பாகங்களிலே அதைமறுத்துப் பேசுவதென்ன! நூற்றுக்கணக்கான மிரு

கங்களைக்கொன்று தெய்வத்தன்மையுள்ளவர்களென்று கொள்ளப்பட்ட அரிச்சுனன் கிருட்டிணர் ஆகியோர்தாமும் தின்றுவந்தார்களென்றும் பாண்டவர்கள் அசுவமேத யாகஞ்செய்து குதிரையைவெட்டிச் சாப்பிட்டார்கள் என்றும் காட்டியிருக்கிற மகாபாரதத்திலேதானே, மாமிச உணவு பெரும் பாவமென்றுஞ்சொல்லியிருக்கிறதற்கு நியாயமென்ன? இந்த விபரீதத்திற்கு நியாயமென்னவென்றால், சிலகாலத்தவர்கள் முந்தியிருந்த வழக்கங்கள் பிற்காலத்திலேமாறிப்போக, முன்னைய நூல்களிலே பிற்காலத்தார் தங்கள்கொள்கைகளையும் சொருகிவிட்டிருக்கிறார்கள் அதெப்படியென்றால், இந்தியாவிலே கிறீஸ்துவுக்குமுன் ஏறக்குறைய ஐஞ்ஞூறும் ஆண்டிலேயிருந்த மகாவீர் என்றும் கௌதமபுத்தர் என்றும்சொல்லப்படும் இருவராலே பிராமணருடைய வேள்விகளை அழித்துப்போடும் கொள்கைகளையுடைய இரண்டு சமயங்கள் உண்டாக்கப்பட்டன. இச்சமயங்களுக்கு முறையே சமணசமயமென்றும் புத்தசமயம் என்றும் பெயர். பழைய ஆரியசமயத்தின்படி நூற்றுக்கணக்கான பிராமணர் சுலோகங்களைப் பாடியோராகவும் அக்கினியை வளர்ப்போராகவும் வேள்வியை நடப்பிப்போராகவும் நின்றுகொண்டு, ஆயிரக்கணக்கான மாடாடுகளை யூபஸ்தம்பங்களிலே கட்டி அடையாளம்போட்டு அடையாளம் போட்டவைகளை வெட்டி யாகசாலைகளை இரத்தக்களரிகளாக்கி, கொன்ற மிருகங்களைத் துண்டுபோட்டு அவித்துப்பொரித்து பகிர்ந்து தின்னவும், பட்டுவஸ்திரங்கள், பொன் வெள்ளி நகைகள் திரவியங்களைப்பெறவும் செய்ய வேண்டுமானால் சொல்லிமுடியாத பெருஞ்செலவுண்டாகும். இந்தச்செலவுகளால் சனங்கள் ஒருபுறத்திலே வறுமைப்பட, பிராமணருடைய செல்வாக்கும் செல்வமும ஒருபுறத்திலே உயர்ந்துயர்ந்து வந்தது. தங்களுடைய வேள்விகளில்லாவிட்டால் சூரியனெழுவதுமில்லை படுவதுமில்லையென்றும் மழை வருவதற்கில்லையென்றும் இந்தப்பிராமணர்கள் சனங்களை நம்பப்பண்ணிவந்தார்கள். இப்படியே இவர்கள் சற்றுச்சற்றாக உலகத்திலே தாங்களே கண்கண்ட தெய்வங்கள் என்றபடி உயர்ந்து தங்களுக்குப் பூசுரர் என்றும் பூதேவர்கள் என்றும் பெயர் வகித்துக்கொண்டு பிறசாதிகளைக் கீழாகக்கணித்து, விசேஷமாகப் பாவிச்சூத்திரர்களை மிருகங்களிலும் கேடாக நடத்திக்கொண்டுவந்தார்கள். பிராமணர்களுடைய கர்வமுள்ள மேல்நிலைக்குச் சாட்சியாக ஒருபாடல்சொல்லுகிறேன் கேளுங்கள். (பாரதம் பூதேவர் மகிமையுரைத்த அத்தியாயம்)

அந்தணாகள் வலியாலே அரசர்செங்கோல் நிகழ்வதெல்லாம்
அந்தணர்க ளொழுக்கத்தால் ஆருயிர்கள் செறிவதெல்லாம்
அந்தணர்கள் நான்மறையால் அருமாரிபொழிவதெல்லாம்
அந்தணரில் அதிகர் உலகத்திலுண்டோ புகலாயே
ஆயுள்வேண்டினர் செல்வம் ஆண்மை வேண்டினர் மிக்க
சேயைவேண்டினர் தக்க சீலம்வேண்டினர் முத்தி
நேயம்வேண்டினர் சுவர்க்க நீடுவேண்டினர்விப்பிரர்
தூயதாளிற்றொழுது சூழ்வரேயேற்றமென்ன.

இதினால் சனங்களுக்குள்ளே திருப்தியீனமும் பிராமணருக்கெதிரான மனக்கொதிப்பும் உண்டாகித் தடித்துக்கொண்டுவந்தது. இந்தத்தருவா

யிலே சமணசமயமும் புத்தசமயமும் தலைப்பட்டன. மகாவீரரும் விசேஷமாய் கௌதமபுத்தரும் ஏழைச்சனங்களைப் பிராமணருடைய அடிமைத்தனத்திலிருந்து விடுவிப்பதையே முதல்நோக்கமாய்க் கடைப்பிடித்தார்கள். பிடித்து, பிராமணருடைய செல்வாக்குக்கும் உயர்வுக்கும் காரணமான யாகசாலையிலேயே முதன்முதற் கைவைத்தார்கள். சமணர்

“அவிசொரிந்தாயிரம் வேட்டலில் ஒன்றன்
உயிர் செகுத்துண்ணாமை நன்று”

அதாவது: ஆயிரம் வேள்விகளை வெட்டுவதிலும் ஒருபிராணியையாவது கொல்லாமல்விடுவது நன்று என்று போதித்து, எல்லாச்சாதிகளிலும் நின்று வேற்றுப்பிரிப்பு இல்லாமல் தங்களுடைய மதத்துக்குச் சீஷர்களை எடுத்துக்கொண்டு, சிற்றெறும்பையும் மிதியாதபடிக்கு உறியேறி உட்கார்ந்தும், நடக்கும் வழியை மெத்தெனக்கூட்டிப் பெருக்கியபின்பே நடந்தும் ஈக்கள் வாயுள் நுழைந்துவிடாமல் வாய்க்கு வலையிட்டும் சொல்லாவிரதம் பூண்டுவந்தார்கள். ([illegible]) வந்தாலும் இவ் “உறியிற் சமணர்க”ளும் பிறர் அறியாமல் இடையிடையே மச்சமாமிசம் உண்டவர்களேயாம். கௌதமபுத்தரோ அவ்வளவு கடுமையாய் நிற்கவில்லை. அவர் பிராமணருக்கெதிராக யாகங்களையும் மிருககொலையையும் மறுத்துப்பேசிவந்தபோதிலும் பிறர் கொன்று சமைத்துக்கொடுத்த ஊனைத்தின்னலாம் என்று போதித்தும் சாதித்தும் வந்தார். உள்ளபடி பன்றியிறைச்சி தின்றே கௌதமபுத்தர் வயிற்றுளைவுபிடித்திறந்தாரென்று நீங்கள் அறிந்திருப்பீர்கள்.

இப்படியே சமணமதமும் புத்தமதமும் எழுந்ததினாலும், எழுந்தபின்னும், இந்தியாவிலே மச்சமாமிச உணவு பாவமான உணவாமென்ற ஒரு புதுக்கொள்கை ஏற்பட்டது. என்ன ஒருபெருந்தீங்கை எதிர்ப்பதற்கென்று எழும்பும் எதிர்க்கட்சிக்காரரும், தொடக்கத்திலே அளவுக்குமிஞ்சி மறுபக்கத்திலே சாடிவிழுகிறது வழக்கம். இப்படியே வேள்விகள் போடும் பழக்கத்தை அழிக்கக் கங்கணங்கட்டிக்கொண்டுவந்தவர்கள் மிருகாதிகளை உணவுக்காகவும் கொல்லப்படாது என்று கடுந்த நியாயம்பேசிப்போனார்கள். போனாலும் புத்தர்களாவது சமணர்களாவது புலாலுண்ணாமல்விடவேயில்லை என்று இப்போது நான் காட்டினேனே. தாங்கள் போதித்தபடி செய்ய முடியாமற்போனது ஒன்றுமே அவர்கள்பேசிய நியாயம் கடுந்த நியாயம் என்றதற்குப் போதிய அத்தாட்சி.

## போதனையொன்று சாதனையொன்று

உள்ளபடி, புலாலுண்ணும் பழக்கம் ஒருகாலும் இந்தியாவைவிட்டு நீங்கவேயில்லை. அன்றுதொட்டு இன்றுமட்டும் கரைதுறைகளிலுள்ள ஆயிரமாயிரம் சனங்கள் இலட்சக்கணக்கான மச்சங்களைச் சமுத்திரத்தினின்றும் வாரியெடுத்து ஊருக்குள்ளே விற்றுவருகிறார்கள். இந்துக்களே இம்மீனையெல்லாம் வாங்கித்தின்றுவருகிறார்கள். யாழ்ப்பாணப்பட்டினத்திலுள்ள நாம் கண்ணாலேகாண, பெரியகடை முத்திரைச்சந்தை கைக்கோளச்சந்தை தட்டாதெருச்சந்தை முதலிய சந்தைகளுக்கு எத்தனையாயிரம்

சுமைமீன் நாள்தோறும்போகிறது. இவைகளையெல்லாம் தின்றுதொலைக்கிறவர்களார்? இவ்விடங்களிலுள்ள சைவர்களே. இன்னும் பெரிய பெரிய சைவக்கோவில்களுக்கருகிலேயும் ஒருகாட்சியைக்காணலாம். உதாரணமாய் நல்லூர்க்கந்தசாமிகோவில் பக்கத்திலே, அல்லது கயிலாயபிள்ளையார்கோவில் வீதியிலே--காலையிலே நல்லாய்க் குறியிட்ட பெண்கள் நின்றுகொண்டு கவணர் வருகிறதற்கும் காத்திராத ஆவலோடு கறிக்காரன் கறிக்காரிவருகிறதைப் பார்த்துக்கொண்டுநின்று வருமுன், எதிர்கொண்டுபோய் "நண்டிருக்குதோ மீனிருக்குதோ" (கம்கோஷம்) என்று கேட்டுப் பொன்விலைகொடுத்து வாங்கிப் பூச்சியமாய் எந்தக்கொண்டுபோவதைக்காணலாம் இது ஓரிடம் ஈரிடத்திலல்ல, தெருவுக்குத்தெரு, சந்திக்குச்சந்தி, எங்கெங்குங் காண்கிற ஒருகாட்சி.

இந்தியாவாவது யாழ்ப்பாணமாவது மீன்தின்கிற பழக்கத்தை அன்றும்விடவில்லை இன்றும்விடவில்லை. புலாலுண்ணாமை புலாலுண்ணாமை என்பது எட்டிச்சுரைக்காயெழுதிய கறிக்குதவுகிற சுரைக்காயல்ல. யாழ்ப்பாணத்தைப்பற்றியாவது நீங்களெல்லாரும் நன்றாயறிவீர்களே. யாழ்ப்பாணத்தின் சைவக்குடிசனத்தொகையென்ன? லோக்கல்போட்டுப் பரப்புக்குள்ளே ஒரு நாற்பதினாயிரமிராதா? இருக்கும். இவர்களுக்குள்ளே நானூறுபேர் அதாவது நூறுபேரிலே ஒரு ஆள் புலாலுண்ணாமையிருக்கிறதா? நீங்களே சொல்லுங்கள். திருவிளங்கப்பொடியை, உப்புக்கண்டத்தை, -- (இவைகளெல்லாம் பேர்மாறியபொருட்கள்)—பற்றிநான் பேசவில்லை. முழுப்படியே மீன்வாங்கித் தின்னுதவர்கள் மற்றவிடங்களிலேவேண்டாம் யாழ்ப்பாணம் லோக்கல்போட்டு எல்லைக்குள்ளே, சைவத்தின் உட்கோட்டை என்று சொல்லப்படத்தக்க இந்தப் பிரிவுக்குள்ளே உண்டு? தற்காலம் சிலர் தான்தோன்றிப் பிரசங்கிகள் புலாலுண்ணவேண்டாம் உண்ணவேண்டாம் என்று இராவிராவாய் அறிவுகெடுமட்டும் பிரசங்கம்பண்ணுகிறார்களே அந்தப் பிரசங்கங்களினாலாவது யாராவது புலாலுணவை விட்டார்களா? சிரிக்கிறீர்களே, நாங்கள் இப்போது இருக்கிற இடத்துக்கு ஒரு அரைக்கட்டைக்குள்ளே—பண்டியன்தாழ்விலே!—சிலசைவர் இதற்கென்று ஒருமண்டபமும்போட்டு, ஒரு "திருச்சபையும்" உண்டாக்கி (திருச்சபை என்றசொல்லை இவர்கள் எடுத்துவழங்குவதே பெரும்பகிடியாயிருக்கிறது!) ஒருபணமுதியும்சேர்த்து மாதம்மாதமோ, வாரம்வாரமோ பிரசங்கிமாரைப் பாலும் பழமும்கொடுத்தழைத்து மாலை ஏழுமணிதொடக்கம் நடுச்சாமம்வரையும் தீபதூபமுங்காட்டிப் பிரசங்கம்பண்ணுவித்தார்களே. பண்டியன்தாழ்வார் சிலர் --ஒருகைவிரலிலே எண்ணத்தக்கவர்கள்—கொஞ்சநாட் பாஷையூர் மீன்கடைக்குப் போகாமல்விட, நீங்களும் ஏதோ இனி ஊரெல்லாம் கறிமலியப்போகிறதென்று வாயூறியிருந்தீர்களே. நடந்ததென்ன? இரண்டொருநாள்கடைக்குப்போகாமலிருந்தவர்கள் பிறகு அந்தக்குறைக்குத்தக்கது பென்னம்பெரிய பனுகுகளும் சுறுக்களும் திருக்கைகளும் வாங்கிக்கொண்டுவந்து நன்றாய்ப்போட்டுப்பிடித்ததை நீங்களேகண்டீர்கள். இல்லையில்லை, கறி ஒருபோதும் மலியாது. நீங்கள் இலவுகாத்த கிளிபோலாகவேண்டாம். (சிரிப்பு)

மீனைப்போலவே இறைச்சியும். நம்முடைய தேசமெல்லாம் எத்தனைகோழிகள் ஆடுகள் வளர்க்கப்படுகின்றன! இவைகளெல்லாம் எப்படித்தொலைகின்றன? தின்றுதான் தொலைகின்றன! இந்துக்கள் இறைச்சி தின்பதையும் அந்நாளிலாவது இந்நாளிலாவது விட்டவர்களல்ல. சித்திரை வருஷப்பிறப்புக்கென்ன விசேஷமாய்த் தீபாவளியென்னப்படுகிற தீபாவளிக்கென்ன முழுகி இறைச்சிக்கறியும் சோறும் தின்னாத சைவர்கள் எத்தனைபேர்? சாங்கேயன் துறைத் தெருவால் நான் ஒருநாட் போகும்போது தலையில்லாத ஆடுகள் ஒருநூற்றுக்குமேல் காவுகளிலேயும் வண்டிகளிலேயும் கொண்டுபோகப்படக்கண்டேன். இவைகளெல்லாம் சைவருடைய உதராக்கினியிலே தகனிக்கப்படுகிறவைகள். என்! உண்மையைச் சொல்லுங்கள். இன்றைக்கு ஐம்பது வருஷங்களின்முன் பலிகொட்டாத கோவில் யாழ்ப்பாணத்திலே எத்தனையிருந்தது?* ஒருகோவிலிரண்டு கோவிலிலே வெளியாக வெட்டாவிட்டாலும் தேரடியைவருக்கென்றுவது வெட்டிப்போடுவார்களே (நாகோவில்) இக்கோவில்களில் விழுந்த ஆடுகள் கோழிகளையெல்லாம் தின்றதார்? இனி இன்றைக்குச் சிவ

* தற்காலத்துச் சைவர் சிலர் தங்கள் தெய்வங்களுக்கு ஒருபோதும் மாமிசம் படைக்கப்பட்டதில்லையென்று சரித்திரத்துக்கு முழுதும் விரோதம் பேசுகிறார்கள். யாகங்களிலே மாடாடுகள் வெட்டித் தெய்வங்களுக்குப் படைக்கப்பட்டதையும் மறைக்கக்கூடுமோ? (9-ம் பக்கக் குறிப்பைப் பார்க்குக) ஆரியருடைய வேள்விகளிலே சைவருடைய தெய்வங்கள் அவிப்பாகமடையவில்லையென்றுவிட்டால், இத்தெய்வங்கள் பிறகிட்டு வந்ததெய்வங்களென்று முடிந்துபோமே. உள்ளபடியே தக்கன்வேள்வியிலே தமக்குப் பாகங்கொடுக்கவில்லையென்று சிவன் கோபங்கொண்டு வீரபத்திரராய்வந்து அவனுடைய வேள்வியை அழித்தார் என்றகதையுமொன்றிருக்கிறது. திருவாசகம் தக்கன் வேள்வியிலே ஆட்டிறைச்சி தின்றதைச் சொல்லுகிறது:

சாவமுன்னாட் தக்கன்வேள்வித்தகர் தின்று நஞ்சம் அஞ்சி
ஆவ எந்தாய் என்றவிதா இடுநம்மவர். அவமே
மூவர் என்றே எம்பிரானொடும் எண்ணி விண்ணாண்டு மண்மேல்
தேவர்கள் என்றே இறுமாந்தென்ன பாவந்திரிதவரே

இந்த வேள்வியின் பங்குதான் தமக்குத்தாவில்லையென்று சிவன் கோபித்தார். கோபித்துப் பிசாசரூபமாய்வந்தவரோடு கூடவந்த பிசாசுகள்

நெய் உண்டனர் ததி உண்டனர் பாலுண்டனர் நீடும்
துய் உண்டனர் இமையோர்கள் தந்தொகைக்காமென உய்க்கும்
மையுண்டதோர் அவி உண்டனர் மகவேள்வியில்வந்தே
நையுண்டவர் உயிர்கொண்டிடு நாளுண்டவரெல்லாம் (கந்தபுராணம்).

இப்படிப்பட்ட வெளிப்படையான காரியத்தையும் ஒரு இந்துசாதனக் கடிதர் (22-5-1912) மறுத்து பேய்களுக்கேயல்லாமல் மிருகபலி ஒப்புக்கொடுக்கப்படுவதில்லை என்றார். ஆனால் சிவனுக்கும் மிருகபலி ஒப்புக்கொடுக்கப்பட்டபோதே, சிவனுடைய கடவுட்டன்மை தொங்குபறிவாகிறது. சிவனுக்கு வேதவிதிப்படி மாமிசம் படைப்பதற்குக் "கொலைமறுத்தல்" நூலும் சாட்சியிடுகிறது:—

கோவில்களிலே பலிவெட்டப்படுவதில்லையென்றால் அது ஒரு புது ஒழுக்கம். கிறீஸ்தபள்ளிக்கூடங்களிலே படித்த "தமிழ்த்துரைமார்"—(இந்தச்சொல்லை ஒரு சைவத் துண்டுப் புத்தகத்திற் கண்டேன்)—தமிழ்த்துரைமார் தங்கள் முன்னோர் செய்ததைச்செய்யக்கூசி வைத்த ஒருபுதுக் கட்டுப்பாடு. இப்போது வெட்டாமல்விட்டாலும் வெட்டினகாலத்தை ஒருபோதும் மறந்துபோகமாட்டோம். இப்போது சிலவிடங்களிலே ஆட்டைவெட்டாமல் அதின்செவியை வார்ந்துவிடுகிறார்கள். கோழியை அறுமல் அதின்சூட்டைக் கிள்ளிவிடுகிறார்கள். செவிவார்ந்த ஆட்டையும் சூடு கிள்ளிய் கோழியையும் தின்னாமல்விடப்போகிறார்களா? ஒருபோதுமில்லை. தற்காலம் சிலகோவில்களிலே பலிவெட்டுகிறதில்லை என்று விட்டுவிட்டாலும், அக்கோயில்களிலேயும் அவைகளின் பக்கத்திலேயும் வேறு விதமாகப் புலால் புழங்கப்படாமலில்லை. சுவாமிக்கு அபிஷேகம்பண்ணும் கோரோசனையின் சரித்திரம் தெரியுமே இது ஒருபுறங்கிடக்க, எத்தனையோவிடங்களிலே சிவன்கோயிலிலே பலிவெட்டுகிறதில்லையென்றிருக்க அதன்பக்கத்திலேயிருக்கிற அம்மன்கோவிலுக்கு சுட்டமீன் கள்ளு முதலியவைகள் படைக்கிறார்கள். சிலநாட்களின்முன் நான் தாவளையற்றுலையென்னுமிடத்தில் இருந்தபோது அங்குள்ள ஒரு சைவக்கோவிலின் பூசாரி என்னை ஏதோ அலுவலாய்க்காணவந்தார். சற்றுக்குள்ளே அப்பூசாரி பூசைபண்ணும் கோவிலைப்பற்றிக் கதைபிறந்தது அது ஒருகோவிலல்ல, பலகோவில்களின் கூட்டம். ஒரு ஐந்துபரப்புக் காணிக்குள்ளே பிள்ளையார்கோவில், காளிகோவில், வைரவர்கோவில், பெரிய தம்பிரான்கோவில் எனும் நாலுகோவில்களிருந்தன. இதிலே பிள்ளையார்கோவிலுக்கு ஒருபண்டாரி வந்து சாதம் பழம் வெற்றிலைபாக்குப் படைத்துப் பூசை

---

உய்ந்திடும் அம்மகத்துவி முன்பரன் கோபாலான்
  அவ்வூன் தூய்துறலால் சுத்தி
தந்தமறை; மந்திரமாற் தழல்விடங்கெட்டுருவிருக்
  குந் தன்மைத்தவ்வூன்;
இந்தவை புரிய உனக்கிருமறை கூறுது. இயற்றற்
  கியம்பா நிற்கும்
அந்தவுரை இறைமொழியன்று, ஆரணத்துக்
  கது விருத்தமாகையாலே

இது சத்திபூசைக்காரர் மாமிசம் படைக்க வேத ஆதாரமில்லையென்றும், சைவர் சிவனுக்கு மாமிசம்படைக்க ஆதாரமிருக்கிறதென்றும்சொல்லுகிறது! அம்மட்டுமோ? கொலைமறுத்தல் நூல் சுந்தரமூர்த்தி தேவாரத்திலே இதற்குப் பிரமாணமுங்காட்டியிருக்கிறது!.

கட்டகாட்டின மாவெரியாவர்க்கும் காட்சியுண்ணார்
சுட்டவெண்ணீறணிந்தாடுவர் பாடுவர் தூயநெய்யால்
வட்ட குண்டத்திலெரிவளர்த்தோம்பி பயில்வார்
அட்டக்கோண் டுண்பதறிந்தோமேனுமிவர்க்காட்படோமே

"தன்னெஞ்சறிவது பொய்யாத" நேர்மையுள்ள சைவர் இந்தச்சாட்சிகளை மறுக்கமாட்டார்.

பண்ணுகிறது. காளிக்கு வேறுபேர் சுட்டமீனும் கள்ளுச்சாராயமும் படைக்கிறது. வைரவருக்கு ஆடுவெட்டுகிறது. பெரியதம்பிரானுக்குப் பல மாதிரியும் என்றார். எப்படியோ இவ்விடத்துச் சைவர் தங்களுட்சிலர் ஆறுநாளும் மச்சம் தின்று ஒருநாள் ஆசாரங்காப்பதுபோல மூன்றுகோவிலிலும் புலால் பரிமாறி ஒருகோவிலிலேதான் ஆசாரம்காக்கிறார்கள். ஆகையால் மச்சமாமிசந்தின்னுங்குணம் அவர்களைத்தொண்டைக்குழியிற் பிடித்துக்கொண்டேயிருக்கிறது. இதிலே வேறொரு விபரீதத்தைப்பாருங்கள். இப்போதுசொன்னசம்பவத்தின்படி பார்த்தால், நம்சைவச் சிநேகிதர்களுக்கு நாலு கடவுள் ஏற்பட்டுவிடுகிறது. அப்படியல்ல ஒருகடவுளே நாலுபேதமாயிருக்கிறாரென்றால் (கடவுள் பேதப்படார் என்ற நியாயம் ஒருபுறங்கிடக்க) ஒருநாள் மீன் இறைச்சியும் ஒருநாள் ஆசார உணவும் கொள்ளுகிறவர்களைப்போல, கடவுளும் ஒருபேதத்திலே பேதமிருக்கக்கூடுமானால்) மீனிறைச்சியையும் ஒருபேதத்திலே ஆசார உணவையும் உவந்துகொள்ளுகிறவராகுவார். வேறுவகையாய்ச் சொல்லுகில், ஒரே ஆள் ஒரேதடவையில் மாமிசபட்சணியும் ஆசாரக்காரனுமாவதுபோலிருக்கிறது!

## சாக்தர்களும் வட இந்திய பிராமணரும்

சைவர் எப்படி செய்கையொன்று வார்த்தையொன்றாய் நடந்தாலும், சாக்தர்களோ வெளிவெளியாய் அக்காலந்தொட்டே மச்சமாமிசத்தைப் போற்றி வந்திருக்கிறார்கள். இந்தியாவிலே தொகையளவிலே சைவரிலும் சாக்தர்களே அதிகம். வட இந்தியாவின் கிழக்குப்பக்கமெல்லாம் சாக்தர்கள். இவர்களுடைய சமய வழிபாட்டிலே மச்சமாமிசம் தாராளமாய்ச்சேருகிறது. இவர்களுடைய முக்கியமான தெய்வம் சக்தி என்று சொல்லப்படுகிற சிவனுடைய பெண்பாகமாகிய காளி. சக்தியை வழிபடுகிறதினாலே சாக்தர் என்று சொல்லப்படுகிறார்கள். இவர்கள் காளிக்கு மிருகபலியைக் கொடுப்பார்கள். ஒரு இந்துப்பத்திரிகையினின்று வாசிக்கிறேன் கேளுங்கள்: "காளி பிடாரி சாமுண்டி என இன்னும் பலபெயர்களால் வழங்குகிற தேவியின் கோவில்களில் இந்த (விஜயதசமி) உத்சவசமயத்தில் பலிபோடப்படும் ஆடுமாடுகளுக்குக் கணக்கில்லை வழக்கில்லை. கல்கத்தா நகரத்திலுள்ள காளிகோயிலில் நவராத்திரி தினங்களில் அடிபடும் எருமைமாடுகள், ஆடுகள் எண்ணிறந்தவைகள். கோயில் தளம் முழுதும் அரையடி இரத்தம் நிற்குமாம்". (ஸ்ரீ வாணிவிலாசினிப் பத்திரிகை 2 ம் புத். 7-ம் இலக்.) சாக்தர்களுள்ளே வாமமார்க்கத்தார் என்று சொல்லப்படும் பிரிவார் செய்யும் சக்தி பூசைக்குப் பலவிதமான மீன் இறைச்சி குடிவகைகள் தேவை. அவர்களுடைய பூசை வாலைபூசை, புவனபூசை, திரிபுரைபூசை, காலவைரவபூசை, சொர்ணவைரவபூசை எனப் பலவிதமாயிருக்கும். பூசைநேரத்திலே நிற்போரெல்லாரும் வலதுகையில் இறைச்சியும் இடதுகையில் சாராயமும்வைத்துக்கொள்ளுவார்கள். அவர்கள் இவ்வுணவுப்பொருட்களுக்கு இட்டிருக்கும் பெயர்கள் வேடிக்கையானவை. சாராயத்தை அவர்கள் வஸ்து என்பார்கள். போத்தலைக் கடம் என்றும் குடித்தலை வஸ்து தரிசனையென்றும் அழைப்பார்கள் தென்னங்கள்ளுக்கு ஆகாசப்பாலென்றும் (கரகோஷம்) பனங்கள்ளுக்குக்

கற்பகத்தேன் என்றும் பெயர். மாமிசத்துக்கு நல்லபெயர் சுத்தி! மச்சத்தின்பெயர் சலபுஷ்பம் கருவாட்டைக் காந்தம் என்பார்கள். கோழிக்குப் பெயர் குப்பைச்சிகை. (கரகோஷம்)

பிராமணர் தாம் மச்சமாமிச போசனத்தைவிட்டுவிட்டார்களா? இல்லையில்லை

"ஆரணமாயினர் மாடாடுகளை அடித்தவித்துப்
பாரணஞ்செய்யப் பழகிக்கொண்டார்"

என்பது முக்காலும் மெய். அது அவர்களுடைய பழைய பழக்கம் (சிரிப்பு) மேலும்,

"தேனொடு ஊன் ஒன்றும் அந்தணர்க்கருசி சிவன்கரத்தில்
மானேறிடப் புக்க"

என்றும்

"ஊன்றாக்கியுன்றும் பிராமணர்க்கருசி உமாபதியும்
மான்றாக்கினான்"

என்றும் வருகிற பாடல்கள், பிராமணர் தம்முன்னோர் மச்சமாமிச பட்சணிகளென்று காட்டுகின்றன. காசியத்தனிலே கூட இந்தியாவின் பிராமணரெல்லாரும் இன்றைக்கும் மச்சமாமிச பட்சணிகள்தான். தென்னாட்டிலேகூட திருவையாறு சிதம்பரம் முதலியவிடங்களிலே பிராமணர் பசுபந்தயாகஞ்செய்து மாம்சம் புசித்துவருகிறார்கள்.

"செந்தீயார் வேள்வி ஓவாத்தில்லைச் சிற்றம்பலம்" என்றும்

"திருமேவு செல்வத்தார் தீமூன்றும் வளர்த்த
திருக்கக்க அந்தணர்களோத நகரெங்கும்
கருமேதி செந்தாமரை மேய்ந்து கூனிக்
காணிட்டு முள்ளேறிற் கண்டு தொழுதேனே" என்றும்

"பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட்டெரியோம்பும்
சிறப்பர் வாழ்தில்லை" என்றும்

"மறையோர்கள் தாம்
புடைகொள் வேள்விப்புகை உம்பர் உலாவும் புகலியே" என்றும்,

சைவருடைய தேவாரங்களிலேகூட பிராமணர் பின்னிட்டகாலங்களிலேயும் வேள்வி வெட்டி அவிக்கும் தன்மைகாட்டியிருக்கிறது.

அத்யாபநஞ் ச அத்யயநம் யஜநம் யாஜநம் ததா
தாநம் ப்ரதிக்ரஹஞ்சாபி ஷட்கர்மண்யக்ர ஜந்மந:

என்னும் மனு சுலோகத்திலே சொல்லியிருக்கிறபடி வேதமோதுதல், ஓதுவித்தல், யாகஞ்செய்தல், செய்வித்தல், தானங்கொடுத்தல், பெறுதல் ஆகிய ஆறும் பிராமணருடைய தொழில்கள். இவ் அறுதொழில்களுள் யாகஞ்செய்தலும் செய்வித்தலும் இருக்கிறதைக் காண்கிறீர்களே. இந்த யாகம் அவர்கள் தொன்றுதொட்டுச் செய்ததொழில். இன்றைக்கும் அங்கங்கே

செய்யுந்தொழில்* இத்தொழிலைப் பெரும்பாலும் தென்னாட்டிலேவிட வேண்டிவந்தது புத்தராலேயும் சமணராலேயும் என்றுசொன்னேன். சமணரும் புத்தருமே அந்நாட்களிலே வேதவேள்வியை இழித்துப்பேசி வந்ததை

> "வேதவேள்வியை நிந்தனைசெய்துழ
> லாதரில்லி அமணொடுதேரர்"

என்று திருஞானசம்பந்தர் சொல்லியதனுலுங்காணலாம். தற்காலப் பிராமணருடைய மாமிசபோசன ஒழுக்கங்களைப்பற்றி மெஸ். வெ. ப. சுப்பிரமணியமுதலியார் தமிழ்ச்தொன்மை ஆராய்ச்சிப்பத்திரிகையிலே சொல்லியவைகளை இவ்விடத்திலே வாசிப்பது பொருத்தமாயிருக்கும்: "வடதேசத்துப்பிராமணர் பிரசாதிமாதனை அதிகமாக மணந்துகலவா மையால் பெரும்பாலும் கலப்பற்றவர் தென்தேசத்தவர் மற்றைச்சாதிக் கலப்புற்குறியால் அதிசகலப்புற்றவர். முன்னையவர் சமன்கிருதபாஷை யின் சிதைவான பாஷைகளைத் தாய்ப்பாஷைகளாகவுடையர். முன்ன வர் ஆசாரக்குறைவுடையவர்கள். பின்னவர் ஆசாரமிகுதியுடையவர்

---

* யாகத்திலே இன்றைக்கும் மாமிசமுண்ணலாமென்றதற்குப் பிரமாணம், (காசிகாண்டம்:)

அருமகத்தன்றி யூன்சுவைத்துடலம் வீக்குமோன் அதற்குடன்படுவோன்
கருவியிற்குறைதம்தான் பகர்ந்துள்ளான் கொணர்ந்தோன் வியந்துளோ
ன்சுடுசெனவேவும்
திருவிலி அதனை அட்டவன் இவர்கள் எண்மரும் தீசுரடைவர்
பரிவின் ஊன்விடுத்தோர் நாடொறும் புரவிமசும்புரி பலன்பெறுகுவரால்

குழைமுகந்தூங்குஞ்செம்மணிப் பசும்பொற்குண்டல வேதியர்நாளும்
அழன்முகத்தாற்றும அருமகத்தன்றிச்செந்தசை அருந்துநரில்லை
விழைவொடும்பயந்தோர்ப்பழிச்சிடாரில்லை வெங்கவறுடுநரில்லை
கழிபெருங்குணத்துக் குரவனைப் பிழைப்போரரும்பொருள் கவருநரில்லை

இன்னும் பலவுள கொன்றுதின்பது அவ்வளவு பெரும்பாவமென்றால் யாகத்திலே அது பாவமாகாமற்போவதெப்படியென்று சைவர் யோசித்தார்களில்லை! உண்மையைப்பார்த்தால் முற்காலத்திலே மச்ச மாமிசபோசனம் வழக்கமானபோசனமென்றும் சமணமதவெழுச்சியின் பின்னே அது விலக்கப்பட்டதென்றும் விளங்கும். பின்வரும் பாட்டைக் கவனிக்குக. அருட்பிரகாசம்:—

> மருந்தில், திதியின், உயிருய்யும்வாயின், மகமதனில்
> அருந்தற்கியல்பதெனினும் இருதுவின் அன்றி உளம்
> பொருந்திப் புலால் உண்பரோ கலியூடு! அறம்பூண்டு இமையோர்
> விருந்திற்சிறந்தமுதூட்டப் பொன்னாட்டுற வேண்டினரே

இருதயுகத்திலே வேள்வியிலும், உயிர்பிழைக்கவும் மருந்துக்கும் (ஆகையால் எப்போதும்) மாமிசந்தின்னலாம், ஆனால் கலியுகத்திலே தின்னப் படாது! என்? சமணமதபோதகத்தினால் சைவம்மாறிவிட்டதினாலேதான்!

கள். வேதகாலத்தில் சர்வ ஆரியரும் மாட்டுமாமிசம் புசித்தவரேயாயினும் இக்காலத்தில் மூர்த்தியவருள் சில வகுப்பாரே மாமிசம்புசிப்போர். பிந்திய வருள் எவ்வகுப்பாரும் யாகவாயிலாகவன்றி மாமிசம் புசியார். வடதேசத்தில் பிராமணர் மிகுந்திருந்தாயிருந்ததனால் தாங்கள் மாமிசம் தின்னும் பூர்வவழக்கத்தை மற்றைச் சாதிகளின் அவமதிப்புக்கு அஞ்சிக் கைவிடவில்லை. தென்தேசத்திலோ பிராமணர்தொகை குறைவாயிருந்ததனால் மற்றைச்சாதி ஜனங்களின் பழிப்புக்குப் பயப்பட்டுப் புலாலுணவைக் கைவகலவிட்டனர். ஆயினும் 'பழக்கங்கொடியது' ஆதலால் மாமிசபக்ஷணத்தை மறுக்கவியலாதவர்களாய், அவர்கள் புலாலுண்ணுமையை இன்றியமையா உயர்குலவொழுக்கமாகக்கொண்ட மேற்சாதித் திராவிடரது இகழ்ச்சியினின்று தப்பும் உபாயத்தைநாடி, யாகமென்னும் வியாசத்தால் ஏகதேசமாக மாமிசம் புசிப்பாராயினர். [அதாவது தென்னிந்தியாவிலே பிராமணர் மாமிசந் தின்னவென்றால் தமிழருக்குப்பயம் தின்னாமல்விடவும் மனமில்லை. ஆனபடியால் யாகஞ்செய்கிறோமென்றுசொல்லி யாகத்திலே மிருகங்களைக்கொன்று உபாயமாய் இடையிடையே இறைச்சி தின்கிறார்கள்] இதுபோலவே தமது 'கோரான்' என்ற வேதத்திலே மாட்டுமாமிசம் புசித்தற்கு அநுமதியடைந்திருக்கின்ற மகம்மதியருள் வடதேசத்தவர் தொகையில் மிகுந்தோராதலால் அந்த மாமிசம் புசித்துவருகின்றார்கள். தென்தேசத்து மகம்மதியர் தொகையில் குறைந்தோராதலால் மாட்டிறைச்சிதின்னும் பறையர் முதலியோரோடு தம்மையுஞ்சேர்த்துப் பிறசாதியார் நீசரென்று இகழ்வார்களென்ற பயத்தாலும் அப்பயங்காரணமாக ஏற்பட்டுவிட்ட வழக்கத்தாலும் மாட்டு மாமிசத்தைத் தொடாதிருக்கின்றனர்".

## வேளாளராகுவோர்

இம்மட்டும் மெஸ். சுப்பிரமணிய முதலியார் சொன்னது. இதிலே முதலியாரவர்கள் சுட்டிப்பாய்க் காட்டியிருக்கிறபடி இந்துக்களுடைய புலாலுண்ணுமை அவர்களுடைய சமயத்தோடு எள்ளளவாவது சம்பந்தப்பட்டதல்ல என்று சிநேகிதர்களே நீங்கள் இதுவரையிலே கண்டுகொண்டீர்கள். தமிழருடைய சமயத்திலேயென்ன, ஆரியருடையசமயத்திலேயென்ன, ஆதிதொட்டு புலாலுண்ணுவது சேர்ந்திருந்ததேயொழிய புலாலுண்ணுமை சேர்ந்திருக்கவில்லை. ஐயா, முருகன் முதலிய தமிழ்த்தெய்வங்களுக்கும் இந்திரன் உருத்திரன்முதலிய ஆரிய தெய்வங்களுக்கும் மிருகங்களைவெட்டி வேள்விபோட்டு இறைச்சியுந்தின்று மதுபானமும்செய்வது வழிபாடாயிருந்ததேயொழிய, கொல்லாவிரதம் என்றொரு வழிபாடு இருக்கவில்லை. சமயத்தைச்சாட்டிக் கொல்லாமையை அநுசரிப்பதென்பது சமணரும் புத்தரும் எழுந்தகாலம்வரையிலே அறியப்பட்டிருக்கவில்லை. முன்னே எல்லாரும் மீனிறைச்சி தின்றார்கள். அரசனுடைய வருகைக்குக்கூட மாடடிப்பதே தக்கமரியாதையாயிருந்தது. ஆனால் புத்தரும் சமணரும் தென்னிந்தியாவிலே பரந்து பழைய வைதிக சமயங்களை சிலகாலம் இருந்தவிடமுந்தெரியாமல் அழித்துவிட்டபோது, மாடுகளைக் கொல்லுவதும் இறைச்சிதின்பதும் ஏதோ இழிவானகாரியம் என்றபடி

வந்துவிட்டது. பிறகு வைதிகசமயக்காரர் இராசாக்களுடைய புசபலத்தை ஆதரவாகக்கொண்டு புத்தசமயத்தை முழுதும் தென்னிந்தியாவை விட்டோட்டி, சமணரைக்கழுவேற்றியும் வதைத்தும் வலியிழந்துபோகப் பண்ணிவிட்டார்கள். விட்டாலும் யாகஞ்செய்வதும் மச்சமாமிசமுண்ணுவதும் நல்லதல்ல என்ற எண்ணம் சனங்களுக்குள்ளே நிலைத்துக்கிடந்துவிட்டது. இப்படி நிலைத்துக்கிடந்ததற்கு ஒரு முக்கியகாரணம், யாகங்களினாலே பெருமையடைந்துகொண்டுவந்த பிராமணருக்கெதிராகப் பொதுச்சனங்கள் சற்றுச்சற்றாகத் தரித்துக்கொண்டுவந்த வெறுப்பு. பிராமணர் யாகங்களைச்சூழ உண்டுபண்ணிவைத்த கணக்கில்லாத கஷ்டமான விதிகளும் வேறொருகாரணம். அவைகளால் வரும் அபரிமிதமான செலவும் இன்னுமொருகாரணம் மேலும் புத்தசமயமும் சமணசமயமும் பரந்திருந்தநாட்களிலே வைதிகதெய்வங்களும் மறைந்தோ உருமாறியோ போய்விட்டன. புலால் தீன்காரத்தெய்வங்கள் பெரும்பாலும் ஆராதபோசனிகளாய்ப்போய்விட்டன. (சிரிப்பு) அப்படிப்போயிராவிட்டால் அத்தெய்வங்கள் புத்தர் சமணருடைய நகைப்புக்கு இடமாயிருந்திருக்கும். இப்படியே பௌத்தமும் சமணமும் இந்தியாவில் நிலைத்திருந்த நூற்றாண்டுகளெல்லாம் யாகங்களைவிட்டுவிடவும் புலாலைமறுக்கவும் பழகிக்கொண்ட இந்துக்கள் அவைகள் அருகிப்போனபோதும், பெரும்பாலும் இந்த ஒழுக்கங்களைப்பிடித்துக்கொண்டார்கள். பெரும்பாலும் என்றேன். ஏனெனில், இந்தியாவிலே எப்போதாவது யாகங்கள் முற்றாயழியவில்லை என்றதை மறந்துபோகப்படாது. இன்றைக்கும் பலவிடங்களிலே பசுபந்தவேள்வி நடக்கிறது. பழையபடியான பெரும் யாகங்களே இல்லாமற்போய்விட்டன. புலாலுணவும் முற்றாயில்லாமற்போகவில்லையென்றதைத் திருப்பிச்சொல்லவேண்டியதில்லை. பழையபடி பயமில்லாமற் தின்னும் சாதாரண வழக்கமே இல்லாமற்போயிற்று.

தென்னிந்தியாவிலே புலாலுண்ணாமை இன்றியமையாத உயர்குலவொழுக்கமாகக்கொள்ளப்படுகிறதென்று மெஸ். சுப்பிரமணியமுதலியார் குறித்தாரே, அதைப்பற்றியும ஒருவார்த்தைசொல்லவிரும்புகிறேன். புலாலுண்ணாமையானது இந்துக்களுடைய சமயத்தோடல்ல, உயர்குலத்தோடு சம்பந்தப்பட்டது என்று இதனால் விளங்குகிறது. இப்படி வந்ததற்கு நியாயமென்ன? வேளாளர் நாடுகளிலே கமக்காரராயிருந்தமையால், அவர்கள் இயல்பாகவே தங்கள் வயல்கள்தோட்டங்களின் விளைவுகளையும் பசுவின் பிரயோசனங்களையுமே உணவாகக்கொள்ளுவோரானார்கள். பசுமுதலிய வீட்டுமிருகங்களைக்கொன்று தின்பது அவர்களுடைய தொழிலுக்கு நட்டமாகமுடியும. ஆதலால் அம்மிருகங்களையும் விசேஷமாய்ப் பசுவையும் ஒம்பிவந்தார்கள். பசுக்காத்தல் வேளாளருக்கு எத்துணை அவசியமென்பதை கம்பரும்

> ஊன்காக்கும் ஆவிக்குறுதி உழவாம்; அதற்காய்
> ஆன்காப்பே காப்பாக ஆளுங்கை

எனப்பாடினர். பசுவைக்காத்ததுமட்டுமோ அதினால்வரும் பெரும் பிரயோசனங்களை நோக்கி வேளாளர் அதை ஓர் தெய்வமாகத்தானும் பூசித்து

வந்தகை, வருவதை யார் அறியாதார்?* இனி, வேளாளர்தாம் ஒருகாலம் தமிழ்நாட்டிலே முதற்குலமாயிருந்தார்கள் என்பதற்கு வழக்கில்லை. ஆகையால், காலகதியிலே சாதியில் உயரவிரும்பிய பிறசாதிகள் வேளாளரையே கண்டு பாவிக்கவேண்டியவர்களானார்கள். அதனால் வேளாளரைப் போல கமச்செய்கை, வாணிபம் முதலிய தொழில்களிலே கையிட்டுக் கொண்டு இப்பிறசாதிகளும் வேளாளரைப்போல தாவரவுணவோடே நின்றுவிடத் தலைப்பட்டன. படவே, தாவரவுணவு உயர்குலவுணவு என்ற எண்ணமும் தடித்துத் தடித்துக்கொண்டுவந்தது. இந்தமுறையை இன்றைக்குங்காணலாம். நானிங்கே பெயர்சொல்லவேண்டாத சிலசாதிகள் முதன்முதல் தொழில்மாறிச் செட்டியென்று வருகின்றன. பின்பு ஆரத போசனத்தை மேற்கொண்டு சைவக்காரரென்றும் அப்பால் சின்னவேளாளரென்றும், ஈற்றில் பெரிய வேளாளரென்றும் வந்துவிடுகிறார்கள். (கரகோஷம்) பறையர் பள்ளரிலேயும் சிலர் அங்கங்கு மச்சமாமிசபோசனத்தைவிட்டுவிட்டால் யோக்கியமுள்ளவர்களாய்ப்போய்விடுகிறார்கள். மாடுதின்னும் பள்ளர் மாடுதின்னாப் பள்ளரிலும் உயர்வாக எண்ணப்படுகிறார்கள். இவற்றின் விபரத்தை வருணசிந்தாமணி (165-ம் பக்.) யிலே காணலாம். இப்படியே தாவரவுணவு உயர்குலவொழுக்கமும் மாட்டிறைச்சிதின்பது ஆக இழிந்தசாதியொழுக்கமுமாகிவிட்டது. இதிலேயும்

* சைவர் பசுக்களைத் தெய்வங்களில் மேலான தெய்வமாகப் பூசிக்கிறார்கள் இதற்குப் பிரமாணம்:—

அரனுதியொருமூவர் அமரேசன் மருமானும்
ஒருவாமல் உறைவார்கள், உமையாதிமடவாரும்
அரிதாய மறையோர்கள் உடல்; ஆவினுடல் ஆர்வம்
ஒருவாது வழிபாடுபுரியார்கள் உயர்வாரே.

ஆக்கள் முத்தி அடைவிக்கும் காரணம்
ஆக்களாதலினாற் றுணையாயின
ஆக்கள் ஆக்கையின் நோயும் அறுத்திடும்
ஆக்களே இருள்நோய்க்கும் அவுடதம். (சிவதருமோத்தரம்)

சீலமுடைய கோக்குலங்கள் சிறக்குந்தகைமைத் தேவருடன்
காலமுழுதும் உலகனைத்தும் காக்கும் முதற்காரணமாகும்;
நீலகண்டர் செய்ய சடை நிருத்தர் சாத்து நீறுதரும்;
மூலமவதாரஞ்செய்யும் மூர்த்தமென்றால் முடிவென்னே
(சண்டேசுரர் புராணம்)

மேலும் பசுவிடத்திலுண்டாகும் சாணி மூத்திரம் பால் தயிர் நெய் இவைகளைப் பஞ்சகவ்வியமென்றும் (கோரோசனையையுஞ்சேர்த்துச் சட்கவ்வியமென்றும்) இவைகள் ஐந்தையும் ஒருங்குசேர்த்து உண்பதினால் எவ்வித பாவமும் தீருமென்றும் சைவநூல்கள் சொல்லுகின்றன. சிவன் தாமே மாட்டின் ஐந்துகாரியங்களுமாய் நிற்பாரெனத் தேவாரம் சொல்லுகின்றது.

“ஆவினில் ஐந்தும் அமர்ந்தாய் நீயே.
ஆனவில் பெருமையுடையாய் நீயே”

இதுபோல்வன பிறவுங்காண்க.

புலாலுண்ணுமைக்கு இந்தக்களுடைய சமயத்தோடு ஒருதொடர்பையுங் காணேம். அது சாதியாசாரத்தோடேயே இடைக்காலத்திலே சம்பந்தப்பட்டதாகத் தோற்றுகிறது.

இதுதான் புலாலுண்ணுமையின் சரித்திரம். ஆதிதொட்டு இந்தியாவிலே சகலரும் மச்சமாமிச உணவும் உண்டுவந்தார்கள். தாவர உணவும் உண்டுவந்தார்கள். மச்சமாமிச உணவு குற்றமுள்ளதென்ற எண்ணம் ஆதியிலேயிருக்கவில்லை. சமணரும் புத்தரும் பிராமணரை எதிர்ப்பதற்காக அளவுக்குமிஞ்சி மறுபுறமாய்ச்சாடிப் போதித்தபோதுதானே புலாலுணவு குற்றமுள்ளதென்ற ஒரு எண்ணத்தைப் பிறப்பித்தது. மிருகாதிகளை உயிர் போக்குவது பாவம் என்ற எண்ணமும் இவர்களாலேயே உற்பத்தியானது. அதனோடு சுபாவ நியாயங்களின் நிமித்தம் தாவர உணவையே மிகுதியாகக்கொள்ளும் வேளாளரைக் கண்டுபாவிக்கவிரும்பி "மேலோர்க்கு" கீழ்ச்சாதியார் தாவரவுணவு உயர்குலத்துக்குரிய ஒரு ஒழுக்கம் என்று எண்ணி அதைப்போற்றி நடக்கத் தலைப்பட்டார்கள் அதினால் வேளாளர் அதிகமாயுள்ளவிடங்களிலே மச்சமாமிச உணவும், விசேஷமாய் மாட்டிறைச்சித்தீனும் இழிவான காரியங்களாகவந்துவிட்டன. இதுதான் உள்ளவரலாறு.

## புலாலுண்ணுமையும் மறுபிறப்பும்

காரியம் இப்படியிருக்க, மறுபிறப்புக்கொள்கைக்காரர் புலாலுண்ணுமையை மறுபிறப்புக்கொள்கையோடே பொருத்திப்போட்டப்பார்க்கிறார்கள். பார்த்தாலும் அதுபொருந்தாது. மறுபிறப்புக்காரர் சொல்லுகிறது என்னவென்றால்: மனுஷர்தாம் மறுபிறவியிலே மாடு ஆடு கோழி இவைகளாகப் பிறந்திருக்கிறபடியால், இவைகளைக்கொல்லுவதும் தின்னுவதும் மகா பாதகம். ஆகையாற்றான் புலாலுணவு ஆகாது என்கிறார்கள் இந்த நியாயம் சரியென்றால், இவர்களுடைய மறுபிறப்புக்கொள்கையின்படி மனுஷர், மிருகங்களாக மாத்திரமல்ல புல் பூண்டு கீரை முதலியவைகளாகவும் பிறந்திருக்கிறபடியால் புல்பூண்டுகளையும் ஒருவரும் தின்னப்படாது. (கரகோஷம்) எனெனில் மிருகங்களிலேயுள்ளதும் மனுஷருடைய ஆத்துமந்தான். தாவரங்களிலே உள்ளதும் மனுஷருடைய ஆத்துமந்தான். ஆனபடியால் மிருகத்தைக்கொல்லுகிறவளவு பாவம் தாவரத்தைக் கொல்லுகிறதிலுமிருக்கவேண்டியது. ஆனால் இவர்கள் தாவரங்களுக்கு அறிவு குறைவு மிருகங்களுக்கு அறிவுகூட, ஆனபடியால் தாவரங்களைக்கொல்லலாம் மிருகங்களைக்கொல்லப்படாது என்கிறார்கள். சிநேகிதர்களே, இங்கே அறிவைப்பற்றியல்ல ஆளைப்பற்றியேதான் கேள்வியிருக்கிறது. நாலுபேர் கொல்லப்படுகிறார்களென்று வைத்துக்கொள்ளுவோம். கொல்லப்படும் ஒருவன் அறிவாளி. ஒருவன் அறிவுகுறைந்தவன் ஒருவன் விழிப்பு. ஒருவன்நித்திரை. இப்படியே நாலுபேருக்கும் நிலைபரத்களவிலே வித்தியாசமிருந்தபோதிலும் கொலையிலேயும் வித்தியாசமுண்டா? அறிவுகூடினவனைக் கொன்றது கொலை குறைந்தவனைக் கொன்றது கொலையல்ல என்றுபோய்விடுமோ? விழிப்பாயிருந்தவனைக் கொன்றது பாதகம் நித்திரையாயிருந்தவனைக் கொன்றது பாதகமல்ல என்றுவந்துவிடுமோ?

(கரமேகோஷம்) தாவரங்களில் அறிவு குறைவு ஆகையால் அவைகளைக் கொல்லலாம், மிருகங்களிலே அறிவுகூட ஆதலால் அவைகளைக்கொல்லக்கூடாது என்ற நியாயமும் இதுதான். இப்போது மனுஷனாயிருக்கிற ஒரு ஆள்தான் பிறகு ஒருகீரையாய்ப்பிறந்துநிற்குமென்றால், இந்த மனுஷனைக்கொல்லுவதும் சரி அந்தக் கீரையைக்கொல்லுவதும் சரி. அறிவு விளங்கியிருப்பதிலேயும் அடங்கியிருப்பதிலேயும் வித்தியாசம்வராது.

மறுபிறப்புக்காரர் புலாலுணவைக் கண்டித்து தாவர உணவுக்காகக் கொண்டுவருகிற அலப்புநியாயங்கள் இன்னுஞ் சிலவுண்டு. மிருகங்களைக் கொல்லும்போது அவைகள் கதறும், துடிக்கும். கீரை முதலியவைகளைப் பிடுங்கும்போது அவைகள் கதறுவதில்லை துடிக்கிறதில்லை என்கிறார்கள். அப்படியானால் கீரை முதலியவைகளிலேயுள்ள உயிர் வேறுவகையான உயிரென்று ஒத்துக்கொள்ளச்சம்மதமா? சம்மதமென்றால் கீரை முதலியவைகளிலே மறுபிறப்புக்காரருடைய ஆத்துமாக்கள் இல்லையென்று வரும். அப்போது மனுஷர் கீரை முதலியவைகளாகப் பிறக்கிறதில்லையென்றுசொல்லப்பட்டு மறுபிறப்புக்கொள்கைக்கு மாறாகப்போய்விடும். அல்லது கீரை முதலியவைகளிலேயும் மிருகங்களிலேயும் உள்ளது மனுஷனிடத்திலுள்ளதுபோன்ற ஆத்துமாதானென்று சொல்லப்போகிறீர்களா? அப்படிச்சொன்னால், கதறியென்ன கதறாமலென்ன; துடித்தென்ன துடியாமலென்ன, கீரையைப்பிடுங்குவதும்கொலைதான். மாட்டைவெட்டுவதும் கொலைதான் மனுஷனை உயிர்போக்குவதும் கொலைதான். கதறாததினால் துடியாததினால் கொலைப்பாவம் குறைந்துபோகாது. உதாரணமாக, ஒருநோவும் இல்லாதிருக்க நஞ்சுக்குண்டுகளினால் மனுஷரை இருக்கவிருந்தபடியே தம்பித்துநின்று செத்துப்போகப்பண்ணுகிறார்களே. அது கொலையாகாமற் போய்விடுமா? தாயுதரத்திலே மருந்துகளினால் சிசுவழிக்கும் பாதகங் கொலையல்லாமற்போய்விடுமோ! போகாது. ஆகையால் கீரை முதலியவைகள் கதறாவிட்டாலும் அவைகளைக் கொல்லும் சைவர் மனுஷரைக்கொன்ற பாவத்துக்கே உள்ளாகிறார்கள்.

இன்னுஞ் சிலர், கீரை முதலியவைகளைப் பிடுங்கும் பாவம் தீரப் பிராயச்சித்தம் உண்டு என்கிறார்கள் * அப்படியானால் மாடு முதலியவைகளை வெட்டும் பாவந்தீர என் பிராயச்சித்தமில்லை? பிராயச்சித்தம் செய்யவேண்டாதவிதமாய் உலகத்திலே ஜீவிக்கவகையில்லையென்றால் கடவுள் அப்

* இந்தப்பிராயச்சித்தமாவது தேவர், அதிதி, அனல், தேசிகர் எனும் நால்வருக்கும் புசிக்கக்கொடுத்துப் பின்புதின்னுதலாம்.

இதற்குப்பிரமாணம்:—

தேவர் அதிதியனல் தேசிகர்க்கென் றட்ட அன்னம்
தேவர் உலகத்தமுதம் என் (சைவசமயநெறி)

தேசுறு சிவாதி பூசைக்கென இவை தம்மைச்செய்யின்
நாசமாம் பாவபேதம்; தம்மையோராடிச்செய்யில்
பாசமா நரகபேதப் படுகுழிப்படுத்தி என்றும்
ஊசல்போல் உழல்வித்தாக்குந் துயரினுக்களவுமுண்டோ
(சிவதருமோத்தரம்)

படிப்பட்ட ஒரு உலகத்தை ஏற்படுத்தியிருப்பாரா! அன்றியும் கீரைபிடுங்குவதற்குப் பிராயச்சித்தமுண்டென்றால் நாம் சுவாசிக்கும்போதே சொல்லப்படுகிற இலட்சக்கணக்கான கிருமிகளுண்டே, நாம் நடக்கும்போது கொல்லப்படுகிற இலட்சக்கணக்கான ஊர்வனவுண்டே, அவைகளின் கொலைக்குப் பிராயச்சித்தமென்ன! மனுஷர்தாம் பிராயச்சித்தஞ் செய்தாலும், மாடுகள் தாங்கள் தின்னும் புல் முதலியவைகளின் கொலைக்காக என்ன பிராயச்சித்தஞ்செய்யும்! தவளைகள் கொக்கு குருவிகள் தாங்கள் விழுங்கும் புழுப்பூச்சிகளுக்காக என்னபிராயச்சித்தஞ்செய்யும்! சிங்கம் புலிகள் தாங்கள் தின்னும் சிறுமிருகங்களுக்காக என்ன பிராயச்சித்தஞ்செய்யும்! பெரிய மீன்கள் தாங்கள் தின்னும் சிறிய மீன்களுக்காக என்ன பிராயச்சித்தஞ் செய்யும்!

மறுபிறப்புக்காரர் ஈற்றில் தப்பவழியில்லையென்றதற்கு இன்னுமொரு நியாயஞ்சொல்லுகிறேன். கொலைக்குப் பிராயச்சித்தமுண்டு என்றதெல்லாம் வீண் புருடா. கொன்றவன் கொல்லப்படவேண்டும். தின்றவன் தின்னப்படவேண்டும் என்பதுவிதி.

> கொன்றனையனைத்தும் அனைத்துநினைக் கொன்றன
> தின்றனையனைத்தும் அனைத்துநினைத்தின்றன.
> யாம் ஸ பக்ஷயிதா அமுத்ர
> யஸ்ய மாம்ஸம் இஹ அத்ம்யஹம்

நான் இப்போது எதின் மாமிசத்தைத் தின்கிறேனோ அது (ஸ) என்னை (மாம்) மறுமையிலே தின்னும்;* ஆகையால் நான் இப்போது மீனைத் தின்கின்றேன். மீன் மறுபடி என்னைத்தின்னவேணும். மறுபடி நான் அதைத் தின்னவேணும். மறுபடி அது என்னைத்தின்னவேணும். மறுபடி நான் அதைத்தின்னவேணும் (நெடுங்கரகோஷம்) இப்படியே ஆளை ஆள் மாறிமாறித் தின்றுகொண்டிருக்கிறதேயொழிய பிராயச்சித்தத்துக்கு வழியில்லை. கரையேறவும் வகையில்லை. மீன்தின்கிறவர்கள்பாடுபோ

இந்த நியாயத்தைப்பார்க்கும்போது பின்வருமாறு சொல்லவேண்டியிருக்கிறது:— கீரை முதலியவைகளைக் கொன்று தின்பது பாவம்; அந்தப்பாவத்திலே தேவர் அதிதி முதலானோரையுஞ்சேர்த்து (அதாவது அவர்களும், கொன்றதினால்வந்த ஊனைத்தின்னச்செய்து) விட்டால் பாவம்போய்விடும்! இது யுத்திக்கு முழுதும் மாறல்லவா! கீரை முதலியவற்றைத் தின்னுதல் உள்ளபடியே பாவமான உணவென்று ஒத்துக்கொண்டு அந்தப்பாவம் அவ்வுணவைத் தேவாதிகளுக்கும் ஊட்டுவதினால் போகுமென்றுசொன்னால், மச்சமாமிசங்களைத் தின்னும்பாவமும் தேவாதிகளுக்கு ஊட்டிவிட்டாற் போகவேண்டுமே. அந்தப் பாவத்திலே பங்குபற்றுகிற தேவாதிகள் இந்தப் பாவத்திலேயும் பங்குபற்றினாலென்ன?

* இதற்குத் தமிழிலே பிரமாணம்; காசிகாண்டம்:—
புழுவுந் தசையும் வெண்ணிணமும் பொதிந்த குரம்பைவீக்குதற்குக்
கழி ஊன் நுகர்ந்தோர் தொடு நரகிற் கற்பகாலங்கிடந்தழுந்தி [யை
விழைவின் முன்னர்த்தாம் நுகர்ந்தவிலங்குதம் அவர்தம் மெய்த்தசை
அழிவெம்பசியாற் பறித்தருந்தும் என்னும்பான்மை அறிதேயோ.

லவே கீரை தின்கிறவர்கள்பாடும். காய்கிழங்கு தின்கிறவர்கள்பாடும். சோறுதின்கிறவர்கள்பாடும். இதையுங் கவனித்துக்கொள்ளுங்கள் ஒவ்வொரு சோற்றவிழும் ஒவ்வொரு கொல்லப்பட்ட பிராணி. மறுபிறப்புக்காருடைய கொள்கைப்படி ஒவ்வொரு சோற்றவிழும் ஒவ்வொரு ஆள். எவ்வெனில் ஒவ்வொரு நெல்விதையும் ஒவ்வொரு ஆத்துமாவை அடக்கியிருக்கிறது என்பதல்லவோ சித்தாந்தம்! இனி, ஒவ்வொருநாளும் நீங்கள் தின்கிற சோற்றிலே எத்தனை ஆயிரமாயிரம் சோற்றவிழ்களுண்டு! அத்தனையாயிரமாயிரம் ஆட்களைக் கொல்லுகிறீர்கள். அல்லது கொல்லுவிக்கிறீர்களென்றாலும் சரிதான் ஆகையால் அத்தனையாயிரமாயிரம் பிறவிகளிலேயுங்களை இந்த அரிசியாட்கள் தின்னவேணும். பிறகு நீங்கள் அவர்களைத் தின்னவேணும் பிறகு அவர்களுங்களைத் தின்னவேணும். (சிரிப்பு) இந்த நியாயத்தை நான் வேடிக்கைக்காகச் சொல்லுகிறேனென்று எண்ணவேண்டாம். இது உண்மையான ஒரு நியாயம். மறுக்கக்கூடாத ஒருநியாயம், தாவரங்களைப்போலவே மிருகாதிகளும் கடவுளுடைய நோக்கத்துக்கேற்ற அழியுந்தன்மையான சீவனுள்ள பொருட்களென்ற உண்மையை மறந்து தாவரங்களிலும் மிருகாதிகளிலும் மனுஷருடைய ஆத்துமங்களைப்போன்ற அழியா ஆத்துமங்களே உண்டென்று சொல்லுகிற மறுபிறப்புக்காரர் இந்த நியாயத்தை எவ்விதத்திலும் மறுக்கமாட்டார்கள். தாங்கள்தான் ஓர்வேளை ஒருகொலையும் செய்யாதபடி வாயையும் மூக்கையும் அடைத்துக்கொண்டு அசையாமலிருந்து பட்டினிகிடந்து செத்தாலும், உலகத்திலே சகல சீவசெந்துக்களுள்ளும் நடக்கும்படி கடவுளால் வைக்கப்பட்ட சர்வசாதாரண ஒழுங்குக்கு—அதாவது மேலான சீவர்களெல்லாம் கீழான சீவர்களாற் பிழைக்கவேண்டுமென்ற ஒழுங்குக்கு ஒருவகையும் சொல்லிக்கொள்ளமாட்டார்கள்.

புலாலுண்ணுமை மறுபிறப்புக்கொள்கைக்கு ஒருபோதும் ஆதாரமாகாது. புலாலுண்ணுமை மறுபிறப்புக்கொள்கைக்கு ஆதாரமாவதற்கு மாறாக அதற்கு அழிவாகவே நிற்கிறது. அதெப்படியென்றால், சமணபுத்தமத எழுச்சிக்குமுன் புலாலுண்ணுமையல்ல புலாலுண்ணுதலே இந்தியாமுழுதும் பெருவழக்காயிருந்ததென்று காட்டினேன். ஆகவே, மறுபிறப்பின் நிமித்தம் நாம் இப்போது புலாலுண்ணுமல்விடுகிறோம் என்று சொல்லுவோர், நமது முன்னோர் அக்காலம் மறுபிறப்புக்கொள்கையில்லாததின் நிமித்தம் புலாலுண்டார்கள் என்று சொல்லுவோராகிறார்கள். நமது முன்னோர் மறுபிறப்புக்கொள்கையுள்ளோராயிருந்தால் இப்போதுபோல அப்போதும் ஆரியர்களும் தமிழர்களும் யாகங்களையும் பலிகளையும் மாடாடு அடித்துத்தின்பதையும் மச்சந்தின்பதையும் ஒருபோதும் நினையாதிருக்கவேண்டியது. இதற்குமாறாக அவர்கள் பெரும் பெரும் யாகங்களைநடத்தியும், ஆயிரக்கணக்கான மாடாடுகளை வெட்டி அவித்துத்தின்றும், நாடோறும் மச்சமாமிச உணவருந்தியும் வந்தபடியால் அவர்கள் மறுபிறப்பென்றொரு கொள்கையில்லாதவர்களாயிருந்தார்களென்று வெளிச்சமாய்த்தெரிகிறது. உள்ளபடி மறுபிறப்புக்கொள்கை இடையிலேயே தோன்றினதென்பது நிச்சயம். ஆரியருடைய இருக்குவேதத்தி

லே அதற்கு ஆதாரமில்லை இதன் விரிவை மறுபிறப்பு எனும் துண்டுப் புத்தகத்திலே காணலாம். இடையிலே தோன்றியதாகும் இம்மறுபிறப் புக்கொள்கை நமது யுத்தியோடாவது அநுபவத்தோடாவது பொருந்தா மல். கடவுளுடைய நீதிக்கு ஏற்றதாகாமல், பாவத்துக்கு வழிதிறந்து விடுகிறதாய், ஆத்துமாக்கள் எப்போதாவது ஈடேறவழியின்றிப்போகப் பண்ணுகிறதாயிருக்கிறதென்று இப்போதுசொன்ன துண்டுப்புத்தகத்தி லே தெளிவாகக்காட்டியிருக்கிறது. இவைகளைப்பற்றி நான் இம்மேலை பேசவேண்டியதில்லை. கடவுள் மனுஷருக்கும் மற்றும் சீவர்களுக்கும் அ ளித்திருக்கும் உணவுவகைகளைப்பார்க்கும்போது மறுபிறப்பில்லையென்ற து தெளிவாய்க் காணப்படுகிறது என்ற ஒரு நியாயத்தையுமே இங்கே எடுத்தாளக் கடமையிருக்கிறது மிருகங்களும் தாவரங்களும் மனுஷரா கிய நம்மைப்போல அழியாத, புத்தியுஞ்சித்தமுமுள்ள ஆத்துமாக்களுடை யவைகளாயிருந்தால், நாம் அவைகளைத் தின்னும்படியாகவும் அவைகளுள் மேலானவை . கள் கீழானவைகளைத் தின்னும்படியாகவும் கடவுள் தீர்ப்பா தும் வைத்திருக்கமாட்டார். இந்த முடிவொன்றை எடுத்துக்கொண்ட தேபோதும் சுபம்! சுபம்!!

Imprimatur:

L. GUITOT, O. M. I. Vic. Gen.

1-1-15

PRINTED BY C. ANDREW AT ST.JOSEPH'S CATHOLIC PRESS, JAFFNA

# Catholic Tracts

## வேததர்க்கத் துண்டுப் புத்தகங்கள்



வண. சா. ஞானப்பிரகாசசுவாமியால் சத்தியவேத அநுசாரிகளுக்கும் சைவர் வைஷ்ணவர் ஆகிய இந்துசமயிகளுக்கும் பயன்படுமாறு இனிய தமிழிலே, நட்பிலக்கணந் தவறாத நடையிலே, வேத, புராண, இதிகாச மேற்கோள்களோடும், ஆன்றோருடைய ஆராய்ச்சிகள் துணிபுகளைத் தழுவியும் இயற்றிப் பிரசுரிக்கப்படுகின்றன.

விலை—த.
ரூ. ச.—ச.

1. இரண்டு படுபொய்கள்
2. ஒரு பெருங்கடமை
3. இராசபாதை
4. ஆத்துமம்
5. சற்குரு
6. கடவுளிலட்சணம்

ஆறு இலக்கமுஞ்சேர்ந்து ... 09—02

7. விக்கிரகாராதனையும் சுரூபவணக்கமும்—சைவர் ஆதியோரை, கத்தோலிக்கர் விக்கிரகாராதனைக்காரர் என்று சொல்லுவது என்னகருத்திலே என விளக்கி, விக்கிரகாராதனை யாது சுரூப வணக்கம் யாது எனத் தெளிவிப்பது .... 06 - 02

8. மறுபிறப்பு—ஆட்சேபம் எனும் இப்புத்தகம் உண்மை கடைப்பிடிக்கும் சைவராலேமாத்திரமல்ல; உண்மையைப் பிறருக்கு விளக்க விரும்பும் சத்தியவேதக்காரராலும் ஆராய்வோடு படித்து மனதிற் தரிக்கப்படவேண்டிய ஒரு நூல். கூட்டவும் திருத்தவும்பெற்ற இரண்டாம் பதிப்பு ... ... ... ... 18—02

9. சைவர் ஆட்சேப சமாதானம்—சைவராதியோர் சத்தியவேதத்துக்கெதிராய்ச் சொல்லுகின்ற சில பிரதான ஆட்சேபங்களுக்கு நிறைவும் தெளிவுமான விடைகளடங்கியது ... ... 15—02

10. பரிபூரணவஸ்து—மெய்க்கடவுளின் சுலட்சணங்களையும், பொய்த்தெய்வங்களின் அவலட்சணங்களையும் வேதபுராண இதிகாச ஆதாரங்களோடு எடுத்துக்காட்டுவது. ஆவிலட்சண சுரூபம், ஏகத்துவம், திரித்துவம் என்னும் அங்கங்களையுடையது ... ... ... 09—02

11. உலக உற்பத்தி—சமஸ்த சராசரங்களும் உண்டான விதத்தையும் அதைப்பற்றிப் பொய்ச் சமயவாதிகள் கூறுகின்ற கொள்கைகளின் தப்பிதத்தையும் கரதலாமலகம்போற் காட்டுவது. வினா விடை ரூபமாக அமைந்தது. சிருட்டியின் காரணம், நிமித்தம், அசீவ சிருட்டி, சீவசிருட்டி, சிருட்டிக்கிரமமெனும் பிரிவுகளையுடையது ... ... ... ... 09—20

12 கிறிஸ்துவின் கடவுட்டன்மை—இது "ஞானசித்தி" எனும் ஒரு சைவபத்திரிகையிலே வெளிப்பட்ட சில தவறுகளைக்கண்டித்து தர்க்க ரூபமாக வரையப்பட்டுள்ளது ... 15—02

13. ஈடேற்றவழி—சத்தியவேதத்தை அறியாதோருக்கு விசேஷ பிரயோசனமுள்ளதாகிய இச்சிறு புத்தகத்தில் யேசுநாதசுவாமியுடைய தேவத்தன்மையும் கத்தோலிக்கு திருவேதத்தின் மாட்சிமையும் சுருங்கச்சொல்லி விளங்கவைத்திருக்கிறது ... ... ... 10—02

14. மறுபிறப்பு—சமாதானம் (அச்சில்)

15. புதுச்சைவம்—இது சிறிதுகாலத்துக்குள்ளே சைவசமயம் அடைந்திருக்கிற அடைந்துகொண்டுவருகிற சில பெரும் மாற்றங்களைக் காட்டி மாறுகிற ஒருசமயம் மெய்ச்சமயமாக மாட்டாது எனகாட்டும் ஓர்துண்டுப்புத்தகம் 09—02

16. சைவரும் மச்சமாமிசமும்—இது சைவர் ஆதிதொட்டு மச்சமாமிசபோசனக்காரர் என்றும் புத்தரைப் பின்பற்றியே புலாலுண்ணாமல் விட்டவர்களென்றும் சரித்திர பூர்வமாய்த் தாபிக்கிறது ... ... ... 15—02

## தமிழரின்

# பூர்வசரித்திரமும் சமயமும்

நம்முன்னோராகிய தமிழச்சாதியாரின் பழையகாலத்து ஒழுக்கங்களை பழக்கவழக்கங்களையும், அவர்கள் தொழுத தெய்வங்களையும் சமய ஆசாரங்களையும் விளக்குகின்றநூல். விலை அணா 6 (சதம் 37½) தபாற்செலவு அணா 1 (சதம் 5)

## யேசுநாதசுவாமியின்

# தேவத்துவ விளக்கம்

"ஞானகலைத்துப் பதிதரும் [illegible] யோரும் யேசுநாதரை ஓர் பெரிய போதகாசிரியராகவும் மகரிஷியாகவும் ஒத்துக்கொள்ளுகிறார்களேயன்றி அவரை சர்வேசுரனாகவும் தேவ அவதாரபுருஷராகவும் அங்கீகரியார். ஆதலால் [illegible] வாசிப்பவர்கள் யேசுநாதர் உண்மையான [illegible] எதிர்பார்க்கப்பட்ட தேவமீட்பரென்று [illegible]" விலை அணா 10 (சதம் 60) தபாற்செலவு அணா 2½ (சதம் 15)

# The Jaffna Catholic Guardian

## சத்தியவேத பாதுகாவலன்

சிறந்த தமிழ்ப்பத்திரிகை

**சனிக்கிழமைதோறும் பிரசுரிக்கப்படும்**

வேதத்தைப்பற்றிய விஷயங்களையும் சங்கங்களையும் எடுத்துப் பேசுவதோடு அரசாட்சி விஷயம், உலக விஷயம், உலக நானா சங்கதிகள், இராசரீக காரியங்கள், கல்வி முயற்சிகள் சமோபகார விஷயங்கள் முதலியவைகளையும் எடுத்துப் பேசி வருகிறது.

இப்பத்திரிகையைப்போல மலிவான பத்திரிகை வேறில்லை. செல்வர், வறிஞர் எல்லோரும் பெற்று வாசிக்கத்தக்கதாய தபாற்செலவுட்பட வருஷம் ஒன்றுக்கு முற்பணமாக ரூபா மூன்றுக்குக் கிடைக்கின்றது.

All Communications should be addressed to:—

**The Manager, St Joseph's Catholic press, Jaffna (Ceylon)**

விலாசம்—அர்ச. சூசைமாமுனிவர் அச்சியந்திரசாலை மனேசர் அவர்களுக்கு

யாழ்ப்பாணம் (இலங்கை)

CATHOLIC TRACT
No. 17

# HONESTY IN RELIGIOUS ENQUIRY

# சமய ஆராய்ச்சியும் நேர்மையும்

---

உள்ளதை உள்ளபடி சொல்லுவதும், நெஞ்சறிந்த உண்மைக்கு இசைய நடப்பதும் நேர்மையென்று சொல்லப்படும். ஒரு மனுஷனை அவனுடைய இனத்தவர்களான மனுஷர் மதிக்கப்பண்ணுவது நேர்மையென்னுஞ் சற்குணமாம். அவனிடத்திலே நம்பிக்கைவைத்து அவனோடு கொள்வனவு கொடுப்பனவு முதலியவைகளை அச்சமில்லாமல் நடத்தச் செய்வதும் அவனிடத்திலுள்ள நேர்மையேயாம். நேர்மையில்லாதவனை எவரும் நம்பார். அவன் எவ்வேளையில் என்ன தந்திரம் விளையாடி எவரை ஏமாற்றப் பண்ணுவானோ என்று தெரியாமல், அவனோடு பிறரோ வெகு சாக்கிரதையாய் நடந்துகொள்ளுவார்கள். அவனிடத்தில் எவருக்கும் தாராளமான மதிப்பு இராது. பாம்புப் புற்றுக்கு அருகில் படுத்தவனுக்கு எப்படி நித்திரை வராதோ, அப்படியே நேர்மையில்லாதவனோடு நடமாடுவோருக்கு மன அமைதியும் இராது. ஒரு சனசமூகத்திலே நேர்மையில்லாதோர் பலர் இருப்பார்களானால் அந்தச் சனசமூகம் பயமின்றி வாழமாட்டாது. அதிலே ஒருவரையொருவர் வஞ்சிக்குங் குணமும், எவரும் மற்றவரை நம்பாத தன்மையும் வளர்ந்து, இவைகளால் களவு, சச்சரவு முதலிய தீமைகளும் பெருகி, அந்தச் சனசமூகம் தனக்குட் பிரிவுபட்டு தழைக்க முடியாமற் கிடக்கும்.

மனுஷனோடு மனுஷன் ஊடாடும் உலக அலுவல்களிலே நேர்மை நமக்கு ஒருமடங்கு அவசியமென்றால், நம்மைப்படைத்த கடவுளோடு ஊடாடுவதாகிய சமய அலுவலிலே அது இருமடங்கு அவசியமாகிறது. அற்ப அலுவல்களிலே நேர்மை குன்றிப்போவது அற்ப பாவமாகுமென்றால், உலகத்திலேயுள்ள சகல அலுவல்களிலும் அதிக காத்திரமான அலுவலாகிய சமய

அலுவலிலே நேர்மை குன்றுவது மகா பெரும் பாவமாகாமற் போகாது சமயமாவது தன் ஓரே சொந்த நன்மையாகிய ஆத்தும நன்மைக்குரிய வழி. அந்த வழியை நாம் கண்டுகொண்டுங் காணாதவர்களைப்போல் பேசினால் அல்லது நடந்தால், நமக்கு நாமே இனிமேலில்லையென்ற பெருந் தீங்கு இழைத்துக் கொள்ளுகிறோம் அதுமட்டா! கடவுளுக்கும் இனிமேலில்லையென்ற பெருந் துரோகத்தைச் செய்கிறோம். "தன்னெஞ்சறிவது பொய்யற்க; பொய்த்தபின் தன்னெஞ்சே தன்னைச்சுடும்" என்று வள்ளுவர் கூறியது உலக அலுவல்களிலே ஒருகால் மெய்யானால் சமய அலுவலிலே முக்காலும் மெய்யேயாம். நெஞ்சறிந்த உண்மையை நாம் மறுதலித்து, இது கடவுளுடையவழி, இதுவே அவர் மனுஷர் ஈடேறும்படியாகத் தந்த சமயமென்று கண்டுகொண்டபோதிலும், அதைக் காணாதவர்களைப்போலப்பேசி அல்லது நடந்துவருவோமானால், நமது நெஞ்சு நம்மை ஒருநாள் சுடாமற்போகாது. இப்படி மரணம்வரையும் உண்மையை மறுதலித்துவருவோமானால், மரணத்தின்பின் மனந்திரும்பத் தருணங் கிடையாதாகவே, நம் நெஞ்சு நம்மைச் சுடுஞ்சூடு நித்தியமான சூடாகவே இருக்கும்

## தமிழருள்ளே நேர்மை

தமிழ்ச்சாதியத்தாராகிய நமக்குள்ளே சாதிக்குணமாயுள்ள ஒரு குறைவு நேர்மைக்குறைவு என்றுதோற்றுகிறது இதை வெளிப்படையாயச் சொல்ல எனக்குப் பிரியமில்லாவிட்டாலும், அப்படிச் சொல்லாமல்விடுவதும் நேர்மைக்குறைவாய்ப் போய்விடுமாகையால் உள்ளதை உள்ளபடி சொல்லுகிறேன். இந்த நேர்மைக்குறைவை ஐரோப்பியர் எம்மிடத்திலே அநேகமாய்க் கண்டு வெளியிட்டிருக்கிறார்கள். எனக்கு சனங்களோடு, அதுவும் விசேஷமாய்த் தாழ்ந்த குலத்தோரோடு, அதிக புழக்கமில்லாமலிருந்த ஒருகாலம், ஐரோப்பியர் தமிழ்ச்சாதியாரையும் (பொதுவிலே இந்தியர்களையும்) நேர்மைக்குறைவுள்ளவர்களென்று சொல்லக் கேட்டபோதெல்லாம் உதிரம்பொங்கிப் பெருஞ் சீற்றமுண்டாகிவரும். ஆனால், இப்போது பற்பலவகையான சனங்களோடு எனக்குப் பற்பல சந்தர்ப்பங்களிலே ஊடாடச் சமயம்வாயத்திருக்கிறதினால், எமது சாதியாரின் சுயகுணத்தை உள்ளபடி அறிந்துகொள்ளக்கூடியதாயிற்று. நேர்மைக்குறைவானது எளிய சாதிகளென்று சொல்லப்படுவோருள்ளேதான் அதிக விகசிதமாகக் காணப்படுகிறது. இவர்கள் தங்களுக்குள்ளே ஓரவித நேர்மையும் வாக்குநாணயமும் காட்டுவதுண்டு. ஆனால், தங்களுக்கு மேற்பட்டோராயும், முக்கியமாய், தங்களை ஒடுக்கி வருத்துவோராயும் இருப்போ

ருக்குப் பல சந்தர்ப்பங்களிலே முழுப்பொய் சொல்லிவருகி றார்கள். இதற்குக் காரணம் என்னவென்று யோசிக்கும்போது, சில மிருகங்கள் தாங்கள் பெலத்தினால் வெல்லக்கூடாத மாற்றான் மிருகங்களுக்குத் தப்பிக்கொள்ளும்படியாக எப்படிப் பல்லைக்காட்டியும், வாலை ஒதுக்கியும் தந்திரஞ்செய்து நழுந்தி ஓடுமோ, அப்படியே எளியாரானவர்கள் வலியாருக்குப் பொய்யாலும் நேர்மையற்ற பிறவழிகளாலும் தப்பிக்கொள்ளப் பார்க்கிறார்களென்று தோற்றுகிறது. இப்படியே வலியாருக் கஞ்சித் தாங்கள் தப்பிக்கொள்ளும் வழியை நாடித்தான் இழிந்தசாதியாருள்ளே நேர்மைக்குறைவு உண்டாகி ஓர் சாதிப் பழக்கமாய்த் தடித்துவந்திருக்கிறதென்று சொல்லலாம். இழிந்தசாதியார் மேல்சாதியார்முன் எப்படியோ, அப்படியே மேல்சாதித் தமிழருந் தங்களையென்று அடிப்படுத்திய பிறசாதியாரின் முன்னே தந்திரமாய்ப் பாசாங்குபண்ணி நடக்கும் வழியைநாடி நேர்மைக்குறைவைக் கூடவோ குறையவோ தழுவிக்கொண்டார்கள். உள்ளபடி, இந்தியாவிலும் இலங்கையிலும் தமிழ்ச் சாதியார் ஒருபோதும் நெடுங்காலம் சுயாதீனமுள்ளோராய் இருக்கவில்லையென்றதை நினைந்துகொண்டால், நான் சொல்லப்புகுந்த நியாயம் நன்றாக விளங்கும். விசேஷமாய் பிறகிட்டகாலங்களிலே மகமதியருடைய அரசாட்சியென்னும் பாரமான நுகமும், புறுத்துக்கீசர் ஒல்லாந்தர் என்போருடைய ஆளுகையும், பிற்றில் பிறிட்டிஷ்காரருடைய முதன்மையும் ஒன்றின்பின் ஒன்றாய் நமக்கு லபித்தபோது, நாம் சுயாதீனமென்பது என்ன நிறமென்றும் அறியாதிருக்கவேண்டியவர்களானோம். இந்தச் சந்தர்ப்பங்களிலே வலியார்முன் எளியார் பொய்யைப் புரளியைச்சொல்லி நழுந்துவதே வசதியான ஒரு காரியமாயிற்று. இப்படியே மேல்சாதியாரும் நேர்மைக்குறைவுள்ளோராகத் தலைப்பட்டுவிட்டார்கள்.

## சமயத்துக்கு ஏற்ற சமயம்

மற்றவிஷயங்களிற்போலவே சமயவிஷயத்திலும் நம்மவர்கள் நேர்மையில்லாமல் நடக்கத் தூண்டப்பட்டுவிட்டார்கள். விசேஷமாய், யாழ்ப்பாணத்திலுள்ளோரை நோக்குவோமானால், சமயத்துக்கேற்றதே யாழ்ப்பாணிகளுடைய சமயமாகி வருகிறதைக் காண்கிறோம். புறுத்துக்கீசர்காலத்தில் அரசாட்சியார் சத்தியவேதக்காரருக்கே உத்தியோகங்கள் கிடைக்குமென நியமித்தும், சைவராதிய பிறசமயத்தவர்களுக்குச் சிற்சில சிலாக்கியங்கள் இல்லாமற்போகும்படி ஒழுங்குசெய்துமிருந்தபோது யாழ்ப்பாணக் குடாநாட்டிலிருந்த சகல சைவரும் கூட்டத்தோடே கத்தோலிக்கராகிவிட்டார்கள். வேறு

வகையாய்ச் சொல்லுகில், யாழ்ப்பாணத்தார் தங்கள் சைவ சமயத்தையும் தங்கள் ஊர்த்தெய்வம் குலதெய்வங்களையும் காசுக்கும் சோற்றுக்கும் விற்றுப்போட்டார்கள். இவர்கள் உள்ளபடி மனந்திரும்பிச் சத்தியவேதத்திற் சேரவில்லை என்றதற்கு அத்தாட்சிவேண்டுமானால், இவர்களே உலாந்தாக்காரர் வந்தவுடனே மறுபடியும், முதல் பாதிரிமார்க்கக்காரராயும், பிறகு பழையபடி சைவராயும்போனதே அதற்குப் போதிய அத்தாட்சி. புறத்துக்கீசர் சைவரைக் கண்டிமைப்படுத்திச் சத்தியவேதத்தில் இழுத்தாரென்று சரித்திரமறியாத சிலர் தவறாய்ச் சொல்லுவார்கள். அப்படிப் புறத்துக்கீசர் கண்டிமைப்படுத்தித்தான் இருந்தாலும், சைவருடைய சமயத்துக்கேற்ற நடைதான் இதிலே காணப்படும். கண்டிமைக்குப் பயந்தென்ன காசுக்கு ஆசைப்பட்டென்ன கள்ளமனதோடு ஒரு மார்க்கத்திலே போனவர்கள் சமயத்துக்கேற்றவிதமாய் நடக்கும் நேர்மையில்லாத மனுஷரே என்பதில் சந்தேகமில்லை. யாழ்ப்பாணத்திலே மெய்யாக மனந்திரும்பிச் சத்தியவேதத்திலே சேர்ந்தவர்களும் இருந்தார்கள். இவர்களோ உலாந்தாக்காரர்வந்து சனங்களை உள்ளபடியே நெருக்கினபோது பாதிரிமார்க்கத்துக்குப் போகவில்லை இவர்களுள் அநேகர் சத்தியவேதத்துக்காகத் தங்கள் சீவனையும் விட்டார்கள்.

இச்சம்பவங்களைச சீர்தூக்கிப்பார்க்கும்போது, தமிழருள் சத்தியவேதத்தின் போதகத்தைத் தழுவியவர்களுள்ளே சமய விஷயத்திலே நேர்மையும், அதைத் தழுவாதவர்களுள்ளே சமயத்துக்கேற்றநடையும் இருக்கிறதென்று பொதுவாகச் சொல்லவேண்டியிருக்கிறது. சத்தியவேதக்காரர் பொதுவாகத் தங்கள் வேதத்தை விற்கார்கள். உள்ளபடி, பதினாயிரத்தில் ஒரு வேதக்காரனே எப்போதாவது ஓர் கலியாணத்தின்நிமித்தமோ வேறொரு உலகநன்மையின்நிமித்தமோ சைவனாவதுண்டு. ஆனால், சைவர்கள் ஆயிரக்கணக்காகத் தங்கள சமயத்தைக் காசுக்கு விற்றிருக்கிறார்கள். மிகவும் ஒழுங்கான சைவர்கள் ஓரோர் சமயத்திலே உலகநன்மைகளுக்காக மார்க்கம் மாறிவிடுகிறார்கள். வட்டுக்கோட்டைக் கல்லூரியிலே படித்த எத்தனையோ நூற்றுக்கணக்கானோர் இப்படிச்செய்தவர்கள். இதைச் சைவர் தாமே ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆறுமுகநாவலருடைய "யாழ்ப்பாணச் சமயநிலை"யில் இதின் விபரத்தைக்காணலாம்.

யாழ்ப்பாணத்துக் கற்றோருள் நன்றாய் அறியப்பட்ட ஒருவரைப்பற்றி "வருணசிந்தாமணி" எனும நூலிலே எழுதியிருக்கிறதாவது:

"ஆறுமுகநாவலரவர்கட்கு அதிக நண்பராயும் சைவப்பிழம்பாயுமிருந்த சி வை. தாமோதரம்பிள்ளையவர்கள் தமது ஜீவ

...சபையில் குமரகுருபரசுவாமிகள் அருளிச்செய்த நீதிநெறி விளக்கத்திற்குத் தாம் கி பி. 1854-ம் ஞூல் உரையிட்டு மானிப்பாய் அமரிக்கன்மிஷன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளிப்படுத்திய புத்தகத்தின் இறுதியில்,

சீர்பூத்த விவிலியநற் சுருதிவாழி
திருச்சபைக ணிதம்வாழி செங்கோல்வாழி
நார்பூத்த திரயமிஷன் வாழிபாத
நறுமலர்கொ டெனையடிமை யாண்டஞான
கீர்பூத்த குரவர்பதி கழகம்வாழி
நிலமுழுதும் தருமமலம் வாழியீழப்
பேர்பூத்த பதிவாழி பெரியோர்வாழி
பெருமையசெந் தமிழ்வாழி வாழி வாழி

எனக் கிறீஸ்துவேதத்தையும் கிறீஸ்துமதத்தையும் தமக்கு ஞானஸ்நானஞ்செய்வித்த குருமாரையும் வாழ்த்தியிருக்கின்றார். பின்னும் இத்தாமோதரம்பிள்ளையவர்கள் தமது பெயருக்கு முன்னுள்ள சி. வை. அல்லது C. W. என்பதற்குப் பொருளென்னே எனச் சைவன் வினவில் சித்தூர் வைரவநாதபிள்ளையென்றும், ஆங்கிலேயர் வினவில் Charles Winslow என்றும், முன்னவருக்குத் தாம் சைவராகவும், பின்னவருக்குத் தாம் கிறீஸ்துவராகவுங் கூறுவர். இதனால் இவர்கள் சிவசின்னமாகிய விபூதி உருத்திராக்கங்களைத் தரிப்பதும், சிவபூசை செய்வதும், சிவசரிதங்களைப் பிரசங்கிப்பதும் நாடகமாததிரையாக விருக்கின்றதன்றி உண்மையில் அவர்கள் சைவத்திற் பற்றுடையார் என்பதற்கு இடமேயில்லை." இவ்வளவும் வருணசிந்தாமணி ஆக்கியோன கூறறு.

பணத்துக்காகச் சமயம் மாறுதல்

நாம் எவரையாவது தூற்றுவதற்கு இதை எடுத்து எழுதவில்லை. சைவருள மிக மேலானவர்களாக கவனிக்கப்படுவோரிடத்திலும் நேர்மைக்குறைவு அதிகமாய் உண்டென்பதற்கு இலக்கியமாகவே இதை எடுத்துச் சொல்லுகிறோம். இது அருமையாக இரண்டொருபேரிலே காணப்படுவதல்ல, அநேகமாய்க் காணப்படுவதொன்று, காசுக்கு கல்விக்கு சோற்றுக்கு சைவத்தைவிட்டு கிறீஸ்துமார்க்கத்திற் சேருவோர்தொகை எவ்வளவென்றால், இதை கிறீஸ்துமார்க்கத்துக்கு ஒரு வசையாகச் சைவர்தாமும் எடுத்துச்சொல்லிவருகிறார்கள். சரியாய் யோசித்துப்பார்க்கும்போது, கிறீஸ்துமார்க்க போதகர்கள் தாங்களிடத்திலே வயிற்றைத்தடவிக்காட்டிப் பொய்சொல்லிப் பல்லேயிளிப்போருக்கு நம்பித் தருமஞ்செய்வது அவர்களுக்குப் பெரும்புகழ்ச்சியாகவும், "அவர்கள் போதிக்கும் மார்க்

கத்தின் பிறர்சிநேகத்தன்மைக்குச் சாட்சியாகவும்போகிறது. போகிறதோடு, தங்கள் சமயத்தை விற்றுப் பொய்சொல்லிப் பாசாங்குக்குக் கிறீஸ்துமார்க்கத்திற் சேருவோருக்கு இனிமேல் இல்லையென்ற இகழ்ச்சியுமாகிறது. இப்படியே கிறீஸ்தவர்கள் பணங்கொடுத்துச் சீடரைப் பிடிக்கிறார்களென்று சைவர் இகழும்போதெல்லாம், தங்களையே இகழ்ந்து கிறீஸ்துமார்க்கத்தைப் புகழுவோராகிறார்கள்.

சைவருள் வழங்கும் இந்த நடபடிகளை உற்றுநோக்கும்போது சைவர் தங்கள் சமயத்தை மதிக்கிறார்களில்லையென்று தோற்றுகிறது. அவர்களுக்குப் பொதுவிலே சமயம் என்பது அங்கவஸ்திரம்போலாம் என ஆறுமுகநாவலர் துக்கித்துக் கூறியது உண்மையே. அங்கவஸ்திரத்தைத் தருணத்துக்குத் தக்கபடி மாறிமாறிப் போடுவதுபோல அவர்களும் சமயத்துக்குத்தக்கபடி சமயம் மாறிவருகிறார்கள். நாவலர் செய்த யாழ்ப்பாணச் சமயநிலைச் செய்யுளிலே,

> பிந்நிடு மீழத்தி லொருவனே சிலரெதிர்
> பெருசைவன், சிலர்தமுன்னே
> பிரபல கிறீஸ்த்தவ னுயுமறவன், ஒருவனே
> பேசிடும் ஒருவர் முன்னே
> நந்துறுஞ் சிலதினம் சைவனும், சிலதினம்
> நண்ணிய புத்தனுவன்,
> நலமிகப் பின்னர்தான் சிலதினம் சைவனும்
> நாத்திக வாதி பின்னர்;
> சந்தமில் இருவனே ஈழத்தில் கிறிஸ்தவர்
> சமயியாம்; இந்தியாவில்
> சைவன்; ஈழத்திற் திரும்பியே போனபின்
> தன்குரு கிறீஸ்துவென்பான்.
> வந்தயாழ்ப் பாணத்தில் வாழ்கின்ற யாவரும
> வரும்பழி பாவமஞ்சார்
> மாந்தரை மயக்கிவரு வாய்தேடி வாழ்வதே
> மற்றவர் வழக்கமாமால்

என்று விரித்துச்சொல்லியது முழுதும் உண்மையென்றதை யாழ்ப்பாணச் சைவரோடு அளவளாவி ஊடாடினவர்கள் அறிவார்கள. சிறுப்பத்திலேயே பலர் பழிபாவமஞ்சாமல் மார்க்க விஷயத்திற் பாசாங்குபண்ணத் தொடங்கிக்கொள்ளுகிறார்கள். இதைக் கிறீஸ்துமார்க்க பள்ளிக்கூடங்களிற் படித்துவரும் சைவரைப்பற்றி முழு உண்மையோடு சொல்லலாம். இவர்கள் இங்கிலீஷ்கல்வி அடையும்பொருட்டு திருநீற்றை அழித்துப்போட்டுப் பள்ளிக்கூடங்களுக்கு வருவார்கள். பின்பு வீட்டுக்குப்

போய்போது நெருநீற்றை அள்ளிப் பூசிக்கொண்டு போவாரு முண்டு இப்படியே மனச்சாட்சியை மாறுபாடுபண்ணிச் சமயத்தைச் சமயத்துக்குத்தக்கபடி மாற்ற ஏலவே பழகிக்கொள்ளுகிறார்கள். நமக்குப் பழக்கமானேருட் சிலர் உத்தியோகதலங்களிலே கிறீஸ்தவர்கள்போல நடிக்கிறார்கள். வீட்டிலே சைவராக நடக்கிறார்கள் சிலர் சம்பளம் பெறுமட்டும் கிறீஸ்தவர்கள், சம்பளம் நின்றுவிட்டவுடனே சைவர்கள். இவைகளை நோக்கும்போது சைவருடைய நேர்மைக்குறைவு ஒருபுறத்திலேயும், அவர்களுடைய மார்க்கம் அவர்கள்மனதிலே ஆழமாய் வேர் வீழ்த்துவதில்லை என்ற உண்மை ஒருபுறத்திலேயும் வெளிப்படுகிறது.

## உண்மைக்கே உண்மையான மதிப்புண்டு

பட்சபாதமில்லாமல் இவ்விஷயத்தை நோக்குவோருக்கு இரண்டுகாரியம் நன்றாய்ப் புலப்படும். ஒன்று: சத்தியவேதத்தை உண்மையாகத் தழுவினவர்களான கிறீஸ்தவர்கள சமயவிஷயத்திலே நேர்மையுள்ளவர்களாய் அதிலே முழு விசுவாசம்வைத்து நடந்து அதை மறுப்பதைக்காட்டிலும் பொருளை, உற்றார் உறவாரை, சுகத்தைப் பெலத்தை, சீவனையுங்கூட விட்டுவிட ஆயத்தமாயிருக்கிறார்கள். மற்றது: சைவர் தங்கள் சமயவிஷயத்திலே நேர்மையில்லாதவர்களாயும், “உதரநிமித்தம் பகுகிருதவேஷம்” என்ற வாக்கியத்துக்கிசைய ஓர் அற்ப சுகத்துக்காகத் தங்கள் சமயத்தை விட்டுவிட ஆயத்தகாரராயுமிருக்கிறார்கள். இந்தப் பெரும் வித்தியாசத்தை எவரும் மறுக்கக்கூடாது. இதை எடுத்துச்சொல்லியதற்காகத் தர்க்கக்காரர் என்னை என்னபேர்சொல்லி அழைத்தாலும் அழைக்கலாம்; இது உண்மையான ஒரு வித்தியாசமென்றதை மறுக்கவோ அவர்களால் முடியாது.

இதற்குக் காரணமென்ன? மறுபடியும், பட்சபாதமில்லாமல் நோக்குவோருக்கு இதன்காரணம் நன்றாய்ப் புலப்படும். அதாவது: சத்தியவேதம் மனுஷனுடைய மனதைக் கொள்ளைகொண்டு கீழ்ப்படுத்திப்போடுகிறது. அது மனுஷன் தன்னை விசுவசித்து, தன்னை எல்லாத்துக்கும் மேலாக மதிக்கப்பண்ணுவதாயிருக்கிறது. அது உண்மையானதென்றதை மனமானது தன் முழுத் தத்துவங்களாலும் பரீட்சித்தறிந்து அதிலே அமிழ்ந்திப்போகிறது. போகிறதினால். மனமானது அதைச் சகல பொருட்களுக்கும் மேலாக மதிக்கிறது. மதிக்கிறதினால் அதற்காகச் சீவனைவிடவும் ஆயத்தமாயிருக்கிறது. கடவுளால்வெளிப்படுத்தப்பட்ட உண்மையான மார்க்கமே இப்படி மரணமட்டும் மனதை வசீகரப்படுத்துமொழிய பொய்மார்க்கங்கள் இவ்வாறு

செய்ய அறியமாட்டா. இதனாலேதான் சைவம்முதலிய பிற மார்க்கங்களுக்காகச் சிவனை விடுவோர் இல்லாமற்போகிறார்கள். உள்ளபடி சைவசமயத்தின் போதகம் மனதை நிலைப்படுத்தும் வல்லமையுள்ளதல்ல. உண்மைக்குரிய லட்சணங்களாகிய தெளிவும் தனக்குள் முரணுதல்நீங்கிய உறுதிப்பாடும் அதற்கில்லை. சைவத்தின தன்மையைப்பற்றி "இந்துசாதனத்"திலே நீட்டுப்போக்காக எழுதிய ஒருவர் அது "பல வேறு நிலைமையை அடைந்தவரது வித்தியாசமான சங்கற்பத்திற்கேற்ப விக்கிரக ஆராதனையாகவும், பேய்வணக்கமாகவும், பல்தெய்வ வணக்கமாகவும், சரியையாகவும், கிரியையாகவும், யோகமாகவும், ஞானமாகவும், வேதாந்தமாகவும், ஆகமாந்தமாகவும், மாயாவாதமாகவும், அதீதமாகவும், இம்சையாகவும், எட்டாததாகவும் ஒரு மார்க்கத்தோடும் ஒத்துவராததாகவும் எல்லாமார்க்கங்களையும் தழுவிநிற்பதாகவும், பழையசைவமாகவும் புதியசைவமாகவும், ஓர்வகைக் கிறீஸ்தசைவமாகவும், அஞ்ஞானமார்க்கமாகவும் ஞானமார்க்கமாகவும், அநிர்வசனீயமாகவும் பலருக்குந்தோன்றும்" என்று வரைந்தார். இப்படிச் சகலசுத்தமும் அசுத்தமும் பொய்யும் குழப்பிக் கலந்துநிற்கிற ஒருசமயம் மனதை எப்படி நிலைப்படுத்தும்? பலருக்கும் பலவாறு தோற்றுகிற ஒன்று மாயாரூபமும் நிலையில்லாததுமே ஆகவேண்டியது. சைவம் இன்னது, அதின் சரியான போதனை இன்னது என்று சைவருக்கே தெரியாமல், ஒருவருக்கு அது பேய்வணக்கமாகவும் ஒருவருக்குப் பலதெய்வவணக்கமாகவும் ஒருவருக்கு அஞ்ஞானமார்க்கமாகவும் ஒருவருக்கு ஒருவகைக் "கிறீஸ்தசைவ" மாகவும் தோற்றிக்கொண்டுவருமானால், அது எவர் மனதையும் நிலைப்படுத்தத் தக்கதல்ல. எவர் மனதிலும் விசுவாசத்தை ஊன்றத்தக்கதல்ல. எல்லாம் சந்தேகமாயிருக்கும்போது, மனமானது எதைப் பற்றிப் பிடித்துக்கொண்டிருக்கும்? நினைத்த நினைத்தபடி போதகங்களுஞ் சமயமும் மாறிவரும்போது, எதற்காக ஒருவர் சிவனைவிடுவார்? உண்மையோ எப்போதுந் தெளிவாயிருக்கும் உண்மையோ மைதானத்திலே எழுந்துநிற்கிற மலைபோலச் சிற்றறிவாளருக்கும் விளங்கும். உண்மையோ தன்னை அறிந்துகொண்டோரிடத்திலே நிச்சயவுணர்வைப் பிறப்பிக்கும். உண்மையைப் பற்றி மனதிலே நிச்சயவுணர்வு வரும்போதுமாத்திரம் அதைக் கைவிட்டுவிட மனமில்லாதிருக்கப் பண்ணுவதாகிய விடாப்பிடியும் உண்டாகும். சத்தியவேதம் தன்னை உண்மையாகத் தழுவினோரிடத்தில் நிச்சயவுணர்வைப் பிறப்பிக்கிறபடியால் வேதக்காரர் சிவனைவிட்டாலும் அதை விடாமற் பற்றிக்கொள்ளுகிறார்கள் சைவமோ எவரிடத்திலாவது நிச்சயவுணர்வைப் பிறப்பிக்கமாட்டாமல் இருக்கிறபடியினால் சைவர் அதை விடாப்

பிடியாய்ப் பிடித்துக்கொள்ள அறியாமல் ஒரு சொற்பலாபத்
துக்காகவும் கைவிட்டுவிடுகிறார்கள்.

### தர்க்கக்காரர்

இனி, சமயதர்க்கம் பேசுவோரைப்பற்றிச் சில சொல்லு
வோம் சமயம் என்றது சமயத்துக்குத்தக்க ஒருபோக்காகக்
கூடாது. கடவுளையும் அவருடைய பரகதியையும் அடைவதற்
கு வழியாயுள்ளதே சமயம் என்று சரியாய்ச் சொல்லப்படும்.
உள்ளபடி சமயம் என்ற சமஸ்கிருதச் சொல்லுக்குப் பொருள்
"போம்வழி" என்றதுதான். இனிப் போம்வழியை யார்தேடு
வார்! போக ஆத்திரமுள்ளவர்களே தேடுவார்கள். ஒரு உதா
ரணஞ் சொல்லுகிறேன்: ஒருவன் அவசியமாக இந்தியாவுக்குப்
போய்வரவேண்டுமென்று விரும்புவானானால், அதற்குச் சேமமா
ன மலிவான தீவிரமானவழி எதென்று கவனமாய் ஆராய்வான்.
தோணியாற் போவதோ, கப்பலாற் போவதோ, றெயிலாற் போ
வதோ தனக்கு அதிக செட்டும் சுகமுமென்று தனக்கியன்ற
ளவு சாக்கிரதையோடு சீர்தூக்குவான். அறிந்தோரிடம் விசா
ரித்து அவர்கள் சொல்வதை நன்றாகக் கிரகித்து யோசித்து
நயமும் சுகமுமான பாதையை நாடுவானொழிய தான் பிடித்த
பிடியே பிடியென்று நிற்கமாட்டான். ஆனால், இப்போது சொல்
லியவிடத்துக்குப்போகச் சற்றேனும் எண்ணமில்லாதவன் அ
தற்கு வழிதேடுவானா! தேடமாட்டான். தேடமாட்டான் என்
கிறேன் ஆனால், அதைபற்றி வீண்தர்க்கம்போடவென்றால்
அவன் ஒருவேளை ஆமென்று வெளிப்படவுங்கூடும். வழியைக்
கண்டுகொள்ளவென்றல்ல வாய்ச்சம்பிரதாயத்தில் தான் கெட்
டிக்காரனென்றுகாட்ட எவ்வளவும் இந்தியாவுக்குப் போகும் சுலப
மானவழி எதுவென்ற தனக்குக் கவலையில்லாத ஒருகாரியத்
தைப்பற்றியும் தர்க்கம்போடக்கூடும். தர்க்கத்திலே தான்
பிடித்ததே சரியென்று வெற்றிகூறுவதற்காக இந்தியாவுக்குக்
கால்நடையாய்ப் போவதுதான் சுலபமென்று அறிந்தோரெல்
லாம் நகைக்கும்படியான ஒரு கொள்கையை நாட்டிக்கொண்டி
ருக்கவுங்கூடும். தான் அந்தச் சீமைக்குப்போக ஆத்திரமுள்ள
வனென்றால் ஒருபோதுங் கால்நடையாய்ப்போய்க் கடலில்வீழ்ந்
து பரீட்சைபார்க்க எண்ணமாட்டான் போகும் எண்ணங்
கொஞ்சமும் இல்லாமல் வாயால் அதட்டி வெல்லும் எண்ண
மே கொண்டவன்மாத்திரம், திறந்தமனதோடு காரியத்தைத்
தேறவிசாரியாமல் பிடித்ததே பிடியென்று நிற்பான்

இந்த உவமையைச் சமய ஆராய்ச்சிவிஷயத்திலே ஓட்
டிப்பார்ப்போம். சமயமானது பரகதிக்குப் போகும்வழி என்
றோமே. பரகதியை அடைய ஆத்திரப்படுகிறவன்மாத்திரம்
அதற்கு வழியையுங்காணத் தேடுவான் ஆயினும், நான் காட்டிய

உவமையிலே சமயவிஷயத்துக்குப் பொருந்தாதது ஒன்று இருக்கிறது அதாவது: இந்தியாவுக்குப்போக தோணி கப்பல் றெயில எனப் பலவழியிருந்தாலும் பரகதியை அடைய வழி ஒன்றுதான் உண்டு அந்தவழி மெய்ச்சமயம். மெய் என்றது ஒன்றுமாத்திரமே. ஆனபடியால் மெய்ச்சமயமும் ஒன்றுதான் உண்டு. பலசமயங்கள மெய்யாய் இருந்தால் என்னவென்று கேட்கில், அதற்கு மறுமொழியாவது: பத்துச் சமயங்கள இருக்கின்றனவென்றும் அவை பத்தும் மெய்யென்றும் வைத்துக் கொள்ளும்போது, மெய்க்கும் மெய்க்கும் ஒரு வித்தியாசமும் இராதாகவே, அந்தப் பத்துச் சமயத்துக்கும் இடையில் ஒரு வித்தியாசமும் இல்லாவிட்டால் அவைகளைப் பத்தென்று பிரித்துக்காட்ட ஒன்றுமிராது. அவைகள் ஒரேயொரு சமயமாக வெளிப்படும். ஆகவே மெய்ச்சமயம ஒன்றே ஒன்றுதான். அதை அறிய யார் தேடுவார்? பரகதியை அடைய ஆத்திரப்படுகிறவர்களே தேடுவார்கள். பரகதியை அடைய ஆத்திரப்படுகிறவன் மெய்ச்சமயம் எதுவென்றதைத் திறந்தமனதோடு தேடுவான். அறிந்தோரிடத்தில் விசாரிப்பான். வீண்தர்க்கம்போட்டுத் தான் பிடித்ததே சரியெனறு நாட்டித்திரியாமல், உண்மையை அறிந்துகொள்ளும் ஆவலோடேயே சமயவிஷயத்தைப்பற்றிப் பேசுவான். தான் முன் நின்ற நிலை தவறென்று காணும்போது அதை விட்டு விலகிவிடுவான். தான் கொண்ட கொள்கைகள் பிழையென்று காணும்போது அதை வெளியரங்கமாகவும் அறிக்கையிடப் பின்நில்லான்.

## தர்க்கமும் பொருள் வருவாயும்

எமது மத்தியிலே காலத்துக்குக்காலங் கிளைத்து எழும் பிவருந் தர்க்கக்காரரின் பாடென்ன? இவர்கள் பொதுவிலே தர்க்கக்காரராய்க் காணப்படுகிறார்களேயன்றிச் சமய ஆராய்ச்சி செய்வோரல்லர் தர்க்கம்பேச வாய்மூத்துநிற்போர் அநேகப்பற்றாகச் சன்மார்க்க நடையில்லாதவர்களென்றுங்காண்கிறோம். சன்மார்க்க நடையில்லாதவர்களென்று சொன்னவுடனேயே, இவர்கள் பரகதியைத் தேடுவோரல்ல என்று சொல்லியதாயிற்று. இப்படிப்பட்டோர் மோமவழியைத் தேடியல்ல, தங்கள கெட்டித்தனத்தைக் காட்டிப்போடலாமென்றே தர்க்கமாடுவோர் ஆகிறார்கள். இவர்கள் தங்கள் பொய்க்கொள்கைகளைக் கண்டாலும் விடுவார்களா? விடார்கள விடார்கள். சிலருக்குத் தர்க்கம்போடுதல் பாஷையெழுதும் திறத்தையோ வேறுவகையான கெட்டித்தனத்தையோ காட்டுவதற்கு உதவியாவ தோடு பொருள்வருவாயும் ஆகிவிடுகிறது நாமறிந்த ஒரு வித்துவான் கொழும்பு, சென்னை முதலியவிடங்களிலே பெரிய

மனுஷர்களிடத்தில் பொருள்பெற்று வாழ்வதற்கு வழியாகச் சத்தியவேதத்துக்கு மாறான குதர்க்கங்களையே கக்கிவரும் ஓர் பத்திரிகையைச சிலநாள் நடத்திவந்தார். "சத்தியவேதபாது காவலன்" இவருடைய பொய்நியாயங்களையெல்லாம் அப்போதைக்கப்போது கண்டித்துக்கொண்டுவந்தது. ஆனால், இவர் "தூரங்கிருந்தொரு கொப்பிலேதத்த" என்றபடி ஒன்றைவிட்டொன்றுமாறி, ஒருபோதுங் கேட்டகேள்விக்கு மறுமொழி சொல்லாமலும் எடுத்துக்காட்டிய தப்பிதத்தை ஒத்துக்கொள்ளாமலும்நின்று தத்திவிளையாடி இப்போது மடங்கி ஒடுங்கிவிட்டார்

ஏறக்குறைய ஆறுவருஷங்களின்முன் ஒரு சைவமனுஷன் என்னைக் காணவந்தார். அவர் ஆதியிலே சைவன்; பின்பு புரொட்டெஸ்தாந்த கிறிஸ்தவன். அப்பால் சைவப்பிரசங்கி, என்னிடம் வரும்போதும் விபூதி ருத்திராக்ஷங்களோடேயே வந்தார். வந்து, ஒரு பெருங் கையெழுத்துப்பிரதியின் சிலபாகங்களை எனக்கு வாசித்துக்காட்ட ஆரம்பித்தார். அது சத்தியவேதமே உண்மையென்று காட்டும் ஒருநூல் அதை அவரே எழுதிக்கொண்டுவந்தார் தாம் சத்தியவேதத்திற் சேரப்போகிறதென்றும், அந்தநூலை நான் அச்சிடுவிக்கவேண்டுமென்றுங் கேட்டுக்கொண்டார். ஆனால், அவரோடு பின்புசெய்த சம்பாஷணையினால் அவர் ஏதாவது பிழைப்புத்தேடிவருகிறவராகக் காணப்பட்டார். ஆதலால் அவருக்கேற்ற மறுமொழிசொல்லி அனுப்பிவிட்டேன். அவர் இன்றைக்குஞ் சைவப்பிரசங்கமே செய்துதிரிகிறார்.

வேறொருவர் இந்தியாவிலே சமஸ்கிருதமும் தமிழும் நன்றாய்க் கற்றபின் இங்குவந்து "சத்தியவேத பாதுகாவலன்" பத்திரிகையில் வெளிப்படுத்தும்படி ஒருகடிதம் எழுதியனுப்பினார். இது சைவசமயத்தைக் கண்டித்து, சத்தியவேதத்துக்குச் சார்பாய் எழுதப்பட்டிருந்தது. கைச்சாத்து சைவனுடையதானபடியால் ஏது மர்மமோ இருந்துபார்ப்போமென்று யோசித்துப் பத்திராதிபர் அதைப் புறம்பே வைத்துக்கொண்டிருந்துவிட்டார். சிலமாசங்கள்பொறுத்து அதே சைவனுடைய கைச்சாத்தோடு சைவப்பத்திரிகைகளிலே சைவத்துக்குச் சார்பான கடிதங்கள் வெளிப்பட்டன. அதனோடு மர்மமும் வெளிப்பட்டது. கடிதக்காரன் ஓர் உபாத்திவேலை தேடித்திரிந்தவர். ஆல்பழுத்தால் அங்கே அரசு பழுத்தால் இங்கே என்றபடி எங்கே வேலை வாய்க்குமோ அவ்விடத்துச் சமயத்துக்கேற்க நடப்போமென்றது அவருடைய கொள்கை. உண்மைச் சம்பவங்களான இவைகளெல்லாம் நமது மத்தியிலே தர்க்கமாடுவோர் பலரின் சுயதன்மைகளை வெளியரங்கமாய்க் காட்டுகின்றன.

## சன்மார்க்கமும் பிரசங்கமும்

தர்க்கமாடுவோருள் மாத்திரமல்ல, தெருத்தெருவாய்ப் பிரசங்கஞ் செய்வோருள்ளும் பலர் போம்வழியைச் சற்றுந் தேடாதவர்களாகக் காணப்படுகிறார்கள். சிலகாலத்தின்முன் சத்தியவேதத்துக்கு விரோதமாய்ப் பிரசங்கித்துத்திரிந்த சிலரைப் பற்றி என் நண்பரொருவர் ஒரு நூதனமான விசேஷஞ்சொல்லுவார். அவர் சொல்லுவது ஏறக்குறைய பின்வருமாறு:— "இந்தப்பிரசங்கிமாருக்குக் கொடுக்கும்படி ஒருதொகைப்பணம் வட்டியில் விட்டிருக்கிறதென்றது பெரிய காரியமல்ல. சம்பளமில்லாமல், பாலும் பழமும் வண்டிக்கூலியுந்தானும் வாங்காமலும் சிலர் போய்ப்போய்ப் பிரசங்கஞ்செய்யக்கூடும் மனுச்சுபாவத்தை நான் கொஞ்சம் ஆராய்ந்திருக்கிறேன். தாங்கள் நிற்கிறநிலை பொய்யென்று உணர்ந்துகொண்டு, தங்கள் மனதைத் தேற்றித் தங்கள் துன்மார்க்கத்தை மறைக்கும் போர்வையொன்றைத் தேடும்வகையாலுஞ் சிலர் இராவிராவாய்நின்று பிரசங்கம்பண்ணக்கூடும். வேண்டுமானால் நீர் தங்கள் மார்க்கத்தின்படி போதிக்க யாதொரு அதிகாரமுமில்லாமல் தாங்களாய்ப் புறப்பட்டுநிற்கும் இவர்களுடைய நடையைப்பற்றி விசாரித்துப் பாரும். பெண்விஷயத்தில் இவர்கள் யோக்கியரோ என்று ஆராயும்" என்று என் நண்பர் தமாஷாய்ச் சொல்லுவார். உள்ளபடி இந்தக் குறிப்பின்வழியே நான் ஆராய்ந்தபோது, ஒரு பிரசங்கி இருமனைவியரை உடையவரென்றும், வேறொருவர் பிறன்மனையாளைக்கொண்டு சிங்கப்பூர்தட்ட ஓடினவரென்றும், இன்னுமொருவர் "நியோகம்" என்று சொல்லப்படுகிற முறையைச்சாடி தமது சிஷர்களுடைய பெயரைப் பழுதாக்கிவிட்டு ஓடினவரென்றும் இப்படியே ஏறக்குறைய ஒவ்வொருவரிலும் ஏதோவொரு பழிபாதகம் சனங்களாலேயே சொல்லக் கேட்டேன். சமயஸ்தாபனஞ்செய்ய புறப்படுவோரிலே இவ்வித மறு காணப்படுவது பிரலாபகரம். ஆனால், என் நண்பர் சொல்லிய குறிப்பு இவ்வளவு சுட்டிப்பாய் மெய்ப்பட்டமை நூதனமாயிருக்கிறது. இந்தத் தொடர்பிலே "வேடச்சாமிமார்" என்ற தலைப்பெயரோடு "ஆத்துமபோதினி" பத்திரிகையிலே தோற்றிய விஷயங்கள் அதிக விநோதத்தோடு வாசிக்கத்தக்கவைகள். இவையெல்லாம் நேர்மையில்லாத சமய ஆராய்ச்சிக்கு நல்ல உதாரணங்கள்.

## வெற்றியெடுக்கும் வழி

போர்வழியைக் கொஞ்சமும் நினையாமல் தர்க்கமாடுவோர் எதுவிதத்திலும் வெற்றியெடுத்துப்போடவே பார்ப்பார்களன்றி உண்மையை அறிந்துகொள்ளக் கவனியார்கள். எனக்கு அறி

முகமான ஒரு குருவானவர் இருக்கிறார். இவர் தமிழ்ப்பாஷைய றிவிலேயும் சரித்திர ஆராய்ச்சியிலேயும் விசேஷித்தவர். இவரைக்கண்டு தமக்குத் தெரியாத சிலகாரியங்களைக் கிரகித்துக் கொள்ளும்படியாக அடிக்கடி இவரிடம் போகிற ஒருவித்துவான் தமது குழுவினரைக் காணும்போதெல்லாம், தாம் இன்னகுருவானவரோடு சமயதர்க்கமாடப்போய்ப் பல கேள்விகளை கேட்டவிடத்திலே அவர் மறுமொழிசொல்லமாட்டாமல் மவுனமாயிருந்துவிட்டார் என்று சொல்லிவருவாராம். இந்த வித்துவானே ஒருமுறை "இந்துசாதனப்"பத்திரிகையிலே சத்தியவேதத்துக்கு விரோதமாக ஒரு கடிதமெழுதி அதின்முடிவிலே "இன்னும்வரும்" என்று போட்டிருந்தார் அதற்கிடையில் "சத்தியவேத பாதுகாவலி"னிலே அவருக்கு நல்ல தலையடி விழுந்துவிட்டமையால் அம்மட்டோடு பதுங்கிவிட்டார். அப்பால், அவரது குழுவினரான அறியாச்சனங்கள் சிலர் இன்னும்வருமென்ற கடிதமெங்கே என்று கேட்க, வித்துவான் தம்மோடு பழக்கமான மேற்கூறிய குருவானவரைச்சாட்டி, இன்ன குருவானவர் எனக்குக் காசு பதினைந்து ரூபா தந்து இனி எழுதாமல் விட்டுவிடுமென்று மறித்துப்போட்டார் என்றாராம். இது உண்மையாக நடந்த சரித்திரம் வித்துவான் காசுவாங்கிக்கொண்டு எழுதாமல் விட்டாரென்றால் கள்ளன். வாங்காமல் வாங்கினேன் என்றாரானால் பொய்யன். இருவிதத்திலும் நேர்மையில்லாத நடையே காணப்படுகிறது இப்படிப்பட்டோர் செய்யுந் தர்க்கம் சமய ஆராய்ச்சியல்ல, குதர்க்கமே.

பொய்யைப் புரளியைச் சொல்லியுந் தர்க்கத்திலே வெற்றியெடுத்துப்போடநிற்போர் விசேஷமாய் நடபடியான சனங்களுள்ளே அநேகர். யாழ்ப்பாணப்பட்டினத்திலே சுருட்டுமுதலியனசெய்யும் வேலைத்தலங்களிலே பெரும்பாலுஞ் சத்தியவேதக்காரரும் சைவருமான வேலையாட்கள கலந்திருப்பார்கள் இவ்விடங்களிலே பொழுதுபோக்காகவோ, வீம்புக்காகவோ சமயதர்க்கமும் நடப்பதுண்டு. இந்தத் தர்க்கங்களிலே சத்தியவேதக்காரர் பொதுவாய்த் தாங்கள் சொல்லவேண்டியது இன்னதென்று அறிவார்கள். ஏனெனில், சத்தியவேதம சிறு பிள்ளைகளும் அறியத்தக்க தெளிவுடையது. சைவமோ குழம்பலானதாகையால் சைவர் தாங்கள் சொலலவேண்டியது இன்னதென்றறியாமல் சொல்லிப் பிழைபடுவார்கள். ஆயினும், வெற்றியெடுக்கவேண்டுமென்ற ஆத்திரத்தினால், சொல்லாததைச் சொன்னேனென்றும், சொல்லியதைச் சொல்லவில்லையென்றும் பலமுறையும் பொய்சொல்லி நியாயம்பேசிக் கதைவளர்ப்பார்கள். பொய் பலியாவிட்டால் தூஷணப்பேச்சுகள் வந்துவிடும். சிலர் கைபரிமாறும் பக்குவத்திலேயும் போய்விடுவதுண்டு.

## பத்திரிகைகளிற் சொட்டைப்பேச்சு

மேலேத்தலங்களிலே தர்க்கம்போடும் படிப்புக்குறைந்தோர் மாத்திரமா. பத்திரிகைகளில் எழுதும் படிப்புள்ளோரும் பலர் தர்க்கங்களிலே சொட்டைப்பேச்சுக்கும் வீண்வார்த்தைகளுக்கும் இடங்கொடுக்கக் காண்கிறோம். சைவருடைய தர்க்க எழுத்துக்களைப்பற்றிச் "சத்தியவேத பாதுகாவலன்" பேசும்போதெல்லாம், இன்ன சைவக்கடிதர் பத்திபத்தியாய் எழுதியவைகளிலே வீணெழுத்துக்களைத்தள்ளி நியாம்பேசுகிற பகுதியை எடுத்தால் அது இம்மட்டுந்தான் என்று காட்டப்படுவதைக் காண்கிறோம். சைவக்கடிதர்: அப்படியல்ல, நீர் ஒதுக்கிவிட்ட பாகங்களிலே இன்ன நியாயம் இருக்கிறதென்று எப்போதாவது எடுத்துக்காட்டியதையுங் காணோம். சைவருடைய எழுத்துக்களின் மாதிரிக்காக "சத்தியவேத பாதுகாவல"னிலே சிலவேளை அவர்களுடைய கடிதங்களின் சிலபாகம் எடுத்துக்காட்டப்பட்டதுமுண்டு. அவைகளைப் பார்க்கும்போது சைவர் பொதுவாக "ஆளிற் சருவியும்" வேறுபலவிஷயங்களைக் கொண்டுவந்து கலந்தும தெய்வத்தை இகழ்ந்தும் பேசுகிறார்களென்று தெரிகிறது. சத்தியவேதக்காரர் சைவத் தெய்வத்தை இகழுகிறதில்லையோவெனில், சைவத் தெய்வங்களைப்பற்றிப் புராண காவியங்களிலே சொல்லியிராத ஒரு இகழ்ச்சியை எவராவது மனதினால் நினைக்கவுங்கூடாதென்று எண்ணுகிறேன். ஆதலால் சத்தியவேதக்காரர் சைவத் தெய்வங்களுக்கு இல்லாததைச்சொல்லி இகழுவது கூடாது எப்படியோ சத்தியவேதக்காரரிடம் சொல்லுவதற்குப் போதிய நியாயங்களிருப்பதினாற்போலும், அவர்களுடைய எழுத்துக்களிலே பொதுவாய் வீண் வம்புவளர்க்கும் பாகங்களைக் காணோம். சைவபத்திரிகைகளிலோ பெரும்பாலும் வீண் எழுத்துக்களும் சிலதடவை சொட்டைப் பேச்சுக்களுமே காணப்படுகின்றன. சிலதடவை சொட்டைப்பேச்சு, என்றேன். ஏனெனில், இந்தமாதிரியான பாஷையில்லாமல் யோக்கியமாய் எழுதுகிற தர்க்கக்காரர் சிலரை விசேஷமாய் "இந்துசாதனம்" பத்திரிகையிற் பார்த்தேன். ஆனால், இவர்களிலுள்ள குறைவு வேறுவகையானது. அது மனுஷசுபாவத்துக்கு இயல்பான ஒரு குறைவுதான். அதாவது: தங்களுடைய பிழையை ஒப்புக்கொள்ளாதது. இதைப்பற்றிச் சிறிது விரிவாய்ச் சொல்லுவோம்.

## பிழையை ஒப்புக்கொள்ளாமை

இற்றைக்குப் பதினைந்து இருபது வருஷமாய்ச் சைவருக்கும் சத்தியவேதக்காரருக்குமிடையில் நடந்துவந்திருக்கும் தர்க்கத்தை வெகு கவனமாய்ப் பார்த்துவந்திருக்கிறேன். இந்தத்

தர்க்கங்களில் நான் கண்டதென்னவானால்: சைவர் ஒருவிஷயத்தைத் தொடங்கிச் சிலகாலம் எழுதியபின் அப்பால் மவுனஞ்சாதித்துவிடுகிறார்கள். அவர்களுடைய கேள்விகளுக்குக் கொடுக்கப்பட்ட விடைகளைப்பார்த்தால் அப்பால்நன்மனதோடு மறுப்புச்சொல்லக்கூடாதவைகளாகத் தோற்றுகின்றன. எப்படியோ, சைவர் அப்பால் மறுப்புச் சொல்லாதபடியால் அவைகள் ஒத்துக்கொள்ளப்படவேண்டியவைகளே என்றுதான் காணப்படும். ஆனால், சைவரே தாங்கள் அவைகளை ஒத்துக்கொண்டதாக ஒருமுறையாவது வெளிவந்து சொன்னவர்களல்ல இதற்குச் சில உதாரணங்களைத் தருகிறேன் மனதிலே முன்னுக்குவந்தவைகள் தான் குறிக்கப்படுகிறது.

சத்தியவேத பாதுகாவலனிலே சைவபத்திரிகைகளோடு நடந்த தர்க்கங்களுள்ளே ஆக நீட்டானதர்க்கம் மறுபிறப்புத் தர்க்கமென்று எண்ணுகிறேன். இந்தத் தர்க்கம "மறுபிறப்பு—ஆட்சேபம்" என்ற பெயரோடு ஒரு துண்டுப்புத்தகமாகவும் வெளியிடப்பட்டது துண்டுப்புத்தகமும் வெளிப்பட்டு ஐந்துவருஷமாய்ச் சைவர் ஒன்றும்பேசாமலிருந்துவிட்டார்கள். பின்பு "A K" எனும் கையெழுத்தோடு ஒருவர் இந்துசாதனத்திலே ஒரு விடையெழுதி சிலகேள்விகளைக் கேட்டார். அவைகளுக்கு உடனே சத்தியவேத பாதுகாவலனில் மறுமொழி கொடுக்கப்பட்டது. அது முழுமையும் மேற்படி துண்டுப்புத்தகத்தின் இரண்டாம் பதிப்பிலே அநுபந்தமாய்ப் பதிந்திருக்கிறது. ஆனால், அந்த மறுமொழிக்கு சைவர் ஆமெனவுமில்லை அல்லவெனவுமில்லை. அப்படியே அடங்கிவிட்டார்கள்.

வேறொருதர்க்கம் கிறீஸ்துவின் கடவுட்டன்மையைப்பற்றியது. இதைப்பற்றி "ஞானசித்தி" எனும் ஒரு சைவபத்திரிகையிலே எட்டுக்கேள்வி கேட்டிருந்தது. அவைகளுக்கு ஏற்ற மறுமொழிசொல்லி கிறீஸ்துநாதர்தாமே உலகம் காத்திருந்த திவ்விய சற்குருவென்றும், அவரை விசுவசியாமல் ஈடேற்றமில்லையென்றும் மிகத் தெளிவாகச் "சத்தியவேத பாதுகாவல"னிலே காட்டப்பட்டது மறுமொழி முழுதும் புத்தகரூபமாயும் (கிறீஸ்துவின் கடவுட்டன்மை) வந்தது. "ஞானசித்தி" பத்திரிகைக்காரராவது பிறசைவராவது இதுவரையும் அதற்கொன்றும் பேசவில்லை அப்படியே இருந்துவிட்டார்கள்.

இன்னுமொரு நெடுந்தர்க்கம் "சத்தியவேத பாதுகாவல"னுக்கும் "இந்துசாதனத்"துக்குமிடையில் நடந்தது முந்தியதிலே பழையசைவன் என்றொருவர் எழுத, பிந்தியதிலே சநாதனசைவன் அநாதிசைவன், சுத்தசைவன், "சி. சு." ஆதிய பலர் எழுதினார்கள். "சநாதனசைவன" எழுதியது பிழையென்று "சுத்தசைவ"னே "இந்துசாதனத்"திற் காட்டினர். "பாதுகாவல" கடிதர் ஈற்

றில் "சநாசைவ" னை நன்றாய் நெருக்கிப்பிடித்து ஒருகேள்வியி லேயே காரியத்தைத் தீர்த்துக்கொள்ளும்படி கடிதமெழுத "சநா தசைவன்" நின்றவிடமும் தெரியாமற் போய் மறைந்துவிட்டார்.

அதெப்படியென்றால், சைவருடைய கொள்கையின்படி ஆத் துமாக்கள் படிப்படியாய் மேல்நோக்கிப்பிறந்து, தீட்சைமுதலிய கருமங்களுக்குரிய பக்குவமடைந்து, பின்புதான் ஞான உபதே சதைப்பெறவேணுமென்றிருக்க, "சநாதசைவன்" அப்படிப்பிறக்கத் தேவையில்லை ஓரேபிறவியிலே எல்லாப்பக்குவமுமடைந்துவி டலாம், பறையன் உடனே பிராமணனாகிவிடலாம் என்று மா றாகக்கூறினார். அவருடைய சமயத்தவரேயாகிய "சுத்தசைவ" னும் அவ்வரை மறுத்துப்பேசினார் "பழையசைவன்" இவைகளையெடுத் துக்காட்டி இறுக்கிப்பிடிக்கவே "சநாதசைவன்" காணமற்போய் விட்டார் "சிசு" என்பவரும் இடையிலே நின்றுவிட்டார். இவர் இந்தியாவிலே ஆரியர்கள் மாடுவெட்டி வேள்விபோட்ட தில்லையென்று முழுதும் மனச்சாட்சிக்குமாறாக ஒருபிடிபிடித் தார். அது முழுதும் யோக்கியமற்ற ஒருபிடியென்று "காவல" னிலேயும் "சைவரும் மச்சமாமிசமும்" என்ற துண்டுப்புத்தகத் திலேயும் விளக்கப்பட்டது. ஆனால், "சிசு" என்பவரோ வாய் பேசாது விட்டிட்டார்.

இன்னுமொரு உதாரணம்மாத்திரம். ஆகப்பிந்தி "இந்து சாதனத்"திலே தர்க்கத்துக்கு எழுந்தவர் பிரமஸ்ரீ சுப்பிரமணி ய சர்மா என்பவர். இவர் கிறீஸ்தவர்களுடைய புதிய ஏற்பாட் டிலே இல்லாத சிலவற்றை உண்டென்றுசொல்லி எழுதியவர். அத்தவறுகளைச் "சத்தியவேத பாதுகாவல்"னில் ஒருகடிதம் நன்றாகக்காட்டி சர்மா அவர்கள யோக்கியரானால் தாம் சொல் லியவைகள் தவறென்று "சாதன"பத்திரிகையிலே எழுதவேண் டும், அல்லது தாம் சொல்லியவைகளைத் தாபிக்க நியாயமிருந் தால் அந்த நியாயங்களைத் தரவேண்டுமென்று வெகு விநயமா கக்கேட்டிருந்தார் ஆனால், சர்மா அவர்களோ தோற்றவில்லை.

இந்த உதாரணங்கள் போதும். நேர்மையோடு சமய ஆ ராய்ச்சிபண்ணுவதே மனுஷனுக்கழகன்றி பொய்புரளிகள்சொ ல்லியோ, குதர்க்கப்பேசியோ, அறிந்ததை மறைத்தோ, பொ ருள்பெறவோ, புகழ் அடையவோ தர்க்கஞ்செய்வது சரியல்ல. இதை மனதில் வைத்துக்கொண்டால் வீண்வாதங்கள் இல் லாமல் உண்மையே பிரகாசிக்கும்.